# திராவிடநாடு இதழின் தமிழ்ப்பணிகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

மா.முத்துராமன்
(பதிவு எண்: 0804/2013-14)

நெறியாளர்

முனைவர் வி.கிளாட்சன்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை – 630 561.






அழகப்பா பல்கலைக் கழகம்

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் 3.64 தரப்புள்ளிகளுடன்
A+ தகுதி மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின்
முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது.)

காரைக்குடி – 630003

தமிழ்நாடு - இந்தியா

ஆகஸ்ட் - 2018

# நெறியாளர் சான்றிதழ்.

**முனைவர் வி.கிளாட்சன்,** எம்.ஏ., எம்.பில்., எம்.எட்., பி.எச்.டி.,
இணைப் பேராசிரியர் மற்றும் தலைவர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரி,
சிவகங்கை 630 561

**'திராவிடநாடு இதழின் தமிழ்ப்பணிகள்'** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக **மா.முத்துராமன்** அவர்கள் செய்துள்ள இவ் ஆய்வேடு, சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் அவரால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ் ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**சிவகங்கை** **நெறியாளர்**
**நாள்: .08.218.**

**முதல்வர்**

# ஆய்வாளர் உறுதிமொழி.

**மா. முத்துராமன்,**
**பதிவு எண்: 0804/2013-14**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை 630 561.

**'திராவிடநாடு இதழின் தமிழ்ப்பணிகள்'** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ் ஆய்வேடு, என் சொந்த முயற்சியில் உருவானதேயாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் வி. கிளாட்சன்**
இணைப்பேராசிரியர் மற்றும் தலைவர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை 630 561.

# நன்றியுரை

சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரியின் நிறுவனர் **மேதகு சண்முக மன்னர்** அவர்களுக்கு என் பணிவான நன்றியினை முதற்கண் காணிக்கையாக்குகிறேன்.

**“திராவிடநாடு இதழின் தமிழ்ப்பணிகள்”** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதியளித்த அழகப்பா பல்கலைக்கழகத்தினருக்கு என் நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரியில் பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு அனுமதி அளித்த கல்லூரியின் முன்னாள் முதல்வர் **பேரா. சீ ஜெகநாதன்** அவர்களுக்கும் இந்நாள் முதல்வர் முனைவர் **பா. ஹேமலதா** அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

ஆய்வு முழுமைபெற உதவிய என் நெறியாளரும், சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வுத்துறையின் தலைவருமான **முனைவர் வி. கிளாட்சன்** அவர்களுக்கு என் உளம் நிறைந்த நன்றி.

ஆய்வுக்காலங்களில் தேவையான உதவிகளைச் செய்த சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் **முனைவர் கா.சந்தானலெட்சுமி, முனைவர் சு. விஸ்வநாதன், முனைவர் ச.இராமமூர்த்தி, முனைவர் செ.எபநேசர், முனைவர் மு.சிதம்பரம், முனைவர் து.ஸ்டாலின், முனைவர் ச.மலர்க்கொடி, முனைவர் கரு.இராமச்சந்திரன், முனைவர் இரா.தங்கமுனியாண்டி, முனைவர் ம.இராம மனோன்மணி, பேரா. வே.சதீஸ், முனைவர் ஆ. பாண்டி, பேரா. இரா.புவனேஸ்வரி, பேரா. அ.உமாராணி, பேரா.சு.கிருஷ்ணமூர்த்தி, முனைவர் க.சண்முகநாதன், பேரா. ச.முத்துவேல் சு.சோனைமுத்து** ஆகியோர்க்கு என் நன்றி உரித்தாகும்.

ஆய்விற்குத் தேவையான திராவிடநாடு இதழ்த் தொகுப்புகளைக் கொடுத்து உதவிய தேவகோட்டை திரு. **ஞா.தாமஸ் நல்லதம்பி** ஆசிரியர் அவர்களுக்கு எந்நாளும் நன்றியுடையேன். திராவிட இயக்க வரலாறு குறித்த நூல்களைக் கொடுத்து உதவிய சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் இரா. தங்கமுனியாண்டி அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

ஆய்வு தொடர்புடைய நூல்களை அளித்த எம் கல்லூரி நூலகர் **முனைவர் அ.வாஞ்சிநாதன்** அவர்களுக்கும், தமிழ் உயர் ஆய்வுத்துறை நூலகப் பொறுப்பாசிரியர் முனைவர் **மு. சிதம்பரம்** அவர்களுக்கும் என் நன்றி.

ஆய்வுக் காலங்களில் ஊக்கப்படுத்திய என் தந்தையார் திரு. **சித.மாணிக்கம்** அவர்களுக்கும் தாயர் திருமதி. **மா. ஜெயலெட்சுமி** அவர்களுக்கும் சகோதரர் **முனைவர் மா.சிதம்பரம்** அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

இவ் ஆய்வேட்டினைச் சிறந்த முறையில் தட்டச்சுச் செய்து கட்டமைத்துக் கொடுத்த மதுரை **‘லேசர் பாய்ண்ட்’** நிறுவனத்தார்க்கும் என் நன்றி.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அடி. | - | அடிகள் |
| அண்ணா | - | அண்ணாதுரை |
| இ.ஆ. | - | இதழ் ஆசிரியர் |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| குறள் | - | திருக்குறள் |
| தொ. | - | தொகுதி |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல். |
| மு.நூ. | - | முன்னர்க் குறிப்பிடப்பட்ட நூல். |
| மேலது. | - | மேலே குறிப்பிடப்பட்டது. |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழக அரசியல் வரலாற்றில் மட்டும் அல்லாமல் தமிழ் இலக்கிய உலகிலும் சிறப்புற்றுத் திகழ்ந்தவர் சி.என்.அண்ணாதுரை. இவர், ‘அறிஞர்’, ‘பேரறிஞர்’ என்னும் அடைமொழிகளால் போற்றப்பட்டவர். இதழாசிரியர், கவிஞர், புனைகதை ஆசிரியர், நாடக ஆசிரியர், கட்டுரையாளர், திறனாய்வாளர், மொழிபெயர்ப்பாளர் எனப் பன்முகப் பரிமாணம் கொண்டவர். தமிழர்கள் இவரை ‘அண்ணா’ எனப் போற்றி அழைத்தனர். அறிவார்ந்து பேசுவதிலும் எழுதுவதிலும் வல்லவரான இவர், திராவிட இயக்கக் கொள்கைகளைத் தமிழ் மக்களிடையே கொண்டு சேர்த்த பெருமைக்குரியவராவார். திராவிட இயக்கக் கொள்கைகளை மக்களிடையே முன்னெடுத்துச் சென்றதில் அவ்வியக்கம் சார்ந்த இதழ்களுக்குப் பெரும்பங்குண்டு. திராவிட இயக்கத்தின் தொடக்கக் காலத்தில் திராவிடன், ஜஸ்டிஸ், ஆந்திரப் பிரகாசிகா குடியரசு, விடுதலை, ஆகிய இதழ்கள் திராவிடர்களின் மேன்மைக்காகப் பெரிதும் பாடுபட்டன. இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில், இதழ்கள் ஆற்றல் வாய்ந்த தகவல் தொடர்புச் சாதனங்களாக விளங்கின. இதனை உணர்ந்த திராவிட இயக்கத் தலைவர்களுள் பலர் தனித்தனியே இதழ்கள் நடத்தி இயக்கக் கொள்கைகளைப் பரப்பினர். அறிஞர் அண்ணாதுரை ‘திராவிடநாடு’ இதழை 1942 ஆம் ஆண்டு, மார்ச் திங்கள் எட்டாம் நாள் காஞ்சிபுரத்தில் தொடங்கினார். இருபது ஆண்டுகளுக்கும் மேல் இவ்விதழ் வெளிவந்தது. தமிழ் மக்களிடம் சமூக, அரசியல் மாற்றங்களை ஏற்படுத்தியதில் இவ் இதழுக்குப் பெரும்பங்குண்டு. திராவிடநாட்டின் விடுதலை, திராவிடர்நலன் என்பன போன்ற நோக்கங்களுக்காகத் தொடங்கப்பட்ட இவ்விதழ், தமிழ்ப் படைப்பிலக்கிய வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகள் அளப்பரியன. எண்ணற்ற தமிழ்ப் படைப்பாளர்கள், இவ்விதழ் வாயிலாகத் தமிழ்கூறும் நல்லுலகிற்கு அறிமுகமாயினர். தமிழுணர்வையும் தமிழ்ப் பற்றையும் மக்களிடம் ஏற்படுத்திய இவ்விதழ், தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு

ஆற்றிய பணிகளை ஆராய்ந்து வெளிப்படுத்தும் வகையில் இவ் ஆய்வு நிகழ்த்தப்படுகிறது.

## ஆய்வுத் தலைப்பு

**“திராவிடநாடு இதழின் தமிழ்ப் பணிகள்”** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

தமிழக அரசியல் வரலாற்றில் அறிஞர் அண்ணாதுரை மிக இன்றியமையாத தலைவர் ஆவார். தமிழ் மற்றும் ஆங்கில மொழிகளில் செறிவாகப் பேசும் திறன் படைத்த இவர், தாம் ஓர் இலக்கியப் படைப்பாளராக இருந்ததோடு மட்டுமல்லாமல் எழுத்தாளர்கள் பலரைத் ‘திராவிட நாடு’ இதழ் வாயிலாக அறிமுகம் செய்துள்ளார்.

திராவிட இயக்கத்தின் முன்னணித் தலைவர்கள் மட்டும் அல்லாமல், தமிழறிஞர்கள் பலரும் திராவிட நாடு இதழில் பல்வேறு படைப்புகளை எழுதியுள்ளனர். பல்வேறு துறைகளைச் சார்ந்த அறிஞர் பெருமக்கள், தத்தம் கருத்துகளை வெளியிடுவதற்கு ஒரு களத்தை ஏற்படுத்திய சிறப்பு ‘திராவிட நாடு’ இதழுக்கு உண்டு.

திராவிட இயக்க இதழ்கள், இயக்கம் சார்ந்த கொள்கை, கோட்பாடுகளை வெளிப்படுத்தும் நோக்கத்தோடு தொடங்கப்பட்டபோதிலும் தமிழ், தமிழர் நலன், தமிழ் இலக்கிய வளர்ச்சி ஆகியவற்றிற்கும் உதவியுள்ளன.

புராண, இதிகாசங்களில் இடம்பெற்றிருந்த பகுத்தறிவிற்குப் பொருந்தாத, மூடநம்பிக்கை நிறைந்த கருத்துகளை இவ்விதழ்கள் எடுத்துக்காட்டின. தமிழ்ப்பண்பாட்டிற்குப் புறம்பாக வடமொழி இதிகாசங்களில் காணப்பட்ட கருத்துகளை உரிய சான்றாதாரங்களுடன் வெளிப்படுத்தின. தமிழ் இலக்கியங்களின் மேன்மைகளை விளக்கிக் கூறின. தமிழர்களிடம் திறனாய்வுப் பண்பினை வளர்த்தெடுத்ததில் திராவிட இயக்க இதழ்களுக்குப் பெரும் பங்குண்டு.

சங்க இலக்கியங்கள், திருக்குறள், சிலப்பதிகாரம் முதலான தமிழ் இலக்கியங்களின் பெருமைகளையும் சிறப்புக்களையும் மக்களிடம் கொண்டு சென்று சேர்த்ததில் திராவிடநாடு இதழ் பெரும்பங்காற்றியது. இளம் கவிஞர்களும், நாடக

ஆசிரியர்களும், புனைகதையாசிரியர்களும், கட்டுரையாளர்களும், திறனாய்வாளர்களும் தம் படைப்புகளை திராவிடநாடு இதழ் வாயிலாக வெளியிட்டனர். கல்லூரிப் படிப்பென்பது அனைவருக்கும் எளிதில் கிட்டாத அன்றைய தமிழகச் சூழலில் திராவிடநாடு இதழ், ஒரு 'மாலை நேரக் கல்லூரி' போன்று செயல்பட்டது எனலாம். கவிதை, சிறுகதை, நாடகம் வாயிலாகத் திராவிட இயக்கக் கொள்கைகளை மக்களிடம் பரப்புகின்ற உத்தியை அறிஞர் அண்ணா கையாண்டார். தமிழகத்தில் இந்தித் திணிப்பை எதிர்த்து நடைபெற்ற மொழிப்போராட்டச் சூழல்களில் தமிழ் மொழிப்பற்றைத் திராவிடநாடு இதழ் தமிழர்களிடம் ஏற்படுத்தியது. அவ்வகையில் தமிழ்க் கவிதை, சிறுகதை, நாடகம், கட்டுரை முதலிய இலக்கிய வடிவங்களின் வளர்ச்சிக்கு இவ்விதழ் ஆற்றிய பணிகளை எடுத்துக்காட்டுவது இவ்வாய்வின் நோக்கமாக அமைகிறது.

## ஆய்வின் கருதுகோள்

தமிழர்களிடம் இன, மொழி. பண்பாட்டு, சமூக, அரசியல் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு தொடங்கப்பட்ட திராவிடநாடு இதழ், **'தமிழ்ப் படைப்பிலக்கிய வளர்ச்சிக்கும் பெரும் பங்களிப்புச் செய்து, தமிழ்ப்பணி ஆற்றியுள்ளது'** என்ற கருதுகோளை முதன்மையாகக் கொண்டு இவ் ஆய்வு நிகழ்த்தப்படுகிறது.

## ஆய்வு எல்லை

1942 ஆம் ஆண்டு மார்ச் எட்டாம் நாள் வெளிவந்த முதல் இதழிலிருந்து 1963 ஆம் ஆண்டு ஏப்ரல் ஏழாம் நாள் வரை வெளிவந்த திராவிட நாடு இதழ்களை, இவ் ஆய்வானது தன் ஆய்வு எல்லையாகக் கொள்கிறது.

## முதன்மைச் சான்றாதாரங்கள்

1942 ஆம் ஆண்டு மார்ச் எட்டாம் நாள் முதல், 1963 ஆம் ஆண்டு ஏப்ரல் ஏழாம் நாள் வரை திராவிட நாடு இதழ்களில் வெளிவந்த கவிதைகள், சிறுகதைகள்,

நாடகங்கள், கட்டுரைகள் ஆகியன இவ் ஆய்விற்குரிய முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

### துணைமைச் சான்றாதரங்கள்

திராவிட இயக்க வரலாறு குறித்து வெளிவந்த நூல்கள், திராவிட இயக்க இதழ்கள் குறித்த நூல்கள், திராவிட இயக்கத் தலைவர்களின் வாழ்வியல் குறித்த நூல்கள், பெரியார் ஈ.வெ.ராமசாமியின் சிந்தனைகள் அடங்கிய தொகுப்புநூல்கள், இதழ்கள், ஆய்வுக்கட்டுரைகள், சங்க இலக்கியங்கள், அறிஞர் அண்ணாவின் படைப்புகள் குறித்த ஆய்வுநூல்கள் முதலியன இவ் ஆய்விற்கான துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

### ஆய்வு அணுகுமுறை

இவ் ஆய்வில் வரலாற்றியல் அணுகுமுறை, சமுதாயவியல் அணுகுமுறை, உளவியல் அணுகுமுறை, ஒப்பியல் அணுகுமுறை ஆகிய அணுகுமுறைகளும் பகுப்புமுறைத் திறனாய்வு, விளக்க முறைத் திறனாய்வு முதலான திறனாய்வு முறைகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

### இயல் பகுப்பு

இவ் ஆய்வேடு, முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வரும் ஐந்து இயல்களை உள்ளடக்கியதாகும். அவை:

1. **திராவிட இயக்க வரலாறும் இதழ்களும்**
2. **திராவிடநாடு இதழில் கவிதைகள்**
3. **திராவிடநாடு இதழில் சிறுகதைகள்**
4. **திராவிடநாடு இதழில் நாடகங்கள்**
5. **திராவிடநாடு இதழில் கட்டுரைகள்**

என்பனவாகும்.

## இயல் விளக்கங்கள்

**‘திராவிட இயக்க வரலாறும் இதழ்களும்’** என்ற முதல் இயலில் ‘திராவிடர்’ எனும் சொல் குறித்த விளக்கம், திராவிட நாட்டின் எல்லை, திராவிட இயக்கங்களின் தோற்றம், வளர்ச்சி, பிளவு குறித்த செய்திகள் ஆராயப்பட்டுள்ளன. திராவிட இயக்க இதழ்கள் குறித்தும் அவ்விதழ்களின் சிறப்பியல்புகள் குறித்தும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

**‘திராவிடநாடு இதழில் கவிதைகள்’** என்ற தலைப்பிலமைந்த இரண்டாம் இயலில், திராவிடநாடு இதழில் வெளிவந்த கவிதைகளின் சிறப்பியல்புகள் விளக்கப்பட்டுள்ளன. சாதி ஒழிப்பு, திராவிடநாட்டுப் பிரிவினை, விதவை மறுமணம், தொழிலாளர் நலன், இந்தி எதிர்ப்பு, தமிழ் வாழ்த்து, இலங்கைத் தமிழர் நிலை, பொங்கல் திருநாள், தொழிலாளர் தினம், நெசவாளர் நிலை, சீனப் படையெடுப்பு, தலைவர்கள் மறைவு முதலிய பொருண்மைகளில் அமைந்த கவிதைகளில் இடம்பெற்றுள்ள செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

**‘திராவிடநாடு இதழில் சிறுகதைகள்’** என்ற மூன்றாம் இயலில் திராவிட நாடு இதழில் வெளிவந்த அறிஞர் அண்ணா உள்ளிட்ட சிறுகதை ஆசிரியர்களின் சிறுகதைகள் தொகுத்து ஆராயப்பட்டுள்ளன. கைம்பெண்கள் நிலை, பொருந்தா மணத்தின் கொடுமை, தனிமனித உளவியல், ஆதிக்க சக்திகள் நிகழ்த்தும் கொடுமைகள், வைதீகக் கட்டுப்பாடுகள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு திராவிடநாடுஇதழில் வெளிவந்த சிறுகதைகள் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

**‘திராவிடநாடு இதழில் நாடகங்கள்’** என்ற நான்காம் இயலில், திராவிட நாடு இதழில் வெளிவந்த அறிஞர் அண்ணாவின் நாடகங்கள் குறித்தும், பிற படைப்பளார்களின் நாடகங்கள் குறித்தும் ஆய்ந்தறியப்பட்டுள்ளன. மேலும், நாடகப்பாங்கில் திராவிடநாடு இதழில் வெளிவந்த ‘அந்திக்கலம்பகம்’, ‘ஊரார்

உரையாடல்' எனும் தலைப்புகளில் இடம்பெற்றுள்ள செய்திகளும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

'**திராவிடநாடு இதழில் கட்டுரைகள்'** என்ற ஐந்தாம் இயலில் பண்டித எஸ்.எஸ். ஆனந்தம், கைவல்யம் சாமியார், ஈழத்தடிகள், அறிஞர் அண்ணா, இரா.நெடுஞ்செழியன், க. அன்பழகன் உள்ளிட்ட திராவிட இயக்கப் பற்றாளர்கள் எழுதிய திறனாய்வுக் கட்டுரைகள் தொகுத்து ஆராயப்பட்டுள்ளன. மேலும், தமிழறிஞர்களின் திறனாய்வுக் கட்டுரைகளும் இவ் இயலில் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

இயல்தோறும் கண்டறியப்பட்ட உண்மைகள், முடிவுரையாகத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஆய்விற்குத் துணைநின்ற நூல்களின் பட்டியல் அகரநிரலாக ஆய்வேட்டின் இறுதியில் இடம்பெற்றுள்ளது.

# இயல் -1

# திராவிட இயக்க வரலாறும் இதழ்களும்

## 1.0. முன்னுரை

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழர்களின் சமூக வாழ்வில் பல்வேறு மாறுதல்கள் நிகழ்ந்தன. மக்களைத் ‘திராவிடர்’, ‘ஆரியர்’ என இன அடிப்படையில் பிரித்து, அரசியல், சமூகப் பொருளாதாரக் காரணிகளை ஆய்ந்து நோக்கும் போக்கு தென்னிந்தியாவில் உண்டாயிற்று. இதன் விளைவாகப் புதிய அரசியல் இயக்கங்கள் தோன்றின. தமிழகத்தைப் பொறுத்த அளவில் இந்திய விடுதலைக்கான போராட்டங்களும், சமூக நீதிக்கான பிராமணர் அல்லாதாரின் போராட்டங்களும் ஒருங்கே நிகழ்ந்தன. அரசியல் நிகழ்வுகளை வெளிப்படுத்திச் சுதந்திர வேட்கையை மக்களிடத்தே தூண்டுகின்ற பணியினைத் தேசிய இதழ்கள் செய்து வந்தன. திராவிட இயக்கம் சார்ந்த இதழாளர்கள் இனவுணர்வு, தமிழ் மொழிப்பற்று, தமிழர் மேன்மை, சமூக மறுமலர்ச்சி, மூடநம்பிக்கை ஒழிப்பு, பகுத்தறிவு வளர்ப்பு, கைம்பெண்கள் நல்வாழ்வு என்பனவற்றைத் தமது நோக்கங்களாகக் கொண்டு, அவை குறித்த கருத்துகளை மக்களிடம் பரப்பி வந்தனர். விடுதலை வேட்கையைத் தூண்டும் இதழ்களுக்கு ஆங்கில ஆட்சியாளர்கள் விதித்த கட்டுப்பாடுகள், தமிழ் மக்களிடம் புரையோடிக்கிடந்த மூடப் பழக்க வழங்கங்களையும் பகுத்தறிவிற்கு ஒவ்வாத செயல்களையும் எடுத்துக்காட்டிச் சமூக முன்னேற்றத்திற்கு வழிவகுக்க முயன்ற இதழ்களுக்கு விதிக்கப்படவில்லை என்று கூறலாம். பெரும்பாலான திராவிட இயக்க இதழ்கள் இந்து சமயத்தின் வருணாசிரமக் கொள்கைகளை எதிர்த்தன. பார்ப்பனர், பார்ப்பனர் அல்லாதார் எனப் பிரித்து அனைத்து நிகழ்வுகளையும் உற்றுநோக்கும் பண்பு இக்காலத்தில் உண்டாயிற்று. இக்காலக்கட்டத்தில் இதழ்கள் மிகப்பெரிய சமூகத் தொடர்புச் சாதனங்களாக விளங்கின. திங்கள் இதழ்களும், வார இதழ்களும் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அதிக அளவில் வெளிவரத் தொடங்கின. அவ்விதழ்கள் ஆற்றிய அரசியல், சமூகப் பணிகள் அளப்பரியன. தமிழர் வாழ்வோடு

இரண்டறக் கலந்து நிற்கும் திராவிட இயக்க வரலாறு குறித்த செய்திகளும், திராவிட இயக்கத்தார் வெளியிட்ட இதழ்கள் குறித்த செய்திகளும் இவ்வியலில் ஆராய்ந்து விளக்கப்படுகின்றன.

## 1.1.திராவிடர் - சொல்லாட்சி விளக்கம்

வடமொழி இலக்கிய ஆசிரியர்கள் தமிழ் மொழியைத் 'திராவிடம்' என்ற சொல்லால் அழைத்துள்ளனர். இச்சொல்லின் தொன்மை குறித்தும் இச்சொல்லிற்கான விளக்கம் குறித்தும் கா.சுப்பிரமணியபிள்ளை, "திராவிடர் என்ற சொல் தமிழ் நாட்டைக் குறிப்பதற்கு வால்மீகி இராமாயணத்திற் பயன்படுகின்றது. குமாரிலபட்டர் என்பார் கி.பி.8-ஆம் நூற்றாண்டில் திராவிடம் என்ற சொல்லைத் தமிழ்மொழியைக் குறிக்கவே வழங்கினார். 'ஆந்திர – திராவிட பாஷைகள்' என்பது அவர் வாக்கியம். தமிழ்நாட்டைக் குறிக்கும் அச்சொல் ஓடி வளைந்துள்ளதென்று பொருள்படும்."[1] எனக் குறிப்பிடுகிறார். திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணத்தை எழுதிய டாக்டர் கால்டுவெல் 'திராவிடர்' எனும் சொல், 'திராவிட பாஷா' எனக் கி.பி.எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த குமாரிலபட்டரால் எடுத்தாளப்பட்டுள்ளது என்கிறார்.[2] இச்சொல், சமஸ்கிருத மொழிநூல் ஆசிரியர்களால் வழங்கப்பட்டதென்பதை அவர், "தமிழ் என்ற சொல்லைப் போலவே, இதுவும் வரையறுக்கப்பட்ட பொருள் நிலையிலேயே ஒரு காலத்தில் ஆளப்பட்டிருந்தது, இன்றும் ஆளப்படுகிறது. என்றாலும், தென்னாட்டு மக்களையும் மொழியையும் குறிக்கும் சொல்லாக, சமஸ்கிருத மொழிநூல் ஆசிரியர்களால் வழங்கப்பட்ட சொல் இதுவே"[3] என்கிறார். மேலும் "தமிழ் என்ற பெயருக்கு நிகரான சமஸ்கிருதப் பெயர் 'திராவிட' என்பதாம். இச்சொல் திராவிடர் என வழங்கப்பெறும் மக்கள் வாழும் நாட்டையும், அம்மக்கள் வழங்கும் மொழியையும் குறிக்கும். 'தமிழ்', 'திராவிட', என்ற இரு சொற்களும் முற்றிலும் வேறுபடுவனவாகத் தோன்றினும், பிறப்பியல் முறையால் அவை ஒரு தன்மைய என்ற முடிவினையே நான் கொள்கிறேன். அவை இரண்டையும் ஒன்றெனவே கொண்டால், 'தமிழ்' என்ற சொல்லிருந்து 'திராவிட' என்ற சொல்லைத் தோற்றுவிப்பதைக் காட்டிலும், தமிழ் என்ற சொல்லைத் 'திராவிட' என்ற

சொல்லிலிருந்து தோற்றுவிப்பதே எளிதாம் என்பது புலனாம்”[4] எனக் குறிப்பிடும் கால்டுவெல், ‘தமிழர் உள்ளிட்ட தென்னிந்தியர்கள் தங்களைச் சமஸ்கிருதப் பெயர்ச்சொல்லால் அழைத்துக் கொண்டனர்’ எனும் கூற்றுப் பொருத்தமற்றதென்கிறார். கால்டுவெல்லின் இக்கூற்று ‘தமிழ்’, ‘திராவிட’ எனும் இரு சொற்களுக்குரிய நெருங்கிய தொடர்பினை எடுத்துக்காட்டுவதாக உள்ளது.

‘திராவிட’ என்ற சொல்லைக் கால்டுவெல் தம் நூலின் பலவிடங்களில் கையாண்டதன் காரணமாக இச்சொல்லாட்சி அதிக அளவில் மக்களிடம் பரவுதற்குக் காரணமாயிற்று என்பர். தமிழ் மொழி உள்ளிட்ட திராவிட மொழிகள் அனைத்தையும் குறிக்கும் சொல்லாகத் ‘திராவிடம்’ என்ற சொல் பயன்பட்டது என்பதனை நாவலர் இரா. நெடுஞ்செழியன், “ஆதிசங்கராச்சாரியார், திருஞானசம்பந்தரைப் பற்றிக் குறிப்பிடும்போது ‘திராவிடசிசு’ என்று அழைக்கிறார். ‘திராவிடம்’ என்ற சொல் சில இடங்களில் தமிழைக் குறிக்கும் பெயராகவும், வேறு சில இடங்களில் ‘திராவிட மொழிகள்’ எல்லாவற்றையும் சேர்த்துக் குறிக்கும் பெயராகவும் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது.”[5] எனக் குறிப்பிடுகிறார். ‘திராவிடம்’ என்ற சொல் தமிழகம், ஆந்திரம், கன்னடம், கேரளம் ஆகிய நான்கு பகுதிகளையும் ஒன்று சேர்ந்த தொகுப்பினைக் குறிப்பிடவே இச்சொல், நாட்டுப்பாடலில் இரவீந்திரநாத் தாகூரால் ஆளப்பட்டுள்ள தென்றும் இரா. நெடுஞ்செழியன் குறிப்பிடுகிறார்.[6]

‘திராவிடன்’ என்ற சொல்லிற்கான விளக்கத்தைத் தந்தை பெரியார் பல்வேறு சூழல்களில் அளித்துள்ளார். இச்சொல் தமிழ்ச்சொல்லா? அல்லது வடசொல்லா? என்பதனைக் குறித்த ஆராய்ச்சி தேவையில்லை என்பது அவரது கருத்தாகும். “நாம் இந்தியர் என்பதை மறுக்கிறபடியாலும், இன உணர்ச்சியும், எழுச்சியும் பெறவேண்டுவதாலும் ‘திராவிடர்’ என்னும் பெயரைக் கொண்டோம். இது புதிதாக உண்டாக்கியதல்ல. மறந்ததை நினைத்துக் கொண்டதேயாகும். நம்மைக் குறிக்க பார்ப்பனரல்லாதார் என்கிறோம். ‘அல்லாதார்’ என்பதைச் சேர்த்துக் கொள்ள நாம்

என்ன நாடோடிகளா? நாம் ஏன் ‘அல்லாதார்’ ஆகவேண்டும். சிலர் திராவிடன் என்பது வடமொழி என்பார்கள். அதைப்பற்றிய கவலையோ ஆராய்ச்சியோ தேவையில்லை”[7] எனக் குறிப்பிடும் பெரியார் ஈ.வெ.ராமசாமி, “திராவிடம்’ என்பது நமது நாட்டினுடைய பெயராகும். திராவிடர் என்பதை நம்மில் சிலர் மறுக்கிறார்கள் வெறுக்கிறார்கள். திராவிடர் என்பது என்ன, நாம் கற்பித்த ஒரு பெயரா! இது இன்று நேற்று ஏற்பட்டதல்லவே! ஆரியர் என்ற பெயர் தோன்றிய அன்று ஏற்பட்ட பெயர்தானே திராவிடர் என்பது! நீக்ரோ, மங்கோலியர், என்ற பெயர்கள் ஏற்பட்டதும் அன்றுதானே! திராவிடர் என்ற பெயரை மனுதர்மநூலில் காணலாமே! இராமாயணத்தில், பார்த்ததில்கூட இதற்கு ஆதாரம் உண்டே!”[8] எனவும் விளக்கமளித்துள்ளார். ‘பார்ப்பனர் அல்லாதார் இயக்கம்’ என்ற பெயர் ‘திராவிட’ என்ற சொல்லைக் கொண்டு அமைந்தமைக்கான காரணங்களையும் திராவிட இனத்தின் தொன்மைச் சிறப்பினையும் இவரளிக்கும் விளக்கத்திலிருந்து பெறமுடிகிறது.

நில எல்லையை அடிப்படையாக வைத்து, அவ்விடத்தில் வாழ்வோரை இடத்தின் பெயரால் அழைத்திடக் கூடாதென்ற கருத்தினையும் பெரியார் ஈ.வெ.ராமசாமி முன்வைத்துள்ளார். தமிழ்நாட்டில் வாழ்வோர் அனைவரும் தமிழர்களாகக் கொள்ளப்படார் என்பதை அவர், “திராவிடர் என்பதற்குப் பதிலாகத் ‘தமிழர்கள்’ என்று ஏன் வழங்கக் கூடாது என்று சிலர் கேட்கிறார்கள். தமிழர்கள் என்று சொன்னாலே – பார்ப்பனர்கள், தாங்களும் தமிழர்கள்தாம் என்று கூறி அதில் சேர்ந்து கொள்கிறார்கள். ‘நாங்களும் தமிழ்நாட்டில் பிறக்கிறோம், வளர்கிறோம், தமிழே பேசுகிறோம். தமிழ்நாட்டில் இருக்கிறோம். அப்படி இருக்கும்போது எப்படி எங்களைத் தமிழர்கள் அல்லர் என்று நீங்கள் கூறமுடியும்’ என்று கேட்கிறார்கள். ஒருகாலத்தில் தமிழர் என்பது ‘தமிழ்(திராவிட) பண்பு உள்ள மக்களுக்கு உரிய பெயராக இருந்திருக்கக் கூடுமானாலும்-இன்று அது மொழிப் பெயராக மாறிவிட்டிருப்பதனால் அம்மொழி பேசும் ‘ஆரியப் பண்புடைய’ மக்கள் யாவரும் தாமும் தமிழர் என்ற உரிமை பாராட்ட முன் வந்து விடுகிறார்கள். அதோடு ஆரியப் பண்பை நம்மீது சுமத்த, அந்தச்

சேர்க்கையைப் பயன்படுத்தி விடுகிறார்கள். அவர்களும் நாமும் ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர் என்பதால்தான் நாம் சூத்திரர்களாகிறோம். ஆகவே, நம் கூட்டத்திலிருந்து அவர்களை விலக்கிப் பேசித்தான் நம்மைத் திராவிடர்கள் என்று அழைத்துக் கொள்ளவேண்டியிருக்கிறது”[9] எனக் குறிப்பிட்டுள்ளார்.

இனக்குழுச் சமூக வாழ்வியல் முறைகள் மாற்றம் பெற்றுப் பல்வேறு இன மக்கள் ஓரிடத்தில் ஒன்றாக வாழத் தொடங்கியபின்னரும் இனம் சார்ந்த பண்பாட்டு நெறிமுறைகள் அம்மக்களால் தொடர்ந்து பின்பற்றப்பட்டு வந்துள்ளன. மற்றோர் இனத்தாரின் சமூக வாழ்வியல் முறைகள் மக்களிடையே கலந்து, காலப்போக்கில் எப்பண்பாடு எவ்வினத்தார்க்கு உரியதென்பதை மக்கள் மறந்து, மயங்கிக் கிடந்த காலத்தில் இனம் சார்ந்த பண்பாட்டு மீட்டுருவாக்க முயற்சிகள் தொடங்கியமையை மேற்சுட்டிய பெரியார் ஈ.வெ.ராமசாமியின் கருத்து எடுத்துக் காட்டுகிறது.

## 1.2. திராவிட நாட்டின் எல்லை

திராவிட நாட்டின் எல்லை குறித்த வரையறைகளையும் தமிழ்மொழி வழங்கிவந்த நிலப்பரப்புகளையும் உரிய இலக்கியச் சான்றுகளுடன் இலக்கிய, வரலாற்று ஆசிரியர்கள் எடுத்துரைத்துள்ளனர். அந்த வகையில், “திராவிடர் என்ற சொல் வடமொழியில் முன்னரே பெய்து பேசப்பட்டிருப்பினும் 17ம் நூற்றாண்டில் இருந்த குமாரிலபட்டர் தம் நூலில் சிறப்பாக ‘ஆந்திரா திராவிட பாஷா’ என அமைத்து வழங்கினார். கன்னடம், துளுவம், தமிழ் முதலிய மொழிகளை எல்லாம் உள்ளடக்கியே அவர் ‘திராவிட’ என்ற சொல்லை அமைத்து மொழிந்தார். இவ்வமைப்பு முறையை டாக்டர் கிரியர்சன், கால்டுவெல் முதலிய மேனாட்டறிஞர்களும் பின்பற்றித் “திராவிட மொழிகள்” என்ற பகுப்பில் தமிழ், தெலுங்கு, கன்னடம், துளுவம், மலையாளம் முதலிய மொழிகளை அடக்கி மொழிந்து அவ்வவ்மொழிகளின் இயல்புகளையும் பற்றி ஆராய்ந்து சென்றனர். திராவிடமென்றால் ஓடி வளைந்தது என்ற பொருளில் மாதவச் சிவஞான யோகிகள் குறிப்பிடுவர். ஓடி வளைந்ததென்றால் எவ்வளவு வரை எனின்? குமரியொடு வட இமயத்தொரு மொழியாகத் தமிழ்

ஓடிவளைந்ததெனத் தமிழ் இலக்கியங் கூறுகிறது”[10] என்று கோ.சி. பெரியசாமிப் புலவர் தமிழ்மொழி வழங்கும் நிலப்பகுதிகளைச் சுட்டுகிறார்.

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு மொழிகளைத் தாய்மொழியாகக் கொண்ட மக்கள் ‘திராவிடர்’ என்ற பெயரால் அழைக்கப்பட்டனர். இம்மொழிகளைப் பேசுவோர் இப்பெயரால் அழைக்கப்படவில்லை. மாறாக இன அடிப்படையில் இம்மொழிகளைப் பேசுகின்ற தொல்குடியினரே ‘திராவிடர்’ எனப்பட்டனர். சான்றாக, “தமிழ்பேசும் தமிழர்களும், கன்னடம் பேசும் கன்னடியர்களும், தெலுங்கு பேசும் தெலுங்கர்களும், மலையாளம் பேசும் மலையாளிகளும், துளு பேசும் துளுவர்களும் திராவிடர் ஆவர். அவர்கள் வாழும் தமிழ்நாடும், கன்னடநாடும், தெலுங்கு நாடும், மலைநாடும், துளு நாடும் சேர்ந்த பகுதியே திராவிடநாடாகும்.”[11] எனத் திராவிடர் குறித்தும் திராவிட நாட்டின் எல்லைகள் குறித்தும் திராவிடப்பித்தன் குறிப்பிடுகிறார். இந்நிலப்பரப்பில் வாழ்ந்த மக்கள் பேசிய மொழிகள் வெவ்வேறாக இருப்பினும், இன அடிப்படையில் அவர்களை ஒருங்கிணைத்து, அவர்தம் கல்வி, வேலைவாய்ப்பு, சமூக உயர்வு போன்றவற்றை அடிப்படையாகக் கொண்ட அரசியல் அணுகுமுறை இக்காலத்தில் தோன்றி வளர்ந்து திராவிட இயக்கமாக உருப்பெற்றது. இவ்வியக்க வரலாறு பின்வருமாறு விளக்கப்படுகிறது.

## 1.3. திராவிட இயக்க வரலாறு

இந்தியாவில், ஆங்கிலேயர் ஆட்சியின் விளைவாக மக்களின் சமூக வாழ்வில் பல்வேறு மாறுதல்கள் நிகழ்ந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் கல்வியில் மேலோங்கிய பார்ப்பனர்கள் சமூக, அரசியல் வாழ்வில் மேலான இடத்திற்கு வந்தனர். தென்னிந்தியாவில் பிராமணர்கள் அனைத்துத் துறைகளிலும் முன்னேறியவர்களாக இருந்துள்ளனர். பார்ப்பனர்கள் ஆங்கிலேய அரசாங்கத்திற்கு உறுதுணையாக விளங்கியதை, “பிரிட்டிஸ் ஆட்சி ஏற்பட்டு ஒன்றரை நூற்றாண்டுக்காலத்திற்கு மேலாகியும், பார்ப்பனர்களின் தேவத்தன்மை, ஆட்சி புதிய மெருகோடு நின்று நிலவி வருகிறது. பிரிட்டிஷார்தாம்

இந்தியாவை ஆண்டு வருகிறார்கள் என்பது உண்மை என்றாலும், உள்ளபடியே நடைமுறையில் இந்தியாவை ஆண்டு வருபவர்கள் பார்ப்பனர்களே ஆவார்கள். இந்திய தேசிய காங்கிரசுக் கட்சியானது பார்ப்பனர்களின் நலன்களைப் பாதுகாக்கவே இருந்து வருகிறது"[12] என இரா.நெடுஞ்செழியன் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. ஆங்கிலேயர் துணையுடன் சமூக வாழ்வில் பார்ப்பனர்கள் மேலோங்கி இருந்தமையை உணர்ந்த பார்ப்பனர் அல்லாத தென்னிந்தியத் தலைவர்கள் ஒருங்கிணைந்து செயலாற்றத் தொடங்கினர். பார்ப்பனர் அல்லாத மக்கள் அரசியல் மற்றும் சமூக விழிப்புணர்ச்சி பெறுவதற்குப் பல்வகையிலும் அவர்கள் தொண்டாற்றினர். இதன் பயனாகத் திராவிட இயக்கம் தமிழகத்தில் தோற்றம் பெற்றது.

### 1.3.1.சென்னைப் பார்ப்பனர் அல்லாதார் சங்கம்

பார்ப்பனர் அல்லாத தென்னிந்திய மக்களின் நலன்களுக்காக 1909 ஆம் ஆண்டு சென்னையில் ஒரு சங்கம் தொடங்கப்பட்டது. "சென்னை நகரில் வாழ்ந்து வந்த திரு பி.சுப்பிரமணியம் மற்றும் திரு எம்.புருஷோத்தம் நாயுடு ஆகிய இரு வழக்கறிஞர்கள் சென்னைப் பார்ப்பனரல்லாதார் சங்கம் **(Madras Non-Brahmin Association)** அமைப்பு ஒன்றினைத் தொடங்கினர்.[13] இச்சங்கம், பார்ப்பனர் அல்லாத மக்களைத் தாழ்ந்த நிலையிலிருந்து மேம்படுத்தி, அவர்களைச் சமூகத்தில் உயர்ந்த நிலையை அடையச் செய்தல், பார்ப்பனர் அல்லாத ஏழை மாணவர்கள் உயர் கல்வியைப் பெற உதவுதல், பார்ப்பனர் அல்லாத இளைஞர்கள் வெளிநாடுகள் சென்று தொழில் நுட்பக் கல்வி பயின்று வந்து புதிய தொழில் தொடங்குவதற்கு உதவுதல், அரசியல் சார்பற்ற முறையில் சமூக முன்னேற்றத்திற்கு உழைத்தல் ஆகியனவற்றைக் குறிக்கோள்களாகக் கொண்டு செயல்பட்டது. இருப்பினும், இச்சங்கத்தைத் தோற்றுவித்த இரு வழக்குரைஞர்கள் சமூகச் செல்வாக்கும் வசதியும் அற்றவர்களாக இருந்தமையால் இச்சங்கம் எதிர்பார்த்த அளவிற்கு வளர்ச்சியைப் பெறவில்லை.

## 1.3.2.சென்னை ஐக்கியக் கழகம் (Madras United League)

சென்னை மாகாணம், மிண்டோ-மார்லி சீர்திருத்தத்தின் அடிப்படையில் சாதி அடிப்படையற்ற பிரதிநிதித்துவ முறையை 1909 ஆம் ஆண்டு ஏற்படுத்தியது. இதன் அடிப்படையில் மொத்த விழுக்காட்டில் நான்கு சதவிகிதத்திற்கும் குறைவாக இருந்த பிராமணர்கள் அதிக உறுப்பினர்களைப் பெற்றனர். அரசு வேலை வாய்ப்புகளில் பிராமணர்கள் அதிக அளவில் இடம்பெற்றனர். இந்நிலைமை சென்னை மாகாணத்தில் பிராமணர் அல்லாதவர்களிடம் ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தியது. மேலும் பிராமணர் அல்லாதவர்களுக்குத் தனித்தொகுதி ஏற்படுத்தப்பட வேண்டும் என்ற கோரிக்கையும் எழுந்தது. இருப்பினும் சென்னை மாகாணக் காங்கிரஸ் கட்சி பிராமணர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டதாக இருந்தமையால் இக்கோரிக்கை புறந்தள்ளப்பட்டது.

இதன்பின்னர் 1912 ஆம் ஆண்டு சென்னையில் அரசுத் துறையில் பணிபுரிந்த அரசு ஊழியர்கள் தமது நலன்களைக் காத்திடும் பொருட்டு ‘மெட்ராஸ் யுனைட்டெட் லீக்’ என்ற அமைப்பினை ஏற்படுத்தினர். “சென்னை நகரில் பணியாற்றிய அரசு ஊழியர்கள் சிலர், தாங்கள் பிராமணரல்லாதாராய் இருந்த ஒரே காரணத்தாலேயே உத்தியோகத்தில் புறக்கணிக்கப்பட்டதையும், வேலை உயர்வு போன்ற நியாயமாகக் கிடைக்க வேண்டிய வாய்ப்புக்கள் மறுக்கப்பட்டதையும் உணர்ந்து ஒன்றுபட்டுத் தங்கள் குறைகளை எடுத்துரைக்கவும் இவ் அமைப்பை உருவாக்கினர்.”[14] பார்ப்பனர் அல்லாத அரசு ஊழியர்கள் பிராமண ஆதிக்கத்தால் பின்னுக்குத் தள்ளப்பட்டிருந்ததை இக்கூற்று உணர்த்துகிறது. மேலும் திராவிட இன மக்கள் சமூக, அரசியல், பொருளாதார நிலையில் மிகவும் பின் தங்கி இருப்பதை உணர்ந்த சி.நடேசமுதலியார் இச்சங்கத்தின் வளர்ச்சிக்காகத் தீவிரமாக உழைத்தார். மேலும், இவ்வமைப்பில் உறுப்பினர்களாக இருந்த அரசு ஊழியர்கள், மாலை நேரங்களில் முதியோர்களுக்குக் கல்வி கற்பிக்கும் பணியினைச் செய்தனர். இதற்கிடையில் திரு.சரவணபிள்ளை, திரு.ஜி.வீராசாமி நாயுடு, துரைசாமி முதலியார், திரு.எஸ்.நாராயணசாமி நாயுடு,

திவான்பகதூர் பி.கேசவப்பிள்ளை, ஆர்.கே.சண்முகம் செட்டியார், வெங்கடகிரி அரசர், சி.கிருஷ்ணன், டி.எம்.நாயர் முதலியோர் இவ்வமைப்பில் தீவிரமாகச் செயலாற்றினர்.

### 1.3.3.சென்னைத் திராவிடர் சங்கம்

சென்னை ஐக்கியக் கழகத்தின் முதலாம் ஆண்டு விழா 1913 ஆம் ஆண்டு கொண்டாடப்பட்டது. இதன் விளைவாகச் “சென்னை ஐக்கியக் கழகம் என்று அமைந்திருந்த பெயரை, எழுச்சி தரக்கூடிய வேறொரு பெயரால் அமைக்க வேண்டும் என்ற உணர்வு பலருக்கு ஏற்பட்டது. சிலர், அதனைப் ‘பார்ப்பனர் அல்லாதார் சங்கம்’ என்று பெயர் மாற்றி அமைக்க வேண்டும் என்று பரிந்துரை செய்தனர். சி.நடேசமுதலியார் அவர்கள், ‘பார்ப்பனரல்லாதார் சங்கம்’ என்ற எதிர்மறைப் பெயரைக் கழகத்திற்குச் சூட்டுவதைவிட, ‘சென்னைத் திராவிடச் சங்கம்’ என்ற பெயரைச் சூட்டுவதுதான், எல்லா வகையிலும் பொருத்தமுடையதாக இருக்கும் என்று வலியுறுத்தினார். சி. நடேசமுதலியார் அவர்களின் கருத்தை அனைவரும் ஏற்றனர். ‘திராவிட’ என்ற பெயருடன் தமிழகத்தில் தொடங்கப்பட்ட முதல் அமைப்பு இதுவாகும். இவ்வமைப்பின் வாயிலாகப் பிராமணர் அல்லாதாரின் இழிநிலைகளை விளக்கிச் சிறு பிரசுரங்களும் அவ்வப்போது வெளியிடப்பட்டன. சென்னையில் உயர்கல்வி பயிலும் மாணவர் நலனுக்காக சி. நடேசமுதலியார் ‘திராவிடர் இல்லம்’ ஒன்றினைத் திருவல்லிக் கேணியில் 1916 ஆம் ஆண்டு ஏற்படுத்தினார். அவ்வில்லத்தில் ஏழை, எளிய மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்கு உதவுவதற்காக நூலகம் ஒன்றினையும் அமைத்தார்.

தமிழகத்தில் திராவிட இன உணர்வினை மக்களிடம் முதன்முதலில் ஏற்படுத்தியவர் சி.நடேசமுதலியார் ஆவார். அக்காலத்தில் காங்கிரஸ் கட்சியில் பெருந்தலைவர்களாக விளங்கிய சர்.பி.தியாகராயர், டி.எம்.நாயர் முதலிய பார்ப்பனர் அல்லாத தலைவர்கள் நடேச முதலியார் ஏற்பாடு செய்த கூட்டங்களில் பங்குகொண்டு உரை நிகழ்த்தியுள்ளனர்.

### 1.3.4. தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்

இந்தியாவில் சமூகத் தொண்டாற்றும் நோக்கத்தோடு இங்கிலாந்திலிருந்து வந்த அன்னிபெசன்ட் அம்மையார், தொடக்கத்தில் பிரம்மஞானசபையில் தம்மை இணைத்துக் கொண்டு சமூகப் பணிகளைச் செய்து வந்தார். சென்னைப் பிரம்மஞான சபையின் தலைமைப் பொறுப்பினை 1907 ஆம் ஆண்டு அன்னிபெசன்ட் அம்மையார் ஏற்றார். அன்றைய சூழலில் பிரம்மஞானசபையில் பிராமணர்களே அதிக அளவில் உறுப்பினர்களாக இருந்தனர். காங்கிரஸ் கட்சியின் ஆதரவுடன் 1915 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 15ஆம் நாள் தன்னாட்சி இயக்கத்தை (Home Rule) அன்னிபெசன்ட் அம்மையார் தோற்றுவித்தார். "அன்னிபெசன்ட் அம்மையார், சமஸ்கிருத இலக்கியங்களிலுள்ள கருத்துகளை மேற்கோள்களாகக் காட்டி, ஆரிய நால்வருண கலாச்சார முறையைப் பெரிதும் பாராட்டி வந்தார். அம்மையாரின் இந்து தரும ஆதரவு முயற்சிகளைப் பார்ப்பனத் தலைவர்களால் நடத்தப்பட்டு வந்த 'இந்து' ஆங்கில ஏடு, மற்றும் 'சுதேசமித்திரன்' தமிழ் ஏடு ஆகியவைகள் பெரிதும் பாராட்டி, வரவேற்று மகிழ்ந்தன."[15] அம்மையாரின் இச்செயல் திராவிட இயக்கத் தலைவர்களிடம் வெறுப்பினை ஏற்படுத்தியது. "அம்மையார் பெரிய பிராமண பக்தர் என்பதும் அவரது துணைகொண்டு பிராமணீயத்தை நிலைநாட்ட முயன்று வரும் நமது தலைவர்களுக்கு நன்கு தெரியும்"[16] என்று அன்றைய அரசியல் சூழலை விவரிக்கும் பண்டித முத்துசாமிபிள்ளை, அன்னிபெசன்ட் அம்மையார், தமது நியூ இந்தியா பத்திரிகை வாயிலாகவும் மேடைப் பிரசங்கங்கள் வாயிலாகவும் 'ஹோம்ரூல்' இயக்கக் கொள்கைகளைப் பரப்பியதாகக் குறிப்பிடுகிறார் இவ்வியக்கம் காங்கிரஸ் கட்சியில் உள்ள பிராமணர்களின் அரசியல் உயர்விற்காக மறைமுகமாகச் செயல்பட்டதென்பதனைப் பார்ப்பனர் அல்லாத தலைவர்கள் தெளிவுற உணர்ந்தனர். "அய்ரோப்பிய மகாயுத்தத்திற்கு இந்தியர்கள் செய்த உதவிக்கு பிரதியாக இந்தியாவுக்கு அதிகப்படியாகச் சீர்திருத்தங்கள் வழங்க பிரிட்டிஷ் சர்க்கார் எண்ணியிருப்பதை ஏற்கனவே நமது தலைவர்கள் அறிந்திருந்ததினால் வெள்ளம்

வருமுன் அணைகோலும் சம்பிரதாயப்படி சென்னையிலும் வெளி ஜில்லாக்களிலும் உள்ள பிராமணரல்லாத தலைவர்கள் 1916 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் சென்னையில் கூடி பிராமணரல்லாதா் சேமத்தைக் காப்பதற்கான முன்னேற்பாடுகளைச் செய்யத் தொடங்கினர்”[17] தென்னிந்தியப் பார்ப்பனர் அல்லாத மக்களின் நலன்களுக்காக ஓர் அமைப்பு உருவாக்கம் பெற்றமைக்கான அடிப்படைக் காரணத்தை இதன்வாயிலாக அறியமுடிகிறது.

1916 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 20 ஆம் நாள் சர்.பிட்டி.தியாகராயர், சென்னையில் பிராமணர் அல்லாதார் மாநாடு ஒன்றினைக் கூட்டினார். டி.எம்.நாயர், சி. நடேசமுதலியார், பனகல் அரசர் பி.இராமராய நிங்கர் உள்ளிட்ட தலைவர்கள் இக்கூட்டத்தில் கலந்து கொண்டனர். பிராமணர் அல்லாத மக்களின் நலன்களைப் பாதுகாக்கும் பொருட்டுப் பல்வேறு முக்கிய முடிவுகள் இக் கூட்டத்தில் எடுக்கப்பட்டன. இதழ்கள் வெளியிடுவதற்காக, தென்னிந்திய மக்கள் சங்கம் (The South Indian People’s Association Limited) என்ற நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டது. திராவிடப் பெருங்குடி மக்களின் மேன்மைக்காக தென்னிந்திய நல உரிமைச் சங்கம் (The South Indian Liberal Federation) என்ற அரசியல் கட்சி தோற்றுவிக்கப்பட்டது. கட்சியின் கொள்கை விளக்கத்தினைச் சர்.பி. தியாகராயர் ‘பிராமணர் அல்லாதார் கொள்கை விளக்கம்’ எனும் பெயரில் சென்னையில் 20.11.1916 ஆம் நாள் நடைபெற்ற மாநாட்டில் வெளியிட்டார். அவ்வறிக்கையில் “விழிப்படைந்த பிராமணரல்லாதார்கள் விரைந்து செயலாற்ற முன்வர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம். அவர்களுடைய பிற்காலம் அவர்கள் கையில்தான் இருக்கின்றது. அவர்கள் செய்யவேண்டிய காரியம் மிகப் பெரிது, அத்துடன் மிக அவசரமானதுமாகும். முதல் வேலையாகச் சிறுவர், சிறுமிகளை இன்னும் அதிகமான அளவில் நாம் படிக்க வைக்க வேண்டும். பல இடங்களில் சங்கங்களைத் தோற்றுவித்துப் பிராமணரல்லாதாருக்கு எந்தெந்த சலுகைகள் உண்டு என்பதை எடுத்துக்கூறி, அதிகமானவர்களைப் படிக்கச் செய்ய வேண்டும். நிதிதிரட்டி ஏழைகள் படிப்பதற்கு உதவிசெய்ய வேண்டும். கல்வித்

துறையில் நாம் முன்னரே கவனம் செலுத்தத் தவறிவிட்டோம். அதனால் இப்பொழுது நாம் அதில் தீவிரமாக ஈடுபடவேண்டும். கல்வியில் கவனம் செலுத்துவதுடன் சமுதாய முன்னேற்றம், அரசியல் முன்னேற்றம் முதலியவற்றிற்கும் நாம் தீவிரமாக உழைக்க வேண்டும்"[18] எனப் பிராமணரல்லாதார் நலன் பொருட்டு ஆற்றவேண்டிய செயல்களைக் குறிப்பிட்டுச் செயலாற்றத் தூண்டினார்.

தென்னிந்தியாவில் வாழும் பிராமணர் அல்லாத மக்களின் கல்வி, சமூக, பொருளாதார, அரசியல் மேம்பாட்டிற்காகப் பாடுபடுவதை இவ்வியக்கம் தன் கடமையாகக் கொண்டதென்பதை இதன்வழி அறியமுடிகிறது. "சமுதாய வாழ்க்கையில் பிராமணர் முதலிடம் பெற்றிருப்பதும், உடலுழைப்பில்லாதவாறு அன்னார் வாழ்க்கை முறை அமைந்திருப்பதும், மோட்ச உலகத்திற்கு வழிகாட்டிகளாக அவர்கள் மதிக்கப்படுவதுமே, இந்நாட்டில் பிராமணரைப் பெருவாழ்வு வாழச் செய்துவிட்டது"[19] எனத் தியாகராயர் சமூகவாழ்வில் பிராமணர்கள் நிலையை எடுத்துரைத்தார். மேலும் "இந்த இயக்கத்தைத் தோற்றுவித்ததன் நோக்கம், பிராமணர்கள் மீது வெறுப்பைக் காட்டுவதற்கன்று. பிராமணர் அல்லாதவர்களை உயர்த்துவதற்குத்தான். எங்களுக்கும் பிராமணர்களுக்குமிடையே எந்த வேறுபாடும் இல்லை. பிராமணர்களுக்கு எதிராக எந்தப் புகாரும் எங்களுக்கில்லை. அவர்கள் எப்போதும் எங்கள் நண்பர்கள். ஆனால் எங்களைத் தாழ்ந்தவர்களாகக் கருதிச் சமுதாயத்தில் கீழே மிதித்து அழிக்கும் ஆதிக்க பிராமணர்களுக்கு எதிராகத்தான் எங்கள் போராட்டம்"[20] என்ற சர்.பி.தியாகராயரின் கருத்து பிராமணர் அல்லாதார் இயக்கம் தோற்றுவிக்கப் பட்டதற்கான நோக்கத்தை எடுத்தியம்புகிறது.

பிராமணர் அல்லாத மக்களின் சமூகப் பொருளாதார நிலையினைத் தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தினர் உணர்ந்தனர். கல்வி, பொருளாதார நிலைகளில் பின்தங்கியிருந்த பிராமணர் அல்லாதோர் தம்மைத் தாமே ஆள்வதற்குத் தகுதியற்றவர்களாக இருப்பதையும் ஆய்ந்தறிந்தனர். இதனால், "பிராமணரல்லாதாருக்குச் சமுதாய, பொருளாதார நீதி, சமஅந்தஸ்து, சமவாய்ப்புகள்

ஆகியவற்றைக் கிடைக்கச் செய்வதுதான் பிராமணர் அல்லாதார் இயக்கத்தின் முக்கிய நோக்கம்”[21] என்றும், தென்னிந்தியர்களில் பிராமணர் அல்லாத 21 வயதிற்கு மேற்பட்டவர்கள் இச்சங்கத்தின் உறுப்பினர்களாகத் தகுதியுடையவர்கள் எனவும் அறிவிக்கப்பட்டது. பட்டதாரிகள் அல்லாத பள்ளி, கல்லூரி மாணவர்கள் இச்சங்கத்தின் உறுப்பினர்களாகச் சேர்க்கப்படவில்லை.[22] தென்னிந்திய நலவுரிமைச்சங்கத்தின் கொள்கை, கோட்பாடுகள் குறித்தனவற்றை இக்கூற்றுக்கள் விளக்கி நிற்கின்றன.

### 1.3.5. நீதிக் கட்சி

தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் அரசியல் கட்சியாகச் செயல்பட்டு வந்த நிலையில் பார்ப்பனர் அல்லாதார் மேம்பாட்டிற்காக இச்சங்கத்தின் முதன்மைத் தலைவர்கள் பல்வேறு ஆக்கப்பணிகளை ஆற்றினர். சங்கத்தின் கொள்கைகளை மக்களிடம் எடுத்துச் செல்வதற்கென இதழ்களையும் தொடங்கினர். திராவிடன், ஜஸ்டிஸ், ஆந்திரப்பிரகாசிகா ஆகிய இதழ்களின் வாயிலாகத் தென்னிந்தியத் திராவிட மக்களின் நலன்களை முன்னிறுத்திப் பல்வேறு சிந்தனைகளை வழங்கினர். தென்னிந்திய நலவுரிமைச்சங்கத்தினரை ‘நீதிக் கட்சியினர்’ என்று மக்கள் அழைத்தனர். கட்சியின் கொள்கைகளை மக்களிடம் விளக்குவதற்காகத் தொடங்கப்பட்ட ‘ஜஸ்டிஸ்’ இதழின் பெயர் கட்சிப்பெயராக மக்களிடம் நிலைபெற்றது.

1919 ஆம் ஆண்டு மாண்டேகு – செம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் இந்திய மக்கள் தம் மக்கள் பிரதிநிதிகளை நேரடியாகத் தேர்வு செய்வதற்கு வழிவகுத்தது. அரசிற்கு வரி செலுத்துவோர், பட்டதாரிகள் ஆகிய பிரிவினரை மட்டும் வாக்காளர்களாகக் கொண்டு சட்டமன்ற உறுப்பினர்களைத் தேர்வு செய்வதற்கு இச்சீர்திருத்தங்கள் வழிவகுத்தன. இதனடிப்படையில் 1920 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் சென்னை மாகாணத்திற்குத் தேர்தல் நடைபெற்றது. ஒத்துழையாமை இயக்கத்தில் காட்டிய தீவிரத்தின் காரணமாக இந்திய தேசிய காங்கிரஸ் கட்சி இத் தேர்தலைப் புறக்கணித்தது. 98 இடங்களில் போட்டியிட்ட நீதிக்கட்சி இத்தேர்தலில் 63

இடங்களில் வென்றது. மொத்தமுள்ள 127 இடங்களில் நீதிக்கட்சி 81 உறுப்பினர்களின் ஆதரவைப் பெற்றது.

சென்னை மாகாணத்தின் ஆளுநர் லார்டு வெல்லிங்டன் சர்.பிட்டி. தியாகராயரை ஆட்சியமைக்குமாறு அழைத்தார். ஆட்சிப்பொறுப்பினை ஏற்க விரும்பாத தியாகராயர், சுப்பராயுலு ரெட்டியாரை முதலமைச்சர் பொறுப்பினை ஏற்கச் செய்தார். அமைச்சரவையில் பனகல் அரசர் பி.இராமராயநிங்கர், கே.வி.ரெட்டி நாயுடு ஆகியோர் இடம்பெற்றனர். 17-12-1920 ஆம் ஆண்டு இவ்வமைச்சரவை பொறுப்பேற்றது. உடல்நலக் குறைவின் காரணமாக முதலமைச்சர் பொறுப்பிலிருந்து சுப்பராயுலு ரெட்டியார் பதவி விலகியதற்குப் பின்னர் பனகல் அரசர் இராமராய நிங்கர் முதலமைச்சர் பொறுப்பினை ஏற்றுக் கொண்டார்.

சென்னை மாகாணத்தின் இரண்டாவது பொதுத்தேர்தல் 1923 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் நடைபெற்றது. இத்தேர்தலிலும் நீதிக்கட்சி வெற்றிபெற்று பனகல் அரசர் தலைமையில் அரசமைத்தது.

1920 ஆம் ஆண்டு நடைபெற்ற சென்னை மாகாணச் சட்டமன்றத் தேர்தலில் 98 தொகுதிகளில் நீதிக் கட்சியினர் வெற்றிபெற்றனர். முதலமைச்சர் பொறுப்பினை ஏற்க விரும்பாத சர்.பிட்டி. தியாகராயர், பொப்பிலி அரசரை சென்னை மாகாண முதல்வர் பொறுப்பினை ஏற்கச் செய்தார்.

### 1.3.6. சுயமரியாதை இயக்கம் (Self-Respective Movement)

காங்கிரஸ் கட்சியில் பிராமணர் ஆதிக்கத்தை எதிர்த்த பெரியார் ஈ.வெ.ராமசாமி வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தையும் வலியுறுத்தினார். 1925 ஆம் ஆண்டின் பிற்பகுதிவரை அவர் தமிழ்நாடு மாகாணக் காங்கிரஸ் இயக்கத்தில் தீவிரமாக இயங்கினார். காங்கிரஸ் கட்சியின் நிதிப்பங்களிப்புடன் வ.வே.சு. அய்யரால் சேரன்மாதேவியில் நடத்தப்பட்ட குருகுலத்தில் பிராமணர் அல்லாத மாணவர்களுக்குத் தனி இடத்தில் உணவு வழங்கப்பட்டது. இச்செயலைப் பெரியார் ஈ.வெ.ராமசாமி கடிந்துரைத்தார். 25-11-1925 ஆம் ஆண்டு காஞ்சிபுரத்தில் நடைபெற்ற தமிழ்நாடு

மாகாண காங்கிரஸ் மாநாட்டில் தந்தை பெரியார் வகுப்புரிமைத் தீர்மாணத்தைக் கொண்டு வந்தார். ஆனால் அத்தீர்மானம் ஒதுக்கப்பட்டது. மாநாட்டிலிருந்து உடனடியாக வெறியேறிய பெரியார், காங்கிரஸ் கட்சியிலிருந்தும் தம்மை விடுவித்துக் கொண்டார். பெரியார் ஈ.வெ.ராமசாமியின் கருத்துக்களைக் காங்கிரஸ் கட்சி பொருட்படுத்தாதன் விளைவாகச் சுயமரியாதை இயக்கம் தமிழகத்தில் தோற்றம் கண்டது. ‘‘சுயமரியாதை இயக்கம் இந்நாட்டு மக்களுக்கு மான உணர்ச்சி ஏற்படவும் எல்லா மக்களையும் சமூகம், பொருளாதாரம் ஆகியவற்றில் சமப்படுத்தி ஒன்று சேர்க்கவும் ஏற்படுத்தப்பட்டதாகும்”[23] எனச் சுயமரியாதை இயக்கத் தோற்றத்திற்கான காரணத்தையும், ‘‘இச்சுயமரியாதைச் சங்கத்தின் கொள்கைகள் என்னவெனிலோ பிறப்பினில் உயர்வு-தாழ்வு இல்லை என்பதும், மேல்-கீழ் இல்லையென்பதுந் தானேயல்லாமல், எந்தத் தனி வகுப்பாரையும் இழிவுபடுத்த அல்ல என்பதையும் உங்களுக்கு நினைப்பூட்டுகிறேன்.”[24] எனச் சுயமரியாதைச் சங்கத்தின் கொள்கைகளையும் ஈ.வெ.ராமசாமி மக்களிடம் விளக்கினார்.

‘‘சாதிக் கொடுமை, மூடபக்தி, தீண்டாமை, வலியார் மெலியாரை வருத்தும் அசட்டுத்தனமான பரம்பரை அவலட்சணம், மனசாட்சியை ரப்பரைப்போல் அமைத்துக் கொள்ளும் சாமர்த்தியம், எதற்கும் சமாதானம் சொல்லும் விசித்திர ஜாலவித்தை, பெண்களின் முன்னேயும் பின்னேயும் பக்கத்திலும் படுதா, கிளிப்பிள்ளை வேதாந்தம், திண்ணை தத்துவம், போலிமதம், பிடுங்கல் புரோகிதம் - இவையும் இவை போன்றவை யாவும் ஓட்டைகள் என்று நாய்க்கர் கண்டார்.”[25] இவற்றையெல்லாம் சமூகத்திலிருந்து அகற்றுவதற்கு ஓர் இயக்கம் தேவை என்பதையும் பெரியார் ஈ.வெ.ராமசாமி உணர்ந்தார். மேலும், ‘‘காங்கிரசிலிருந்து வெளியேறி நீதிக்கட்சியுடன் இணையாமல் பல்வேறு பகுதிகளில் உள்ள பார்ப்பனரல்லாத சங்கங்களில் உரையாற்றிக் கொண்டும் குடியரசு, ரிவோல்ட், திராவிடன் ஆகிய இதழ்களில் பிரச்சாரம் செய்து கொண்டும் வந்த பெரியார், தமிழ் நாடு தழுவிய ஓர் அமைப்பின் தேவையை உணர்கிறார்.”[26] இயக்கத்தைத் தோற்றுவிப்பதற்கு முன்பு அதற்கான அனைத்துச் செயல்களிலும்

பெரியார் ஈடுபட்டு வந்தார். “சாதி அடிப்படையில் சமூத்தின் தனிச்சிறப்பு, சமூக அந்தஸ்து ஆகிய இவை வெறுப்பூட்டியதோடு, தாழ்ந்த சாதியினருக்கு அவமானத்தைத் தருவதற்காகவும், உள்ளத்தை நோகவைப்பதற்காகவும் தோன்றியது. சாதியின் காரணமாக இந்த உயர்வு தாழ்வு நிலையை ஏற்றுக் கொள்வது ஒரு மனிதனின் தன்மானத்திற்கு ஒவ்வாதது என்று அச்சமின்றிக் கூறியவர் ஈ.வெ.ரா அவர்கள்தான்.”[27] எனும் கூற்றிலிருந்து பெரியார் ஈ.வெ.ராமசாமியின் சமூகநீதிக் கொள்கையை அறியமுடிகிறது. கோ.கேசவன், சுயமரியாதை இயக்கம் தொடங்கப்பட்டமைக்கான காரணத்தைக் குறித்து, “எல்லாத் தனிமனிதர்கட்கும் விடுதலை, சமத்துவம், நீதி கிடைக்கும் வகையில் சமூகத்தை புணரமைப்பதே இயக்கத்தின் நோக்கமென அறிவிக்கப்பட்டது. இதன் உறுப்பினருக்குத் தகுதிகள் வரையறுக்கப்பட்டன. 18 வயது நிரம்பிய, பிறவியினால் சமய, சமூக, அரசியல் சலுகைகள் பெற்றிராத, பூசாரியாக இல்லாதவராக, பூசாரி சாதியில் பிறவாதவராக உள்ள எவரும் இயக்கத்தின் உறுப்பினராகலாம்”[28] எனத் தெளிவுறுத்துகிறார்.

கடவுள் மறுப்பு, சாதி ஒழிப்பு, பெண்விடுதலை, மூடநம்பிக்கை ஒழிப்பு ஆகியன சுயமரியாதை இயக்கத்தின் முதன்மைக் கொள்கைகளாக இருந்தன. இக்கொள்கைகளை மக்களிடையே பரப்பும் நோக்கத்தில் 1929 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 17 மற்றும் 18 ஆகிய நாள்களில் செங்கல்பட்டில் முதல் சுயமரியாதை இயக்க மாநாடு நடைபெற்றது. மாநாட்டில் வருணாசிரமமுறை எதிர்ப்பு. பிறவியினால் உயர்வு தாழ்வு கற்பிக்கும் சமயங்களைப் பின்பற்ற மறுத்தல், சமயக்குறியீடுகளை நீக்கல், பெயருக்குப் பின் சாதிப்பெயரை அகற்றுதல், அனைவருக்கும் கல்வி, தீண்டாமைக் கொடுமை களைதல், பெண்ணின் திருமணவயது 16க்கு மேற்பட்டு இருத்தல், விவாகரத்து, விதவை மறுமணம் பெண்களுக்குச் சொத்துரிமை, ஆகிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. சுயமரியாதைக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டவர்களை மட்டுமே சட்டசபை அங்கத்தினராக்க வேண்டும் என்ற தீர்மானமும் இம்மாநாட்டில் நிறைவேற்றப்பட்டது குறிப்பிடத்க்கது.

சுயமரியாதை இயக்கத்தினரின் இரண்டாவது மாநில மாநாடு 10-05-1930 ஆம் நாள் ஈரோட்டில் நடைபெற்றது. இம்மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மனங்களுள் மிகவும் குறிப்பிடத்தகுந்தவை, அரசாங்கம் சமூகச் சீர்திருத்த விஷயத்தில் மிகுந்த அக்கறை கொள்ளுதல் வேண்டும், சமூகக் கொடுமைகளைப் போக்கவும் சுயமரியாதையை நிலைநிறுத்தவும் போராட்டங்கள் நடத்திட வேண்டும்."[29] என்பனவாகும்.

மூன்றாவது சுயமரியாதை இயக்க மாநில மாநாடு 1931 ஆம் ஆண்டு விருதுநகரில் நடைபெற்றது. இம்மாநாட்டில் தேசியத்தின் பெயரால்இந்தி மொழியைக் கற்க வேண்டும் என்ற அரசின் கொள்கை முடிவு, வருணாசிரம தருமத்திற்கு ஆதரவு தருகிறதென்ற கருத்தை எடுத்துரைத்த சுயமரியாதை இயக்க முன்னணித் தலைவர்கள், கட்டாய இந்தி மொழித் திணிப்பிற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். மேலும், தொழில் முறை இயக்க வளர்ச்சிக்கு ஆதரவு அளிக்கப்பட வேண்டும், பொதுவுடைமைக் கொள்கை ஓங்க வேண்டும், விதி, கடவுள், செயல் என்பன போன்றவற்றை மக்கள் மனதிலிருந்து அகற்ற வேண்டும். என்னும் தீர்மானங்கள் இம்மாநாட்டில் நிறைவேற்றப்பட்டன

### 1.3.7. திராவிடர் கழகம்

1936-1937 ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் நீதிக் கட்சி தோல்வி அடைந்தது. சி. இராஜகோபாலாச்சாரி தலைமையில் காங்கிரஸ் அமைச்சரவை அமைக்கப்பட்டது. மீண்டும் பார்ப்பனர்களின் ஆதிக்கம் மேலெழுந்தது. இந்தியாவில் முதன் முறையாகச் சென்னை மாகாணத்திற்குட்பட்ட சில பள்ளிகளில் இந்தி மொழியைக் கட்டாயமாகக் கற்பிக்கச் சி. இராஜகோபாலாச்சாரி ஆணை பிறப்பித்தார். இதனைத் தொடர்ந்து தமிழகத்தில் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி ஏற்பட்டது. கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்துப் பெரியார் ஈ.வெ.ராமசாமி அறிஞர் அண்ணாதுரை முதலானோர் சிறை சென்றார். தமிழகத்தில் 1938 ஆம் ஆண்டு நடைபெற்ற இந்தி

எதிர்ப்புப் போராட்டம் இன, மொழி அடிப்படையில் தமிழர்களிடம் ஒற்றுமை உணர்வினை ஏற்படுத்தியது.

19.08.1944 ஆம் நாள் தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் பதினாறாவது மாநாடு சேலத்தில் கூடியது. இம்மாநாட்டில் அறிஞர் அண்ணா, 'தென்னிந்திய நல உரிமைச் சங்கம்' என்ற பெயரை மாற்றித் 'திராவிடர் கழகம்' என்று பெயரிடப்படவேண்டும் என்ற ஒருநபர் தீர்மானத்தை முன்மொழிந்தார். அண்ணாவின் தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்பட்டமையால் 'திராவிடர் கழகம்' தோற்றம் கண்டது. திராவிடர்களுக்கென்று 'திராவிட நாடு' அமைக்கப்பட வேண்டும் என்ற சிந்தனை இம்மாநாட்டில் ஏற்படுத்தப்பட்டது. திராவிடர் கழகத்தின் முதல் பொதுச்செயலாளராக அறிஞர் அண்ணா பொறுப்பேற்றார். சுயமரியாதை இயக்கத்தின் அடிப்படைக் கொள்கைகளைப் பின்பற்றித் திராவிடர் கழகம் செயல்படத் தொடங்கிற்று.

திராவிடர் கழகத்தினைச் சமூகச் சீர்திருத்த இயக்கம் என்று பெரியார் ஈ.வெ.ராமசாமி குறிப்பிட்டார். அதனடிப்படையில் "திராவிடர் கழகம் என்பது திராவிட மக்களிடையே இன்று கடவுளின் பேராலும், மதத்தின் பேராலும், மோட்ச நரகங்களின் பேராலும், சுயராஜ்யத்தின் பேராலும் இருந்து வரும் மூடநம்பிக்கைகளையும், உயர்வு தாழ்வுகளையும், பித்தலாட்டங்களையும் போக்கி அவர்களிடையே ஒற்றுமையையும், கட்டுப்பாட்டையும், நாணயத்தையும் ஏற்படுத்தப் பாடுபட்டுவரும் ஒரு சீர்திருத்தக் குழுவாகும்."[30] எனத் திராவிடர் கழகத்தின் கொள்கைகளைப் பெரியார் மக்களிடையே விளக்கினார். மேலும், "பன்னெடுங்காலமாகவே அறிவீனர்களாய் ஆக்கிவைக்கப் பட்டிருக்கும் திராவிட மக்களுக்குச் சிந்தனை அறிவை உண்டாக்கி வைப்பதுதான் நம் திராவிடர் கழகத்தின் முதல்வேலை. திராவிடர்களின் இழிதன்மையை – சூத்திரத் தன்மையைப் போக்குவதுதான் அதனுடைய இரண்டாவது முக்கிய பணியாகும்."[31] என்று திராவிடர் கழகம் ஆற்றவுள்ள பணிகளையும் முன்மொழிந்தார்.

தொடக்க காலத்தில் இளைஞர்களை ஈர்க்கும் வகையில் திராவிடர் கழகத்தின் செயல்பாடுகள் அமைந்தன. "திராவிடர் கழகம் ஆரம்பிச்ச புதுசுலே, நாங்க முக்கியமா

செய்த வேலை, இளைஞர்களை எங்க பக்கம் இழுக்கறதுதான். ஊருக்குப் பெரிய மனுஷங்களை, வயசானவங்களையாப் பாத்து மரியாதை கொடுத்துக்கிட்டுருந்தது காங்கிரஸ் கட்சி. இளைஞர்களுக்கு நாங்க கொடுத்த முக்கியத்துவமும், திராவிடர்க் கழகக் கொள்கைகளும் வெகுவாக இளைஞர்களைக் கவர்ந்திழுத்தது. மூடநம்பிக்கைகளும், மதச்சடங்குகளும் மலிஞ்சுகிடந்த சமுதாயத்து இளைஞர்களைப் பகுத்தறிவுப் பக்கம் திருப்புறது முதல்ல கொஞ்சம் கஷ்டமாத்தான் இருந்தது, ஆனாலும், அதுலேயே ஊறிப்போன வயசானவங்களைக் காட்டிலும் சுயமாச் சிந்திக்க முன்வரக்கூடிய இளைஞர்களைக் கட்சியின் உறுப்பினர்களாகவும், அனுதாபிகளாகவும் சேக்கறது சுலபமாத்தான் இருந்தது”[32] எனும் இராம. சுப்பையாவின் கூற்று, திராவிடர் கழகம் தமிழகத்தில் பரவிய சூழலை எடுத்தியம்புகிறது.

திராவிடர் கழகத்தின் கொள்கைகள் தமிழக மாணவரிடையே மிகுந்த பற்றுதலை ஏற்படுத்தின. கும்பகோணத்தில் 1943 ஆம் ஆண்டு ‘திராவிட மாணவர் கழகம்’ ஏற்படுத்தப்பட்டது. இதனைத் தொடர்ந்து 1945 ஆம் ஆண்டு திராவிடர் கழகத்தின் கருப்புச்சட்டைத் தொண்டர் படை அமைக்கப்பட்டது.

1946 ஆம் ஆண்டு திராவிடர் கழகத்திற்கெனத் தனிக் கொடி உருவாக்கப்பட்டது. மூன்றுக்கு இரண்டு என்ற விகிதத்தில் நடுவில் சிவப்பு வட்டத்துடன் கறுப்பு நிறக் கொடி அமைக்கப்பட்டது. கறுப்பு திராவிட இனத்தைச் சூழ்ந்துள்ள இழிவையும், சிவப்பு நிறம் இழிவினைப் போக்கிப் புரட்சி மலருவதைக் குறிக்கும் வகையிலும் இக்கொடி அமைக்கப்பட்டது.

1947 ஆகஸ்டு பதினைந்தாம் நாள் இந்திய நாடு விடுதலை அடைந்தது. விடுதலை நாளினைத் துக்கநாள் எனப் பெரியார் ஈ.வெ.ராமசாமி குறிப்பிட்டார். ஆனால் அறிஞர் அண்ணா, பெரியாரின் கருத்தில் மாறுபாடு கொண்டு விடுதலை நாளைத் திராவிடரின் திருநாள் எனக் குறிப்பிட்டார். இதன்பின்னர்ப் பெரியார் ஈ.வெ.ராமசாமிக்கும் அறிஞர் அண்ணாவிற்கும் பல்வேறு சூழல்களில் கருத்து முரண்கள் தோன்றின.

### 1.3.8.திராவிட முன்னேற்றக் கழகம்

பெரியார் ஈ.வெ.ராமசாமி – மணியம்மை திருமணத்தின் விளைவாகத் திராவிடர் கழகத்தில் குழப்பம் உண்டானது. 17.09.1947 அன்று சென்னையில் அறிஞர் அண்ணா தலைமையில் திராவிடர் கழகத்தின் மத்திய நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் கூடியது. "மணவினை செய்து கொண்டதற்கான விளக்கம் கூறும் வகையில் பெரியார், கழகத்தை எதேச்சதிகாரக் கூடமாகவும் உறுப்பினர்களை அடிமையாக்கும் போக்கை விரும்புவதாகவும் தெளிவுபடுத்திவிட்டார். நாம் அவருடைய தலைமையில் நம்பிக்கை இழந்துவிட்டவர்களாகி விட்டோம்"[33] என அறிஞர் அண்ணா, பெரியார் ஈ.வெ.ராமசாமியின் செயலால் வருந்திய தொண்டர்களிடையே குறிப்பிட்டார். இதற்கிடையில் 17.9.1949 மாலை சென்னை இராயபுரம் இராபின்சன் பூங்காவில் 'திராவிட முன்னேற்றக் கழகம்' என்னும் அரசியல் இயக்கம் தொடங்கப்பட்டது. திராவிடர் கழகத்தின் முன்னணித் தலைவர்கள் பலர் இத்தொடக்க விழாவில் பங்கு கொண்டனர். தொடக்க விழாச் சொற்பொழிவில் அறிஞர் அண்ணா, "திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றிவிட்டது. திராவிடர் கழகத்திற்குப் போட்டியாக அல்ல – அதே கொள்கைப் பாதையில்தான். திராவிடர் கழகத்தின் அடிப்படைக் கொள்கைளின் மீதேதான் திராவிட முன்னேற்றக் கழகம் அமைக்கப்பட்டுள்ளது. அடிப்படைக் கொள்கைகளில் கருத்துக்களில், மாறுதல், மோதுதல் எதுவும் கிடையாது. சமுதாயத் துறையிலே சீர்திருத்தம், பொருளாதாரத் துறையிலே சீர்திருத்தம், சமதர்மக் குறிக்கோள், அரசியலில் வடநாட்டு ஏகாதிபத்தியத்தினின்று விடுதலை – ஆகிய கொள்கைகள்தான் திராவிட முன்னேற்றக் கழகத்தின் கோட்பாடுகளாகும். திராவிடர்கழகம் எதற்காகப் பாடுபட்டதோ, எவருடைய நன்மைக்காக – எந்தச் சமுதாயத்திற்காக, ஏழை எளியவர்களை எளிமையிலிருந்து விடுவிக்க, வாழ வழியற்ற மக்களுக்கு வாழ்க்கைப் பாதை வகுத்துக் கொடுக்க, இல்லாமையை இல்லாததாக்க, கொடுமையை ஒழித்துக் கட்ட, எல்லாரும் ஓர் குலம் என்ற ஏற்பாட்டை வகுக்க

ஏற்படுத்தப்பட்டதோ, அதே ஏற்பாட்டைக் கொள்கை வழிநின்று குறிக்கோளைப் புறக்கணிக்காது பாடுபட்டுவரும் திராவிட முன்னேற்றக் கழகம்.”[34] எனக் குறிப்பிட்டார்.

நீதிக்கட்சி, சுயமரியாதைச் சங்கம், திராவிடர் கழகம் ஆகியவை கொண்டிருந்த அடிப்படைக் கொள்கைகளை ஏற்றுக் கொண்ட அரசியல் கட்சியாகத் திராவிட முன்னேற்றக் கழகம் செயல்படத் தொடங்கியது. 1957 ஆம் ஆண்டு முதல் தமிழகச் சட்டமன்றத் தேர்தல்களில் திராவிட முன்னேற்றக் கழகம் நேரடியாகப் பங்குபெற்றது குறிப்பிடத்தக்கது.

## 1.4. திராவிட இயக்க இதழ்களின் நோக்கம்

திராவிட இயக்கத் தலைவர்கள், பார்ப்பனர் அல்லாத மக்களின் முன்னேற்றத்திற்கு இதழ்களின் பணி மிகவும் இன்றியமையாததென்பதை இயக்கம் தொடங்கிய நாள்முதலே உணர்ந்திருந்தனர். மேலும், அன்றைய நாள்களில் இதழ்கள் சக்திவாய்ந்த மக்கள் தகவல் தொடர்புச் சாதனங்களாகத் திகழ்ந்தன. பிராமணரல்லாதார் முன்னேற்றத்தை அடிப்படை நோக்கமாகக் கொண்டு இதழ்கள் தொடங்கப்பட்டமை குறித்துப் பெரியார் ஈ.வெ.ரா., “அப்போது படித்திருந்த பிராமணரல்லாதார் சிலர் தாங்கள் எவ்வளவு கெட்டிக்காரராயும், யோக்கியர்களாயும், புத்திசாலிகளாயும், தேசபக்தி, பரோபகாரம் முதலிய அருங்குணங்கள் நிறைந்தவர்களாயுமிருந்தும் தாங்கள் ஏன் தாழ்த்தப்பட்டுக் கிடக்கின்றோம் என்று யோசனை செய்து பார்த்ததில் இப்பிராமண பத்திரிகைகளும், கட்டுப்பாடான பிராமண சூழ்ச்சிகளுமே இதற்குக் காரணம் என்று கண்டுபிடித்துத் தாங்களும் மற்றவர்களைப் போல் முன்னேறுவதற்குத் தங்களுக்குள் ஒரு கட்டுப்பாடு இருக்க வேண்டுமென்றும், தங்களுக்கும் பிரசாரத்திற்கு ஒரு பத்திரிகை வேண்டுமென்றும் கருதி ஒரு சங்கத்தையும் திராவிடன், ஜஸ்டிஸ் என்கிற பத்திரிகைகளையும் ஏற்படுத்தினார்கள்.”[35] எனக் குறிப்பிடுகிறார்.

‘தமிழ்த் தென்றல்’ எனப் போற்றப்படும் சிறப்பிற்குரியவரான திரு.வி.கலியாண சுந்தரனார், திராவிட இயக்க இதழ்கள், அதிகார வர்க்கத்தினரையும், வைதீக

சமயத்திற்கு எதிராகவும் பல்வேறு செய்திகளை வெளியிட்டனவென்று குறிப்பிடுகிறார். “பிராமணரல்லாதார் நலவுரிமைச் சங்கத்தின் சார்பாக மூன்று தினப்பதிப்புகள் ஆங்கிலம், தமிழ், தெலுங்கு மொழிகளில் வெளியாயின. ஆங்கில ஜஸ்டிஸ்ஸையும், தமிழ் திராவிடனையும் நான் படிப்பதுண்டு. அவைகள் அதிகார வர்க்கத்தை ஆதரித்து வகுப்பு வாதத்தைப் பெருக்கித் தென்னாட்டில் காங்கிரஸை விழ்த்துவதில் முனைந்து நிற்பவை என்பது நன்கு விளங்கியது. ‘திராவிடன்’ சமயத்தையும், கோயிலையும் பழிக்குந் துறையிலும் இறங்கினான். அதுபற்றிச் சென்னையில் பலவிடங்களில் சமயச் சார்பில் மறுப்புக் கூட்டங்கள் கூடின.”[36] என்ற திரு.வி.க.வின் கருத்திலிருந்து தொடக்ககாலத் திராவிட இயக்க இதழ்கள் காங்கிரஸ் கட்சிக்கு எதிராகவும், வைதீக சமயத்தில் பொதிந்து கிடந்த பகுத்தறிவிற்கு ஒவ்வாத கருத்துகளுக்கு எதிராகவும் பல்வேறு கருத்துகளை எடுத்துரைத்தமையை அறியமுடிகிறது.

தனிமனித வளர்ச்சிக்கும், நாட்டின் உயர்விற்கும் பத்திரிகைகளின் பங்கு மிகவும் இன்றியமையாதென்பதைப் பெரியார் ஈ.வெ.ரா. நன்கு உணர்ந்திருந்தார். மக்களைப் பகுத்தறிவுடையவர்களாக மாற்றுவதற்குரிய ஆற்றல் வாய்ந்த சாதனமாகத் திகழ்வன பத்திரிகைகளே என்றுணர்ந்து, “பத்திரிகைதான் முன்னேற்றமடையக் கருதும் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாத ஆசான்; பத்திரிகைதான் மக்களுக்கு அறிவையூட்டி வளர்க்கும் தாயினுமினியது; பத்திரிகைதான் புத்திபுகட்டும் நற்றந்தை; பத்திரிகைதான் ஆபத்துக்கு உதவும் நற்புதல்வன்; பத்திரிகைதான் உண்மைத் தோழன்; அதுவே அய்ம்புலன்களையும் ஒருமித்து இன்பம் நுகரச் செய்யும் உத்தம மனைவி! அதுவே பெருஞ்செல்வம்; அதுவே நெருங்கிய சுற்றம்; அதுவே இன்பந்தரும் பெருவீடு; அதுவே நோயகற்றும் சஞ்சீவி; அதுவே இன்னமுது; அதுவே உண்மைச் சேவகன்; அது மக்கள் வசிக்கும் ஒவ்வொரு இல்லந்தோறும் வந்து, சுயேச்சையும், சுவாதீனமுமற்று அஞ்ஞானத்திலும், சோம்பலிலும், பசியிலும், தரித்திரத்திலும் உறங்கிக் கிடக்கும் மக்களை எழுப்பி உய்விக்கும் நற்றுணைவன்.”[37] எனக் குறிப்பிட்டுள்ளார்.

இயக்கக் கொள்கைகளை மக்களிடையே பரப்பும் நோக்கத்திற்கெனப் பல்வேறு காலச் சூழல்களில் தொடங்கப்பட்ட திராவிட இயக்க இதழ்கள், தமிழ் மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் உதவின. "தமிழ் வளர்ச்சி என்று எடுத்துக் கொண்டால், 'தேசியம்' வளர்த்த தமிழைவிட, திராவிடம் வளர்த்த தமிழ் நூறு மடங்கு அதிகம் எனலாம். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை இளைத்துப்போயிருந்த இன்பத் தமிழுக்குப் புத்துயிருட்டி, அணிகள் பூட்டி, அழகு கூட்டியவர்கள் திராவிட இயக்கத் தலைவர்களே, இதற்கு இவர்களுக்கு உறுதுணையாக இருந்தவை, ஏடுகளும் மேடைகளும்தான்."[38] என அ.மா.சாமி குறிப்பிட்டுள்ளார். தமிழ் வளர்ச்சிக்குத் திராவிட இயக்கத் தலைவர்களும் இதழ்களும் ஆற்றிய பணிகளை இதன்வாயிலாக அறியமுடிகிறது.

இன உணர்வு, மொழிப்பற்று ஆகியனவற்றை மக்களிடையே ஏற்படுத்தும் பணியைத் தொடக்க காலம் முதல் திராவிட இயக்கத் தலைவர்கள் செய்து வந்தனர். மேடைப் பேச்சும், இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளும் இப்பணிக்குப் பேருதவிபுரிந்தன. பேச்சாலும் எழுத்தாலும் வளர்ந்து ஆட்சிக் கட்டிலில் ஏறிய சிறப்பு திராவிட இயக்கத்திற்கு உண்டு. தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் முதல் மாநாட்டில், ‘‘திராவிட நாகரிகம் மனிதனுக்கு மனிதன் பிறப்பினால் பேதமுண்டு என்பதை ஒப்புக்கொள்வதில்லை. திராவிடச்சிந்தனையின் தலைவர்களான திருவள்ளுவர், அவ்வை, கம்பர் போன்றோர் பிரம்மாவின் தலையிலிருந்து பிறந்ததாகப் பறைசாற்றிக் கொள்ளவில்லை. பிறப்பினால் பேதமுண்டு என்பதைப் பரப்பியவர்களும், பல்வேறு கொடுமைகளுக்குக் காரணமான வர்ணாஸ்ரம தர்மம் என்னும் முறைப்படி அதை விரிவுபடுத்தியவர்களும் அவர்கள்தான்.’’[39] எனச் சர்.பிட்டி. தியாகராயர் குறிப்பிட்டார். வருணாசிர தருமத்திற்கு எதிரான கருத்துக்களைத் திராவிட இயக்கத்தார் கொண்டிருந்தமையை இதன்வழி அறியமுடிகிறது.

பெரியார் ஈ.வெ.ராமசாமி, காங்கிரசிலிருந்து வெளியேறியதற்குப் பின்னர், புராண, இதிகாசங்கள் குறித்த பல்வேறு கருத்துகளைக் குடியரசில் எழுதத் தொடங்கினார்.

கம்பராமாயணம், பெரியபுராணம் குறித்த சொற்போர்களும் நிகழ்ந்தன. சங்க இலக்கியங்களின் சிறப்புகள் மக்களிடையே பரப்பப்பட்டன. திராவிட இயக்கப்பற்றுக் கொண்டோர் தாம் தொடங்கிய இதழ்களில் பெரியாரைப் பின்பற்றித் தம் இதழ்களில் படைப்புகளை வெளியிட்டனர்.

திராவிட இயக்க இதழ்கள் தமிழ் வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாற்றியதைக் குறித்து, "திராவிட இதழ்களின் தோற்றத்துக்கு முன்பு, பல்வேறு புராண நூல்களும், இராமாயணம், பாரதம் முதலிய வடமொழித் தழுவல் தமிழ் இலக்கியங்களுமே தமிழ்நாட்டுச் சமுதாயத்தில் சிறப்பிடம் பெற்றிருந்தன. திராவிட இதழ்கள் வளர்ந்த பிறகே, அகநானூறு, புறநானூறு, கலித்தொகை, குறுந்தொகை முதலிய எட்டுத்தொகை நூல்களும், பத்துப்பாட்டு நூல்களும் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காப்பியங்களும், திருக்குறளும் தமிழ் மக்களால் பேரார்வத்துடன் படிக்கப்பட்டு, பெருமதிப்புடன் பாராட்டப்படும் நிலை பிறந்தது. எங்குப் பார்த்தாலும் இராமாயண, பாரத கதாகாலட்சேபங்கள் நடந்து வந்த நிலை அகன்று, திருக்குறள் வகுப்புகளும் விரிவுரைகளும் மாநாடுகளும் நடைபெறும் சூழ்நிலை உருவாயிற்று."[40] என இரா. சுந்தரமூர்த்தி குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. நீதிக்கட்சியும் சுயமரியாதை இயக்கமும் தொடர்ந்து வலியுறுத்திவந்த,

- **பார்ப்பனர் அல்லாத தலைவர்கள்**
- **புரோகிதர் அற்ற சடங்குகள்**
- **சாதிப் பெயர்களை நீக்குதல்**
- **எல்லோரும் கலந்து உண்ணல்**
- **விதவை மறுமணம்**
- **பெண்கல்வி முன்னேற்றம்**
- **திருமண வயதை உயர்த்துதல்**
- **திருமணச் சீர்திருத்தம்**
- **சாதி வேறுபாடு களைதல்**

- **தீண்டத்தகாதார் மேம்பாடு**
- **தேவதாசி முறை ஒழிப்பு**

என்பனவற்றைத் திராவிட இயக்க இதழ்கள் தாங்கிப் பிடித்தன. 1938 ஆம் ஆண்டு நடைபெற்ற இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சிக்குப் பின்னர்த் தமிழ் மொழி வளர்ச்சிக்கும் மேம்பாட்டிற்குமான உயரிய சிந்தனைகளைத் திராவிட இயக்க இதழ்கள் வாயிலாகப் பல்வேறு கருத்துகளைத் தமிழ்ச்சான்றோர் பெருமக்கள் வழங்கினர். தாய்மொழிக்கு முதன்மை கொடுத்துக் கல்வித் திட்டத்தை மாற்றியமைக்கச் செய்வது, அரசின் அன்றாடச் செயல்பாடுகள் அனைத்தும் தமிழ்மொழி வாயிலாக நடைபெறுவது, நீதிமன்ற நடவடிக்கைகள் தமிழிலேயே நடைபெறச் செய்வது, அரசாங்க அலுவலர்க்கு நியமனம் செய்யப் பெறுபவர்கள் தமிழில் போதுமான தேர்ச்சியடைந்தவர்களாக இருக்கும்படி செய்வது ஆகியவற்றைத் திராவிட இயக்க இதழ்கள் தொடர்ந்து வலியுறுத்தின.

மக்களின் முன்னேற்றத்திற்குத் தடையாக மூடப்பழக்கவழக்கங்களை ஒழித்து, சீர்திருத்த எண்ணங்களை மக்களிடையே வளர்த்துச் சாதி, மதவேற்றுமையற்ற புதிய சமுதாயத்தை அமைப்பதற்கும் திராவிட இயக்க இதழ்கள் பெருந்தொண்டாற்றின எனலாம்.

சமுதாய அமைப்பில் தாழ்த்தப்பட்டிருக்கும் தாழ்த்தப்பட்ட மக்களை மற்ற மக்களோடு சரிநிகர் சமானமாக வாழச் செய்வது, அனைத்து மக்களுக்கும் ஆலயப் பிரவேச உரிமை, தீண்டாமை ஒழிப்பு, தாழ்த்தப்பட்டோர் மற்ற மக்களுக்கிடையே கலந்து வசிக்கச் செய்வது, அவர்களிடையேயுள்ள மூடநம்பிக்கைகளை முறியடித்து அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயரச் செய்வது ஆகியனவற்றை அடிப்படையாகக் கொண்ட பல்வேறு கதைகளும் கட்டுரைகளும் கவிதைகளும் திராவிட இயக்க இதழ்களில் வெளியாயின. தனித் தமிழை மக்களிடையே வழக்கில் கொண்டுவந்த சிறப்பும் திராவிட இயக்க இதழ்களுக்கு உண்டு. இதனை, “ஆரியத்தோடு தன்மான இயக்கம் தொடுத்த போரின் பயனாகக் காளிதாசன், கம்பனுக்கு இடமளிக்க நேரிட்டது!

பவபூதி இளங்கோவடிகளுக்கு வழிவிட்டு விலகினார், வடமொழிப் புலவர்கள், அவர்தம் காவியங்கள் முன்வரிசையிலிருந்து நீக்கப்பட்டு, தமிழ்ப்புலவர்கள் ஆங்கு அமர்ந்தனர். தன்மான இயக்கத்தவரின் கண்ணும் கருத்தும் களிப்படைந்தன, காட்சி மாறுவது கண்டு செந்தமிழ் தழைத்தது. 'மகா ஜனங்களே!' மறைந்து விட்டது, 'பெருங்குடிமக்களே!' பிறந்தது. 'அக்ராசனாபதி' அவர்களே! என்ற வார்த்தை மறைந்து 'தலைவர் அவர்களே!' என்ற தமிழ் பிறந்தது. 'விவாஹசுப முகூர்த்தம்', திருமணமாயிற்று. 'வதூவரர்கள்', மணமக்களாயினர். 'நமஸ்காரம்' வணக்கமாயிற்று, 'புஸ்தகம்', 'நூல்' என்ற தமிழ்மணம் பெற்றது. 'புஷ்பம்', மலராகி, 'ஸ்ரீமதி', திருவாட்டியாகி, எங்கும் தமிழ் மணம் பரவிற்று."[41] என்ற அண்ணாவின் கருத்திலிருந்து அறியமுடிகிறது. திராவிடர் நலன், தமிழர் நலன், தமிழ் மொழி வளர்ச்சி ஆகியனவற்றை முதன்மை நோக்கங்களாகக் கொண்டு 1917 ஆம் ஆண்டு முதல் எண்ணற்ற திராவிட இயக்க இதழ்கள் தமிழில் வெளிவந்தன. அவற்றுள் குறிப்பிடத்தக்க இதழ்கள் குறித்த செய்திகள் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

### 1.4.1. ஜஸ்டிஸ்

தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தை மக்களிடம் பரப்புவதற்காகத் தொடங்கப்பட்ட 'ஜஸ்டிஸ்' எனும் ஆங்கில நாளிதழ் 26-02-1917 முதல் வெளிவரத் தொடங்கியது. இவ்விதழின் ஆசிரியர் பொறுப்பினை நீதிக் கட்சித் தலைவர்களுள் ஒருவரான டி.எம்.நாயர் ஏற்றார். இதழின் துணை ஆசிரியர்களாக பி.என்.இராமன் பிள்ளை, எம்.பூரணலிங்கம் பிள்ளை ஆகியோர் செயல்பட்டனர். "லா ஜஸ்டிஸ் (La Justice) எனும் பிரெஞ்சுமொழிப் பத்திரிகை முற்போக்கான பத்திரிகையாக வெளிவந்து கொண்டிருந்தமையால் அந்தப் பத்திரிகையில் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்த டி.எம்.நாயர் அதன் பெயரையே தேர்ந்தெடுத்து ஆங்கிலத்தில் ஜஸ்டிஸ்' என்று பெயரிட்டார்."[42] கல்வியறிவில் உயர்ந்த நிலையில் இருந்த பார்ப்பனர் அல்லாத தென்னிந்திய மக்கள் இவ்விதழுக்குப் பேராதரவு அளித்தனர். 'ஜஸ்டிஸ்' இதழுக்கு

மக்களிடையே ஏற்பட்ட செல்வாக்குக் குறித்து 'மெட்ராஸ் மெயில்' நாளிதழ் 26-2-1918 அன்று வெளியிட்ட செய்தியில், "சென்னையில் தன்னாட்சி இயக்கத்தை மிகத் தீவிரமாக எதிர்த்துப் போராடவும், திராவிட இயக்கத்தை வளர்க்கவும் துவங்கியுள்ள 'ஜஸ்டிஸ்' என்னும் ஆங்கில ஏடு, இவ்வளவு விரைவாகப் பெயரோடும், புகழோடும் திகழும் என்பதை, இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் எவரும் எதிர்பார்க்கவில்லை."[43] எனக் குறிப்பிட்டுள்ளது. 'ஜஸ்டிஸ்' என்ற இதழின் பெயர் தமிழில் 'நீதி' என்றாகி அதுவே 'நீதிக்கட்சி' என மக்களிடம் நிலைபெற்றது. மேலும், "ஓர் இதழின் பெயர் அதனை நடத்திய கட்சியின் பெயராகவும் மாறியது, இதழியல் வரலாற்றில் இதுவே முதல்முறை! அந்த அளவுக்கு மக்களிடம் இந்த இதழ் ஆதரவு பெற்றிருந்தது"[44] என இவ்விதழின் சிறப்புக் குறித்து அ.மா.சாமி குறிப்பிடுகிறார்.

### 1.4.2. திராவிடன்

பிராமணர் அல்லாதார் நலன்களுக்காகத் தமிழகத்தில் தோன்றிய முதல் தமிழ் நாளிதழ் 'திராவிடன்' ஆகும். 01-06-1917 முதல் இவ்விதழ் சென்னையிலிருந்து வெளிவந்தது. இந்நாளிதழ், பக்தவச்சலம் பிள்ளையை ஆசிரியராகவும், சாமி.ருத்ரகோடிஸ்வரா, வில்வபதி செட்டியார் ஆகியோரைத் துணை ஆசிரியர்களாகவும் கொண்டு வெளிவந்தது. 'சவுத் இந்தியன் பீபில்ஸ் அஸோஸியேஷன் லிமிடெட்' பதிப்பிப்பது எனும் தொடர் இதழின் முதல் பக்கத்தில் அச்சிடப்பட்டு இந்நாளிதழ் வெளிவந்தது, "இந்துக்களிற் பெரும்பாலோர் பிராமணரல்லாதவர்களாயிருக்கிறார்கள். தென்னிந்தியாவின் ஜனத்தொகை சுமார் நான்கு கோடியில், பிராமணரல்லாத இந்துக்களின் தொகை மூன்றரைக் கோடிக்கு அதிகமாகிறது. இவ்வளவு பெருந்தொகையினராகிய நம்மவர்களுடைய குறைபாடுகளையும் முறைபாடுகளையும் ராஜாங்கத்தாருக்குத் தக்கபடி தெரிவித்து இவர்களுடைய செல்வாக்கை அபிவிருத்தி செய்து கொள்வதற்கு இதுவரை இயலாமற் போயிற்று, பொதுவாக இந்துக்களென்கிற மொத்தப் பெயரை வைத்துக் கொண்டே இந்துக்களில் மிக மிகச் சிறிய பிரிவினராகிய சிலரே எல்லா நலன்களையும் எல்லாப் பலன்களையும் இதுவரைக்கும் அனுபவித்து

வந்திருக்கிறார்கள். இப்பொழுதும் அனுபவித்து வருகிறார்கள். முக்கியமாய் இதற்குக் காரணம் பத்திரிகை பலமுள்ள ஆயுதங்கள் அவர்களிடமிருப்பதுதான். தேசிய திராவிடர்களாகிய நம்மனோர் முன்னுக்கு வருவதற்குத் தடையாயுள்ள தப்பபிப்பிராயங்களையும் விவரீதக் கொள்கைகளையும் பேதித்தெறிந்து உண்மையைச் சாதித்து நிலை நிறுத்துவதே திராவிடனாகிய இப்பத்திரிகையின் நோக்கமாகும்."[45] என இதழில் வெளிவந்த செய்தி, 'திராவிடன்' பத்திரிகை தொடங்கப்பட்டதற்கான நோக்கத்தைத் தெளிவுறுத்துகிறது.

அரசியல் சட்டத்தில் வகுப்புரிமை இடம்பெறவேண்டும் என்பதைத் 'திராவிடன்' இதழ் தொடர்ந்து வலியுறுத்தியது. சான்றாக, "லெஜிஸ்லேடிவ் கவுன்சில்களில் நிறவேற்றுமைகள் இடம்பெற்றால் உடனே பார்ப்பனரின் பெரிய ஓலம் கேட்கிறது. ஆனால் சாதி வேற்றுமைகள் பற்றிப் பேசப்பட்டால் அவர்கள் அதுபற்றி அறியாதவர்கள் போல் இருந்து விடுகிறார்கள். இந்தியர்களின் பிறப்புரிமை இப்பொழுது நிறையப் பேசப்படுகிறது. ஆனால் பஞ்சமர்க்கு ஒரு நாயின் பிறப்புரிமை கூட மறுக்கப்படுகிறது. ஆனால் பஞ்சமர் மட்டும் லெஜிஸ்லேடிவ் கவுன்சிலில் உறுப்பினர்களாய் இருப்பாரேயானால் அவர் தமது சமுதாய மக்கள் அடைந்துவரும் இன்னல்களை அழுத்தமாக எடுத்துரைக்க மாட்டாரா? பார்ப்பனர்களைப் போலவே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நன்மைகளைப் பஞ்சமர்களும் அனுபவிக்க வேண்டும் என அரசாளும் பிரிட்டிஷாருக்கு அவர்கள் உணர்த்தியிருக்கமாட்டார்களா? இதனாலேயே அரசாங்கத்தின் எல்லாப் பொது நிலையங்களிலும் ஒவ்வொரு சமுதாயத்திற்கும் பிரதிநித்துவம் அளிக்க வேண்டும் என்று நாம் வற்புறுத்துகிறோம்"[46] என்ற செய்தி 3.10.1917 திராவிடன் இதழில் வெளியிடப்பட்டது. பிற்படுத்தப்பட்ட, மிகவும் பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட சமூகத்தினர்க்குக் கல்வியிலும் வேலைவாய்ப்பிலும் உரிய ஒதுக்கீடு அளிக்க வேண்டும் என்ற முதல் குரலைத் திராவிடன் நாளிதழ் எழுப்பியதை இதன்வழி அறியமுடிகிறது.

பெரியார் ஈ.வெ.ராமசாமி, காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகித் திராவிடர் இயக்கத் தலைவர்களோடு இணைந்ததற்குப் பின்னர் திராவிடன் பத்திரிகையை மக்களிடையே செல்வாக்குப் பெற வைப்பதற்குப் பெரிதும் முயன்றார். "மானமுள்ள மக்கள் நமது சொந்தப் பெண்டை அன்னியன் குற்றம் சொல்லும்படியாகவும், கஞ்சிக்குத் திண்டாடும்படியும் விடாமல் காப்பது எப்படித் தனது கடமையாக நினைப்பார்களோ, அதுபோல, 'திராவிடன்' பத்திரிகையை ஆதரிப்பதோடு, கட்டின பெண்டைத் தெருவில் அலையவிட்டு, தாசிவீடு காத்துத் திரிவது போல் 'திராவிடனை' விட்டுப் பார்ப்பனர் பத்திரிகைகளைக் கட்டி அழுவதை மறந்து, நமது மானத்தைக் காப்பாற்ற உதவி செய்ய வெண்டுமென்பதாகத் தாழ்மையோடு கேட்டுக் கொள்கிறோம்."[47] என்ற பெரியார் ஈ.வெ.ராவின் கூற்றிலிருந்து, 'திராவிடன்' பத்திரிகை வளர்ச்சியில் அவர் கொண்டிருந்த நாட்டத்தை அறியமுடிகிறது. தமிழ் நூல்கள் குறித்த மதிப்புரை, மொழிபெயர்ப்புக் கட்டுரைகள், இயக்கத் தலைவர்களின் கட்டுரைகள் முதலானவற்றையும் 'திராவிடன்' இதழ் வெளியிட்டது.

### 1.4.3. ஆந்திரப்பிரகாசிகா

1885 ஆம் ஆண்டு முதல் தெலுங்கில் வெளிவந்து கொண்டிருந்த 'ஆந்திரப் பிரகாசிகா' வார இதழை ஜஸ்டிஸ் கட்சியினர் விலைக்கு வாங்கி, அக்கட்சியின் தெலுங்கு நாளிதழாக வெளிவரச் செய்தனர். 01-06-1917 அன்று ஆந்திரப்பிரகாசிகா நாளிதழின் முதல் இதழ் வெளிவந்தது. தெலுங்கில் வெளிவந்த இந்நாளிதழின் ஆசிரியராக ஏ.சி.பார்த்தசாரதியும், துணையாசிரியர்களாக இராகவையா நாயுடு, நரசிம்மராவ் நாயுடு ஆகியோர் பொறுப்பேற்றுச் செயல்பட்டனர்.

### 1.4.5. குடிஅரசு

சுயமரியாதை இயக்கக் கொள்கைகளைப் பரப்புவதற்கெனத் பெரியார் ஈ.வெ.ராமசாமி, 'குடிஅரசு' என்ற வார இதழை 2.5.1925 ஆம் நாள் சனிக்கிழமை ஈரோட்டில் தொடங்கினார். இவ்விதழின் முதல் இதழ் மட்டும் சனிக்கிழமை வெளிவந்தது. பின்னர் இவ்விதழ் ஞாறுதோறும் வெளிவந்தது குறிப்பிடத்தக்கது.

19.11.1933 வரை இவ்விதழ் தொடர்ந்து வெளிவந்தது. இவ்விதழ் தொடங்கப் பட்டதற்கான நோக்கத்தைக் குறித்து முதல் இதழின் தலையங்கத்தில், "நமது பத்திரிகையின் நோக்கத்தையறிய விரும்புவோர்க்கு நமது தாய்நாடு, அரசியல், பொருளியல், சமூகவியல், ஒழுக்கவியல் முதலிய எல்லாத் துறைகளிலும் மேன்மையுற்று விளங்கச் செய்வதேயாகும் எனக் கூறுவோம். நமது நாட்டு மக்களின் உடல் வளர்ச்சிக்காகவும் அறிவு வளர்ச்சிக்காகவும் மொழி வளர்ச்சிக்காகவும், கலை வளர்ச்சிக்காகவும் சமய வளர்ச்சிக்காகவும் இதன் வாயிலாக உழைத்து வருவோம். மக்களுக்குள் தன்மதிப்பும், சமத்துவமும், சகோதரத்துவமும் ஓங்கி வளரல் வேண்டும். உயர்வு, தாழ்வு என்ற உணர்ச்சியே நமது நாட்டில் வளர்ந்துவரும் சாதிச்சண்டை என்னும் நெருப்புக்கு நெய்யாக இருப்பதால், இவ்வுணர்ச்சி ஒழிந்து அனைத்துயிரும் ஒன்றென்று எண்ணும் உண்மையறிவு மக்களிடம் வளர்தல் வேண்டும். சமயச்சண்டைகள் ஒழிய வேண்டும். கடவுளர்களை நீதிமன்றங்களுக்கு இழுத்துச் செல்லும் இழிதகைமை தொலைய வேண்டும். இன்னோரன்ன பிற நறுங்குணங்கள் நம்மக்கள் அடையப் பாடுபடுவதும் எமது நோக்கமாகும்."[48] எனப் பெரியார் ஈ.வெ.ராமசாமி குறிப்பிட்டுள்ளார். மேலும், "இப்பத்திரிகையை ஆரம்பிக்கும் நோக்கம், தேசாபிமானம், பாஷாபிமானம், இன்னும் மற்ற விஷயங்களையும் ஜனங்களிடையுணர்த்து வதற்கேயாம். ஏனைய பத்திரிகைகள் பலவிருந்தும் அவைகள் தங்களது மனசாட்சிக்குத் தோன்றிய உண்மையான அபிப்பிராயங்களை வெளியிட அஞ்சுகின்றன. அவைகளைப் போலல்லாமல் பொது ஜனங்களுக்கு விஷயங்களை உள்ளவற்றை உள்ளபடி தைரியமாகத் தெரிவிக்க வேண்டுமென்பதே எமது நோக்கம்."[49] என அவர் குறிப்பிடுவதிலிருந்து, பிற பத்திரிகைகள் மறைக்கும் செய்திகளைத் துணிவுடன் மக்களுக்கு எடுத்துக்கூறும் நோக்கத்தில் 'குடியரசு' இதழ் தோற்றுவிக்கப் பட்டதென்பதை அறியமுடிகிறது. இராமாயணம், பெரியபுராணம் குறித்த பல்வேறு கட்டுரைகள் இவ்விதழில் வெளிவந்துள்ளன. அவற்றுள் பல பெரியார் ஈ.வெ.ராமசாமியால் எழுதப்பட்டனவாகும்.

'குடிஅரசு' நாளிதழை மிகுந்த இடர்ப்பாடுகளுக்கு இடையில் பெரியார் ஈ.வெ.ராமசாமி நடத்தி வந்தமையை, "நமது குடியரசு பாமர ஜனங்களின் ஆதரவைப் பூரணமாகப் பெறுவது சுலபத்தில் எதிர்ப்பார்க்கக் கூடிய காரியமல்ல. உதாரணமாக "குடியரசு" ஏற்பட்டு ஆறுமாத காலமாகியும் இதுவரை ஆயிரத்துச் சில்லரை சந்தாதாரர்களே சேர்ந்திருக்கிறார்கள். இது நஷ்டத்தில்தான் நடைபெற்று வருகின்றதெனச் சொல்ல வருந்துகிறோம். அதனைப் படிக்கவேண்டிய அளவு ஜனங்கள் படிக்கவில்லையென்பதே நமது அபிப்பிராயம். பெரும்பாலும், பிராமணர், செல்வந்தர், முதலாளிகள், வைதீகர் முதலியோருடைய குற்றங்களை எடுத்துச் சொல்லி வருவதால், அவர்கள் நமது பத்திரிகையை ஆதரிப்பார்களென்று எதிர்பார்ப்பது பைத்தியக்காரத்தனமாகவே முடியும். ஆதலால், நமது பத்திரிகையை ஆதரிக்க வேண்டியது பிராமணதல்லாதார், ஏழைகள், தொழிலாளிகள், தீண்டாதாரெனப்படுவோர் முதலிய ஒடுக்கப்ட்ட சமூகத்தாருக்கு ஏற்பட்ட முக்கிய கடனாகும்."[50] எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

தமிழ்ப் புலவர்களைத் திராவிடர், ஆரியர் எனும் நோக்கில் பிரித்தே 'குடிஅரசு' இதழ் அவர்தம் பாடற் கருத்துகளைத் திறனாய்ந்தது. தமிழ் மொழி பற்றிப் பார்ப்பனர் கொண்டிருந்த கருத்துகள் குறித்த பதிவொன்று குடிஅரசு இதழில் காணப்படுகிறது. அதாவது, 'தமிழைப் பற்றி தமிழர் பார்ப்பனர் கருத்துகள்' என்ற கட்டுரையில் பெரியார் ஈ.வெ.ராமசாமி மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை, சுப்பிரமணிய பாரதியார் கருத்துகளை ஒப்பிட்டு ஆய்ந்துள்ளார். "மனோன்மணியம் ஆசிரியர் பி.சுந்தரம் பிள்ளை தமிழைப் பார்த்துச் சொல்கிறார். 'ஆரியம்போலுலக வழக்கழிந்து சிதையா உன் சீரிளமைத் திறம்வியந்து செயல் மறந்து வாழ்த்துவமே' என்று சொல்லுகிறார். இது ஒரு தமிழ்மகனால் சொல்லப்பட்டது. இனி சுப்பிரமணியபாரதி தமிழ்த்தாயே சொல்லுவதாகச் சொல்லுவதைப் பாருங்கள், 'உயர் ஆரியத்திற்கு நிகரென வாழ்ந்தேன்' என்று சொல்லுகிறார். இது ஒரு ஆரிய மகன்-பார்ப்பரால் சொல்லப்பட்டது."[51] பாரதியைப் 'பார்ப்பனர்' என்ற நிலையில் வைத்து தம் கருத்துகளைப் பெரியார் ஈ.வெ.ராமசாமி

எடுத்துரைத்துள்ளார். அதாவது வடமொழி உலகவழக்கொழிந்து விட்டதைச் சுந்தரனார் தம் பாடலில் எடுத்துரைக்கும் நிலையில் பாரதியார், ‘வடமொழிக்கு நிகராகத் தமிழ்மொழி இருந்தது’ எனக் குறிப்பிடுவதை எடுத்துக்காட்டிப் பார்ப்பனர் இயல்பைக் கட்டுரையில் விவரிக்கிறார். இந்த வகையில், திராவிடர் - ஆரியர் எனும் நிலையில் தமிழ்ப் படைப்பாளர்களின் படைப்புகளை ஆய்கின்ற போக்கினைத் திராவிட இயக்க இதழ்கள் மேற்கொண்டமைக்கு பெரியாரின் இக்கட்டுரை சான்றாக அமைகிறது. 1933 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 30 ஆம் நாள் குடிஅரசு இதழில் வெளிவந்த கட்டுரை ஒன்றிற்காக 1931 ஆம் ஆண்டின் இந்திய பத்திரிகைச் சட்டத்தின் 7 வது துணைப்பிரிவுப்படி இதழின் வெளியீட்டாளரான எஸ்.ஆர். கண்ணம்மாளுக்கு 1000 ரூபாய் பிணையத் தொகை கட்ட வேண்டுமென அன்றைய ஆங்கில அரசாங்கம் ஆணை பிறப்பித்தது. இதன் காரணமாகக் குடிஅரசு இதழ் 19.11.1933 இதழுடன் நின்றது. பின்னர் 13.1.1935 முதல் மீண்டும் வெளிவரத் தொடங்கியது. இதழின் ஆசிரியர் பொறுப்பை ஈ.வெ.கிருஷ்ணசாமி ஏற்றார். இவ்விதழிலிருந்து தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் இதழில் நடைமுறைப்படுத்தப்பட்டது. இதன்பின்பு, 29.12.1940 இதழோடு மீண்டும் குடிஅரசு இதழ் நின்றது. 1941 மற்றும் 1942 ஆண்டுகளில் நடைபெற்ற இரண்டாம் உலகப்போர் காரணமாக குடிஅரசு இதழ்கள் வெளியிடப்படவில்லை. மீண்டும் 16.1.1943 முதல் ஈரோட்டிலிருந்து என். கரிவரதசாமி அவர்களை ஆசிரியராகக் கொண்டு சனிக்கிழமை தோறும் குடிஅரசு வெளிவந்தது. 1944 ஆம் ஆண்டு ‘குடிஅரசு’ இதழ்களில் ‘இராமாயணப் பாத்திரங்களின் யோக்கியதை’ எனும் தலைப்பில் பெரியார் ஈ.வெ.ராமசாமி தொடர்ந்து கட்டுரைகளை எழுதிவந்தார். “தன்னுடைய தங்கையாகிய சூர்ப்பனகையைக் காட்டுமிராண்டித்தனமாய்க் கொடுமைப்படுத்தி, பங்கப்படுத்தின ஆத்திரத்தைப் பொறுக்கமாட்டாமல், பழிவாங்கும் எண்ணத்துடன் இராவணன் சீதையைத் தூக்கி வந்தானேயல்லாது, சீதைமீது காதல் கொண்டோ, அல்லது மற்றொருவர் மனைவியை அனுபவிக்க வேண்டுமென்ற கெட்ட எண்ணம் கொண்டோ தூக்கிவரவில்லை.”[52] என இராவணனை உயர்வாகக் குறிப்பிட்டு, “இராமாயணத்தில்

காணப்படும் யோக்கியமான பாத்திரங்கள் பெரிதும் அயோக்கியர்களாகவும், அயோக்கியத்தனமாய் இழிதன்மையாய் நடந்து கொண்ட பாத்திரங்கள் பெரிதும் யோக்கியர்களாகவும் தெய்வீகத்தன்மை பொருந்தியவர்களாகவும், தெய்வங்களாகவும் மதிக்கப்படுகிறார்கள்; போற்றப்படுகிறார்கள்; வணங்கப்படுகிறார்கள் என்பதை விளக்கவே இந்நூல் எழுதப்பட்டதாகும்."[53] என இராமகாதை குறித்த தம் எண்ணத்தைப் பெரியார் ஈ.வெ.ராமசாமி குறிப்பிட்டுள்ளார். மேலும், இராமாயணம், பெரியபுராணம் மகாபாரதம் ஆகிய நூல்களைக் குறித்த சிறந்த ஆய்வுக் கட்டுரைகள் குடியரசு இதழில் தொடர்ந்து வெளிவந்தன. திராவிட இயக்கக் கொள்கைகளைப் பரப்பும் வலிமைமிகுந்த போர்வாளாகக் குடிஅரசு விளங்கியமையைக் குறித்துக் கல்வியாளர் நெ.து. சுந்தரவடிவேலு, "ஈ.வே.ராமசாமியார் நடத்திவந்த 'குடிஅரசு' இதழ் இலட்சக் கணக்கிலோ, பல்லாயிரக் கணக்கிலோ விற்பனையான இதழ் அல்ல. பத்தாயிரமே விற்பனை. அதை வாங்கிப் படிப்போரைக் கண்டால்? பொதுச் சமுதாயம் உறுமும்; மேட்டுக் குடியினரோ தொழுநோயரைப் பார்ப்பதுபோல் வெறுப்புப் பார்வையை வீசுவார்கள். இருப்பினும் அது வல்லமைமிக்க போர்வாளாகப் பயன்பட்டது."[54] எனக் குறிப்பிடுகிறார். 1949 ஆம் ஆண்டுவரை குடிஅரசு இதழ் வெளிவந்தது.

### 1.4.6. ரிவோல்ட் (Revolt)

சுயமரியாதை இயக்கத்தினரால் தொடங்கப்பட்ட முதல் ஆங்கில வார இதழ் 'ரிவோல்ட்' ஆகும். எஸ். இராமநாதன் அவர்களை ஆசிரியராகக் கொண்ட இதன் முதல் இதழ், 7.11.1928 அன்று வெளிவந்தது. திராவிட இயக்கத்தினர் கொள்கைகளை அனைத்து மக்களும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில் இவ்விதழ் தொடங்கப்பட்டது. 'ரிவோல்ட்' என்ற ஆங்கில வார்த்தைக்குக் 'கட்டுப்பாட்டை உடைத்தல்' என்பது பொருளாகும். அதாவது, "மனித தர்மத்துக்கும், மனித இயற்கைக்கும் விரோதமாக அரசியலிலானாலும் சரி, மத இயலிலானாலும் சரி, அதிகார இயலிலானாலும் சரி, முதலாளி இயலிலானாலும் சரி, ஆண் இயலிலானாலும்

சரி, மற்றும் எவைகளிலானாலும் சரி; அவைகளினால் ஏற்படும் இயற்கைக்கும் அறிவுக்கும் மாறுபட்ட கட்டுப்பாடுகளை உடைத்து, உலகமும் அதன் இன்பமும் எல்லோருக்கும் பொது என்பதும், மக்கள் யாவரும் சமம் என்பதுமான கொள்கையை மனசாட்சிப்படி சாத்தியமான வழிகளில் பிரச்சாரம் செய்வதே அதன் நோக்கம்."[55] என்று இப்பத்திரிகையைத் தொடங்கியமைக்கான காரணத்தைப் பெரியார் ஈ.வெ.ராமசாமி விளக்கியுள்ளார். 7.11.1928 வரை இவ்விதழ் வெளிவந்தது. மொத்தம் ஐம்பத்து ஐந்து இதழ்கள் வெளிவந்தன.

### 1.4.7. முன்னேற்றம்

சுயமரியாதை இயக்கத் தத்துவங்களை மக்களிடம் பரப்பும் நோக்கில் சிங்கப்பூரிலிருந்து 'முன்னேற்றம்' என்ற வார இதழ் வெளிவந்தது. இவ்விதழ், வெ.சி.நாராயணசாமி அவர்களை ஆசிரியராகவும், திரு. ஜி.எஸ். சாரங்கபாணி அவர்களை வெளியீட்டாளராகவும் கொண்டு வெளிவந்தது. மக்களிடம் பரவிக்கிடக்கும் மூடநம்பிக்கைகளை அகற்றுதல், பார்ப்பனர்கள் நிகழ்த்தும் கொடுமைகளிலிருந்து திராவிட இன மக்களை மீட்டல், மக்களைத் தன்மானமுள்ளவர்களாக மாற்றுதல் ஆகியனவற்றை நோக்கமாகக் கொண்டு இப்பத்திரிகை வெளிவந்தது. தூய தமிழ்ச்சொற்களால் அமைந்த தமிழறிஞர்களின் கட்டுரைகள் இவ்விதழில் தொடர்ந்து வெளிவந்தன.

### 1.4.8. புரட்சி

'குடிஅரசு' இதழுக்கு ஆங்கில ஆட்சியினர் கொடுத்த நெருக்கடியைத் தொடர்ந்து பெரியார் ஈ.வெ.ராமசாமி அவர்கள் 'புரட்சி' என்ற வார இதழை 26.11.1933 அன்று தொடங்கினார். பெரியாரின் சகோதரர் ஈ.வெ.கிருஷ்ணசாமி அவர்களை ஆசிரியராகவும் பெரியாரின் தங்கை திருமதி எஸ்.ஆர்.கண்ணம்மாள் அவர்களை வெளியீட்டாளராகவும்கொண்டு இவ்விதழ் ஈரோட்டிலிருந்து வெளிவந்தது. 'மதவாதிகளின் பிரச்சாரங்களை அடியோடு ஒழிப்பதே புரட்சி இதழின் நோக்கம்' எனப் பெரியார் குறிப்பிட்டார். இதன் முதல் இதழில் பெரியார் எழுதிய தலையங்கத்தில், "பாடுபட்டு

உழைத்து ஊரானுக்குப் போட்டுவிட்டு பட்டினியாயும் சமூக வாழ்வில் தாழ்மையாயும் வாழும் மக்களின் ஆதரவையே ‘புரட்சி’ எதிர்பார்த்து நிற்கிறது. வெள்ளை முதலாளிகளை ஒழித்துக் கறுப்பு முதலாளிகளைக் காக்கும் வேலைக்கு இன்று ‘புரட்சி’ வெளிவரவில்லை. அல்லது, வெள்ளை ஆட்சியை ஒழித்து கறுப்பு ஆட்சியை ஏற்படுத்த ‘புரட்சி’ தோன்றவில்லை. அதுபோலவே, இந்து மதத்தை ஒழித்து, இஸ்லாம், கிறிஸ்து மதத்தைப் பரப்ப ‘புரட்சி’ தோன்றியதல்ல. அதுபோலவே, இஸ்லாம், கிறிஸ்து மதத்தை ஒழித்து, இந்து மதத்தை நிலைநிறுத்த ‘புரட்சி’ வெளிவரவில்லை. சகல முதலாளி வர்க்கமும், சர்வ சமயங்களும் அடியோடு அழிந்து, மக்கள் யாவரும் சுயமரியாதையுடன் ஆண் பெண் அடங்கலும் சர்வ சமத்துவமாய் வாழச் செய்யவேண்டும் என்பதற்காகப் புரட்சி செய்யவே ‘புரட்சி’ தோன்றியிருக்கிறது.”[56] எனக் குறிப்பிட்டுள்ளார். ஆங்கில அரசாங்கத்தார் கொடுத்த நெருக்கடி காரணமாகப் புரட்சி இதழ் நின்றது.

### 1.4.9. பகுத்தறிவு

பெரியார் ஈ.வெ.ராமசாமி அவர்களின் தமையனார் திரு. ஈ.வெ.கிருஷ்ணசாமி அவர்களை ஆசிரியராகக் கொண்டு ஈரோட்டிலிருந்து ‘பகுத்தறிவு’ நாளிதழ் வெளிவந்தது. இதன் முதல் இதழ் 15.3.1934 அன்று வெளிவந்தது. முதல் இதழ்த் தலையங்கத்தில் பெரியார் ஈ.வெ.ராமசாமி, “பகுத்தறிவு, வேதத்திற்கோ, விமலத்திற்கோ, சரித்திரத்திற்கோ, பழக்கத்திற்கோ, வழக்கத்திற்கோ, பழமைக்கோ, புதுமைக்கோ அடிமையாகாமல் கொள்வன கொண்டு தள்வன தள்ளி, தானே சுதந்திரமாய் தன்னையே நம்பி, தனது அறிவையும் ஆற்றலையும் துணையாகக் கொண்டு தன்னாலான தொண்டாற்றிவரும்.”[57] எனக் குறிப்பிட்டுள்ளார். 1934 ஆம் ஆண்டு மே மாதத்தின் நான்காவது வாரத்துடன் இந்நாளிதழ் நின்றது. பின்னர் இவ்விதழ் வார இதழாக 26.8.1934 முதல் 6.1.1935 வரை வெளிவந்தது.பின்பு6.1.1935 இதழ் பெரியாரின் எழுத்துச் சீர்திருத்தங்களுடன் வெளிவந்தது. பின்னதாச 1.5.1935 முதல் ‘பகுத்தறிவு’

திங்கள் இதழாக வெளிவந்தது. தமிழறிஞர் சாமி. சிதம்பரனார் சிலகாலம் இவ்விதழின் ஆசிரியராக இருந்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

### 1.4.10. விடுதலை

பெரியார் ஈ.வெ.ராமசாமி நீதிக்கட்சியின் பொறுப்பினை ஏற்ற பின்னர் பொப்பலி அரசரிடம் பொருளுதவி பெற்று 'விடுதலை' என்ற இதழைத் தொடங்கினார். இதன் முதல் இதழ் 1.6.1935 ஆம் நாள் வெளிவந்தது. வாரம் இரு முறை இவ்விதழ் வெளிவந்தது. இவ்விதழ் முதன் முதலில் ஈரோட்டிலிருந்தும் பின்பு சென்னையிலிருந்தும் வெளிவந்தது. தொடக்கத்தில் டி.ஏ.வி.நாதன் விடுதலையின் ஆசிரியராகப் பணியாற்றினார். 1.1.1937 முதல் பண்டித முத்துச்சாமி பிள்ளையை ஆசிரியராகவும், ஈ.வெ.கிருஷ்ணசாமி அவர்களை வெளியீட்டாளராகவும் கொண்டு 'விடுதலை' இதழ் வெளிவந்தது.

சாமி சிதம்பரனார், அ. பொன்னம்பலனார், குத்தூசி சா. குருசாமி, அறிஞர் அண்ணா, கலிவரதசாமி, மணியம்மையார், ஆகியோர் விடுதலை இதழின் ஆசிரியர்களாகப் பணிபுரிந்துள்ளனர். 'குத்தூசி' என்ற புனைபெயரில் சா.குருசாமி பல்வேறு கட்டுரைகளை விடுதலை இதழில் எழுதியுள்ளார்.

இரண்டாம் உலகப் போரின் போது போர்ச்செய்திகளை வெளியிடுவதற்காக ஆங்கில அரசு விடுதலை இதழைச் சிலகாலம் தன் பொறுப்பில் வைத்திருந்து, பின்னர் மீண்டும் தந்தை பெரியாரிடம் ஒப்படைத்தது.

### 1.4.11. திராவிடநாடு

சி.என்.அண்ணாதுரை அவர்களால் தொடங்கப்பட்ட 'திராவிடநாடு' கிழமை இதழ் 8.3.1942 முதல் காஞ்சிபுரத்திலிருந்து ஞாயிறுதோறும் வெளிவந்தது. தொடக்கத்தில் இவ்விதழின் தனிப்பிரதி 1 அணாவாகவும் ஆண்டுச் சந்தா 5 ரூபாயாகவும் இருந்தது.

**"தமிழுக்கும் அமுதென்றுபேர்! - அந்தத்**
**தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்"**

என்ற பாரதிதாசன் கவிதை வரிகளோடு முதல் இதழ் வெளிவந்தது. முதல் இதழில் ‘பரதன்’ என்ற புனைபெயரில் அண்ணா எழுதிய “அதோ, வாராண்டி!” என்ற அரசியல் கட்டுரையும் “வாழ்க சீனா!” என்ற மற்றொரு கட்டுரையும் இடம்பெற்றிருந்தன. கும்பகோணத்தில் சர்.கே.வி.ரெட்டி அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு, ‘பிரசங்க மேடை!’ என்ற தலைப்பில் கட்டுரை வடிவில் இடம்பெற்றிருந்தது. முதல் இதழில் திராவிடநாடு இதழைத் தொடங்கியமைக்கான காரணத்தை விளக்கி, அவ்விதழைத் தமிழர்கள் ஆதரித்துப் போற்றவேண்டுமென வேண்டினார். “திராவிடரின் விடுதலைக்காகப் பாடுபடுவதே நமது நோக்கம். இந்தப்பணியை ஆற்றிவரும் பெரியாரிடம் பெற்ற பயிற்சியைத் துணையாகக் கொண்டு, கடமையைச் செய்ய வேண்டிய போது கலங்கக்கூடாது என்ற உண்மையையும் உறுதுணையாகக் கொண்டு உமது ஆதரவை நாடி, ‘திராவிடநாடு’ வெளிவருகிறது. திராவிடர், திராவிடநாட்டை ஆதரிக்க வேண்டுமென்பது வற்புறுத்திக் கூறவேண்டியதல்லவே! திராவிடருக்காகப் பணியாற்றும் நாம் அச்சம், தயை, தாட்சண்யமின்றி புரட்டுகளை வெளிப்படுத்துவோம், புல்லர்களைப் பொசுக்குவோம், புதுமைக்காகப் போராடுவோம். நமது கடமையைச் செய்கையில் எத்தகைய எதிர்ப்புத் தடுக்கினும் தடுமாறும் உள்ளம் கொள்ளோம். ஆம்!

**“துன்புறும் எளியோர் துயரது தீர்ந்து**
**இன்புறும் வண்ணம் உண்மை இயம்ப**
**அஞ்சுவோன் வீரன் ஆகான் மற்றும்**
**உற்றதுரைத்தலால் ஊறும் பழியும்**
**மற்றும் பல்லின்னல் வந்திடு மென்று**
**மெய்மையைக் காக்கும் விரதம் விடுத்து**
**பொய்யுரைப் போரை புவிதனி லென்றும்**
**அடிமை யென்றே அறைந்திடுவோம்”**

“திராவிடநாடு” இந்த நோக்கங்களுடன் வெளிவருகிறது. கொந்தளிப்பில் பிறக்கும் திராவிடநாடு, உமது ஆதரவால் வளர்ந்து, திராவிடரின் தோழனாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறோம். எதோ, தோழர்களே, எங்கே பார்ப்போம் உமது

அன்பை, கைகொடுங்கள்!!.''[58] என்ற அண்ணாவின் வேண்டுகோளிலிருந்து திராவிடர் மேன்மைக்காக இவ்விதழ் தொடங்கப்பட்டமை குறித்து அறியமுடிகிறது.

29.3.1942 இதழில் 'திராவிடநாடு' இதழை வாழ்த்தி நாவலர் சோமசுந்தர பாரதியார், ''விடுதலை''யிழந்த தங்கள் தமிழ் வீரம் வீண்போகாது, பழைய திராவிட நாட்டின் முன்னேற்றத்திற்குத் துணையாகப் புதிய ''திராவிட நாடு'' எனும் படையைக் கையாள முன்வந்த நற்செய்திக்கு முகமனும், தங்கள் தளராத தமிழ்த்தொண்டுக்கு வாழ்த்தும் கூறுகிறேன். தங்கள் கருத்துக்களோடு மொவ்வாமல் சில வேறுபாடுடைய சிலரிருத்தல் கூடும். ஆனால், யாருக்குமிளையாத தங்கள் நாட்டன்பும், மொழியார்வமும், பொதுமக்கள் நல்லுரிமை பேணிச்செய்யும் மறப்போர்த் திறனும் சிறந்ததென்பதை மறுக்கும் சிறுகுணத்தார் தமிழ்நாட்டிலிருக்க முடியாது."[59] எனக் குறிப்பிட்டுள்ளார்.

இரண்டாம் உலகப்போர் தொடங்கி நடைபெற்றுக் கொண்டிருந்த சூழலில், உலகமே கொந்தளிப்பாக இருந்த நிலையில் 'திராவிடநாடு' இதழ் தொடங்கப்பட்டது. திராவிடநாடு பத்திரிகை வளர்ச்சிக்கு நிதி அளிக்க வேண்டி 1.4.1943 திராவிடநாடு இதழ்வாயிலாகப் பெரியார் ஈ.வெ.ரா., "காஞ்சிபுரத்தில் தோழர் C.N.அண்ணாதுரை M.A., அவர்களால் நடத்தப்பட்டு வரும் 'திராவிடநாடு' பத்திரிகை தமிழர்களின் விடுதலைக்கு உண்மையுடனும் உறுதியுடனும் உழைத்து வருவது தமிழர்கள் அறிந்ததேயாகும். அப்பத்திரிகை தவக்கமின்றியும் நிலையாகவும் நடந்து வருவதற்கு அதற்குச் சொந்தத்தில் ஒரு அச்சு இயந்திரம் வேண்டியிருக்கிறது. அதை உத்தேசித்தே ரூபாய் 1200-0-0-இல் ஒரு டபுள் கிரவுன் சிலிண்டர் மிஷின் பேசி இருக்கிறது. ஆதலால் தமிழ் மக்கள் இந்தத் தொகையைக் கொடுத்து உதவ வேண்டுமாய் வேண்டிக்கொள்கிறேன்."[60] என்ற வேண்டுகோளை விடுத்தார்.

1963 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் வரை வெளிவந்த திராவிடநாடு இதழில் எண்ணற்ற கட்டுரைகள், கவிதைகள், நாடகங்கள், சிறுகதைகள், புதினங்கள், அறிஞர் அண்ணாவின் கடிதங்கள் முதலானவை வெளியாயின. தமிழ் மக்களிடையே ஓர்

அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்திய பெருமைக்குரிய இதழாகவும், உலக நடப்புகளையும், வரலாற்றையும் தமிழர்களுக்கு எடுத்துரைத்த சிறப்பைப் பெற்றதாகவும் 'திராவிடநாடு' இதழ் திகழ்ந்தது, "திராவிடநாடு அண்ணாவின் எழுத்தாற்றலை மட்டும் வெளிப்படுத்தவில்லை; தமிழ் உரைநடையை வளப்படுத்தியது. தமிழ் உரைநடையை அழகுபடுத்தியது. 'அடுக்குமொழி'என்ற புதிய உரைநடையை உண்டாக்கித் தந்தது. அண்ணாவின் அரசியல் -பொருளாதாரக் கருத்துகளும், அக்கருத்துகளை விளக்கக்கூடிய கதை, கட்டுரைகளும் 'திராவிடநாடு' இதழில் வெளிவந்தன. அண்ணா தொடர்ந்து எழுதிவந்த 'தம்பிக்கு' என்ற அஞ்சல்கள் தமிழ்நாட்டின் அரசியல் போக்கினைப் படம் பிடித்துக்காட்டக்கூடியவை."[61] எனத் திராவிடநாடு இதழின் உள்ளடக்கம் குறித்து அ.மா.சாமி குறிப்பிட்டுள்ளார்.

### 1.4.12. முரசொலி

கலைஞர் மு. கருணாநிதி அவர்களால் தொடங்கப்பட்டு இன்றளவும் வெளிவந்து கொண்டிருக்கும் நாளிதழ் 'முரசொலி' ஆகும். 1942 ஆம் ஆண்டு 'முரசொலி' துண்டு வெளியீடாகத் திருவாரூரிலிருந்து வெளிவந்து பின்னர் 14.1.1948 முதல் வார இதழாக வெளிவந்தது. 2.4.1954 ஆம் ஆண்டு முதல் முரசொலி வார இதழ் சென்னையிலிருந்து வெளிவந்தது. பின்பு, 1962 ஆம் ஆண்டிலிருந்து 'முரசொலி' நாளிதழாக வெளிவந்து கொண்டிருக்கிறது. கலைஞர் மு.கருணாநிதி, 'சேரன்' என்ற புனைபெயரில் திராவிட இயக்கக் கொள்கைகளை வெளிப்படுத்தும் வகையிலமைந்த கவிதை, கட்டுரைகளை இவ்விதழில் எழுதியுள்ளார்.

**"பரணி பலபாடி பாங்குடன் வாழ்ந்த**
**பைந்தமிழ் நாட்டில்**
**சொரணை சிறிதுமிலா சுயநலத்துப்**
**பேர்வழிகள் சிலர்கூடி**
**வருணத்தை நிலைநாட்ட வகையின்றிக்**
**கரணங்கள் போட்டாலும்**
**மரணத்தின் உச்சியிலே மானம் காக்க**
**மறத்தமிழா போராடு"[62]**

என முரசொலியில் வெளிவந்த கவிதை, தமிழர்கள் வருணாசிரமத்தை எதிர்த்துப் போராட வேண்டுமென்பதை அறிவுறுத்துகிறது. முரசொலி வார இதழில் கலைஞர் மு.கருணாநிதியின் 'புதையல்', 'சுருளிமலை', 'ரோமாபுரிப் பாண்டியன்' ஆகிய புனைகதைகள் தொடர் கதைகளாக வெளிவந்தன.

முரசொலியில் 'உடன்பிறப்பே' என விளித்துக் கலைஞர் மு.கருணாநிதி எழுதிய கடிதங்கள் பல்வேறு செய்திகளை உள்ளடக்கிய வரலாற்றுப் பெட்டகமாகத் திகழ்கின்றன. இலக்கியம், அரசியல், சமூகம் எனப் பல்வேறு பொருண்மைகளிலமைந்த கட்டுரைகள் முரசொலியில் வெளிவந்தன. கலைஞர் மு.கருணாநிதி, 1977 முதல் 2017 வரை 3517 கடிதங்களை முரசொலியில் எழுதியுள்ளார். முரசொலி இதழ் பல்வகையான தமிழ்ப்பணிகளை ஆற்றியமை குறித்துப் பி.எஸ்.இராசேந்திரன், "முரசொலியின் வளர்ச்சி, தமிழின் வளர்ச்சி; தமிழ்ச் சமூகத்தின் வளர்ச்சி; நமது இன, மான முன்னேற்றத்திற்கான மைல்கல்; முரசொலியின் பணி, தமிழ் அன்னைக்குப் புதிய பல அணிமணிகளைப் பூட்டி மகிழ்ந்திடச் செய்த பெரும்பணி – அரும்பணி; கண்மூடிக் கருத்துக்களெல்லாம் மண்மூடச் செய்து, மூடநம்பிக்கையாம் முடைநாற்றம் வீசும் சூழல்களிலிருந்து கைதூக்கி விட்டு நமக்கெல்லாம் நிம்மதியும், நீங்கா மகிழ்ச்சியும், எழுச்சியும் தரும்பணியாகும் என்பது உண்மை. வெறும் புகழ்ச்சியில்லை."[63] எனக் குறிப்பிட்டுள்ளார்.

### 1.4.13. மன்றம்

நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்களால் தொடங்கப்பட்ட 'மன்றம்' என்ற இதழ் 1948 ஆண்டு சனவரித் திங்கள் முதல் வெளிவந்தது. திங்கள் தோறும் வெளிவந்த இவ்விதழ், பின்னர்த் திங்கள் இருமுறை வெளிவந்தது. 1952 ஆம் ஆண்டு முதல் கிழமை இதழாக வெளிவந்தது. தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு இவ்விதழ் ஆற்றிய பணிகள் குறிப்பிடத்தக்கன. சங்க இலக்கியக் கருத்துகளைத் தமிழ் மக்களிடையே எடுத்துச் சென்ற சிறப்பு இவ்விதழுக்கு உண்டு. பழந்தமிழர்களின் அகவாழ்க்கைச் சிறப்பியல்புகளையும் புற வாழ்வின் மேன்மைகளையும் மன்றம்

இதழில் வெளிவந்த பல்வேறு கட்டுரைகளில் இரா.நெடுஞ்செழியன் எடுத்துரைத்துள்ளார். அகநானூறு, நற்றிணை, புறநானூறு, கலித்தொகை முதலிய சங்க இலக்கியக் கருத்துகளின் சிறப்பியல்கள் குறித்த கட்டுரைகள் மன்றம் இதழில் தொடர்ந்து வெளிவந்தன. இக்கட்டுரைகள் பின்னாளில் நூல்வடிவம் பெற்றன. பகுத்தறிவுச் சிந்தனையாளர்களின் படைப்புகள் எவ்வாறு இருத்தல் வேண்டுமென்பதை இரா. நெடுஞ்செழியன், “தமிழ் மொழியிலுள்ள இலக்கியப் படைப்புக்கள் தமிழ் மக்களின் அறிவையும், ஆற்றலையும், சிறப்பையும், செம்மையையும், புகழையும், பெருமையையும், மகிழ்ச்சியையும், எழுச்சியையும், ஊக்கத்தையும், உயர்வையும் மனநிறைவையும், மனவலிவையும், பண்பாட்டையும், பாங்கான வாழ்வையும், வளத்தையும், நலத்தையும், பெரிதும் வளர்ப்பனவாக அமைய வேண்டுமேயல்லாமல், சாதிவெறியைச்-சமயவெறியைக்-கற்பனைக் கடவுள் பக்தியைக்-காட்டுமிராண்டித் தனத்தைக் - குருட்டு நம்பிக்கையை-மூடப்பழக்க வழக்கத்தை-முட்டாள்தனத்தை - முரட்டுத்தனத்தைப் - பேதைமையைப் - பேராசையைச்-சுயநலத்தைச்-சூன்யத் தன்மையைக் கொடுமைப் பண்பைக்-கொலை வெறியை-நரித்தனத்தை - நயவஞ்சகப் போக்கை- இழிதகைமைப் போக்கை - தாழ்வு மனப்பான்மையைத்-தன்னறிவு மறப்பை-தன்னம்பிக்கை இல்லாமையை வளர்ப்பனவாக எந்த ஒரு காலக்கட்டத்திலும் அமையக் கூடாது.”[64] எனக் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தின் அடிப்படையில் மன்றம் இதழில் பல்வேறு படைப்புகள் வெளிவந்தன.

மன்றம் இதழில் ‘வினாவும் விளக்கமும்’ என்ற பகுதியில் வாசகர்களின் பல்வேறு வினாக்களுக்கு உரிய விளக்கங்களை இரா. நெடுஞ்செழியன் அளித்து வந்தார். மன்றம் இதழின் ஆறாம் ஆண்டுத் தொடக்கத்தில், “மற்ற பத்திரிகைகளுக்கு இருக்கும் வாய்ப்போ, வசதியோ, பொருள் வகையில் ஆதரவோ நமக்குக் கிடையாது. வழவழப்பான தாளில், வண்ணமெருகேறிய ஓவியங்களுடன் கண்ணைக் கவரும் விதத்தில் அவை வெளிவருகின்றன. வண்ணங்கள் நம்மிடமில்லை. ஆனால் நாட்டிற்குத் தேவையான எண்ணங்களைத் தாங்கி வருகிறோம்! நமது பத்திரிகைகள் ஒரு

கொள்கைக்காக உண்டானவை, ஒரு குறிப்பிட்ட கொள்கையை நாட்டு மக்களிடையே பரப்பவேண்டும் என்ற குறிக்கோளுடன் நாம் பத்திரிகைகளை நடத்துகிறோம்."[65] என இரா.நெடுஞ்செழியன் குறிப்பிட்டுள்ள கருத்திலிருந்து திராவிட இயக்கக் கொள்கைகளை மக்களிடையே பரப்புவதைக் குறிக்கோளாகக் கொண்டு மன்றம் இதழ் வெளிவந்தமையை அறியமுடிகிறது.

### 1.4.14. புதுவாழ்வு

திராவிட இயக்க முன்னணித் தலைவர்களுள் ஒருவராகத் திகழ்ந்த பேராசிரியர் க. அன்பழகன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு 'புதுவாழ்வு' திங்கள் இதழ், 1948 ஆம் ஆண்டின் பொங்கல் திருநாளன்று சென்னையிலிருந்து வெளிவந்தது. கே.ஜி.இராதாமணாளன் இதழின் துணையாசிரியர் பொறுப்பினை வகித்தார். பகுத்தறிவுக் கருத்துகளையும், தமிழ் இலக்கியக் கருத்துகளையும் மக்களிடையே எடுத்துக் கூறுவதிலும் இவ்விதழ் மிகுந்த அக்கறை கொண்டது. இதழின் ஆசிரியவுரையை க. அன்பழகன் எழுதிவந்தார். இவ்விதழுக்குப் பெரியார் ஈ.வெ.ராமசாமி, "தங்களின் 'புதுவாழ்வு' என்ற மாத வெளியீடு, நம்நாட்டு மக்களின் நேர்மையான வாழ்வுக்கு வழிகாட்டியாக இருந்து, நீண்டநாள் நிலவிப் பணிபுரியவேண்டுமென ஆசைப்படுகிறேன்."[66] என்ற வாழ்த்துச் செய்தியை அனுப்பினார். மேலும், பாவேந்தர் பாரதிதாசன்,

**"புதுவாழ்வு வந்ததுகாண்**
**பொங்கல் நாளில்!**
**புன்வாழ்வு தீர்ந்ததுகாண்**
**திராவிடத்தில்!**
**எதுவாழ்வு மேற்கொள்ளும்**
**நெறிதான் என்ன?**
**என்பவற்றை அழகாக**
**விளக்க மாக**
**இதுநாளில் எழுதவந்த**
**அறிஞன் தன்னை**
**என்நாவால் மனமார**
**வாழ்த்து கின்றேன்"[67]**

என்ற வாழ்த்துக் கவிதை வாயிலாகப் 'புதுவாழ்வு' இதழை வரவேற்றார். புதுவாழ்வு முதல் இதழின் தலையங்கத்தில் பொங்கல் திருநாளின் சிறப்புகளை விளக்கித் தலையங்கக் கட்டுரையை க. அன்பழகன் எழுதியிருந்தார். மேலும், அறிஞர் அண்ணாவின் மேடைப்பேச்சுகள், வானொலிச் சொற்பொழிவுகள் ஆகியன கட்டுரை வடிவில் புதுவாழ்வு இதழில் இடம்பெற்றன. மு.வரதராசனார், க. அறிவழகன், எழிலன், மு.குழந்தைவேல், இளவழகன், கே.ஏ.மதியழகன், இரா.நெடுஞ்செழியன், அரங்கண்ணல் ஆகியோரின் கட்டுரைகளும் புதுவாழ்வு இதழ்களில் வெளிவந்தன. தமிழ்ப் புனைகதை வளர்ச்சிக்கும் இவ்விதழ் துணை புரிந்தது. கே.ஜி.இராதாமணாளனின் 'உறைந்த இரத்தம்', 'புதுவெள்ளம்', சரசாநாதனின், 'அவள்'. தி.கி.நாகம்மாளின் 'நிர்லா', அறிஞர் அண்ணாவின் 'ஜெபமாலை' ஆகிய சிறுகதைகள் புதுவாழ்வு இதழ்களில் வெளிவந்துள்ளன. கே.ஜி. இராதாமணாளன், பொற்சிலை என்ற புதினத்தை இவ்விதழ் வாயிலாக எழுதினார். தமிழ் உணர்வையும் இனவுணர்வையும் தூண்டும் வகையில் அமைந்த கட்டுரைகளும் 'புதுவாழ்வு' இதழில் வெளிவந்தன. திராவிட இயக்கக் கொள்கைகளை வெளிப்படுத்தும் வகையிலமைந்த கவிதைகளை, கவிஞர் கருணானந்தம், நாரா.நாச்சியப்பன், தமிழ் ஒளி ஆகியோர் எழுதியுள்ளனர். திறனாய்வுக் கட்டுரைகள், நூல் மதிப்புரைகள், திரைப்பட விமர்சனம் ஆகியனவற்றிற்கும் 'புதுவாழ்வு' இதழ் இடமளித்தது என்பது குறிப்பிடத்தக்கது.

1948 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் வெளிவந்த 'புதுவாழ்வு' இதழ் பத்து இதழ்களுடன் நின்றுவிட்டது. இருப்பினும் புதிய எழுத்தாளர்களைத் தமிழ் இலக்கிய உலகிற்கு அறிமுகம் செய்து வைத்த பெருமை இவ்விதழுக்கு உண்டென்பது குறிப்படத்தக்கது.

### 1.4.15. போர்வாள்

16.8.1947 ஆம் ஆண்டிலிருந்து 'போர்வாள்' என்ற இதழ் வெளிவந்தது. காஞ்சி மணிமொழியாரும், பேராசிரியர் மா. இளஞ்செழியனும் இணைந்து இவ்விதழை நடத்தினர். "பெற்றால் திராவிடநாடு, இல்லையேல் இடுகாடு என்று சூளுரை தந்துவிட்டு,

வீரம் ததும்பும் நெஞ்சமும் தமிழ்க் கனல் கக்கும் கண்களை உடையவராய் அதே திராவிடர் பாசறையில் நிரல்நிரலே அணிவகுத்து நிற்கும் அந்த ஆயிரமாயிரம் இளங்காளைகளின் கரங்களிலே நேர சென்று தங்குவது இவ்வாள்”[68] எனப் போர்வாள் பத்திரிகையின் நோக்கத்தினை ஆசிரியர்கள் தெளிவுறுத்தியுள்ளனர். தனித்திராவிடநாடு அடையும் நோக்கத்திற்காக இளைஞர்களை உருவதற்காகப் ‘போர்வாள்’ இதழ் தொடங்கப்பட்டதென்பதை இதிலிருந்து அறியமுடிகிறது.

பொங்கல் திருநாளை முன்னிட்டு தனி மலர்கள் வெளியிடுவதைப் ‘போர்வாள்’ இதழ் வழக்கமாகக்கொண்டிருந்தது. தலைவர்களின் சிந்தனைகள் கட்டுரை வடிவில் இடம்பெற்றன. 1948 ஆம் ஆண்டு வெளிவந்த போர்வாள் இதழின் முதல் பொங்கல் மலரில், “ஜாதி மதம் மனிதனுக்கு அவசியமில்லை. இருக்கக் கூடாது. மேலும், ஜாதி மதம் இருப்பது கொண்டே பிழைக்கும் கூட்டத்திற்கு நான் விரோதி. பார்ப்பனர் இத்தமிழ்நாட்டின் முற்போக்குக்கு முட்டுக்கட்டை. பார்ப்பனீயம் ஒழியவேண்டும் என்பது என் எண்ணம். இவைகள் என் கொள்கைகள் என்பதைத் தமிழ்நாடு முழுதும் அறியும். நான் என் எண்ணமாக எதையாவது எழுத நேர்ந்தால் இவைகளுக்கு அரண் செய்வதாகத்தான் எழுத முடியும்”[69] என்ற பெரியாரின் கருத்து இடம்பெற்றுள்ளது. அவ்வகையில் 1958 ஆம் ஆண்டுவரை போர்வாள் வார இதழ் வெளிவந்தது குறிப்பிடத்தக்கது.

### 1.5. பிற இதழ்கள்

தமிழ் இதழியல் வரலாற்றில் திராவிட இயக்கத்தாரின் பங்கு அளப்பரியதாகும். திராவிட இயக்கத்தைத் தமிழகத்தில் நிலை நிறுத்தியதில் இவ் இயக்கம் சார்ந்த இதழ்களுக்கு மிகுந்த பங்குண்டு. அதாவது, “1942க்குப் பிறகு திராவிட இயக்கத்தின் முன்னணித் தலைவர்கள் அனைவருமே இதழாசிரியர்களாக இருந்துள்ளனர். இந்த இயக்கத்தின் தனிச் சிறப்புகளில் இதுவும் ஒன்று.”[70] எனும் கருத்து, திராவிட இயக்கத்தார் தம் இயக்க வளர்ச்சிக்கு எத்தகைய அளவிற்கு இதழ்களைப் பயன்படுத்தியுள்ளனர் என்பது புலப்படுகிறது. “தமிழ்நாட்டில் இச் சு.ம.கொள்கைக்கு

ஆக ஆரம்பிக்கப்பட்ட அநேக பத்திரிக்கைகள், எவ்வளவோ பணவுதவி பெற்றும் நஷ்டப்பட நேர்ந்தன, பல நின்றே போய்விட்டன. ஈரோட்டில் மாத்திரம் 3,4 பத்திரிகைகள் ஆரம்பிக்கப்பட்டன. மற்றபடியும் பல ஊர்களிலும் அப்படியே ஆயின. இனி, சுயமரியாதைப் பத்திரிகைகள் பெருகியே ஆகவேண்டும்.”[71] என்ற பெரியார் ஈ.வெ.ராமசாமியின் கருத்திற்கேற்ப இயக்கம் சார்ந்த இதழ்கள் பல தமிழில் வெளிவந்தன

திராவிட இயக்க இதழ்கள், தமிழகத்தில் பல்கிப் பெருகியமை குறித்து அறிஞர் அண்ணா, “துவக்க நாட்களிலே, ஒரே ஒரு இதழ், குடிஅரசு. அதைப் படிக்கவே பயப்படுவர், படித்தோர் பதறுவர். அது நாட்டிலே பரவவொட்டாதபடி பல சதிச் செயல்கள் நடைபெற்றன. இந்த ஒரு இதழ், என்ன செய்யமுடியும்? என்று பேசி இறுமாந்தனர், எண்ணற்ற பல பத்திரிகைகள் தங்கள் பக்கபலமாக உள்ளன என்ற தைரியத்திலே. அவர்கள் கண் திறந்து பார்க்கட்டும்-இந்தவாரம், பெரியாரின் பெருந் தொண்டின் சிறப்பினை விளக்குவது, ஒரு குடி அரசு மட்டுமா! அல்ல! அல்ல! ஆரியம் எதிர்பார்த்திருக்கவே முடியாத-நாமே கூடச் சில ஆண்டுகளுக்கு முன்பு நினைத்திருக்க முடியாது-அவ்வளவு இதழ்கள்-அழகான வடிவு-ஆர்வமிக்க இளைஞர்களின் எழுத்தோவியங்கள். அவ்வளவு இதழ்களும் இன்று திராவிட இனமுரசு! ஜஸ்டிஸ் தலைவர்களின் தலைமுறைக்கும் இதற்கும் நேர்மாறு. ஒரு ஜஸ்டிஸ் இதழ், எத்தனை மந்திரிகளின் பணத்தைச் சாப்பிட்டு ஏப்பம் விட்டு, அஜீரணத்தாலேயே இறந்துபட்டது! ஒரு பக்கம் திராவிடன், ஓடி ஆடிப் பாடுபட்டு இறந்துவிட்டது. ஆனால் இன்று ! இதோ மகிழ்ச்சியும் பெருமையும் தரக்கூடிய அட்டவணை:- தீப்பொறி (வேலூர்), திராவிட அரசு, திராவிட முரசு, போர்வாள், திராவிடன், பூந்தோட்டம், தோழன், அழகு, கதிரவன், டார்பிடோ, இனஒலி, தீப்பொறி (சென்னை), மறுமலர்ச்சி, குயில்(வாரம்), குயில் (மாதம்), குயில் (கவிதை), தமிழ்நாடு (சென்னை), நிலவு, மயில், திராவிடமணி, சூறாவளி, புதுவாழ்வு, ஸ்பார்க்(ஆங்கிலம்),நியூ ஜஸ்டிஸ் (ஆங்கிலம்), தமிழகம், திராவிடம், நகரதூதன், சன்டே அப்சர்வர் (ஆங்கிலம்), லிபரேடர் (ஆங்கிலம்), கோவை

முரசு, சேலம் டைம்ஸ், வழிகாட்டி, சமத்துவம், சமரசம், தமிழ் ஏடு, குரல், விடுதலை, குடிஅரசு, ஜஸ்டிசைட், திராவிட நாடு."[72] எனக் குறிப்பிட்டுத் திராவிட இயக்கம் சார்ந்த இதழ்களைப் பட்டியலிட்டுள்ளார்.

திராவிட இயக்கம் சார்ந்த பிற இதழ்களும் அவற்றை நடத்திய ஆசிரியர்களும் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| லிபரரேட்டர் | - | டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி |
| எங்கள் நாடு | - | டாக்டர் ஏ.கிருஷ்ணசாமி (தமிழ் நாளிதழ்.) |
| தொழிலாளர் மித்திரன் | - | பெருமாள், காஞ்சி கல்யாண சுந்தரனார். |
| திராவிட மணி | - | டி.எம்.முத்து |
| தமிழ் உலகம் | - | டி.எம்.பார்த்தசாரதி |
| போர்வாள் | - | காஞ்சி மணிமொழியார்,<br>மா. இளஞ்செழியன் |
| பொன்னி | - | அரு.பெரியண்ணன்,<br>முருகு சுப்பிரமணியம். |
| திராவிடன் | - | என்.வி.நடராசன் |
| குயில் | - | கவிதை இதழ் - பாரதிதாசன், |
| குயில் வார இதழ் | - | டி.என். இராமன், ஜலகண்டபுரம் கண்ணன். |
| குயில் மாத இதழ் | - | சலகை ப. கண்ணன். |
| பகுத்தறிவு | - | சலகை ப. கண்ணன். |
| பூந்தோட்டம் | - | வை. திருநாவுக்கரசு (சேலம்) |
| நிலவு | - | பூ. கணேசன். |
| கதிரவன் | - | பு. செல்வராசன் |
| தீப்பொறி | - | சி.பி.சிற்றரசு |
| தமிழ் மன்றம் | - | சி.பி.சிற்றரசு |
| தீச்சுடர் | - | சி.பி.சிற்றரசு |
| இனமுழக்கம் | - | சி.பி.சிற்றரசு. |
| தீப்பொறி | - | எம்.கே.டி.சுப்பிரமணியம் |
| டார்பிடோ | - | என் சீவரத்தினம் |
| தோழன் | - | டார்ப்பிடோ ஏ.பி.சனார்த்தனம். |
| தமிழ்த்தென்றல் | - | வி.வி.இராமசாமி |
| தனி அரசு | - | ஏ.வி.பி. ஆசைத்தம்பி |
| மகிழ்ச்சி | - | சதானந்தம் |

| | | |
|---|---|---|
| எரிமலை | - | ஏ.கே. வேலன் |
| ஞாயிறு | - | ஏ.கே. வேலன். |
| ஞாயிறு | - | சிட்டிபாபு |
| நியூ ஜஸ்டிஸ் | - | ஏ.எஸ்.வேணு |
| களஞ்சியம் | - | ஏ.எஸ்.வேணு |
| ஸ்பார்க் | - | எஸ்.வேதரத்தினம் |
| பிராக்ஸ் | - | டி.எம்.பார்த்தசாரதி |
| சூறாவளி | - | தட்சிணாமூர்த்தி |
| கிளர்ச்சி | - | இரா.சு.தங்கப்பழம்,<br>எம்.எஸ்.சிவசாமி. |
| முருகு | - | ந. அறிவழகன் |
| உடுமலை பீரங்கி | - | பி.வி.இராமசாமி |
| தமிழ் நிலம் | - | அண்ணல் தங்கோ |
| போராட்டம் | - | மா.ந.இராசமாணிக்கம் |
| நேஷனல் கால் | - | இலட்சுமண ராவ். |
| தீ | - | பத்மன் செல்லப்பன் |
| தளபதி | - | இறைமுடி மணி |
| முன்னேற்ற முரசு | - | பி.வி.முத்துச்சாமி |
| எழுச்சி | - | மா.செங்குட்டுவன், என். கிட்டப்பா, |
| தம்பி | - | தில்லை வில்லாளன் |
| பூமாலை | - | தில்லை வில்லாளன் |
| தென்றல் | - | கண்ணதாசன். |
| தென்னகம் | - | கே.ஏ.மதியழகன் |
| அறப்போர் | - | இராம அரங்கண்ணல் |
| காவியம் | - | கவிதை இதழ் - கவிஞர் சுரதா |
| கலை மன்றம் | - | பால்வண்ணன் |
| முத்தாரம் | - | கலைஞர் மு.கருணாநிதி |
| மறவன் மடல் | - | கலைஞர் மு.கருணாநிதி |
| ஹோம் லேண்ட் | - | அறிஞர் அண்ணா. |
| ஹோம் ரூல் | - | அறிஞர் அண்ணா |
| காஞ்சி | - | அறிஞர் அண்ணா. |
| குறள் நெறி | - | சி. இலக்குவனார். |
| இலக்கியம் | - | சி. இலக்குவனார். |
| பெரியாரிசம் | - | சி. இலக்குவனார் |

| | | |
|---|---|---|
| திருவிளக்கு | - | க. இராசாராம். |
| கழகக் குரல் | - | திருவை அண்ணாமலை |
| மாலை மணி | - | பி.எஸ்.இளங்கோ |
| தென்னரசு | - | எஸ்.எஸ்.தென்னரசு |
| தன்னாட்சி | - | ஏ.கே.வில்வம் |
| தென்புலம் | - | தோப்பூர் திருவேங்கடம் |
| உரிமை வேட்கை | - | இராம.சுப்பையா, உ.கணபதி |
| நகர தூதன் | - | திருச்சி. டி.எம்.வெங்கிடாசலம் |
| ஞாயிறு | - | ஏ,கே. வேலன் |
| போராட்டம் | - | மா.நா. இராசமாணிக்கம் |
| தளபதி | - | கோ. இறைமுடிமணி |
| எதிரொலி | - | என்.எஸ். இளங்கோ |
| நெல்லைத் தோழன் | - | கே.வி.கே.சாமி |
| தம்பி | - | தில்லை வில்லாளன் |

திராவிட இயக்கத் தலைவர்களின் கட்டுரைகள், சொற்பொழிவுகள், இயக்கச் சார்பாளர்களின் கருத்துகள், திறனாய்வுக் கட்டுரைகள் முதலானவற்றைத் தாங்கி இவ்விதழ்கள் வெளிவந்தன. தமிழ் இதழியல் வரலாற்றில் திராவிட இயக்கத்தாரின் பங்கு அளப்பரியதென்பதை மேற்சுட்டிய பட்டியல் தெளிவுறுத்துகிறது.

## 1.6. தொகுப்புரை

- ❖ இருபதாம் நூற்றாண்டில் தமிழ்ச் சமூகப்பரப்பில் ஏற்பட்ட ஆரியர், திராவிடர் தொடர்பான சிந்தனைகளின் மாற்றம் திராவிடக் கட்சிகளின் தோற்றத்திற்குக் காரணமாய் அமைந்தது.
- ❖ வருணாசிரமத்தினை எதிர்த்துக் குரல் எழுப்புவது, தமிழரின மேன்மை, சாதீய எதிர்ப்பு, மூடநம்பிக்கையைக் களைதல், விதவை மறுமண ஆதரவு, தமிழ்ச் சமூகத்தின் மறுமலர்ச்சி போன்றவை திராவிட இயக்கத்தின் அடிப்படைக் கொள்கைகளாக முன்மொழியப்பட்டன.
- ❖ ‘திராவிடர்’ என்ற சொல், வால்மீகி இராமாயணத்தில் குறிக்கப்பெற்றது என்பதும் குமாரிலப்பட்டர் ‘திராவிடர்’ எனும் சொல்லைத் ‘தமிழர்கள்’ என்ற பொருளில்

பயன்படுத்தினார் என்பதும், கால்டுவெல்லும் இச்சொல்லையே பயன்படுத்தினார் என்பதும், அவரின் பயன்பாட்டிற்குப் பின்பு இச்சொல் தமிழ்நிலத்தில் பெரிதும் நிலைபெறத் தொடங்கியது என்பதும் ஆய்வின் வழி அறியமுடிகிறது.

- ❖ தனி மனித வாழ்வியல், நிலத்தினைத் தொடர்புபடுத்தியோ அல்லது அவர் பேசும் மொழியினைக் கொண்டோ, அவரை ஒரு குறிப்பிட்ட இனத்தினைச் சார்ந்தவராக வரையறுப்பது சரியன்று; அவ்வாறு வரையறுத்தால் தமிழ் நிலத்தில் வாழ்கின்ற தமிழ் பேசுகின்ற பார்ப்பனர்களும் தங்களைத் ‘தமிழர்’ என்று கூறிக்கொள்ளும் நிலை உருவாகும். மேலும் பார்ப்பனர்களின் வாழ்வியல் நடைமுறைகள் தமிழ் இனத்தின் வாழ்வியல் பண்புகளாக அடையாளப்படுத்தப்படும். அதனால் தமிழ் இனத்தின் அடிப்படைப் பண்புகள் அழிக்கப்படவோ அல்லது சிதைக்கப்படவோ வாய்ப்புகள் ஏற்படும். எனவே அதனை விடுத்து ஒரு மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவரை மட்டும் அந்த இனத்தினைச் சார்ந்தவராக் குறிப்பிடுதல் வேண்டும் என்னும் கருத்தினைத் திராவிட இயக்கத்தார் கொண்டிருந்தனர்.
- ❖ ஆங்கிலேயர் ஆட்சியின்போது, பார்ப்பனர்கள் ஆட்சி அதிகாரத்திலும் உயர் கல்வியிலும், உயர்பதவிகளிலும் செலுத்திய ஆளுகையும், பார்ப்பனர் அல்லாத பிற வகுப்பினர் புறக்கணிக்கப்பட்ட நிகழ்வுகளும் திராவிட இயக்கத்தின் தோற்றத்திற்கும் எழுச்சிக்கும் காரணமாக அமைந்துள்ளதென்பது கண்டறியப்பட்டுள்ளது.
- ❖ மிண்டோ – மார்லி சீர்திருத்தம், சாதி அடிப்படையிலான பிரதிநிதித்துவத்தை ஒழித்தது. அதனால் மக்கள் தொகையில் நான்கு சதவிகிதத்திற்கும் கீழிருந்த பார்ப்பனர்கள் அரசு நிறுவனங்களில் அதிக வேலை வாய்ப்பினைப் பெற்றனர். இதனால், பிராமணர் அல்லாதார்க்குத் தனித்தொகுதி வழங்கப்பட வேண்டும் என்ற கோரிக்கையும் புறந்தள்ளப்பட்டது. இத்தகைய சூழல்களால் திராவிடர்களின் மேன்மை குறித்த சிந்தனைகள் உருவாயின.

- சென்னை ஐக்கியக் கழகமே 1913 இல் சென்னைத் திராவிடர் கழகம் என மாற்றம் பெற்றது. ‘திராவிடர்’ என்ற சொல்லாட்சியுடன் தோற்றம் பெற்ற முதல் அமைப்பும் இதுவாகும். இவ்அமைப்புதான் பிராமணர் அல்லாதாரின் இழிநிலைகளை எடுத்துரைத்ததுடன், அவ் இழிநிலைகளைப் போக்குவதற்கான முயற்சிகளையும் முன்னெடுத்துள்ளது. அத்தகைய நிகழ்வுகளின் தொடக்கமாக உயர் கல்வி பயிலும் மாணவர்களுக்காக ‘திராவிடர் இல்லம்’ தொடங்கப் பெற்றது. மேலும் இதனைத் தொடங்கிய நடேச முதலியார் திராவிடர்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்துவதில் தலைமையாகச் செயல்பட்டவர் என்பது தெளிவாகின்றது.
- அன்னிபெசன்ட் அம்மையாரின் பிராமணர், பிராமணர் மொழியான சமஸ்கிருதம் குறித்த பேச்சுகளும், அவற்றை வெளியிட்ட ‘இந்து’, ‘சுதேசமித்திரன்’ போன்ற பத்திரிகைகளின் போக்கும் ‘தென்னிந்திய நலவுரிமைச்சங்கம்’ தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தது.
- தென்னிந்திய நலவுரிமைச் சங்கம், ‘திராவிடன்’, ‘ஜஸ்டிஸ்’, ஆந்திரப் பிரகாசிகா ஆகிய இதழ்களை நடத்தியது. இவ்விதழ்கள் வாயிலாக திராவிட மக்களின் நலன்சார்ந்த சிந்தனைகள் வலியுறுத்தப்பட்டன. ஓர் இதழின் பெயர் இயக்கத்தின் பெயரையே மாற்றியமைக்கும் ஆற்றலைப் பெற்றமைக்குத் ‘திராவிடன்’ இதழ் காரணமாக அமைந்தது.
- காங்கிரஸ் பேரியக்கத்தின் நிதிநல்கையுடன் சேரன்மாதேவியில் வ.வே.சு. அய்யர் அவர்களால் நடத்தப்பெற்ற குருகுலத்தில் பிராமணர் அல்லாத மாணவர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதி, சுயமரியாதை இயக்கத்தின் தோற்றத்திற்கு அடிப்படைக் காரணமாய் அமைந்தது. பெரியார் ஈ.வெ.ராமசாமி சுயமரியாதை இயக்கக் கருத்துகளை மக்களிடம் பரப்பியதில் முன்னின்று செயலாற்றினார்.
- 19.04.1944 இல் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம், ‘திராவிடர் கட்சியாக’ மாற்றம் பெற்றது. ‘திராவிடநாடு’ கோரிக்கையும் முன்மொழியப்பட்டது. சாதீய ஏற்றத்

தாழ்வுகள், மூடநம்பிக்கைகள் போன்றவற்றை அழித்தொழிப்பது இக்கட்சியின் முதன்மை நோக்கங்களாக இருந்துள்ளன.

- பெரியார் - மணியம்மை திருமணத்தின் காரணமாக ஏற்பட்ட அரசியல் சிக்கல், 'திராவிட முன்னேற்றக் கழகம்' தோன்றக் காரணமாயிற்று. இருப்பினும் அறிஞர் அண்ணா, பெரியார் கொண்டிருந்த திராவிட இயக்கக் கொள்கைகள் அனைத்தையும் ஏற்றவராகவே விளங்கினார். திராவிட இயக்கம் சார்ந்து வெளிவந்த இதழ்கள் அனைத்தும் திராவிடர் மேன்மைக்கான கொள்கைகளிலும் செயல்களிலும் ஒன்றுபட்டுச் செயலாற்றின.

## சான்றெண் விளக்கம்

1. கா.சுப்பிரமணிய பிள்ளை, மொழிநூற் கொள்கையும் தமிழ்மொழி அமைப்பும், ப.62.
2. டாக்டர் கால்டுவெல், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், ப.8.
3. மேலது.
4. மேலது, பக்.4-15.
5. இரா. நெடுஞ்செழியன், திராவிட இயக்க வரலாறு, ப.92.
6. மேலது, ப.92.
7. வே.ஆனைமுத்து,(ப.ஆ.) பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள்,தொ.1, ப.545.
8. மேலது, ப.547.
9. மேலது, ப.556.
10. கோ.சி. பெரியசாமிப் புலவர்,(க.ஆ.), திராவிடநாடு, 24.9.1944, ப.2.
11. திராவிடப்பித்தன், திராவிடநாடு திராவிடருக்கே, ப.17
12. இரா. நெடுஞ்செழியன், மு.நூ.ப.188.
13. மேலது, ப.189.
14. முரசொலி மாறன், திராவிட இயக்க வராறு, ப.1.
15. இரா. நெடுஞ்செழியன், மு.நூ. ப.187.
16. எஸ். முத்துசாமிபிள்ளை, நீதிக்கட்சி வரலாறு, ப.12.
17. மேலது, ப.14.
18. பரமசிவம், கே.,(ப.ஆ.), நீதிக்கட்சி பொன்விழா மலர், ப.303.
19. (ஆ.இ.), திராவிட சமுதாய சிற்பி சர்.பி. தியாகராயர், ப.2.
20. கி. வீரமணி, சர்.பிட்டி.தியாகராயர், ப.15.
21. முரசொலி மாறன், மு.நூ. ப.36.
22. மேலது, ப.220.
23. வே. ஆனைமுத்து,(ப.ஆ.), மு.நூ. ப.458.
24. மேலது. ப..473.
25. வ.ரா., ராமசாமிப் பெரியார், ப.15.
26. கோ. கேசவன், சுயமரியாதை இயக்கமும் பொதுவுடைமையும், ப.85.
27. கே.முருகசேன், சி.எஸ். சுப்பிரமணியம், தென்னிந்தியாவின் முதல் கம்யூனிஸ்ட் சிங்காரவேலு, ப.99.
28. கோ. கேசவன், மு.நூ. ப.117.
29. மேலது. ப.104.
30. வே. ஆனைமுத்து (ப.ஆ.), மு.நூ., தொ.1, ப.574.
31. மேலது.

32. இராம. சுப்பையா, நானும் என் திராவிட இயக்க நினைவுகளும், பக். 55-56
33. சி.சிட்டிபாபு, (தொ.ஆ.) தி.மு,க. வரலாறு, ப.43.
34. மேலது, பக். 48-49.
35. கி.வீரமணி (ப.ஆ.), பெரியார் களஞ்சியம், குடியரசு, தொ.1. (1925), ப..224.
36. திரு.வி.கலியாணசுந்தரனார், திரு.வி.க.வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.156.
37. வே. ஆனைமுத்து,(ப.ஆ.), மு.நூ.,தொ.2, ப.1893.
38. அ.மா.சாமி, தமிழ் இதழ்கள் தோற்றம் - வளர்ச்சி, ப.241.
39. முரசொலி மாறன், மு.நூ.ப.132.
40. இ.சுந்தரமூர்த்தி, மா.ரா.அரசு.(ப.ஆ.), திராவிட இயக்க இதழ்கள்,தொ.1. ப.11.
41. திராவிடநாடு, 21.7.1946, பக்.9,26.
42. பெ.சு.மணி, (க.ஆ.) திராவிட இயக்க இதழ்கள், ப.16
43. இரா. நெடுஞ்செழியன், மு.நூ. ப.199
44. அ.மா.சாமி, மு.நூ, ப.244.
45. பெ.சு.மணி, (க.ஆ.) மு.நூ., ப.23.
46. பு. இராசதுரை, நீதிக்கட்சி அரசு பாடுபட்டது யாருக்காக, ப.13.
47 .வே. ஆனைமுத்து, (ப.ஆ.) மு.நூ.தொ.2, ப.1286
48. கி.வீரமணி (ப.ஆ.), மு.நூ.,ப.4.
49. வே. ஆனைமுத்து, (ப.ஆ.), மு.நூ.தொ.1. ப.1
50. மேலது. ப.26.
51. குடியரசு, 6.11.1943.
52. மேலது, 22.1.1944, ப.2.
53. மேலது.
54. நெ.து.சுந்தரவடிவேலு, புரட்சியாளர் பெரியார், ப.678.
55. வே. ஆனைமுத்து,(ப.ஆ.),மு.நூ.தொ.2, ப.1892.
56. மேலது, ப.1897.
57. மேலது, ப.1898.
58. திராவிடநாடு, 8.3.1942, ப.7.
59. மேலது, 29.3.1942, ப.3.
60. மேலது, 18.4.1943, ப.3.
61. அ.மா.சாமி, மு.நூ., ப.263.
62. க. திருநாவுக்கரசு, (தொ.ஆ. ), முரசொலி பவளவிழா மலர், ப.15.
63. பி.எல். இராசேந்திரன் (க.ஆ.),திராவிட இயக்க இதழ்கள், தொ.1, ப.151.

64. இரா.நெடுஞ்செழியன், மு.நூ. ப.461.
65. மன்றம், 5.5.1957, ப.3.
66. தி.வ. மெய்கண்டார்,(க.ஆ.) கழகக்குரல், 21.12.1975, ப.9
67. மேலது, ப.7
68. ப. மகாலிங்கம், (க.ஆ.), திராவிட இயக்க இதழ்கள், தொ.1,ப.167.
69. போர்வாள், பொங்கல் மலர், 14-01-1948 ப.52.
70. மா. இளஞ்செழியன், (க.ஆ.), திராவிட இயக்க இதழ்கள், தொ.1, ப.8.
71. குடியரசு, 23.10.1943.
72. திராவிடநாடு 28-09-1947, ப.10.

## இயல் - 2

# திராவிடநாடு இதழில் கவிதைகள்

## 2.0. முன்னுரை

தமிழில் புதிய மரபுக் கவிஞர்களைத் தமிழ்கூறும் நல்லுலகிற்கு அறிமுகப்படுத்திய தமிழ்ப்பணியைத் திராவிடநாடு இதழ் வாயிலாக அண்ணா செய்துள்ளார். திராவிடநாடு இதழின் முதல் பக்கத்தில் புதிய கவிஞர்களின் கவிதைகளை அச்சிட்டு அவர்களை அறிஞர் அண்ணா ஊக்கப்படுத்தினார். இக்கவிதைகளுள் பல மரபுக் கவிதைகளாகும். திராவிடநாடு இதழில் முதன்முதலில் கவிதைகளைப் படைத்து அறிமுகமான கவிஞர்கள், பின்னாளில் தலைசிறந்த தமிழ்க் கவிஞர்களாக உருவெடுத்தனர். அவர்கள் இயக்கக் கொள்கைகளை வெளிப்படுத்தும் வகையிலும் தமிழ் உணர்வை, தமிழ்ப்பற்றை ஏற்படுத்தும் வகையிலும் கவிதைகள் படைத்தனர். இத்தகைய கவிஞர்கள் மொழிப்பற்றும் நாட்டுப்பற்றும் கொண்டவர்களாகத் திகழ்ந்துள்ளமையை அவர்தம் கவிதைகள் புலப்படுத்துகின்றன. அக் கவிதைகளின் சிறப்பியல்புகளை எடுத்துரைக்கும் வகையில் இவ்வியல் அமைகிறது.

## 2.1.கவிதைப் பொருண்மைகள்

எழுத்தாற்றலிலும் பேச்சாற்றலிலும் வல்லவரானா அறிஞர் அண்ணா அவ்வப்போது கவிதைகள் எழுதும் வழக்கத்தையும் கொண்டிருந்தார். கவிதை என்பது எவ்வாறு அமைய வேண்டும் என்பதற்கான விளக்கத்தை அவர்,

**“அறிந்ததனை அறிந்தோர்க்கு அறிவிக்கும் போதினிலே**
**அறிந்ததுதான் என்றாலும்**
**எத்தனை அழகம்மா! என்று**
**அறிந்தோரையே மகிழவைக்கும் அருங்கலையே**
**கவிதையாகும்”[1]**

எனக் குறிப்பிட்டுள்ளார். திராவிடநாடு இதழின் தொடக்க காலம் முதல் அவ்விதழில் கவிதைகள் வெளியிடப்பெற்றன. திராவிட இயக்கக் கொள்கைகளை வெளிப்படுத்தும் கவிதைகளுக்கு அறிஞர் அண்ணா திராவிடநாடு இதழில் உரிய இடமளித்துள்ளார்.

சாதி ஒழிப்பு, திராவிடநாட்டுப் பிரிவினை, விதவை மறுமணம், தொழிலாளர் நலன், இந்தி எதிர்ப்பு, தமிழ் வாழ்த்து, இலங்கைத் தமிழர் நிலை, பொங்கல் திருநாள், தொழிலாளர் தினம், கைத்தறி நெசவாளர் நிலை, சீனப் படையெடுப்பு, தலைவர்கள் மறைவு முதலிய பல்வேறு பொருண்மைகளில் அமைந்த கவிதைகள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன.

### 2.1.1.சாதி ஒழிப்பு

மனிதனைப் பிறப்பின் அடிப்படையில் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என வருணாசிரம தருமப்படி பிரிப்பதையும் வேறுபடுத்துவதையும் சுயமரியாதை இயக்கம் தோன்றிய நாள் முதல் அவ்வியக்கத்தார் எதிர்த்து வந்துள்ளனர். மனிதர்களுக்குள் சாதிப் பிரிவுகள் ஏற்பட்டமைக்கு அவர்களிடம் இருந்த கடவுள் உணர்ச்சி முதன்மைக் காரணமாய் இருந்ததென்பதைப் பெரியார் ஈ.வெ.ராமசாமி "மனிதனுக்குக் கடவுள் உணர்ச்சி தோன்றிய காலந்தொட்டே, இந்த நாட்டில் மேல்சாதி – கீழ்சாதி உணர்ச்சிகள் காட்டப்பட்டிருக்கின்றன. இந்து மதம் என்பதில் வைணவத்திலாவது, சைவத்திலாவது சாதிப் பிரிவு, உயர்வு – தாழ்வு காணப்படாத கடவுள்களோ, அவதாரங்களோ, திருவிளையாடல்களோ, கடவுள்களைக் காட்டிய பெரியோர்களோ, தத்துவம் புராணங்களோ, இதிகாசங்களோ ஏதாவது ஒன்றைக் காட்டமுடியுமா.?"[2] எனக் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய சாதி வேற்றுமைகள் நாட்டை விட்டு அகலவேண்டும் என்ற சிந்தனையை முன்வைத்துத் திராவிடநாடு இதழில் கவிதைகள் வெளியாகி உள்ளன.

கவிஞர் முடியரசன் எனப் பிற்காலத்தில் அறியப்பட்ட கே.எஸ்.துரைராஜ் என்பவரின் முதல் கவிதை 5.11.1944 ஆம் நாள் திராவிட நாடு இதழில் 'ஜாதி ஏன்?' என்ற தலைப்பில் வெளிவந்தது. தமிழனுக்குச் சாதி தேவையில்லை என்ற கருத்தை இக்கவிதையில் அவர் வலியுறுத்தியுள்ளார். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற வள்ளுவர் சிந்தனையைக் கவிதையில் இணைத்துப் பாதியில் வந்த சாதி தமிழனுக்குத் தேவையில்லை என அறிவுறுத்துகிறார். இதனை,

**“ஜாதி என்பது உனக்கேன் -தமிழா**
**ஜாதி என்பது உனக்கேனோ ஏனோ ஏனோ**
**பாதியில்வந்த பழக்கம்தாமே**
**ஆதியில் நம்முடைய மரபல்லவே**
**ஓதி உணர்ந்தவர் உன்மொழிச் சொல்லால்**
**ஆதலினாலது அன்னியர்க்கே என்பார்**
**எல்லா உயிர்க்கும் பிறப்பொக்கும் என்ற நம்**
**ஈடிலா வள்ளுவன் உரையை மறந்தோம்**
**பொல்லாத ஆரியர் புகுந்ததினாலே**
**பொன்றும் இடர் இனிப்போதும்”[3]**

எனும் கவிதை வாயிலாக அறியமுடிகிறது. இக்கவிதையே அச்சில் வெளிவந்த முடியரசனின் முதல் கவிதையாகும். ‘தமிழரிடையே சாதி வேற்றுமைகள் நிலவியமைக்கு ஆரியர்களின் சூழ்ச்சியே அடிப்படைக் காரணம்’ என இக்கவிதையில் முடியரசன் எடுத்துரைக்கிறார்.

‘கபிலர்’ எனும் கவிஞர், நாட்டினில் நால்வகைச் சாதிகளை ஏற்படுத்தியமைக்குப் பார்ப்பனர்களே காரணமெனச் சாடுகிறார். விலங்கினங்களில் பெற்றமும் எருமையும் கலந்து கருப்பெறல் இல்லை. ஆனால் ஒருவகைச் சாதியான மனிதர்களில் ஆணும், பெண்ணும் கலந்து கருவுயிர்த்துப் பிறந்த மனிதப்பிறவியில் இருவகையான பிரிவுகளை உண்டாக்குதல் இயற்கை நீதிக்கு முரணானதென்பதை,

**“நால்வகைச் சாதியிந்**
**நாட்டினில் நாட்டினீர்**
**மேல்வகை கீழ்வகை**
**விளங்குவது ஒழுக்கால்**
**பெற்றமும் எருமையும்**
**அவ்விரு சாதியில்**
**ஆண்பெண் மாறிக்**
**கலந்து கருப்பெறல்**
**கண்ட துண்டோ,**
**ஒருவகை சாதியா**
**மக்கட் பிறப்பில்**

**இருவகையாக நீர்**
**இயம்பிய குலத்து**
**ஆண்பெண் மாறி**
**அணைதலும் அணைந்தபின்**
**கருப்பொறை யுயிர்ப்பதும்**
**காண்கின்றி லிரோ"[4]**

என்ற கவிதையின் வழியாகக் கவிஞர் கபிலர் எடுத்துரைத்துள்ளார். இக்கவிதை 29.6.1947 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது.

## 2.1.2.திராவிடநாட்டுப் பிரிவினை

1938 ஆம் ஆண்டு தமிழகத்தில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டம் மொழி மற்றும் இன அடிப்படையில் திராவிட மக்களை ஒருங்கிணைத்தது. 1940 ஆண்டு திருவாரூரில் பெரியார் ஈ.வெ.ராமசாமி தலைமையில் நடைபெற்ற நீதிக் கட்சியின் மாகாண மாநாட்டில் திராவிட நாடு தனியாகப் பிரிக்கப்படவேண்டும் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. 1940 ஆண்டு ஜுலை முதல் நாள் திராவிடநாட்டுப் பிரிவினை நாளாகக் கொண்டாடப்பட்டது. இதன்விளைவாக 'அடைந்தால் திராவிடநாடு; இல்லையேல் சுடுகாடு' என்ற முழக்கம் எங்கும் ஒலித்தது.

24.8.1940 ஆம் நாள் திருவாரூரில் நடைபெற்ற மாகாண மாநாட்டில் 'திராவிடநாடு' தனிநாடக வேண்டும் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. 20.8.1944 ஆம் நாள் சேலத்தில் நடைபெற்ற மாகாண மாநாட்டில் 'திராவிடநாடு தனிநாடக வேண்டும் என்பது கட்சியின் மூலாதாரத் திட்டமாக்கப்பட்டதுடன் கட்சியின் பெயரும் ' 'திராவிடர் கழகம்' என மாற்றப்பட்டது. 1.7.1947 அன்று திராவிடநாடு பிரிவினை நாள் கொண்டாட்டம் நடைபெற்றது. 1940 ஆம் ஆண்டு முதற்கொண்டு திராவிடநாடு தனிநாடக வேண்டும் என்ற எண்ணத்துடன் திராவிட இயக்கத்தினர் செயல்பட்டனர். திராவிடநாட்டுப் பிரிவினை வேண்டியும், திராவிடநாட்டின் பழஞ்சிறப்புகள் குறித்தும், திராவிடநாடு அடிமைப்பட்ட காரணத்தைக் குறித்தும், பல்வேறு கவிதைகள் திராவிட

இயக்க இதழ்களில் தொடர்ந்து வெளியாயின. திராவிடநாடு' இதழிலும் திராவிடநாட்டுப் பிரிவினையை வலியுறுத்தும் வகையில் கவிதைகள் இடம்பெற்றன.

1949 ஆம் ஆண்டு. திராவிட முன்னேற்றக் கழகம் தொடங்கப்பட்டபோது உருவாக்கப்பட்ட முதல் சட்ட திட்டத்தில். "தமிழகம், ஆந்திரம், கருநாடகம், கேரளம் ஆகிய நான்கு மொழிவழி மாநிலங்களும் தனி ஆட்சி உரிமை பெற்றுத் திராவிடச் சமதர்மக் குடியரசுக் கூட்டாட்சியாக நிலவப் பாடுபடுவது."[5] என்பது கட்சியின் குறிக்கோளாக இடம்பெற்றது.

திராவிடநாட்டை ஆண்ட பழந்தமிழ் மன்னர்கள் நீதி முறையினின்று பிறழாமல் ஆட்சி நடத்தியதையும், பின்னாளில பார்ப்பனர்களின் சூழ்ச்சியால் திராவிடர்கள் அடைந்த இன்னல்களையும் கவிஞர் கருணாநந்தம் பின்வருமாறு தம் கவிதையில் குறிப்பிடுகிறார்.

**"இந்தத் திராவிடம் என்னுடை நாடு**
**என்று தினந்தோறும் நீயிதைப்பாடு**
**முந்தித் திராவிடர் முறையுடன் ஆண்டார்**
**மூடத்தனத்தால் முழுமோசம் பூண்டார்**
**வந்துபுகுந்திட்ட மறையோரை நம்பி**
**வகையின்றி வாடினதினப்போதும் தம்பி**
**சொந்தத் தமிழரின் சுதந்திரம் நீங்க**
**சூழ்ச்சிகள் செய்தோரைச் சூறைசெய்ஏங்க"**[6]

தமிழர்களை அடிமையாக்கி, அவர்தம் சுதந்திர வாழ்வைக் கெடுத்தோரைச் சூறையாட வேண்டுமென்றும் இக்கவிதையில் குறிப்பிடுகிறார்.

இளைஞர்கள் அனைவரும் ஒன்றுதிரண்டு ஆன்றோர்களின் சொத்தான திராவிடத்தை மீட்க வேண்டும் என்றும் தூண்டுகிறார். இதனை,

**பழிதரும் பார்பனர் நரித்தனத்தாலே**
**பஞ்சைகளாயினோம் பாரிதன்மேலே**
**கழிபெருந் துன்பத்திற்காளானோம் நம்பி**
**கண்மூடித் தூங்காதே இன்னமும் நம்பி**
**இழிதருஞ் சொற்களை இங்கிருந்தோட்டி**

**ஏற்பனசெய்உடன் இளைஞரைக் கூட்டி**
**அழிவிலாத் திராவிடம் ஆன்றோர்கள் சொத்து**
**அந்நியர் ஏனிதற்கரும்பஞ்சாயத்து"[7]**

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. பார்ப்பனர்களின் நயவஞ்சகத்தையும் நரித்தனத்தையும் இக்கவிதையில் எடுத்துரைத்துள்ளார்.

தமிழரான ஆர்.கே..சண்முகம் செட்டியார், கொச்சியில் திவானாக இருந்தபோது, 'திராவிட நாட்டுப் பிரிவினை தேவையில்லை' என்ற கருத்தினை வெளிப்படுத்தினார். அக்கருத்திற்கு மாற்றுக் கருத்தினைக் கவிஞர் முடியரசன் திராவிடநாடு இதழில் கவிதை வடிவில் மறுத்துப் பாடினார். "சர். சண்முகம், திராவிடநாடு தனிநாடாவதை எதிர்க்கிறார்! ஏனோ இப்படி இவருடைய மனம் வேறுபட்டது என்று கேட்கிறார் தோழர் முடியரசன், கலைச் சுவைகாணும் சர். சண்முகத்துக்குக் கவிதை உருவிலேயே."[8] என அறிஞர் அண்ணா அளித்த முன்னுரையுடன் இக்கவிதை 'ஏனோ' என்ற தலைப்பில் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. அக்கவிதை,

**பல்லவி**

**சிந்தை திரிந்ததேனோ – கோவைக்குமரன்**
**நிந்தைமிகுந்த செயல்இங்கு புரிந்திடச் (சிந்தை)**

**அந்தநாளிலே சொன்ன சொல்லையும் மறந்து**
**ஆகாதுபிரிவினை எனுமொழி புகன்றிடச் (சிந்தை)**

**சரணம்**

**பட்டம்பதவிகளில் கொண்டுள்ள மோகமோ**
**பாதியறிவினர்தம் போதனை வேகமோ**
**கெட்டநினைவுகொளும் ஆரியர் சூழ்ச்சியோ**
**கெடுமதி இதுவன்றோ ஏனிந்த வீழ்ச்சியோ"[9] (சிந்தை)**

என்பதாகும். ஆங்கில அரசாங்கத்தினர் அளித்த 'சர்' பட்டமும், வகித்துவரும் பதவியும், பார்ப்பனர்கள் செய்த சூழ்ச்சியும் திராவிடநாட்டுப் பிரிவினைக்கு எதிரான கருத்தினைக் கூறவைத்துவிட்டதாகச் சாடுகிறார் முடியரசன். திராவிட நாட்டுப்

பிரிவினைக் கொள்கை அன்றைய இளைஞர்களிடம் மிகுந்த தாக்கத்தை ஏற்படுத்தியிருந்ததை இக்கவிதை உணர்த்துகிறது.

மன்னாதி மன்னர்களும் எதிர்க்க இயலாத மறத்தோளை உடையவன் தமிழனே!, திராவிடநாட்டை மீட்கும் செயல்தான் நீ செய்கின்ற பொன்னான செயலாகும். புலிக்குட்டிக்கு நிகரான தமிழனே! நீ திராவிட நாட்டை மீட்பதற்கு இன்றே புறப்படு' எனும் கருத்தைப் புலப்படுத்துகின்ற கவிஞர் வாணிதாசனின் கவிதை 23.9.1951 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது.

**"உன்நாட்டைத் தாய்நாட்டை உன்முன்னோர் ஆண்ட**
**புனல்நாட்டைத் திராவிடத்தைச் செந்தமிழை ஓம்ப**
**முன்னேற்றப் பணிபுரிவாய் உனைஎதிர்க்கும் தீய**
**முட்டுகளுக் கஞ்சாதே பகை தூளாய்ப் போகும்**
**மன்னாதி மன்னவனும் வந்தெதிர்க்க வொண்ணா**
**மறத்தோளும் வாள்நுனியும் மழுங்கிப் போயிற்றா**
**பொன்னான செயலிதுவே திராவிடத்தை மீட்கப்**
**புலிப்போத்தே குகைவிட்டுப் புறப்படா இன்றே"[10]**

திராவிடநாட்டுப் பிரிவினை ஒன்றுதான் செந்தமிழைப் பாதுகாக்கும் என்ற கருத்து இக்கவிதையில் வெளிப்பட்டுள்ளது.

தமிழன் சுயசிந்தனை கொண்டால்தான் திராவிடநாடு எளிதில் கைகூடும் என்பதைப் பா. கரிகாலன் 'திராவிடம் பிரியும் நாள்' எனும் தலைப்பிலமைந்த கவிதையில் குறிப்பிடுகிறார். இதனை,

**"ஆரியர் சொற்கேட்டே அறிவை இழந்தோம்**
**அந்தகராய் மாறினோம் - கல்தொழும்**
**அந்தகராய் மாறினோம்**
**சீரிழந்த நாம் சிந்தித் தாலே போதும்**
**திராவிடம் பிரியும் - அன்றே**
**திராவிடம் பிரியும்"[11]**

எனும் கவிதைவரிகள் உணர்த்துகின்றன.

'கும்பகோணத்தான்' எனும் பெயரில் 9.11.1958 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளியான கவிதை 'நாட்டை மீட்பீர்' என்ற தலைப்பில் வெளிவந்தது. பழந்தமிழர்

களம்பல கண்டு புகழ்பெற்றார். ஆனால் இன்றைய தமிழர் இதனை மறந்து அடிமை வாழ்வு வாழ்கின்றனர். இதனை பலவாறு எடுத்துக்கூறியும் தமிழர் களம் காண முன்வரவில்லை. தமிழர்களே திராவிடநாட்டை மீட்பதற்கு மனம் வைப்பீர்' என இக்கவிதை வேண்டி நிற்பதனை,

**"எத்தனைதான் எடுத்துரைத்தும் ஏனோ கேளீர்**
**இன்னமுமா உம்போதை தீரவில்லை?**
**கத்துகிறோம் நாவரள யாருக் காக**
**களங்கண்டு புகழ்கொண்ட தமிழர் தங்கள்**
**முத்தனைய வாழ்வுதனை மீண்டும் பெற்று**
**முழுமதிபோல் இவ்வுலகில் புகழடைந்து**
**சித்தமெலாம் களித்திடவே யன்றோ இந்தச்**
**சிறுஉண்மை மனங்கொள்வீர் நாட்டை மீட்பீர்"[12]**

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இந்திய அரசின் திட்டங்கள் யாவும் வடமாநிலங்களுக்கே செல்கின்றன; ஐந்தாண்டுத் திட்டங்கள் அனைத்தும் வடநாட்டார் நலன்களுக்காகவே உருவாக்கப்பட்டுள்ளன என்னும் கருத்துகளை எடுத்துரைத்து 'பிரித்திடுவோம் திராவிடத்தை' என்ற தலைப்பில் 'களிற்றண்ணல்' எனுங் கவிஞர்,

**"நன்றாக நம்வாழ்வு அமைய வேண்டில்**
**நல்வழியில் பிரித்திடுவோம் திராவிடத்தை"[13]**

எனத் திராவிடநாட்டுப் பிரிவினைக்கான காரணத்தை முன்வைக்கிறார். சேர,சோழ, பாண்டியர் ஆண்ட திராவிடநாட்டைப் போர்முனை அறியாத புல்லர்கள் ஆட்சி செய்தல் கூடாது என்பதைக் கவிஞர் கருணானந்தம்,

**"சேரனும் சோழனும்**
**செந்தமிழ்ப் பாண்டியனும்**
**சீருடன் ஆண்டநம்**
**செல்வத் திராவிடத்தைப்**
**போர்முனை அறியாத**
**புல்லர்கள் ஆள்வதோ?**
**போற்றிப் புகழ்ந்து நாம்**
**பொறுமையாய் மாள்வதோ"[14]**

என எடுத்துரைத்துள்ளார். புத்துணர்வும், பொதுநல நாட்டமும் கொண்ட தமிழர்கள் எந்நாளும் அறிவில் குறைந்தவர்கள் அல்லர், கவிஞர்களும் அறிஞர்களும் நிறைந்த நாடாகத் திராவிடத் திருநாடு திகழ்கிறதென்பதைக் கவிஞர் இரவி தனது கவிதையில்,

**"புத்துணர்ச்சி மிக்குண்டு பொதுநாட்ட முண்டு**
**பூரித்த தோளுடையோர் எம்நாட்டில் உண்டு**
**இத்துணையாம் அறிவுவழி இன்பவழி நாட்டில்**
**எஞ்ஞான்றும் கற்றோர்கள் அறிவிழந்த தில்லை**
**எத்தர்கள் சிலபேரால் சற்றுவளம் இழந்தோம்**
**இனியெங்கள் திட்டத்தால் வளம்கொழித்துப் பொங்கும்**
**புத்துலகை கவிஞர்கள் அறிஞர்வாழ்நாட்டில்**
**பூத்திடும் இன்பத் திராவிடம் விரைவில்"[15]**

என எடுத்துரைத்துள்ளார்.

பாரதியாரின் செந்தமிழ் நாடென்னும் போதினிலே' என்ற பாடலை அடிப்படையாக வைத்துக் கவிஞர் பி.கே.வேலன் 'திராவிடநாடு' என்ற தலைப்பில் அமைந்த கவிதையில் திராவிடநாட்டின் பெருமைகளையும் சிறப்புகளையும்,

**"திராவிட நாடெனும் போதினிலே – பகுத்தறிவுத்**
**தேன்வந்து பாயுது காதினிலே – எங்கள்**
**அன்னையர் நாடென்ற எண்ணத்திலே – ஒரு**
**அன்பு பிறக்குது இதயத்திலே**
**கன்னடம் ஆந்திரம் கவின்மலையாளமும் - கன்னித்**
**தமிழ்நாட்டின் கிளைநாடே - இன்று**
**தரணியில் ஒலிக்கும் திராவிடநாடு – நம்**
**சங்ககாலத் தமிழ் நாடே**
**குறளையும் சிலம்பையும் குவலயத்திற்கே – தந்து**
**குன்றாப் புகழ்கொண்ட திருநாடு – நெஞ்சை**
**அள்ளும் அறிவு மலர்களென் - றோர்மறை**
**ஆரம் படைத்த திராவிடநாடு"[16]**

என எடுத்துரைத்துள்ளார்.

கவிஞர் நாஞ்சில் ஆ.ஆரிது, திராவிடநாட்டின் வளங்களையும் அந்நாடு தமிழ் வழங்கும் திருநாடாகவும் திகழ்வதனை,

**"மலைகளிலே மணிவிளையுந் திருவிடப்பொன் னாடே – நல்**
**மயில்களுறை வனம்பெருகும் திராவிடப்பொன் னாடே**
**அலைகடலில் முத்திருத்தித் திருவிடப்பொன் னாடே - இவ்**
**வவனியெலாம் புகழ்வளர்த்தாய் திருவிடப்பொன் னாடே**
**கலைகளிலே தலைசிறந்தாய் திருவிடப்பொன் னாடே – நீ**
**கருதுமுயர் நிலைபெற்றாய் திருவிடப் பொன் னாடே**
**சூலைக்கனியின் முதுநறவாய்த் திருவிடப்பொன் னாடே – யாம்**
**குலவுதமிழ் மொழிபிழிந்தாய் திருவிடப்பொன் னாடே"**[17]

எனக் குறிப்பிடுகிறார். 'திராவிடநாட்டை' மீட்பதற்கு வீட்டிற்கு ஒரு பிள்ளையைக் கொடுத்திட வேண்டும் எனக் கவிஞர் எஸ்.கே. வெங்கடேசன் வேண்டுகோள் வைக்கிறார்.

**"ஏட்டில் எழுதும் கவிதையால் ஏழைகளின் துயரம் தீராது**
**நாட்டிலுள்ள வறுமையை ஒழிக்கழி நானறிவேன் என்றால் நம்புவரோ**
**கூட்டத்தில் பேசிடும் பேச்சால் கழகத்தின் தரங்கெட்டுப் போகாது**
**வீட்டுக்கு ஓர்பிள்ளை தந்தேனும் மீட்டிடுவோம் மங்காத்**
**திராவிடத்தை"**[18]

என நாட்டின் வறுமை தீருவதற்குத் திராவிடநாட்டை அடைவதுதான் ஒரே வழியென்பதை இக்கவிதை வரிகள் உணர்த்துகின்றன.

17.9.1961 ஆம் நாள் திராவிடநாடு இதழில் 'இன்பத் திராவிடம் காண்போம்' என்ற கவிதையில் கோ.சுந்தரவடிவேலன், மொழிவழி பிரிந்து, இனவழி இணைந்து திராவிடநாட்டை அடைந்திட வேண்டும் என வலியுறுத்துகிறார். மேலும்,

**"மொழிவழி பிரிவோம்**
**இனவழி சேர்வோம் - இன்பத்**
**திராவிடம் காண்போம்**
**அடிமை வாழ்வை இன்றே ஒழித்து**
**ஆளும் உரிமை பெறுவோம் - நாம்**
**அரச வாழ்வினை அடைவோம்"**[19]

எனத் திராவிடர்கள் அடிமை வாழ்வை ஒழித்து ஆளும் உரிமையைப் பெற்றிட வேண்டும் என்ற தம் விழைவினையும் இக்கவிதையில் வெளிப்படுத்துகிறார்.

### 2.1.3. விதவை மறுமணம்

கைம்பெண்களின் மறுவாழ்விற்கு எதிராக நிற்கும் வைதீகத் தடைகளை உடைத்து அவர்களுக்கு மறுவாழ்வு அளித்திட வேண்டும் என்ற சிந்தனை சுயமரியாதை இயக்கம் தோற்றம் கண்டபோதே உருவான சிந்தனையாகும். பாவேந்தர் பாரதிதாசன்,

**“கோரிக்கை அற்றுக்கிடக்கு தண்ணே இங்கு**
**வேரிற் பழுத்த பலா – மிகக்**
**கொடியதென்றெண்ணிடப் பட்ட தண்ணே குளிர்**
**வடிக்கின்ற வட்ட நிலா”[20]**

எனக் கைம்பெண்களின் அவலநிலையினைத் தம் கவிதையில் விளக்கியுள்ளார். 1926 ஆம் ஆண்டு ‘குடிஅரசு’ இதழில் வெளிவந்த கட்டுரை ஒன்றில் கைம்பெண்களின் அவலநிலையைக் குறித்துப் பெரியார் ஈ.வெ.ராமசாமி,“உலக இன்பத்தை நுகர்ந்து அலுத்துப் போயிருக்கும் பழுத்த கிழவனாயினும், தன் மனைவியார் இறந்துவிட்டவுடன் மறுமணம் புரிய முயலுகிறான். அதுவும் வனப்பு மிகுந்த, எழில்பொருந்திய இளஞ்சகோதரிகளையே தன் மணத்திற்குத் தேர்ந்தெடுக்கிறான். ஆயின், ஒரு பெண்மகள் தன் கொழுநனை இழந்துவிட்டால், அவள் உலக இன்பத்தையே சுவைத்தறியாதவளாயிருப்பினும், தன் ஆயுட்காலம் முற்றும் அந்தோ, தன் இயற்கைக் கட்புலனை இறுக மூடி, மனம் நொந்து வருந்தி மடிய நிபந்தனை ஏற்பட்டு விடுகிறது. என்னே! அநியாயம்.”[21] என எடுத்துரைத்து கைம்பெண்களின் மறுமணத்தை ஆதரித்துத் தம் கருத்துகளை வழங்கியுள்ளார். இதனை அடியொற்றிச் செங்கல்பட்டில் நடைபெற்ற முதலாவது சுயமரியாதை மாநாட்டில் விதவை மறுமணம், திருமண இரத்து ஆகியவற்றை ஆதரித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

விதவைப் பெண்களின் மறுமணத்திற்கு ஆதரவளிக்கும் வகையில் திராவிட இயக்கக் கவிஞர்கள் திராவிடு இதழில் கவிதைகள் புனைந்துள்ளனர். அவர்களுள்

கவிஞர் வாணிதாசன் குறிப்பிடத்தக்கவர் ஆவார். 25.2.1945 ஆம் நாள் இதழில் 'விதவைக்கொரு செய்தி' என்ற தலைப்பில் வெளிவந்த கவிதையில், மனைவி இறந்தால் வேறுமணம் புரியும் ஆடவர் செயல் நீதி என்றால் அவ்வாறே மகளிரும் மறுமணம் செய்துகொள்வதில் தவறென்ன? என வினவுகிறார். மேலும், கைம்பெண்கள் வீணாகத் தம் வாழ்வைக் கழிக்கக் கூடாது என்றும் அறிவுறுத்துகிறார். இதனை,

**ஆணிறந்தால் பெண்மற்றோ ராள டைவதற்கு**
**வீண்வாதம் பேசி விதிர்விதிர்ப்பார் - நாணமின்றிப்**
**பெண்ணிழந்தோன் வேறுமணம் பெற்றிடுதல் நீதியென்பார்**
**எண்ணி லிவரெதற்கு ஈடு?**

**உன்சோட்டுப் பெண்களெலாம் உற்ற துணையோடு**
**இன்புற்று வாழுகின்றார் இவ்வுலகில் - என்கிளியே**
**ஆணுக் கொருநீதி ஆக்கியதா லுன்வாழ்வை**
**வீணாய்க் கழிப்பதுவோ விள்''[22]**

எனும் அடிகளின் வாயிலாக அறியமுடிகிறது. கைம்பெண்கள் தமக்குள்ள உரிமையைத் தாமே எடுத்துக் கொள்ள வேண்டும், மடமைச் சிந்தனைகளை அழித்தொழிப்பதற்கு அவர்கள் தாமே முன்வரல் வேண்டும் என்றும் அறிவுறுத்துகிறார் என்பதனை,

**"உன்தகப்பன் தங்கை உடன்பிறந்தான் வாழ்க்கைதனில்**
**இன்னிணையில் சேர்ந்தே யிருக்கின்றார் - உன்மனது**
**கைம்பெண்நீ வேண்டாம் களிப்புறுமோ சாற்றுநினை**
**நம்முரிமை நாடுவது நாம்**

**மஞ்சள் குளித்து மலர்சூடிப் பொட்டிட்டுக்**
**கஞ்சவிழி தீட்டிக் களிப்படைய – வஞ்சி**
**துடிதுடித்தா லாமோ துணிந்தெடுநீ இன்றே**
**மடைமை இனமழிக்கும் வாள்**

**எதிர்ப்பட்டால் குற்றமும் ஏழை விதவைக்**
**கதிர்ப்பட்டால் குற்றமும் காண்பார் - மிதித்துலகை**
**மீன்போ லெதிர்த்தேறு மீளும் வகையிதுதான்**
**ஏன்தயக்கம் இன்னே எழு!''[23]**

என்னும் கவிதை வரிகள் தெளிவுறுத்துகின்றன. 'கைம்பெண்களின் மறுவாழ்விற்கு ஆடவரும் துணைநிற்க வேண்டும்; கைம்மைத்துயர் ஒழிந்திட அனைவரும் ஒருங்கிணைந்து பணிசெய்து புதிய சமுதாயம் காணவேண்டும்' என்ற கருத்தினைக் கவிஞர் சொக்கலிங்கம் தன் கவிதையில் குறிப்பிடுகிறார். இதனை,

**"மறுமணம் ஆண்கள் மகிழ்வுடன் கொள்வார்**
**நறுமணப் பூமுடித்த நங்கை மறுமணம்**
**என்றால் இழிவேயாம் இந்நிலைமை மாறிடவே**
**நின்றுபணி செய்வாய் நிதம்"[24]**

என்ற கவிதை வரிகள் விளக்கி நிற்கும். விதவைப் பெண்களின் எழில் நிறைந்த தோற்றத்தையும், காதல் நிறைந்த அவர்கள் உள்ளத்தின் இயல்பையும் கவிதையில் எடுத்துரைத்து, கைம்பெண்களின் காதலுக்குத் தடைபோடும் கயவர்களைச் சாடுகிறார் கவிஞர் சாமி.பழனியப்பன். இத்தகைய கருத்தினை,

**"மொட்டவிழ்ந்து முறுவல் செயும் முல்லையன்ன**
**முழுநிலவில் அவள்முகமும் எழில்பெருக்கும்**
**கட்டவிழ வில்லையவள் தளிரின் மேனி**
**காதலுளம் சற்றேனும் தீயவில்லை**
**பொட்டழித்து விதைவையெனப் பட்டம் சூட்டிப்**
**பூவையினை மூலையிலே கிடத்தினார்கள்**
**கட்டழகி காதலுக்கு வரம்பு கட்டும்**
**கயவர்களோ வாழுகிறார் மாளவில்லை**
**மின்னலைப்போல் அவள்கடைக்கண் வீச்சி ருக்கும்**
**முந்திவரும் கொங்கைஎழில் பூத்து நிற்கும்**
**பொன்னிதழாற் சுவையமுதம் உண்ணுதற்கும்**
**பூவையவள் காதல்உளம் துடி துடிக்கும்**
**மென்குழலிற் பூவவிழ்த்து விதையென்றே**
**விளம்பினால் மூலையிலே கிடத்தி னார்கள்**
**கன்னல்மொழி யாள்காதல் தீய்க்கும் பொல்லாக்**
**கயவர்களோ வாழுகிறார்கள் மாள வில்லை"[25]**

எனும் கவிதை புலப்படுத்துகிறது.

### 2.1.4. தொழிலாளர் நலன்

உழைப்பாளர்களின் நிலையை எடுத்துரைத்து அவர்கள் முன்னேற்றத்திற்கு வழிவகுக்கும் கருத்துகள் நிறைந்த கவிதைகளும் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன. மனிதனை வைத்து மனிதன் இழுத்துச் செல்கின்ற 'ரிக்ஷா' எனும் இழுவை வண்டியை ஓட்டும் தொழிலாளியின் வாழ்க்கை நிலையை, சென்னை முத்தியாலுப் பேட்டை உயர்நிலைப் பள்ளியின் தலைமையாசிரியராகப் பணிபுரிந்த எம்.ஆர். பெருமாள், 7.9.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் எடுத்துரைத்துள்ளார்.

**"மூச்சுத் திணற முழங்கால் வலியெடுக்கப்**
**பேச்சின்றி யோடுகின்றேன் ரிக்ஷாப் பிடித்திழுத்து**
**பிள்ளையார் போன்ற பெரியகன வானொருவர்**
**வெள்ளை யுடைபூண்டு வீற்றுள்ளார் ரிக்ஷாவில்**
**கையில் கடியாரம் காதில் கடுக்கனவர்**
**பையில் பலநூறு பத்துரூபாய் நோட்டும்**
**இருக்கும் பொழுதவர்க் கென்ன குறையுண்டு?**
**சுருக்குவிழும் என்வயிறு சோறில்லாக் காரணத்தால்**
**பல்லாயிர மக்கள் பட்டினியால் வாடிடவும்**
**எல்லாச் சுகமும் இயைந்தொருவன் வாழ்வது தான்**
**ஆண்டவன் நீதியென்றால் ஆண்டவனே மாண்டிடுவான்**
**வேண்டாம் இதுபோல் விபரீதப் பேச்செல்லாம்**
**மக்கள் அனைவர்க்கும் வாழ்வின் பயனடையத்**
**தக்கபடி வாய்ப்புத் தந்திடுதல் தான் நீதி"[26]**

இக்கவிதையில் ஏழைத் தொழிலாளியின் அவலநிலையினையும் பணம் படைத்த மனிதர்களின் மேலான வாழ்வியலையும் எம்.ஆர்.பெருமாள் விளக்கியுள்ளார்.

கவிஞர் வா.செ.குலோத்துங்கன், உழவர் பெருமக்களின் உழைப்பின் மேன்மையைக் கவிதையில் எடுத்துரைத்துள்ளார். உழைப்பாளிகளின் உடல் முழுதும் சேறாகவும், உழைப்பின்றி வீட்டில் உறங்கிக் கிடப்போர் உடல் பன்னீர் நறுமணத்துடன்

இருப்பதாகவும் கவிதையில் சுட்டிக்காட்டிச் சமூகத்தின் ஏற்றத் தாழ்வு நிலையை விளக்குகிறார்.

**“உழைப்பவர்தம் உடல்முழுதும் சேறு! வீட்டில்**
**உறங்கிடுவார் மெய்முழுதும் நறுபன் னீரிற்**
**குழைத்தெடுத்த சந்தனமென்றிருக்கம் இந்தக்**
**கொடுமையினை யினியுலகம் பொறுப்ப துண்டோ?**
**மழைத்துளியை யிழந்தபயிர் வாடும் தேனை**
**மறந்துவிட்ட வண்டினங்கள் மாளும் நாளும்**
**உழைப்பவர்பால் ஆட்சியலா எந்த நாடும்**
**உருக்குலையும் புரட்சியிங்கு உதித்தே தீரும் ”[27]**

என்ற கவிதை உழைப்பவர் இல்லாத எந்த நாடும் உருக்குலையும் என்பதனையும் அத்தகைய நாட்டில் புரட்சி வெடிக்கும் என்பதையும் உணர்த்துகிறது.

### 2.1.5. இந்தி எதிர்ப்பு

கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்துத் தமிழகத்தில் பல்வேறு காலக்கட்டங்களில் போராட்டங்கள் நிகழ்ந்தன.. முதல் இந்தி எதிர்ப்புப் போராட்டம் 1937 ஆம் ஆண்டு முதல் 1940 ஆம் ஆண்டுவரை நடைபெற்றது. 1938 ஆம் ஆண்டு தமிழகத்தின் முதலமைச்சராக இருந்த இராஜகோபாலாச்சாரியார், பள்ளிகளில் இந்தியைக் கட்டாயப் பாடமாக்கினார். கட்டாய இந்தித் திணிப்பு, தமிழ் மொழிக்கும் தமிழ்ப் பண்பாட்டிற்கும் தீங்கு விளைவிக்கும் என்பதை உணர்ந்த திராவிட இயக்கத்தார் பல்வேறு போராட்டங்களை நடத்தினர். “இந்தி ஆட்சி மொழிக்குரிய சகலவித அதிகாரங்களுடன் திணிக்கப்பட்டால் அது நிச்சயம் தமிழுக்கு ஆபத்தான போட்டியாகும். அதிகாரத்தின் சிறப்புச் சலுகைளைப் பயன்படுத்தும் எந்தவொரு மொழியும் ஏனைய மொழிகளைக் காட்டிலும் தேவைக்கு அதிகமான வசதிகளை அனுபவிப்பதனால் படிப்படியாக ஏனைய மொழிகளை அகற்றிவிடும்”[28] என நாவலர் சோமசுந்தர பாரதியார் கருத்துரைத்தார். “1938 சூன் 10 ஆம் நாள் சென்னைக் கத்திட்ரல் சாலையில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புக் கூட்டத்தில், மக்களைத் தூண்டும் வகையில் அறிஞர் அண்ணா பேசினார் என்ற குற்றச்சாட்டில் செப்டம்பர் 21 ஆம் நாள்

கைது செய்யப்பட்டு, நான்கு திங்கள் வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார். அண்ணாவின் முதல் சிறை வாழ்வு இதுதான்! பெரியார் ஈ.வெ.ரா. திசம்பர் 5 ஆம் நாள் கைது செய்யப்பட்டு ஒன்றரை ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்."[29] தமிழக மக்களிடம் இந்தி எதிர்ப்பு இயக்கத்தின் நோக்கத்தைப் பரப்பும் பொருட்டு 1938 ஆம் ஆண்டு ஆகஸ்டு முதல் நாள் திருச்சி உறையூரிலிருந்து 'தமிழர் பெரும்படை' என்ற பெயரில் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தினர் சென்னையை நோக்கி மாபெரும் வழிநடைப் பயணத்தை மேற்கொண்டனர். அவர்கள் வழிநடைப் பாட்டாகப் பயன்படுத்துவதற்காக,

**"இந்திக்குத் தமிழ்நாட்டில் ஆதிக்கமாம் - நீங்கள்**
**எல்லோரும் வாருங்கள் நாட்டினரே!**
**செந்தமிழுக்குத் தீமைவந்த பின்னும் இந்தத்**
**தேகம் இருந்தொரு லாபமுண்டோ?"[30]**

எனத் தொடங்கும் பாடலைப் பாரதிதாசன் இயற்றித் தந்தார். முதல் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் இப்பாடல் வெகுவாகப் பயன்படுத்தப்பட்டது. பாரதிதாசனை அடியொற்றிப் பின்னர் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டங்களின் போது பல கவிதைகள் திராவிட இயக்க இதழ்களில் வெளியாயின. இந்தி எதிர்ப்புப் போராட்டம் தமிழர்களிடம் மொழி அடிப்படையில் ஓர் ஒற்றுமையுணர்வை ஏற்படுத்தியது. "சுயமரியாதைக் காரர்கள் கட்டாய இந்தி எதிர்ப்பில் ஈடுபட்டதன் விளைவாக, தாய்மொழிப் பற்றுடைய புலவர் பெருமக்களிலே பலருக்கும் அவர்களுக்குமிடையே நெருங்கிய உறவு ஏற்பட்டது. அதனால், 'இந்தி ஒழிக' என்று கோஷித்த சுயமரியாதைத் தொண்டர்கள், 'தமிழ் வாழ்க' எனவும் கோஷிக்கலாயினர். இந்தி மொழி வளமற்றது-வரலாற்றுச் சிறப்பற்றது என்பதனைத் தமிழ் மக்களுக்கு உணர்த்தியதோடு, தமிழ் மொழியின் வளத்தையும் வரலாற்றுச் சிறப்பையும் மேடைதோறும் எடுத்துக்கூற வேண்டியவர்களாயினர். தமிழர் பேசும் மொழியை, தமிழ் அன்னை' – 'தமிழ்த் தெய்வம்' என்றெல்லாம் புராண பாணியில் வருணிக்கலாயினர். 'மனோன்மணீயம்' நாடக நூலினுள் சுந்தரனார் பாடியுள்ள 'நீராருங் கடலுடுத்த' –

‘பல்லுயிரும் பலவுலகும்’ என்ற தமிழ்த் தெய்வ வணக்கப் பாடல்களையும் பயன்படுத்தினர். கட்டாய இந்தி எதிர்ப்பு இயக்கம் வலுத்ததன் காரணமாக, தமிழ் மொழியிடத்துப் பற்றுடைய தேசபக்தர்களிலே சிலர், உணர்ச்சி வயப்பட்டவர்களாகி, தேசியப் பாசறையிலிருந்து வெளியேறினர்.”[31] என ம.பொ.சிவஞானம் முதல் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி தமிழகத்தில் ஏற்படுத்திய விளைவினைக் குறிப்பிடுகிறார்.

தமிழகத்தில் இந்தி எதிர்ப்புப் போராட்டங்கள் நடைபெற்ற சூழல்களில் திராவிடநாடு இதழில் வாரந்தோறும் கவிதைகள் வெளியாயின. இக்கவிதைகள் தமிழ் மொழியின் மேன்மையை எடுத்துரைத்தும் இந்திமொழியின் இழிநிலைகளைக் குறிப்பிட்டும் வெளிவந்தன. இந்தி எதிர்ப்பினைத் திராவிட முன்னேற்றக் கழகம் தன் முதன்மைக் கொள்கைகளுள் ஒன்றாகக் கொண்டிருந்தமையால் போராட்டச் சூழல்கள் அல்லாத காலங்களிலும் திராவிடநாடு இதழில் இந்தி எதிர்ப்புக் கவிதைகள் வெளியாயின. போராட்ட உணர்வினைத் தூண்டும் வகையில் அமைந்திருந்த இக்கவிதைகள் இளைஞர்களையும் மாணவர்களையும் வெகுவாக ஈர்த்தன.

‘தமிழ்மொழிக்கு ஊறு செய்ய வருகின்ற இந்தி மொழியினை வீழ்த்துவதற்குத் தமிழர்கள் போராட வேண்டும். இந்தி மொழி எவ்வகையிலும் தமிழ் மொழிக்கு நிகரற்றதாகும். அமிழ்தமாம் தமிழ்மொழியை அனைத்து இடங்களிலும் பரப்புவோம்’ எனக் கவிஞர் புதுவை சிவம் முழக்கமிடுவதை,

**தமிழ்மொழிக்கு ஊறுசெய்ய**
**வருமொழியை வீழ்த்துவோம்!**
**விழுமி நிற்கும் நிலைமொழியை**
**தமிழொலியால் வாழ்த்துவோம்**
**தமிழ்மொழிக்குத் தகுதியற்ற**
**வழுமொழியை வீழத்துவோம்**
**அமிழ்த முள்ள பழமொழியை**
**ஆய்ந்தெடுத்து வாழ்த்துவோம்**
**தமிழ் மொழிக்குச் சிறப்பு நல்க**
**தமிழை எங்கும் முழக்குவோம்**
**தமிழ்க் கழகம் பலஅமைத்து**
**மொழிவிருந்து வழங்குவோம்”**[32]

எனும் கவிதை உணர்த்தும் கருத்திலிருந்து அறியமுடிகிறது. உலகமொழிகளில் தமிழ் மொழியே இனிமை உடையது. அத்தமிழ்மொழிக்கு நம்மாலியன்ற தொண்டுகளைச் செய்திட வேண்டுமென்பதை,

**“தனிமொழியில் தமிழ் மொழியே**
**இனிமை என்று போற்றுவோம்**
**இனிமையிலும் இளமைகுன்றாக்**
**குமரிக்குத் தொண்டாற்றுவோம்’**[33]

எனக் கவிதையில் கவிஞர் புதுவை சிவம் வலியுறுத்துகிறார்.

1946 ஆண்டு சென்னை மாகணத்திற்கு நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில் காங்கிரஸ் கட்சி வெற்றிபெற்று ஆட்சியமைத்தது. முதலமைச்சராகப் பொறுப்பேற்ற திரு.டி. பிரகாசம் 1947 ஆம் ஆண்டு பதவி விலகினார். 1947 மார்ச்சு 27 ஆம் நாள் ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் தமிழகத்தின் முதலமைச்சராகப் பொறுப்பேற்றார். அவர் இந்தியைக் கட்டாயப் பாடமாக்கும் அரசாணையை 20.6.1948 இல் வெளியிட்டார். இதனைத் தொடர்ந்து இரண்டாவது இந்தி எதிர்ப்புப் போராட்டம் தொடங்கியது. 1948 ஆம் ஆண்டு ஜூலை 17 ஆம் நாள் சென்னையில் இந்தித் திணிப்பை எதிர்த்து மாநாடு நடைபெற்றது. தந்தை பெரியார் தலைமையில் இரண்டாம் இந்தி எதிர்ப்புப் போராட்டம் தொடங்கியது. இதன் தொடர்ச்சியாகத் திராவிடநாடு இதழில் கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்துக் கவிதைகள் வெளிவந்தன.

11.7.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் ‘மீண்டும் இந்தி’ என்ற தலைப்பில் கவிஞர் தமிழரசன், ‘கெடுக சிந்தை’ எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாடற்கருத்தைக் கவிதையில் இணைத்துப் பண்டைத் தமிழர் வீரத்தை நினைவூட்டி இந்தி எதிர்ப்புப் போராட்டத்திற்கு அழைப்பு விடுத்தார். தமிழ்மொழியைக் காப்பதற்குத் தமிழ் மறவர்களின் கூட்டம் பாங்குடன் நிற்பதைச் சுட்டிக்காட்டி, ‘முன்னாளில் தமிழ்நாட்டில் மூக்கறுபட்டு நொந்து சென்ற இந்திமொழி, மீண்டும் தமிழகத்தில் நுழைய முயல்வதற்கான காரணம் தனக்கு விளங்கவில்லை’ எனக் குறிப்பிடுகிறார். மேலும்,

தமிழ் மொழியைச் 'சிங்கம்' என்றும் இக்கவிதையில் உருவகப்படுத்துகிறார். இக்கருத்துகளை,

**"காற்றினும் கூர்வேல் கடுகி வரினும்**
**கடுஞ்சமர் நடுவே கொடுஞ்சிலை வளைத்தே**
**இமையாது நின்ற வீரர்களையும்,**
**அருமைத் தந்தையும் அன்புடைத் தலைவனும்**
**போரில் இறந்ததையும் காரிகை தெரிந்தும்**
**மேலும் மகனை வேலுடன் அனுப்பிய**
**தாய்மார்களையும் தன்பால் கொண்ட**
**தமிழர் நாட்டில் தமிழைப் போற்றித்**
**தமிழைக் காக்கத் தமிழர் கூட்டம்**
**தாங்கிய வேலுடன் பாங்குடன் நிற்க**
**சிங்கத் தினிடம் பங்கப் பட்ட**
**சிறுத்தை மீண்டும் சீறுதல் போல**
**முன்னாள் வந்து மூக்கறு பட்டது**
**தெரிந்தோ அன்றித் தெரியாத் தனமோ**
**இந்தி என்னும் நொந்த மொழி**
**மீண்டும் இங்கே விளையாட வருகிற**
**விந்தைதான் இன்னும் விளங்கவே இல்லை"[34]**

எனும் கவிதை வரிகள் புலப்படுத்துகின்றன. 'தமிழர்களில் சிலர், தமிழ் தமது அன்னை மொழி என்பதை மறந்த நிலையில் உள்ளனர். தமிழர்களாகத் திகழ்கின்ற ஆட்சியாளர்களும் இதனைக் குறித்துக் கவலை கொள்ளவில்லை. இந்திமொழி இலக்கிய, இலக்கண வளமற்றது. நுண்கலைகள் குறிப்பிடும் நூற்களோ, தொன்மைச்சிறப்புடைய நூல்களோ இந்தி மொழியில் இல்லை. இந்திமொழி எவ்வகையிலும் தமிழர்க்கு உதவாது எனவே அம்மொழித் திணிப்பிற்கு எதிரான போராட்டத்திற்கு அனைவரும் திரண்டு வாரீர் எனக் கவிஞர் சு.வ. தியாகராசன் வேண்டுகோள் வைக்கிறார்.

**"அன்னைமொழி நமக்கும் ஒன்றுண்டு என்றே**
**அறியாத தற்குறிகள் மலிந்த நாட்டில்**
**அன்னைமொழிக் காதரவு தருவாரில்லை**

**ஆளவந்தார்க் கதுகுறித்துக் கவலையில்லை**
**இன்னிலையில் எழிலற்ற வளமை யற்ற**
**நுண்கலைகள் தொன்னூல்கள் ஏதுமற்ற**
**வண்டமிழர்க் குதவாத இந்தி தன்னை**
**வலியுறுத்தித் தமிழகத்தில் நுழைப்ப தேனோ"[35]**

என்பதுடன், தாய்த் தமிழ் நாட்டை ஆட்சி செய்வதற்குத் தமிழும், உலகை ஏவல் கொள்ள ஆங்கிலமும் போதுமானவை எனக் குறிப்பிட்டு வடநாட்டார்க்குத் தமிழர்கள் ஒருபோதும் அடிபணிதல் கூடாதென்ற கருத்தையும் கவிதையில் வலியுறுத்துகிறார். இதனை,

**"தாய்நாட்டை ஆட்சிசெயத் தண்டமிழ் உண்டு**
**தரணியெலாம் ஏவல்கொள ஆங்கில முண்டு**
**வாய்செத்த இந்தியினை வருந்திக் கற்றால்**
**வரப்போம் பலனெதுவோ வாழ்வு நல்கும்**
**தாய்நாட்டுப் பற்றொழிந்து தமிழர் எல்லாம்**
**தான்றோன்றி வடவருக்குத் தாசராக**
**நோயூட்டும் இச்செயலை எதிர்த்தொழிக்க**
**நேர்மைமிகு தமிழர்களே திரண்டு வாரீர்"[36]**

எனும் கவிதைவரிகள் வாயிலாக அறியமுடிகிறது.

'பிறமொழியைத் தமிழகத்தில் அண்டவிடமாட்டோம். எத்தகைய துயர்வரினும் கலங்காது, துணிவுடன் இந்தித்திணிப்பை எதிர்த்துப் போராடுவோம்; இந்தி மொழியைத் தமிழகத்தில் நுழைத்திட எண்ணும் ஆட்சியாளர்கள் ஏமாறும் வகையில் பணிபுரிவோம்' என்ற கருத்திலமைந்த கவிதை 25.7.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில்,

**அயர்வடைந்தோ மாயினுநாம் அச்சம் நீங்கி**
**அண்டவிடோம் பிறமொழியைத் தமிழகத்தில்**
**வயப்படோம் வருகின்ற மொழியினுக்கு**
**வரிந்துகட்டடி ஒருங்கியைந்து எதிர்த்தே நிற்போம்**
**துயர்பலவும் அடைந்திடினும் துச்சமென்று**
**துளியேனுங் கலங்காது துணிவுகொண்டு**
**உயர்வுமொழித் தமிழுக்கு ஊறுசெய்ய**
**உளங்கொண்ட மந்திரியே மாறச் செய்வோம்"[37]**

என்பதாய் இடம்பெற்றுள்ளது.

கவிஞர் மதிலை இராமையா, 'இந்தியினைத் தமிழ்நாட்டில் வரவிட்டால் தமிழர் வடநாட்டார்க்கு அடிமையாவர் எனச் சான்றோர் பலர் முன்னமே எடுத்துரைத்துள்ளனர். இதனை உணர்ந்து, பெருவெள்ளம் போல், திரைகடல் போல் இந்தி எதிர்ப்பு அறப்போருக்குத் தமிழர் அனைவரும் முன்வர வேண்டும். முத்தமிழைக் காப்பதற்கு முன்னே நிற்றல் வேண்டும்' என்று குறிப்பிடுகிறார். இதனை,

**"வருமிந்தி தன்னை இவண் வாழவிட்டால்**
**மாத்தமிழர் அடிமைநிலை மாறாதென்றே**
**பெருநிலைக்கண் உள்ளபல தலைவரெல்லாம்**
**பேதமின்றி உரைத்தபின்னர்ப் பெருவெள்ளம் போல்**
**திரைகடல்போல் முழக்கமிட்டுத் தமிழர்சேனை**
**திரண்டதுகாண் பகைமொழியைச் சிதறடிக்க**
**முரசதிரும் அறப்போரின் முனையை நோக்கி**
**முத்தமிழைக் காத்திடற்கு வாரீர் முன்னால்"[38]**

என்ற கவிதை அடிகள் வெளிப்படுத்தும்.

தமிழ், ஆங்கிலம், இந்தி ஆகிய மொழிகளில் வல்லுநரான கா. அப்பாதுரை, 'பன்மொழிப் புலவர்' என்ற அடைமொழியால் சிறப்பிக்கப்படுபவர். 1938 ஆம் ஆண்டு அன்றைய சென்னை மாகாண முதலமைச்சர் சி.இராஜகோபாலாச்சாரியார் தமிழ்நாட்டிலுள்ள நூறு பள்ளிகளில் இந்தி ஆசிரியர்களைப் பணியிலமர்த்தினார். அவர்களுள் கா. அப்பாத்துரை அவர்களும் ஒருவர். திருநெல்வேலியில் உள்ள இந்துக் கல்லூரியில் அவர் இந்தி ஆசிரியராக மூன்றாண்டுகள் பணிபுரிந்துள்ளார். இந்தியாசிரியராக இருந்து கொண்டே இந்தி எதிர்ப்புப் போராட்டங்களில் பங்குபெற்றதைக் குறித்துக் கா. அப்பாதுரையார், "இந்தி மொழியே தெரியாதவர்கள், இந்தியை எதிர்ப்பதைவிட, இந்தி, தமிழ், ஆங்கிலம் போன்ற பன்மொழிகளில் புலமை பெற்ற அப்பாத்துரை எதிர்ப்பதுதான் சரி. ஏனென்றால் அவருக்குத்தான் தெரியும், இந்தியில் ஒன்றும் இல்லை; அரசியல் ஆதிக்கத்துக்காக அதைப் புகுத்துகிறார்கள் - என்று, நம்மைவிட அப்பாத்துரை சொன்னால்தான் மக்களுக்கு உண்மை புரியும்'

என்னும் பொருள்பட பெரியாரும் அண்ணாவும் எனக்கு ஆதரவு கொடுத்தனர்"[39] எனக் குறிப்பிட்டுள்ளார்.

கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்து கா. அப்பாத்துரை எழுதிய கவிதை 8.8.48 ஆம் நாள் திராவிடநாடு இதழின் முதல் பக்கத்தில் வெளிவந்துள்ளது. 'வேண்டவே வேண்டாம்' என்ற தலைப்பிலமைந்த அக்கவிதை நாட்டுப்பாடல் வடிவில் அமைந்ததாகும்.

"இந்திச்சனியன் வருகுதுங்க
எழுந்துவாருங்க!
செந்தமிழ் மந்தையில் பூருதுங்க
திரண்டு வாருங்க (இந்திச்)
மண்டல மெல்லாம் ஆண்ட தமிழ்மொழி
மறுகி நிக்குதுங்க,
அண்டையிலுள்ள பண்டைமொழிகள் வாய்
அடைச்சு நிக்குதுங்க (இந்திச்)
இந்தி-உருது இருதலைப் பாம்பு
எட்டிச் சீறுதுங்க
குந்திக்கொண்டு வடமொழிச் சனியன்
கூடப் பீறுதுங்க (இந்திச்)
ஆரியர் மறைவில் இருந்து காட்டுகிறார்
அதுதான் தாளமுங்க
அரசியல் ஆரிய வடவர் ஆட்டுகிறார்
அதுதான் ஆட்டமுங்க (இந்திச்)
அவநாசியாரு அவரு சொன்னாரு
காட்டாய மில்லையுங்க
நவநாசியாரு நடுப்போ சொல்றாரு
கட்டாயந் தானுமுங்க (இந்திச்)
தற்குறி போக்க, தமிழ் எங்கும் பரப்ப,
பணமில்லை எங்கிறாங்க
தகுதியில்லாத தரங்கெட்ட இந்திக்கு
தட்டிக் கொளிக்கிறாங்க (இந்திச்)
சூத்திரப்பயலுவ சுட்டாலும் வாராது.
சோக்குடா! எங்குறாங்க

**ஆத்திரப்படறாங்க இந்தி வேண்டாமிண்ணா**
**அரசாள வந்தவங்க (இந்திச்)**
**தாத்தாக்களான நம் பாட்டாக்கள் பேசிய**
**தமிழ்மொழி போதுமுங்க**
**வேத்தாள் ஆட்சியும் வேத்தாள்கள் மொழிகளும்**
**வேண்டவே வேண்டா முங்க"[40] (இந்திச்)**

நாட்டார் வழக்காற்றுச் சொற்களால் அமைந்ததாகும். இப்பாடல், இந்தி எதிர்ப்புக் கூட்டங்களில் பயன்படுத்தும் நோக்கத்தில் இயற்றப்பட்டதாகும். இப்பாடல், 'இந்தி மொழியும் உருது மொழியும் இருதலைப் பாம்பினைப் போன்றவை; தகுதியற்ற தரங்கெட்ட இந்தி மொழியைப் பரப்பிட ஆட்சியாளர் விழைகின்றனர்; நம்முன்னோர்கள் பேசிய தமிழ்மொழியே நமக்குப் போதுமானதாகும். பிறமொழியாளர் ஆட்சியும், பிறமொழியும் தமிழ்நாட்டிற்குத் தேவையில்லை. இந்திச் சனியனை விரட்டுவதற்குத் தமிழர்களெல்லாம் எழுந்து வருக' எனும் கருத்தை விளக்கும் வகையில் அமைந்துள்ளது.

கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்துத் தமிழ் நாடகப் பாடலாசிரியர்கள் புனைந்த கவிதைகளுக்கும் அறிஞர் அண்ணா திராவிடநாடு இதழில் இடமளித்தார். அவ்வகையில், என்.எம்.முத்து என்ற நாடகப் பாடலாசிரியர் இயற்றிய 'குண்டு வந்து பாய்ந்திட்டாலும்' என்ற தலைப்பிலமைந்த கவிதை 26.9.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது.

**"போர் முரசை முழக்கிவிட்டார் தலைவரெல்லாம்**
**புறப்படுங்கள் இந்தி எதிர்க்களத்தினுக்கே**
**கூர்மதியைத் தன்மானக்குணத்தை ஓங்கிக்**
**கொழுந்துவிடும் இனப்பற்றைக் குறித்ததுநம்மின்**
**மார்பகத்தே குண்டுவந்து பாய்ந்திட்டாலும்**
**மாறாமல் எதிர்த்தது நின்று மாள்வதல்லால்**
**ஏர்பெற்ற தமிழ் வளத்திற்கிடரேசெய்யும்**
**இந்தி தனக்கொரு சிறிதும் இடங்கொடாதீர்"[41]**

‘மார்பகத்தே குண்டு வந்து பாய்ந்திட்டாலும், எதிர்த்து நின்று உயிரைத் துறப்போமேயன்றி தமிழ்மொழிக்கு ஊறுவிளைவிக்கும் இந்திமொழிக்கு தமிழகத்தில் சிறிதும் இடமளித்தல் கூடாது’ என்ற கருத்தை மேற்கண்ட கவிதையில் என்.எம்.முத்து வலியுறுத்துகிறார்.

தமிழகத்தில் 1952 ஆம் ஆண்டு மூன்றாவது முறையாக இந்தி எதிர்ப்புப் போராட்டம் தொடங்கியது. இப்போராட்டம், அறிஞர் அண்ணா, திராவிட முன்னேற்றக் கழகத்தை நிறுவியதற்குப் பின்னர் நடைபெற்ற முதல் இந்தி எதிர்ப்புப் போராட்டமாக அமைந்தது. அறிஞர் அண்ணா ஈரோடு புகைவண்டி நிலையத்திலிருந்த இந்தி எழுத்துகளை அழித்தார். 1953 மற்றும் 1954 ஆம் ஆண்டுகளின் ஆகஸ்டு முதல் நாள்களை இந்தி எதிர்ப்புக் கண்டன நாள்களாகக் கடைப்பிடிக்க அறிஞர் அண்ணா வேண்டுகோள் விடுத்தார். இதனைத் தொடர்ந்து, இந்தித் திணிப்பை எதிர்த்துப் புனையப்பட்ட கவிதைகள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றன.

கவிஞர் ந.மா. முத்துக்கூத்தன், இந்திமொழியை ‘ஊமை மொழி’ எனக் குறிப்பிட்டுத் திராவிடத்தின் அழகு மொழியான தமிழ்மொழியை நசுக்க நினைக்கும் செயல் தமிழகத்தில் ஒருபோதும் நடைபெறாது என்றும் குறிப்பிடுகிறார். தமிழ் வெல்லும் நாள் இதுவெனக் கூறிச் சங்கினை ஒலிக்க வேண்டும் என்பதை,

**“ஊமைமொழிக்கு உயிரூட்ட எண்ணமிட்டு**
**ஓங்கு தமிழை ஒழித்துவிடப்பார்க்கிறார்**
**ஆமைமுதுகோட்டை அகற்றியதன் மேற்பட்டு**
**ஆடை அணிதல் அழகென்றால் ஒப்பிடுமா?**
**தேமதுர மொழியைத் தித்திக்கும் செந்தமிழை**
**தென்றற் சுகத்தைத் திராவிடத்தின தண்ணழகை**
**நாமுயிரோடிருக்க நசுக்கிவிடத்தான் துணிந்தால்**
**நடக்காது தமிழ்வெல்லும் நாளிதுவென்றூது சங்கே”**[42]

என்ற கவிதை வரிகள் உணர்த்துகின்றன.

கவிஞர் என்.பி.நடராசன், முடைநாற்றமெடுக்கும் இந்திப் பெண்ணின் கரத்தை ஒருபோதும் தொடமாட்டோம்; இந்திப்பெண்ணின் தலையை அறுப்போம்' எனக் குறிப்பிடுகிறார். இதனை,

**"வடநாட்டுக் குள்ளநரிக் கூட்டம் -இனி**
**வாலாட்ட நாம் விடமாட்டோம்**
**முடைநாற்ற இந்திப்பென் கரத்தை – நாம்**
**தொடமாட்டோம் தொட்டறுப்போம் சிரத்தை**
**கொட்டிக் கொடுப்பது பல்கோடி – வடக்**
**கிட்ட பிச்சையோ சிலகோடி – அட**
**வட்டிக்கடை நாடு வடக்கு – அதை**
**தட்டிக் கேட்டவர் நாக்கடக்கு"[43]**

எனும் கவிதை வரிகள் புலப்படுத்துகின்றன. கவிஞர் சா. இராமாநுசம், தம் கவிதையில் 1938 ஆண்டுப் போராட்டத்தில் மாண்டுபோன இந்தி, மீண்டும் பிழைத்திடல் கூடாதென்ற கருத்தை வலியுறுத்துகிறார். தமிழ் மக்கள் விரும்பாத இந்திமொழி, ஒருபோதும் தமிழகத்தில் மீண்டும் நுழைந்திடல் கூடாது என்பதை,

**"தாண்டவ மாடுது இந்தி – அஞ்சல்**
**தலைகளில் சொகுசாகக் குந்தி**
**வேண்டாத பொதுமொழி இந்தி – அதை**
**விரட்டிடுவோம் அனைவரும் முந்தி**
**ஈண்டவர் மரித்திட வரினும் - அதை**
**எத்தனை வகைகளில் தரினும்**
**மாண்டவர் பிழைத்திடப் போமோ - இந்தி**
**மறுமுறை நுழைந்திட ஆமோ"[44]**

எனக் குறிப்பிட்டுள்ளார்.

தாய்மொழிக்காக உயிர்துறத்தலை உயர்ந்த வாழ்வியல் பண்பாகத் திராவிட இயக்கக் கவிஞர்கள் தம் கவிதைகளில் குறிப்பிட்டுள்ளனர். 1938 ஆம் ஆண்டு நடைபெற்ற முதல் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் சிறை சென்று உயிர்நீத்த நடராசன், தாளமுத்து ஆகிய இருவரையும் தமிழ்மொழிக் காவலர்களாகத் திராவிட இயக்கத் தலைவர்கள் போற்றிவருகின்றனர். சாவு என்பது திண்ணமாக வரும்,

தமிழுக்காகச் சாவது சாலச் சிறந்தது எனக் கவிஞர் கா. வேழவேந்தன் குறிப்பிடுகிறார். இதனை,

**"சாவது திண்ணம் இன்று**
**தமிழ் காக்கச் செத்தால் என்ன?**
**போவது உறுதி மானப்**
**போரிட்டு மடிந்தால் என்ன?**
**காவலில் வைத்தா ரென்று**
**கவலைநீ கொள்ள வேண்டாம்**
**ஆவது உறுதி ஒன்று**
**ஆணவம் அழிந்தே தீரும்"**

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன. ஆட்சியாளர்களை வகைகெட்டவர் என்றும், இந்தியை மாடு என்றும் அவர் உருவகப்படுத்திச் சாடுவதை,

**பகைவரை மிதிப்ப தற்கே**
**பாலூட்டி வளர்த்தாய் எம்மை**
**வகைகெட்டோர் இந்தி மாட்டை**
**வண்டமிழ்க் காவில் மேய்த்தால்**
**புகையைப்போல் எலும்பே இல்லாப்**
**புழுவைப்போல் வாழ லாமா?**
**தொகையாக வீட்டுள் ளோரை**
**தொடர்ந்துநீ அனுப்பு அம்மா"[45]**

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. தமிழன்னையை விளித்து வரம் வேண்டும் வகையில் இக்கவிதை அமைந்துள்ளது.

கவிஞர் இரா.வேங்கடபதி, 'இமயம் போன்ற தமிழ் மொழி தமிழ்நாட்டில் இனிதாக வழங்கிவந்து கொண்டிருக்கும் போது இந்தி மொழி தமிழகப் பள்ளிகளில் தேவையில்லை எனுங் கருத்தை,

**"இமயம்போல் பீடுயர்ந்த தமிழ் இருக்க - இந்தி**
**இட்டபொடி மணற்குன்று தேவை இல்லை**
**இமைமூடா ஒளிக்கண்கள் தமிழ் இருக்க - இந்தி**
**இடர்செய்யும் ரணப்புண்கள் தேவை இல்லை"[46]**

எனக் கவிதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

'ஆகாஷ்வாணி' என்ற இந்திச் சொல்லைப் பயன்படுத்தும் வானொலி நிலையத்தார் செயலைக் கவிஞர் கா.வேழவேந்தன் சாடுகிறார். அதாவது, 'வானொலி' என்ற தமிழ்ச் சொல் இருக்கும் நிலையில் இந்திச் சொல்லைப் பயன்படுத்துதல் கூடாதென்பதை,

**"மயிலுக்குத் தடையாம் மந்திக்கு முதலிடமாம்**
**குயில்கூவக் கூடாதாம் கோட்டான் அலறிடுமாம்**
**மானமெனும் பொருளைத் தானமிட்டோர் ஆட்சியிலே**
**தேனொழுகும் தமிழ்ச்சொல் வானொலி வழங்காதாம்**
**சாகாத மொழியிருக்க சவக்குழியில் புழுத்திருக்கும்**
**ஆகாஷ வாணிவந்து ஆளுமாம் ஐயயோ"[47]**

எனக் கவிதையில் எடுத்துரைக்கிறார். தமிழ் மொழியை மயிலென்றும், இந்தி மொழியை மந்தியென்றும் இக்கவிதையில் உருவகம் செய்துள்ளார்.

1950 ஆம் ஆண்டு கோயம்புத்தூரில் நடைபெற்ற முத்தமிழ் மாநாட்டை ஒட்டி உடுமலை நாராயணகவி, இயற்றிய மாநாட்டு வாழ்த்துப்பாடல் 4.6.1950 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது. 'பகுத்தறிவிற்கு ஒவ்வாத வடமொழியினைப் பார்ப்பனர்கள் தமிழில் கலந்து, தமிழ் மொழியின் இனிமையைக் கெடுத்துவிட்டனர். இசுலாமியர் ஆட்சியின் விளைவாக உருதுமொழிச் சொற்கள் பல தமிழில் கலந்துவிட்டன. ஆங்கிலேயர்கள் தம் மொழியான ஆங்கிலத்தையும் தமிழகத்தில் பரவச் செய்து விட்டனர். தமிழ் மொழியைச் சிதைப்பதற்கு இந்தியையும் கட்டாயப் பாடமாக்க ஆட்சியாளர் முயல்கின்றனர்' என்பதை,

**பகுத்தறிவுக் கொவ்வாத பஞ்சாங்கப் பாடைதனைப்**
**பார்ப்பனர்கள் சரிபாதி பாய்த்து விட்டார்**
**மகமதியர் மத்தியிலே மண்ணாட்சி புரியவந்து**
**மறுபாதி தனிலுருதை வழங்க விட்டார்**
**பகைத்துவைத்துப் பாராண்ட பரங்கியர்கள் ஆங்கிலத்தை**
**பதவிபெறும் படிப்பாகப் பரவவிட்டார்**
**மிகுத்துநின்ற தென்மொழியின் வேரறுக்க இந்தியது**
**விருப்பமென்றார் கட்டாய விளைவு காணீர்"[48]**

என்ற கவிதையில் உடுமலை நாராயணகவி விளக்கியுரைத்துள்ளார். மேலும், அர்த்தமற்ற சாமிகளுக்காகப் பக்திப் பாடல்கள் புனைவதை விடுத்துத் தமிழ்க்கவிஞர்கள் செந்தமிழும் தென்னகமும் சிறப்புறச் சீர்திருத்தப் பாக்களை இயற்றிட வேண்டும் என்ற வேண்டுகோளையும் வைக்கிறார். இதனை,

**கந்தன்வள்ளி கல்யாணக் காதல் பாட்டு**
**கண்ணன் பலகன்னியரைக் கலந்தபாட்டு**
**அந்திவண்ணன் சுடுகாட்டி லாடும்பாட்டு**
**அருத்தமற்ற சாமிகளுக் கனந்தம்பாட்டு**
**முந்தினவர் பாட்டிலுள்ள மொழியைமாற்றி**
**முன்னேற்றத் தடையான மூடர்பாட்டால்**
**செந்தமிழும் தென்னாடும் சிதைந்திடாமல்**
**சீர்திருத்தப் பாக்கள்பல திகழநன்றே"**[49]

என்ற பாடற்கருத்து உணர்த்துகிறது. தமிழகப் பள்ளிகளில் இந்திமொழியை நுழையவிடாமல் தடுத்ததில் திராவிட இயக்கக் கவிஞர்களுக்குப் பெரும் பங்கு உண்டு என்பதை இக்கவிதைகள் வாயிலாக அறியமுடிகிறது.

### 2.1.6. தமிழ் வாழ்த்து

தமிழ்மொழியைப் போற்றிச் சிறப்பிக்கும் வகையில் அமைந்த கவிதைகளும் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன. உடுமலை நாராயணகவி, 'இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழும் இளமை குன்றாமல் எழிலும் இனிமையும் கொண்டு வழங்கிவருவதைக் கவிதையில் எடுத்துரைத்துத் தமிழ்மொழி புலவர் நாவில் நடனமாடும் தோகை மயிலாகவும், ஆய கலைகளாகவும் திகழ்கிறது' எனச் சிறப்பித்துப்பாடுகிறார். இதனை,

**இயல்பதும் ஆகி**
**இசையதும் ஆகி**
**இவையொடு நாடகமுமாகி**
**இளமைகுன் றாத**
**எழிலொடுந் தோயும்**
**இனிமையென் றோதும் வடிவாகி**
**நயமிகும் பாடல்**

**புலவர் தம் நாவில்**

**நடமிடுந் தோகை மயிலாகி**

**நவிலவும் ஆய**

**கலைகளும் ஆகி**

**நனிபெறுந் தூய தமிழ் மாதே"[50]**

என்ற கவிதைய உணர்த்தும் கருத்திலிருந்து அறியமுடிகிறது.

'எங்கள் மொழி' எனும் தலைப்பில் அமைந்த கவிதையில் கவிஞர் கந்தையா தமிழ் மொழியின் பெருமைகளை எடுத்துரைத்துள்ளார். 'மூவேந்தர்களின் மடியில் வளர்ந்த தமிழ்மொழி, உலகோர் போற்றும் அறிவுசார் மொழியாகத் திகழ்கின்றது என்றும், நெருப்பிலும் நீரிலும் தீய்த்திட்டாலும் தன் பழம்பெருமையில் குன்றாமல் எத்திசையிலும் புகழ்பரப்பும் மொழியாக விளங்குகின்றது' என்றும் போற்றுகிறார்.

**"முத்தமிழே செம்மைவளர் தாயே அந்நாள்**

**மூவேந்தர் மடிதவழ்ந்து வாழ்ந்த இன்பப்**

**புத்தமிழ்தே தேநிலவே புவியோர் போற்றும்**

**பொற்புடைய தென்மொழியே அறிவின் ஊற்றே**

**தித்திக்கும் செந்தமிழே நெருப்பில் நீரில்**

**தீய்த்திடினும் அழித்திடினும் மடிவு றாமல்**

**எத்திக்கும் புகழ்மணக்கும் தமிழே உன்றன்**

**இசையேயிவ் வையத்து மிகுதல் வேண்டும்"[51]**

தமிழின் புகழ் இவ்வையகத்தில் மிகுதல் வேண்டும் என்ற கவிஞரின் விழைவினையும் இக்கவிதை எடுத்துரைத்துள்ளது.

'சங்கப் புலவர்கள் போற்றிச் சிறப்பித்த தமிழிசை அமிழ்தினும் இனியதாகும். மக்களைத் தன்மதிப்போடு வாழ்வதற்கான சிந்தனைகளைத் தந்த மொழியாகத் திகழும் தமிழ்மொழி, கலைகள் பல நிறைந்ததாகும். தமிழ் மொழியே இசைக்குப் பொருத்தமான மொழியாகும்' என்பதைக் கவிஞர் பி.ஜெகநாதன்,

**“தமிழின் மணம் வீசுதடி**
**சத்யம் நிலையாச்சுதடி**
**அமுதினும் இனிமை இனிமை**
**ஆஆஆ நானென்ன சொல்வேன்**
**சமஉரிமை தந்தே மக்கள்**
**தன்மதிப்போடு வாழச் செய்த (த**
**கலைநிறைந்தே விளங்குதடி**
**கண்மணிபோல் துலங்குதடி**
**தலைசிறந்தே இலக்குதடி**
**சங்கப்புலவர் கொண்டதடி**
**நிலைத்தே என்றும் நின்றதடி**
**நிகரில்லாமல் ஓடுதடி**
**மலையும் உருகிக் கரையுதடி**
**மதிக்கும் இசைக்குப் பொருத்தமடி”[52]**

என்ற கவிதையில் குறிப்பிட்டுள்ளார். தமிழ்க் கவிஞர்களின் மொழிப்பற்றினைக் குறித்து இளமாறன், “தமிழ்க் கவிஞர்கள் தொன்றுதொட்டு மொழிப்பற்றுடையவர்களாகவே இருந்து வந்துள்ளனர். இனம் பற்றிய தெளிவான சிந்தனை இல்லாத சங்க காலத்திலேயே மொழி பற்றிய சிந்தனை உள்ளவர்களாக இருந்திருக்கின்றனர். தமிழுக்கு ஊறு நேரும் போதெல்லாம் கொதித்தெழுந்து பாடியிருக்கின்றனர். இருபதாம் நூற்றாண்டில் இந்நிலை வளர்ந்திருக்கிறது.”[53] எனக் குறிப்பிட்டுள்ளார். திராவிடநாடு இதழில் தமிழ் மொழி குறித்து வெளியான கவிதைகள், திராவிட இயக்கக் கவிஞர்கள் தமிழ்மொழிமீது கொண்டிருந்த பற்றினை எடுத்தியம்பும் வகையில் அமைந்துள்ளது.

கவிஞர் வாணிதாசன், தமிழ்நாட்டில் தமிழ்மொழி தாழ்வுற்றமையால் தமிழனும் தன்னிலையிலிருந்து தாழ்ந்துவிட்டதாகக் குறிப்பிடுகிறார். மேலும், மொழி வாழ்ந்தால் தான் இனமும் நாடும் செழிப்புற்று வாழும் என்ற கருத்தினை அவர் எடுத்துரைத்துள்ளமையை,

**“தமிழ் தாழ நீ தாழ்ந்தாய் தம்பி – கன்னித்**
**தமிழ் வாழ நீ வாழ்வாய் தம்பி தம்பி**
**இமியும் கலங்காதே எதிர்ப்புக்கோ அஞ்சாதே**

**இன்தமிழ் ஏற்றமே உன்னாட்டின் ஏற்றமாம்**
**மொழிவாழ இனம்வாழும் இனம்வாழ நாடுவாழும்**
**முத்தமிழ்ப் பெருநாட்டின் பொற்காலம் நினைத்துப்பார்**
**அழிவேற்ற தேன்எதனா லென்றே சிந்தித்தால்**
**அடைவோம் நாம்திருநாட்டை நமக்குள்நாம் மனம்ஒத்தால்"**[54]

எனும் கவிதையின் கருத்துகள் விளக்குகின்றன.

## 2.1.7. இலங்கைத் தமிழர் நிலை

தமிழகத்திலிருந்து புலம்பெயர்ந்து இலங்கை சென்ற தமிழர்கள் அடைந்திட்ட இன்னல்களைச் 'சாவதேனா?' என்ற தலைப்பிலமைந்த கவிதையில் கவிஞர் ஏ.எஸ்.பி.சிவன் எடுத்துரைத்துள்ளார். இக்கவிதை, 17.3.1957 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது.

'மானம்' என்பதைச் சிறந்த வாழ்வியல் பண்பாகக் கொண்ட தமிழர் மாற்றார் முன் மண்டியிட்டு வாழ்கின்ற நிலைமை ஏற்பட்டுள்ளது. தானத்தில் சிறந்த தமிழர்கள் தரித்திரராய்த் திரிகின்றனர். இயற்கை வழிபாட்டைக் கொண்டிருந்த தமிழர்கள், கல்லுருவங்களைத் தெய்வமெனப் போற்றி வழிபட்டு வருகின்றனர். எனச் சமகாலத் தமிழர் நிலையை,

**"மானமொன்றே பெரிதென்று**
**மதிக்கும் தமிழர்**
**மாற்றார்முன் மண்டியிட்டு**
**வாழ்வ தேயோ**
**தானமென்றால் வாரீயீந்த**
**தமிழர் இன்று**
**தரித்திரராய் பிச்சைகேட்டு**
**திரிவ தேனா**
**வானத்தில் வரும்சுடரை**
**வணங்கி நின்றோர்**
**வடித்துவைத்த கல்லுருவைத்**
**துதிப்ப தேனோ**
**சீனமொடு யவனமற்றுமட்**
**சென்று வென்றோர்**
**சிங்களத்தில் கூலிகளாய்ச்**
**சாவதேனா"**[55]

எனக் கவிதையில் எடுத்துரைத்து, சீனம், யவனம் முதலிய நாடுகளுக்குச் சென்று வணிகத்தில் சிறந்திருந்த தமிழர்கள், தம் நிலையில் தாழ்ந்து சிங்கள நாட்டில் கூலிகளாய்த் துன்புறுகின்றனர் என்பதையும் கவிஞர் ஏ.எஸ்.பி.சிவன் தம் கவிதையில் விளக்கியுள்ளார்.

### 2.1.8. பொங்கல் திருநாள்

தைத்திங்கள் முதல் நாளை உழவர் திருநாளாகக் கொண்டாடுவது தமிழர் மரபாகும். ஒவ்வோர் ஆண்டும் பொங்கல் திருநாளையொட்டித் திராவிடநாடு இதழ், 'பொங்கல் மலர்' வெளியிடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தது. நரகாசுரன் எனும் திராவிட மன்னன் கொல்லப்பட்ட நாளைத் தீபாவளித் திருநாளாகத் தமிழர்கள் கொண்டாடுதல் கூடாதென்ற கருத்தினைச் சுயமரியாதை இயக்கம் தொடங்கிய காலத்திலிருந்தே திராவிட இயக்கத் தலைவர்கள் வலியுறுத்தி வந்தனர். பொங்கல் திருநாள், தமிழர் திருநாளாகக் கொண்டாடப்பட வேண்டும் என்ற கருத்தும் வலியுறுத்தப்பட்டது. இதனடிப்படையில் பொங்கல் திருநாளைப் போற்றும் வகையில் அமைந்த கவிதைகள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றன.

'பொங்கல் திருநாளே தமிழரின் திருநாள் என்றும், தமிழர் வாழ்வில் மகிழ்ச்சியை அளிக்கும் இன்பநாள் என்றும் குறிப்பிட்டு, புதிய பரிதியை வாழ்த்தி இல்லந்தோறும் பொங்கலிட்டு மகிழவேண்டும்' என்பதை,

**"தைம்மதி பிறக்கும் நாள் தமிழர் தங்கள்**
**செம்மை வாழ்வின் சிறப்புநாள் வீடெலாம்**
**பாலும் வெல்லப் பாகும் பருப்பு நெய்**
**ஏலமும் புதுநெருப் பேறி அரிசியைப்**
**பண்ணிலே பொங்கப் பண்ணித் தமிழர்**
**எண்ணிலே மகிழ்ச்சி ஏற்றும் இன்பநாள்**
**புதிய பரிதியைப் புகழ்ந்து வாழ்த்தி**
**இதுதான் வல்லான் எழுதிய தமிழோ**
**எனும்படி இறங்கிய இளஞ்சூட்டின்சுவைப்**
**பொங்கல் இலைதொறும் போட்டுத் தேன்கனி**
**செங்கரும்பின் சாறும் சேர்த்தே**

**அள்ளூற அள்ளி அள்ளிப் பிள்ளைகள்**
**தெள்ளுதமிழ்ப் பேச்சுக் கிள்ளைப் பெண்டிர்**
**தலைவரோ டுண்ணும் தமிழர் திருநாள்**
**தலைமுறை தலைமுறை தவழ்ந்து வரும்நாள்"[56]**

என்ற கவிதையில் பாரதிதாசன் குறிப்பிட்டுள்ளார்.

'ஆரியக் கொடுமைகள் அழிந்திடுவதற்காகத் தலைவர்கள் ஆற்றுகின்ற சீரிய முயற்சிகள் வெல்ல வேண்டும்; உழவர் உள்ளம் மகிழ்ந்திட வேண்டும். நாட்டில் அறிவொளி பரவி அறியாமை அழிந்திடல் வேண்டும். சாதிச் சண்டைகளும், சமயவாதிகளின் தொல்லைகளும் அழிந்தொழிய வேண்டும்' என்பதை 1948 ஆம் ஆண்டுப் பொங்கல் மலரில் கவிஞர் பொ. அருணாசலம்,

**"வாழிய திருநாள் வாழ்கதைப் பொங்கல்**
**வாழிய திராவிட மணித்திரு நாடு**
**ஆரியக் கொடுமைகள் அழிந்திட ஆற்றும்**
**சீரிய முயற்சிகள் சிறந்துமிக் கோங்குக**
**மேழிச் செல்வம் கோழை படாதே**
**ஊழில் வழங்க வோங்குக பொங்கல்**
**உழவர்கள் களிக்க உலகம் உவக்க**
**பொழிதரு வானம் பொய்யா நிற்க**
**செறிதரு செம்மைகள் செழுமையாய்க் கெழும**
**அறிவொளி பரவுக அறியாமை அழிக**
**சாதிச் சண்டை சமயத் தொல்லை**
**பேதப் பேச்சு பேதைமை வழக்கம்**
**கேட்டை நல்கும் கீழ்மதிச் செய்கை**
**நாட்டை விட்டு வேரொடும் தொலைக"[57]**

என்று குறிப்பிட்டுள்ளார்.

திராவிடநாடு இதழில் அறிஞர் அண்ணாவின் கவிதைகளும் இடம்பெற்றுள்ளன. பொங்கல் திருநாளைப் போற்றி அவர் படைத்த கவிதை, 1950 ஆம் ஆண்டு பொங்கல் மலரில் இடம்பெற்றுள்ளது. 'தமிழ் மொழியும் தமிழிசையும் மேம்பட வேண்டும் தமிழகத்தில் உழவுத் தொழில் சிறப்புற வேண்டும், நாடும் மக்களும் நலம்பெறுதல் வேண்டும்' என அவர் விரும்புவதை,

**“வாழிய பொங்கல் வாழிய தமிழ்மொழி**
**வாழிய தமிழகம் வாழிய தமிழிசை**
**மஞ்சளும் இஞ்சியும் வானுயர் கரும்பும்**
**செந்நெல் அடிசிலும் தீங்கனி பிறவும்**
**நிலமகள் தந்த வளனெனப் போற்றுதும்**
**செந்தமிழ்த் திருநாள் சிறப்புற வந்தால்**
**பொங்குக பொங்கல் எங்கனும் நன்குற**
**தமிழ்மொழி தமிழ்க்கலை தாய்த் திருநாடு**
**உரிமை பெற்று உலகினில் மிளிரவும்**
**ஆண்மை சிறக்கவும் அறம்பல பெருகவும்**
**நாடும் மக்களும் நலமெலாம் பெறவும்**
**வாழிய பொங்கல் வளம்பல பொழிந்தே”[58]**

எனும் கவிதை வரிகள் வாயிலாக அறியமுடிகிறது.

‘ஏர் முனையால் கர்ப்பமான பூமிப் பெண் தானியத்தைப் பிரசவித்த நாளே பொங்கல் திருநாளாகும். குடும்பத்தில் மகிழ்ச்சியைக் கொடுக்கும் தமிழரின் ஒரே திருநாள் பொங்கலாகும். அந்நாள் உழைப்பின் உற்சவத் திருநாளாகும்’ என்பதைக் கவிஞர் ‘புஷ்லி’,

**“ஏரின் தொடுப்பால் கர்ப்ப மான**
**பூமிப் பெண்ணின் தானியப் பிரசவம்**
**அழுத்திய வறுமையால் புழுங்கிய மக்களின்**
**குடும்பத்தில் மகிழ்ச்சியைக் குந்த வைக்கும்**
**ஒற்றைத் திருநாள் உழைப்பின் உற்சவம்”[59]**

எனக் குறிப்பிட்டுள்ளார். “சங்கராந்திப் பண்டிகை என்பது ஒரு சாரார்க்கே மகிழ்ச்சியூட்டும் பண்டிகை. அதுபோல மகா சிவராத்திரி, வைகுண்ட ஏகாதசி போன்றவை ஒரு சாதியாருக்கோ, ஒரு சமயத்தார்க்கோதான் இன்பமூட்டும் விழாவாக நடந்து வருகின்றன. ஆனால் ‘பொங்கல் திருநாளோ’ தமிழர் எல்லோராலும் கொண்டாடப்படுகிறது. எனவே பொங்கல் திருநாள் சமயம், சாதி. குலம் என்ற கட்டுப்பாடுகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஒரு தேசிய சமூகப் பண்டிகை.”[60] என அறிஞர் அண்ணா பொங்கல் திருநாளைச் சாதி, சமயங்களுக்கப்பாற்பட்ட சமூகத்

திருநாளாகக் குறிப்பிடுகிறார். பொங்கல் திருநாள் வறுமையையும் அறியாமையையும் ஒழித்திடும் இனிய நாளாக அமைந்து, திராவிடத்தின் துன்பங்களைத் தீர்க்கும் நாளாக அமைந்திட வேண்டும் எனக் கவிஞர் வாணிதாசன் விழைவதை,

**"வறுமைஇலை அறியாமை**
**இனிச்சிறிதும் இல்லை**
**ஆழ்கடலும் நிலப்பரப்பும்**
**காடுமலை நன்செய்**
**அத்தனையும் இன்பமயம்**
**அத்தனையும் பொன்னாம்**
**சூழ்ந்துவந்த இடரெல்லாம்**
**திராவிடத்தில் இன்னே**
**தைப்பொங்கல் வாழ்க"**[61]

எனும் கவிதை வாயிலாக அறிய முடிகிறது.

### 2.1.9. தொழிலாளர் தினம்

'மே' மாதத்தின் முதல் நாள் உலகத்தொழிலாளர் தினமாகக் கொண்டாடப்படுகிறது. தொழிலாளர் நலம் பெறவும், வாழ்வில் அவர்கள் உன்னத நிலையை அடைந்திடவும் பல்வேறு கருத்துகளை எடுத்துரைத்த திராவிட இயக்கக் கவிஞர்கள், 'மே' தினத்தைப் போற்றியும் கவிதைகள் புனைந்துள்ளனர். உழைப்பாளர்கள் தம் தோள்களை உயர்த்தித் தம் உழைப்பின் மேன்மையை உலகிற்கு எடுத்துரைத்த நன்னாளாக மே மாதத்தின் முதல் நாள் விளங்குகிறது.

தொழிலாளர் நலன்பொருட்டுப் புரட்சி வெடித்த தினம் 'மே' முதல்நாளாகும். பாட்டாளி, தன் மீசையை முறுக்கி வீறு கொண்டு எழுந்த திருநாளாக மே முதல்நாள் திகழ்கிறது என்பதை,

**"புரட்சி குமுறி வெடித்ததுவும்**
**புரட்டர் நடுக்கம் தொடங்கியதும்**
**மிரட்சி மிகுந்த பாட்டாளி**
**மீசை முறுக்கி எழுந்ததுவும்**
**வரட்சிவாய்ந்த வாழ்வுடையார்**
**மரத்துப் போன் உணர்வுடையார்**

**திரட்சி பெற்றுப் பிணைந்ததுவும்**
**சிவந்த மேமுதல் நாளாகும்**
**ஊமை உணர்ச்சி பெற்றதுவும்**
**உறங்கும் வேங்கை விழித்ததுவும்**
**ஆமை கூனல் விடுத்ததுவும்**
**ஆடும் வீரம் அடைந்ததுவும்**
**தூய்மை காட்டும் வழிநடத்த**
**தொழிலா ளரக்கு முன்னாலே**
**தீமைச் செல்வர் திகைத்ததுவும்**
**சிவந்த மேமுதல் நாளாகும்''[62]**

எனும் கவிதை வரிகள் புலப்படுத்துகின்றன. ஊமைகளாய்த் திகழ்ந்த தொழிலாளர்கள் வேங்கை போன்று வீரம் பெற்று விழித்த நாள் மே முதல்நாளாகும் என்ற கருத்தை இக்கவிதை உணர்த்துகிறது. தொழிலாளர்களைப் போற்றும் திருநாளாக 'மே' முதல் நாள் விளங்குவதை, 'மான்' எனும் கவிஞர்,

**''வாழ்வுக்கும் சாவுக்கும் இடையில் நித்தம்**
**வதைபட்டுக் கொண்டிருந்த ஏழைமக்கள்**
**தோளுயரத்தி நின்றார்கள் ஓர்நாள்**
**விண்ணப்பம் விடுத்தார்கள் உலகுக்கு**
**உழைப்புக்கும் பிழைப்புக்கும் இடையே உள்ள**
**இடைவெளி கள்குறைக மக்கள் தொழிலுக்கு**
**தலைகுனிக என்றார்கள் அந்நாள்**
**மேநாள் மேதினிக்கோர் திருநாளாகும்''[63]**

எனக் குறிப்பிட்டுள்ளார். இதே போன்று, தொழிலாளர் வாழ்வில் இன்ப வெள்ளம் குதித்தோடும் திருநாளாக மேநாள் திகழ்கிறதென்பதைக் கவிஞர் நக்கீரன்,

**''புளிதோற்ற கூழ்தன்னைக் குடித்து விட்டு**
**புழுதியினில் புல்மெத்தை மீதுறங்கி**
**குளிக்கின்ற நீர்தன்னைக் குடலி லூற்றி**
**குடும்பங்கள் நடத்திட்ட தொழீலா ளர்தம்**
**குளமான கண்ணீரில் இன்ப வெள்ளம்**
**குதித்தோடிப் புனலாட வந்தநாளும்**
**களிப்பென்னும் கடல்மூழ்க நீதிசொன்ன**
**கருவானில் வெண்ணிலவு மேநா ளாகும்''[64]**

எனக் குறிப்பிட்டுள்ளார்.

### 2.1.10. நெசவாளர் நிலை

கைத்தறி நெசவாளர்களின் இழிநிலையைப் போக்கி அவர்களுக்கு ஆதரவு அளிக்கும் வகையில் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் 4.1.1953 ஆம் நாள் தமிழகமெங்கும் கைத்தறி ஆதரவு நாள் கொண்டாடினர். அன்றைய தினம் அறிஞர் அண்ணா கைத்தறி ஆடைகளைத் தெருத்தெருவாய்ச் சென்று விற்பனை செய்தார். நலிந்த நெசவாளர்க்கு உதவிடும் வகையில் கழகத்தைச் சேந்தவர் அனைவரும் கைத்தறி ஆடையை உடுத்திட வேண்டும் என்ற வேண்டுகோளையும் வைத்தார். இதனைத் தொடர்ந்து கைத்தறி நெசவாளர்களுக்கு ஆதரவளித்திடும் வகையில் அமைந்த கவிதைகள் திராவிடநாடு இதழில் அவ்வப்போது வெளியாயின. கைத்தறி நெசவாளர்களின் வாழ்வியல் நிலையை,

> **"கைத்தறி யாளன் கதி கேளும்**
> **கடைநிலை யாளன் கதி கேளும்**
> **வைத்தியம் அவன் தன் நோயினுக்கு**
> **வழங்கிடும் மருந்தின் வகை கேளும்**
> **மில்துணி வரியால் ஒரு புறமும்**
> **விசைத்தறி விரிவால் மறுபுறமும்**
> **நல்துணை புரிவோம் எனப்பிதற்றி**
> **நடிப்பது கைத்தறி நலத்தினுக்கோ"[65]**

என்று விளக்குகிறார் புலவர் ந. கந்தசாமி. ஆலை முதலாளிகளுக்கும் விசைத்தறி நெசவாளர்களுக்கும் ஆதரவளிக்கும் அரசாங்கத்தினர் செயலை இக்கவிதையில் அவர் சாடியுள்ளார்.

### 2.1.11. சீனப் படையெடுப்பு

1962 ஆம் ஆண்டு இந்திய நாட்டின் சில பகுதிகளைச் சீனா ஆக்கிரமிப்புச் செய்தது. இந்தியாவிற்குச் சொந்தமான 'அக்சாய்-சின்' என்ற பகுதியில், நெடுஞ்சாலையை அமைத்து அப்பகுதி சீனாவைச் சேர்ந்ததாக வரைபடமும் வெளியிட்டது. பின்னர் 1962 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 2 ஆம் நாள் எவ்வித முன்னறிவிப்புமின்றித் தன்னிச்சையாகப் போரை அறிவித்தது. சீனர்களின்

இச்செயலைக் கடிந்துரைத்து அறிஞர் அண்ணா, 12.11.1962 ஆம் நாள் மாநிலங்களவையில் உரைநிகழ்த்தினார். இந்தியநாட்டின் பிரதமரான பண்டித ஜவர்கர்லால் நேரு எடுக்கும் முயற்சிகளுக்கும் தம் கட்சியின் ஆதரவினை அளித்தார். 'சீனர்களின் இழி செயலை பத்திரிகைகள் வாயிலாக மக்களுக்கு விளக்கிட வேண்டும்' என்ற கருத்தையும் அண்ணா எடுத்துரைத்தார். "பிரச்சாரம் என்பது மிகச் சிறந்த ஆயுதம். அதை நல்ல முறையில் ஜனநாயக நாடுகளைவிட ஜனநாயகமற்ற நாடுகள் பயன்படுத்துகின்றன. எங்கள் கட்சிக்குரிய பத்திரிகைகளில் இலவச இடம் ஒதுக்க நான் தயாராக இருக்கிறேன். எங்கள் கட்சிக்கு இரண்டு மூன்று நாளிதழ்களும், பத்து, பதினைந்து வார இதழ்களும் இருக்கின்றன. பிரச்சாரம் வேகமான முறையில் இயங்க வேண்டும். பிற கட்சிகளுக்கும் உரிய இடம் தரப்பட வேண்டும். அப்படிச் செய்வதன்மூலம், நாட்டை ஒரே குறிக்கோள் கொண்ட மக்கள் என்பதை உணரச் செய்ய வேண்டும்."[66] என்று அண்ணா வலியுறுத்தினார்.

7.1.1963 ஆம் நாள் அறிஞர் அண்ணா சீனர்களின் ஆதிக்க வெறியைக் கடிந்துரைத்து வானொலியில் உரை நிகழ்த்தினார். "உலகநாடுகளின் நல்லெண்ணத்தைச் சீனா இழந்து விட்டது. சகோதர நாடுகள் எனச் சொல்லிக் கொள்ளும் மற்றப் பொதுவுடைமை நாடுகளின் அன்பையும் சீனா இழந்துவிட்டது. இன்னும் சொல்லப்போனால், சீனாவை நட்பு நாடாகவோ, சகோதர நாடாகவோ சொல்லிக் கொள்ள எந்த நாடும் விரும்பவில்லை. வெட்கப்படுகின்றன."[67] என அண்ணா தமது வானொலிச் சொற்பொழிவில் குறிப்பிட்டார்.

தனித் திராவிடநாடு கொள்கையைச் சீனப்படையெடுப்பை ஒட்டி அறிஞர் அண்ணா கைவிட்டார். 7.4.1963 ஆம் நாள் திராவிடநாடு இதழில் நமது நோக்கம் என்ற தலைப்பில், "தனக்கென வாழாப் பிறர்க்குரியவர்கள் நாம். தன் நலம் தேடும் சின்னப்புத்தி நம்மிடம் கிடையாது. நமக்கென ஒரு கட்சியும் கொள்கையும், அக்கட்சிக்கென ஒரு கொள்கையும் உண்டு என்றாலும், நாட்டுக்குப் பொது ஆபத்து என்றவுடனே, நமது கொள்கையை நிறுத்திக் கொண்டோம். தள்ளி வைத்துவிட்டோம்.

முதலில் நாட்டுக்கேற்பட்ட பேராபத்து நீங்கட்டும். அதற்கே நமது முழு உழைப்பையும் நல்குவோம். இதுவே நமது நீங்காக் கடமை என்பதனையும் உணர்ந்துவிட்டோம். ஆளும் கட்சி, எதிர்க்கட்சிகள் என்பதெல்லாம், முற்றிலும் நாடு நமதே, இனிப் பயமில்லை என்ற நிலை ஏற்பட்ட பின்னர்தான் என்பதை அறிந்தவர்கள் நாம். எனவே, எமது முழு ஒத்துழைப்பும் நாட்டுக்கு ஏற்பட்ட கேடு தீரும் வரை உண்டு. இது நமது கழகத்தின் ஒருமித்த கருத்தாகும். வெற்றி நமதே"[68] எனக் குறிப்பிட்டுள்ளார். சீனப்படையெடுப்பு, திராவிட இயக்கத்தாரை தேசிய ஒற்றுமையை நோக்கி அழைத்துச் சென்றதை அண்ணாவின் கூற்றிலிருந்து அறியமுடிகிறது. அறிஞர் அண்ணாவின் கருத்தை ஏற்ற திராவிட இயக்கக் கவிஞர்கள், நாட்டு ஒற்றுமையை அடிப்படையாகக் கொண்ட கவிதைகளைத் திராவிடநாடு இதழில் எழுதினர். சான்றாக, கவிஞர் சரா, 'நமக்கிடையே உள்ள வேற்றுமைகளைத் தள்ளி வைத்துவிட்டு, இந்தியநாட்டு எல்லையைக் காப்பதற்குச் சீறி எழுவோம்' எனத் தமிழ் மக்களை வேண்டுகிறார். இதனை.

**"நமக்குள்ள பேதங்கள் தள்ளிவைப்போம் நஞ்சு**
**நாகமுண்டு வாழ்கின்ற சீனரென்பார் பிறரெல்லையில்**
**நமக்குரிமை கோருவதைக் கிள்ளியெறிவோம் இந்திய**
**நாட்டெல்லை காப்பதற்கே சீறியெழுவோம்"[69]**

என்ற கவிதை வரிகள் புலப்படுத்துகின்றன.

புலவர் அறன், 'சீனர்கள் சிறிதும் அச்சமின்றி சினங்கொண்ட இந்தியப் புலிகளைச் சீண்டுகின்றனர். நெறியற்ற முறையில் தம் படையைக் கொண்டுவந்து அவர்கள் வெறியாட்டம் போடுகின்றனர்' என்பதை நாட்டுமக்களுக்குப் புலவர் அறன் எடுத்துரைக்கிறார்.

**"சிறிதேனும் அச்சமின்றிச் சீனாக் காரன்**
**சினப்புலியின் வாலினையே உருவு கின்றான்**
**நெறியற்ற முறையினிலே இந்தி யாவில்**
**நெடும்படையைக் கொண்டுவந்து சண்டை தன்னை**
**வெறியோடு போடுகின்றான் வேண்டாம் என்று**
**வேண்டியமட்டும் சொல்லிப் பார்த்தும் அந்தோ**

**வெறியோடே இந்தியரை வருத்து கின்றான்**

**வீணாக வம்புபல வளர்க்கின் றானே"[70]**

சீனர்கள் இந்தியரை வெறிகொண்டு வருத்தி, வீணாக வம்பு செய்கின்றனர் எனக் குறிப்பிட்டுள்ளார்.

'அறமற்ற முறையில் இந்திய எல்லையை ஆக்கிரமிப்புச் செய்த சீனர்கள் திறனற்று வீழ்வர் என்றும், நெறிகொண்ட இந்தியர் செறிவோடு மீள்வர்' என்றும் கவிஞர் முகமது மைதீன் குறிப்பிடுகிறார். இதனை,

**அறமற்ற படை மறவர்**
**திறனற்று வீழ்வார்**
**அறங்கொண்ட படை மறவர்**
**திறங் கொண்டு வாழ்வார்**
**வெறி கொண்ட சீனர் நோய்**
**மறிபோல மாள்வார்**
**நெறி கொண்ட நம்வீரர்**
**செறிவோடு மீள்வார்"[71]**

என்ற கவிதை விளக்கி நிற்கும். மேலும், இந்தியர்கள் தமக்குள் கொண்டிருந்த கொள்கை வேற்றுமைகளை மறந்துவிட்டு, கொடிய பகைவனை ஒழிப்பதற்காகத் தம்மாலியன்ற நிதி உதவியை அளித்ததை,

**"மானம் பெரிதென எண்ணிடும் நாட்டில்**
**மறவர் களப்படை வாழ்ந்திடும் வீட்டில்**
**ஈனர் இழிதகைப் பிறவிகள் சீனர்**
**இன்று நுழைந்தனர் இதைச் சகியோம்**
**கொள்கை வேற்றுமை மறந்து விட்டோம்**
**கொடியதோர் பகைவனை ஒழிப்ப தற்கு**
**எல்லையைக் காத்திட மக்கள் இன்ற**
**எல்லாம் பொருளையும் தந்து நிற்கின்றார்"[72]**

எனக் கவிஞர் ராஜா மணிவாசகன் தம் கவிதையில் குறிப்பிட்டுள்ளார். திராவிடநாடு அலுவலகத்தில் பணிபுரிந்த அனைவரும் சீன ஆக்கிரமிப்பை எதிர்த்து முறியடிக்கும் தேசப்பாதுகாப்புப் படையினரின் தேவைக்காகத் தங்களின் ஒருவார ஊதியத்தை வழங்கியது குறிப்பிடத்தக்கதாகும்.

'சீனர்களின் வஞ்சகச் செயல்களை எடுத்துரைத்து நாட்டைக் காப்பதற்கு இக்கணமே எழுந்திட வேண்டும்' எனக் கவிஞர் மு. வீரையன் வேண்டுவதை,

**நம்மைப் பழித்திட்டான் நாட்டைப் பழித்திட்டான்**
**செம்மை யிழிந்து செருக்குற்றான் - எம்மானே**
**அக்கொடிய சீனன் அலறிப் புறம்ஓட**
**இக்கணமே செல்வோம் எழுந்து"**[73]

எனும் கவிதை வரிகள் புலப்படுத்துகின்றன. கவிஞர் ந. அலி, தொன்று தொட்டு வந்த இந்தியர்களின் வீரம் மாய்ந்து போகவில்லை; தூங்கும் புலிகளாகிய இந்தியர் எழுந்துவிட்டால் சீனநாடு தாங்காது எனக் கூறி உணர்வேற்றுவதை,

**"இன்று சிந்தும் இரத்தம் எங்கள்**
**இனத்தைக் காக்குமே**
**இனியும் நாங்கள் அடிமை யல்ல**
**என்று கூறுமே**
**தொன்று தொட்டு வந்த வீரம்**
**மாய்ந்து போகுமோ**
**தூங்கும் புலிகள் எழுந்து விட்டால்**
**சீனம் தாங்குமா?** [74]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

கவிஞர் சுரா, வஞ்சகச் சீனர் நம் எல்லையைவிட்டு அகலும் வரை நெஞ்சை நிமிர்த்திப் போர் புரிய வேண்டுமெனக் குறிப்பிடுகிறார். மேலும், 'வாழ்க்கையில் என்றேனும் ஓர்நாள் சாவு வந்தே தீரும். உயிரை நாட்டுக்கு அளிப்பது பேரின்பமாகும்' என்று குறிப்பிட்டு பண்டை நாளில் சேரன் செங்குட்டுவன் இமயம் வரை சென்று தம் புகழை நிறுவியதையும் கவிதையில் எடுத்துக்காட்டுகிறார். இதனை.

**"நெஞ்சை நிமிர்த்தி**
**நெடும்படை நடத்து**
**வஞ்சசீனர் எல்லை**
**விடும்வரை துரத்து**
**வாழ்வி லொருநாள்**
**வந்திடும் சாவுஅது**
**நாட்டுக்கு ஈவதில்**

**தந்திடும் பேரின்பம்**
**நாவிற் கீரனாய்நல்**
**லறத்திற் பாரியாய்மற்**
**போரிற் சேரனாய் நின்**
**புகழைத் தேடிடு”[75]**

என்ற கவிதை உணர்த்துகின்றது.

## 2.1.12. இரங்கல் கவிதைகள்

மனித இறப்பின் பொருட்டுக் ‘கையறுநிலை’ பாடல்கள் புனைந்து வருந்துவது சங்ககாலம் தொட்டுத் தமிழ்க் கவிஞர்களிடம் இருந்துவரும் வழக்கமாகும். அண்ணல் காந்தியடிகள், பட்டுக்கோட்டை கே.வி.அழகர்சாமி, கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன், ஆகியோர் மறைவினையொட்டித் திராவிடநாடு இதழில் இரங்கல் கவிதைகள் வெளிவந்துள்ளன.

### 2.1.12.1. காந்தியடிகள்

இந்திய நாட்டின் ஒப்பற்ற தலைவர்களுள் ஒருவராகிய அண்ணல் காந்தியடிகள், 30.1.1948 ஆம் நாள் படுகொலைக்கு ஆளாகி உயிர் துறந்தார். காந்தியடிகள் மறைவினைத் தொடர்ந்து 15.2.1948 ஆம் நாள் வெளிவந்த திராவிட நாடு இதழில் காந்தியடிகள் மறைவு குறித்த இரங்கற் செய்தியில் அறிஞர் அண்ணா, “இந்த நாடு, - காந்திநாடு – காண்பது தான், நமது தலைமுறைக்கு உள்ள வேலை”[76] எனக் குறிப்பிட்டுக் காந்தியடிகளைப் போற்றிச் சிறப்பித்துள்ளார்.

காந்தியடிகளின் மறைவினையொட்டி 29.2.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் கவிஞர் செ. சின்னத்தம்பி,

**“காந்தியெனும் சாந்தஒளி கருணையெனும் பேராற்றில்**
**நீந்திவிளை யாடுகின்ற நேரத்தில் நீசனவன்**
**ஏந்திவரு குண்டிரப்ப இன்னுயிரைத் தானீந்தாய்,**
**சாந்துணையும் மாற்றார்க்கம் செந்தண்மை பூண்டொழுகும்**
**அந்தணனே மன்பதைக்கோர் அறவோனே இந்தியர்கள்**
**தந்தவமே புத்தன்முதல் தரணிபுகழ் சான்றோர்கள்**
**தந்தருளும் நெறிமுறைகள் தன்பயனே இந்துவுனை**
**இந்துமதமே கொன்றதெனில் என்செய்யார் மதங்கொண்டார்”[77]**

எனக் கவிதை படைத்துள்ளார். புத்தர் முதலான உலகம் போற்றிய சான்றோர்களின் நெறிமுறைகளைப்படி வாழ்ந்த காந்தியடிகளை மதவெறி கொண்டோர் மாய்த்துவிட்டதாகக் கவிஞர் செ. சின்னத்தம்பி, வருந்திப்பாடியுள்ளார்.

### 2.1.12.2. பட்டுக்கோட்டை கே.வி.அழகர்சாமி

சுயமரியாதை இயக்கம் தொடங்கிய நாள்முதற்கொண்டு திராவிட இயக்க வளர்ச்சிக்குத் தம் பேச்சாற்றலால் பேருதவி புரிந்தவர் பட்டுக்கோட்டை கே.வி.அழகர்சாமியாவார். இவரைத் திராவிட இயக்கத் தொண்டர்கள் ‘அஞ்சா நெஞ்சன் அழகிரி’ எனப் போற்றினர். 1938 ஆம் ஆண்டு நடைபெற்ற முதல் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் தீவிரமாகப் பங்கு பெற்றுத் திருச்சியிலிருந்து சென்னை நோக்கிச் சென்ற தமிழர் பெரும்படையை வழிநடத்திச் சென்ற பெருமை இவருக்கு உண்டு. இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் வீறு கொண்டு இயங்கிய அழகிரிசாமியின் செயலாற்றலை, “நெருப்புப்பொறி பறக்கப் பேசி, கேட்போர் அத்தனைப்பேர் நெஞ்சையும் துடிதுடிக்கச் செய்து சுயமரியாதைச் சண்டமாருதத்தை நாட்டில் எழுப்பிவந்த தோழர் கே.வி.அழகிரிசாமிதான் படைச்சேனாதிபதி, படைத்தளபதி என்றால் படைத் தளபதியே அவர். அந்த நெட்டையான உருவம் போர்க்கோலம் பூண்டு படையை இராணுவ முறையில் அணிவகுத்துச் செலுத்திய காட்சி, அடே அப்பா, எதிரிகளையெல்லாம் திக்குமுக்காடச் செய்துவிட்டது”[78] என்று மா. இளஞ்செழியன் சிறப்பித்துப் போற்றியுள்ளார். சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம் ஆகியவற்றில் தீவிரமாகப் பணியாற்றிய அழகர்சாமி 28.3.1949 ஆம் நாள் மரணமடைந்தார். பெரியார் ஈ.வெ.ராமசாமி அழகர்சாமி மறைவின்போது விடுத்த இரங்கற் செய்தியில், “திடீர் என்று நான் புகுத்தும் கொள்கையையும், போடும், திட்டங்களையும் சிறிதும் யோசனை இன்றி ஒப்புக் கொண்டு, அவைகளை எப்படிப்பட்ட அறிவாளிகள், குயுக்திக்காரர்கள் வாதக் கூட்டத்திலும், எதிர்ப்பிலும் மெய்ப்பித்து வெற்றி காணுவார்”[79] எனச் சிறப்பித்துள்ளார்.

3.4.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் அறிஞர் அண்ணா, அழகர்சாமி மறைவு குறித்த இரங்கல் செய்தியில், “சுயமரியாதை இயக்கத்தின் சுடர்! தன்மதிப்பியக்கத்தின் தனிப்பெரும் தளபதி! பார்ப்பனியத்தின் பகிரங்கப் பகைவன்! மூடப்பழக்க வழக்கங்களை முறியடிக்கும் முன்னணித் தலைவன்! வைதிகத்தின் வைரி! வர்ணாசிரமத்தின் விரோதி! சீர்திருத்தச் செம்மல்! சொற்செல்வன்! சோர்வற்ற உழைப்பாளி! தந்நலம் மறந்து தன் நாட்டுக்குப் பணியாற்றிய பண்புடையோன்! அறிவுப்பாதையில், அங்கும் இங்கும் கிடந்த பள்ளம் படுகுழிகளை நிரப்பிய பகுத்தறிவாளன்! அறியாமையை அகற்ற அஞ்சா நெஞ்சுடன் அவனி சுற்றி வந்த ஆண்மையாளன்!.”[80] எனக் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார்.

அழகர்சாமியின். முதலாமாண்டு நினைவு தினத்தில் அவர் குறித்த இரங்கற் கவிதை 2.4.1950 ஆம் நாள் திராவிட நாடு இதழில் வெளிவந்தது. ‘கல்லெறிக்கு அஞ்சாது, சுயமரியாதை இயக்கக் கொள்கைகளை தமிழ் மக்களுக்கு எடுத்துரைத்த வல்லவனை மரணம் வஞ்சித்து அழைத்துச் சென்றுவிட்டது’ என்பதை,

**“கல்லெறிக்கும் புல்லுருவிக் கயவர்களின் தூண்டுதற்கும்**
**சொல்லெறிக்கும் சுயநலத்தான் சூழ்ச்சிக்கும் அஞ்சாது**
**நல்வழியை எங்களுக்கு நவினுறவே எடுத்துரைத்த**
**வல்லவனே உமைமரணம் வஞ்சித்து விட்டதையா”[81]**

எனக் கவிதையில் கவிஞர் முத்துக்கூத்தன் எடுத்துரைத்துள்ளார். மேலும், திராவிட மக்களிடம் ஆற்றலை விளைவித்த அழகிரியின் எண்ணங்கள் ஏற்றம் உடைத்தவையாகும் எனவும் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**“ஆற்றல் விளைத்தெந்தை அழகிரியே உம்மெண்ணம்**
**ஏற்றம் உடைத்தையா இனிஎங்கள் மனத்துயரை**
**மாற்ற வருவீரோ மறுமலர்ச்சித் திராவிடரைத்**
**தேற்ற வருவீரோ திண்ணியனே உம்வாழ்வில்”[82]**

என்ற கவிதைவரிகள் வாயிலாக அறியமுடிகிறது. திராவிடநாட்டின் விடுதலைக்காக அழகர்சாமி காட்டிய நல்வழி, காலம் கடந்தும் நிலைத்து நிற்கும் என்பதனை,

**“நாட்டெழிலே வீட்டெழிலாய் நலங்கருதித் தானுழைத்தீர்**
**மேட்டிமையாய் நம்மினத்தார் மேலோங்கி வாழ்வதற்குத்**
**தீட்டடியதிட் டங்களெல்லாம் திராவிடத்தின் விடுதலைக்காம்**
**காட்டியநல் வழியையென்றும் காலம் மறக்கவொண்ணா”[83]**

எனக் கவிதையில் குறிப்பிட்டு அழகர்சாமியைப் போற்றுகிறார் கவிஞர் முத்துக்கூத்தன்.

## 2.1.12.3. கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன்

நாடகம், திரைப்படத் துறைகளில் புகழ்பெற்று விளங்கியவர் கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன். திராவிட இயக்கக் கொள்கைகளை, பகுத்தறிவுச் சிந்தனைகளைத் தம் நாடகம் மற்றும் திரைப்படங்களில் எடுத்துரைத்த பெருமை இவருக்கு உண்டு. கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன், 30.8.1957 ஆம் நாள் மறைந்தார். கலைவாணர் மறைவு குறித்து ‘திராவிடநாடு இதழில் மூன்று இரங்கல் கவிதைகள் வெளிவந்துள்ளன.

கவிஞர் வீரா.விநாயகம், ‘கலையை வளர்த்து, மக்களின் கவலைகளைத் தீர்த்த விலைமதிக்க இயலாத கலைவாணர், பகுத்தறிவுச் சிந்தனைகள் நிரம்பப் பெற்றவர்; ஈகைப்பண்பில் சிறந்தவர்; உண்மையும், உழைப்பும், மனவுறுதியும் மிக்கவர்; துன்பம் போக்கிய தூய்மை மதியாளர்’ எனப் போற்றுகிறார். இதனை,

**“கலையை வளர்த்தோன் கவலையைத் தீர்த்தோன்**
**இல்லையென்னாது எடுத்துமே கொடுத்தோன்**
**விலைமதிக் கொண்ணா வேடிக்கை யாளன்**
**மலையசைந்த தாலும் மனமது தளறான்**
**பண்பது உடையோன் பகுத்தறிவாளன்**
**உண்மை உழைப்பும் உறுதியும் கொண்டோன்**
**பண்டைப் பெருமையை பாவில் தருவோன்**
**மண்ணகம் மதிக்கும் மாபெரும் குணத்தோன்**
**இன்ப முகத்தோன் இன்சொல் நடிகன்**
**துன்பம் போக்கிய தூய்மை மதியோன்**
**என்.எஸ்.கிருஷ்ணன் எய்திய இயற்கை**
**என்றும் மறவா செய்தியே ஆகும்”[84]**

என்ற கவிதை உணர்த்தும் கருத்துகளின் வழியாக அறியமுடிகிறது.

கவிஞர் வா.செ. பழநிசாமி, ‘கலைவாணில் சுடர்விட்டுச் சிரித்த விண்மீன் மறைந்து விட்டது; தமிழர்களின் ஒப்பற்ற செல்வம் வேரற்ற மரம் போல் வீழ்ந்துவிட்டது’ என்று தம் ஆற்றாமையைக் கவிதையில்,

**“கலைவாணில் சுடர்விட்டு சிரித்த விண்மீன்**
**கண்மூடி மண்மீது வீழ்நத தந்தோ**
**விலைகூற வொண்ணாத தமிழர் செல்வம்**
**வேரற்ற மரம்போல வீழ்ந்த தய்யோ**
**சிலைபோல நாமானோம் செய்தி கேட்டு**
**திடுக்கிட்டோம் தென்னகமே தேம்பி நிற்கும்**
**நிலைகண்டோம் கலைவாணா ஏன் மறைந்தாய்?**
**நின்சிரிப்பை இனிநாங்கள் என்று காண்போம்”[85]**

என்று குறிப்பிட்டுள்ளார்.

## 2.2. தொகுப்புரை

- தமிழ் மொழிசார்ந்த தளங்களிலும், சமூகம் சார்ந்த களங்களிலும் திராவிட இயக்க இதழ்கள் ஆற்றிய பணிகள் குறிப்பிடத்தக்கவை ஆகும்.
- திராவிட இயக்க இதழ்கள் தோற்றம் பெற்ற காலத்தில் தமிழ்மொழி உணர்வு, இன உணர்வு போன்றவற்றை நோக்கி மக்களைத் திரட்டுவது என்பது சவால் நிறைந்த செயலாகவே இருந்துள்ளது. சமூத்தில் ஆதிக்கம் செலுத்திய பாரப்பனர்கள் மக்களிடையே ஏற்படுத்தியிருந்த வருணாசிரமக் கோட்பாடுகள், இறைநம்பிக்கையின் அடிப்படையில் ஏற்படுத்திய மூடநம்பிக்கைகள், மூடநம்பிக்கை நிறைந்த சமூகப் பழக்கவழக்கங்கள் போன்றவற்றை எதிர்த்துக் குரல் கொடுக்க வேண்டிய தேவையும் கட்டுப்பாடும் திராவிட இயக்க இதழ்களுக்கு இருந்தன. அத்தகைய விழிப்புணர்ப்பை ஏற்படுத்தும் படைப்புகள் கவிதை வடிவில் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன.
- திராவிடநாடு இதழில், இந்தி எதிர்ப்புத் தொடர்பான கவிதைகள் இன்றியமையாத இடத்தினைப் பெற்றுள்ளன. இந்தி எதிர்ப்புப் போராட்டங்கள் தமிழகத்தில் நடைபெற்ற பல்வேறு காலச்சூழல்களில் தமிழ் மொழியின்

மேன்மையை உணர்த்தும் வகையிலும், இந்தி மொழியின் இழிவினை விளக்கியும் பல்வேறு கவிதைகள் வெளிவந்தன. இந்தி எதிர்ப்புப் போராட்டத்தைத் தமிழ்மொழியின் உரிமை மீட்புப் போராட்டமாகத் திராவிட இயக்கத் தலைவர்கள் கருதியமையால் இந்தி எதிர்ப்பு குறித்த கவிதைகள் திராவிடநாடு இதழில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன என்பதை அறியமுடிகிறது.

❖ திராவிட இயக்கத்தின் இருமொழிக் கொள்கையின் அடிப்படையில் தமிழையும் ஆங்கிலத்தையும் போற்றும் கவிதைகள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன.

❖ சமயநோக்கில் தமிழ்க்கவிதைகள் வெளிவந்த சூழலில், சீர்திருத்தக் கவிதைகளின்வழி சமூக விழிப்புணர்வை ஏற்படுத்திய சிறப்பு திராவிடநாடு இதழுக்கு உண்டு.

❖ தமிழ்மொழியின் சிறப்புகளை விளக்கித் தமிழை வாழ்த்திப் புனையப்பட்ட கவிதைகள் திராவிடநாடு இதழில் வெளிவந்துள்ளன. தமிழின் தொன்மை, பெருமை, காலத்தால் நிலைத்து நிற்கும் தன்மை போன்ற பாடுபொருள்களில் அமைந்த கவிதைகள் இதழில் இடம்பெற்றுள்ளன.

❖ பொங்கல் திருநாளின் சிறப்புகளை விளக்கியும் அத்திருநாளைத் தமிழர்கள் கொண்டாட வேண்டியதன் அவசியத்தையும் விளக்கிய கவிதைகள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன. தொழிலாளர் தினத்தைப் போற்றிச் சிறப்பித்த கவிதைகளும் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன

❖ விதவை மறுமணம், கைத்தறிநெசவாளர் நிலை, அண்ணல் காந்தியடிகள், பட்டுக்கோட்டை அழகிரிசாமி, கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன் போன்றோர் மறைவு குறித்த இரங்கற்கவிதைகள் திராவிடநாடு இதழில் வெளிவந்தன. இரங்கற்கவிதைகள் தலைவர்களின் மேன்மைகளை உணர்த்தும் வகையில் அமைந்துள்ளன. கொள்கை மாறுபாடு கொண்டோர் மறைவின் போது எழுதப்பட்ட இரங்கற்பாக்கள் நாகரிக மரபினைப் பின்பற்றி அமைந்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. கவிஞர் கருணானந்தம், அண்ணா சில நினைவுகள், ப.102.
2. ஆனைமுத்து, (ப.ஆ.), பெரியரார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் தொ. 3. ப.1601.
3. திராவிடநாடு, 5.11.1944, ப.1.
4. மேலது,29.6.1947, ப.1.
5. டி.எம்.பார்த்தசாரதி, தி.மு.கழக வரலாறு, ப.493.
6. திராவிடநாடு, 22.1.1944. ப.1.
7. மேலது, 22.1.1944. ப.1.
8. மேலது. 8.4.1945 ப.1.
9. மேலது.
10. மேலது, 23.9.1951, ப.1.
11. மேலது, 7.12.1958, ப.1.
12. மேலது, 9.11.1958. ப.1.
13. மேலது, 12.10.1953, ப.1.
14. மேலது, 2.11.1955. ப.1.
15. மேலது, 8.6.1958, ப.1.
16. மேலது, 18.5.1958. ப.1.
17. மேலது, 19.4.1959, ப.1.
18. மேலது, 25.6.1961, ப.1.
19. மேலது, 17.9.1961, ப.1.
20 .தொ.பரமசிவன்,(தொ.ஆ.), பாரதிதாசன் கவிதைகள், ப.90.
21. வே.ஆனைமுத்து, (ப.ஆ.), மு.நூ. ப.13.
22. திராவிடநாடு, 25.2.1945. ப.1
23. மேலது.
24. மேலது, 23.4.1947.. ப.1.
25. மேலது,12.12.1954, ப.1.
26. மேலது, 7.9.1947, ப.1.
27. மேலது, 28.9.1947, ப.1.
28. கோ. கேசவன், திராவிட இயக்கமும் மொழிக் கொள்கையும், பக்..58-59.
29. அ. இராமசாமி, என்று முடியும் இந்த மொழிப்போர்? ப.6.
30. தொ.பரமசிவன்,(தொ.ஆ.), மு.நூ. .ப.
31. ம.பொ.சிவஞானம், விடுதலைப்போரில் தமிழ் வளர்ந்த வரலாறு, ப.291.
32. திராவிடநாடு,15.10.1944. ப.1.

33. மேலது.
34. மேலது, 11.7.1948, ப.1.
35. மேலது, 18.7.1948, ப.1.
36. மேலது.
37. மேலது, 25.7.1948, ப.1.
38. மேலது, 1.8.1948, ப.1.
39 முகம். மாமணி, அறிவுச்சுரங்கம் அப்பாத்துரையார், ப.93.
40. திராவிடநாடு, 8.8.1948, ப.1.
41. மேலது, 26.9.1948, ப.1
42. மேலது, 23.1.55, ப.1.
43. மேலது, 1.1.1956, ப.1.
44. மேலது, 16.11.1957, ப.1.
45. மேலது, 26.78.1959. ப.1.
46. மேலது, 1.12.1957, ப.1.
47. மேலது, 15.2.1959, ப.1.
48. மேலது, 4.6.1950, ப.15.
49. மேலது.
50. மேலது,
51. மேலது, 3.11.1957, ப.1.
52. மேலது, 24.9.1944. ப.1.
53. இளமாறன், தமிழ், தமிழர் உணர்வுகள், ப.121.
54. திராவிடநாடு, 6.11.1955,ப.1.
55. மேலது, 17.3.1957, ப.1.
56. திராவிடநாடு, 12.1.1947. ப.2.
57. மேலது, 13.1.48. ப.1.
58. திராவிடநாடு, 13.1.1950, ப.2
59. மேலது, 13.1.1950, ப.1.
60. மேலது,15.2.1959, பக்.11-12.
61. மேலது, 13.1.1952, ப.2.
62. மேலது, 1.5.1955, ப.5.
63. மேலது, 8.5.1960, ப.1.
64. மேலது, 6.5.192, ப.1.

65. மேலது,
66. மேலது, 25.11.62, ப.16.
67. சி.சிட்டிபாபு, தி.மு.க. வரலாறு, ப.27.
68. மேலது, 7.4.1963, ப.1.
69. திராவிடநாடு, 4.11.62, ப.1.
70. மேலது, 11.11.1962, ப.1.
71. மேலது, 2.12.1963, ப.1.
72. மேலது, 9.12.1963, ப.1.
73. மேலது, 30.12.1962, ப.1.
74. மேலது, 25.11.1962, ப.1.
75. மேலது, 3.2.1963, ப.1.
76. மேலது, 15.2.1948, ப.3.
77. மேலது, 29.2.1948, ப.1.
78. மா. இளஞ்செழியன், தமிழன் தொடுத்த போர், ப.95.
79. வே.ஆனைமுத்து, (ப.ஆ.), மு.நூ. ப.1931.
80. திராவிடநாடு, 3.4.1949, ப.6.
81. மேலது, 2.4.1950, ப.2.
82. மேலது.
83. மேலது.
84. மேலது, 8.9.1957, ப.2.
85. மேலது, 15.9.1957, ப.13.

# இயல் - 3

# திராவிடநாடு இதழில் சிறுகதைகள்

## 3.0. முன்னுரை

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழ்ப்புனைகதை இலக்கியம் வெகுவாக வளர்ச்சியடையத் தொடங்கியது. இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழில் தோன்றிய பல்வேறு சிற்றிதழ்கள், சிறுகதைப் படைப்பாளர்களுக்கு ஊக்கம் அளித்தன. 'மணிக்கொடி' தமிழ்க்கவிதை மற்றும் புதுக்கவிதை வளர்ச்சிக்குப் பெரிதும் துணை செய்தது. தொடக்ககாலத் திராவிட இயக்க இதழ்களான விடுதலை, குடியரசு ஆகியன தமிழ்க் கவிதைப் படைப்பாளர்களைப் பெரிதும் ஊக்குவித்தன. இனம், மொழி முதலிய பொருண்மையில் அமைந்த கவிதைகள் இவ்விதழ்களில் வெளிவந்தன. 1942 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் பதினைந்தாம் நாள் இதழில் 'சௌமியன்' என்ற புனைபெயரில் 'குமாஸ்தாவின் பெண்தான் அல்லது கொலைகாரியின் குறிப்புகள்' என்ற தொடர்கதையை அண்ணா வெளியிட்டார். திராவிடநாடு இதழின் தொடக்ககாலம் முதல் பல்வேறு சிறுகதைகள் வெளிவந்தன. மொழிப்பற்று, இனவுணர்வு, கைம்பெண் வாழ்வியல், மூடநம்பிக்கை ஒழிப்பு, சமூகமாற்றம், முதலாளித்துவத்தின் கொடுமைகள், ஏழைகளின் அவலநிலை, சாதி ஒழிப்பு, அரசியல் பித்தலாட்டங்கள், அரசியல் வாதிகளின் ஆணவப்போக்கு போன்ற கதைக்கருக்களை அடிப்படையாகக் கொண்ட சிறுகதைகள் திராவிடநாடு இதழில் வெளிவந்தன. மேலும் வாழ்வியல் சிந்தனைகளை அடிப்படையாகக் கொண்ட சிறுகதைகளும் வெளிவந்தன. நாளிதழ்களில் இடம்பெற்ற செய்திகளை அடிப்படையாகக் கொண்டும் சில சிறுகதைகள் திராவிடநாடு இதழில் வெளிவந்தன. சமூக மாற்றத்தையும் மக்களை நல்வழிப்படுத்தவும், எண்ணங்கொண்ட சிறுகதை ஆசிரியர்கள் பலரை, அறிஞர் அண்ணா திராவிடநாடு இதழின் வாயிலாக அறிமுகப்படுத்தினார். திராவிட நாடு இதழில் அறிஞர் அண்ணா பல்வேறு புனைபெயர்களில் எழுதி வெளியிட்ட சிறுகதைகள் பின்னாளில் நூல்வடிவம் பெற்றுள்ளன. இதழில் இடம்பெற்ற சிறுகதைகள் மனித வாழ்க்கையின் எதார்த்த

நிலையை வெளிப்படுத்தும் வகையில் அமைந்தன. அச்சிறுகதைகளின் சிறப்பியல்புகளைக குறித்து ஆய்ந்தறியும் வகையில் இவ்வியல் அமைகிறது.

## 3.1. தமிழில் சிறுகதைகள்

சிறுகதை எனும் இலக்கிய வடிவம் மேனாட்டார் வருகையால் தமிழுக்குக் கிடைத்த இலக்கிய வடிவமாகும். தமிழகத்தில் 1933 ஆம் ஆண்டு 'மணிக்கொடி' என்ற இதழ் சிறுகதை வெளியீட்டிற்காகவே தொடங்கப்பட்டது. தமிழ் மக்களிடையே சமூக விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவதற்கு மணிக்கொடி எழுத்தாளர்கள் முயன்றனர். தொடக்க காலத்தில் தமிழ்ச் சிறுகதைகள் மேனாட்டுச் சிறுகதையைப் போன்றனவாக அமைந்தன. ஆனால் இந்நிலை விரைவில் மாற்றம் பெற்றது. "தமிழில் புனைகதை வடிவம் வளரத்தொடங்கிய காலத்தில் புதுமைப்பித்தன், வ.இராமசாமி, அறிஞர் அண்ணா போன்றவர்கள் சமுதாயத் தீமைகளைக் களைய வேண்டும் என்ற கருத்தோட்டத்தில் புனைகதைகளைப் படைக்கலாயினர்"[1] எனத் தமிழ்ப் புனைகதை இலக்கியத்தின் வளர்ச்சிநிலை குறித்து சே. இராசேந்திரன் குறிப்பிடுகிறார். தமிழ்ச்சிறுகதை வளர்ச்சிக்கு திராவிட இயக்க இதழ்களும் பெரும்பங்காற்றியுள்ளன. திராவிட இயக்கக் கொள்கைகளை வெளிப்படுத்தும் வகையிலும், சமூக அவலங்களை எடுத்துரைக்கும் வகையிலும் பெரும்பாலான சிறுகதைகள் அமைந்தன. வரலாற்று நிகழ்வுகளை அடிப்படையாக வைத்துப் புனையப்பட்ட சிறுகதைகளும் இதழ்களில் இடம்பெற்றன.

## 3.2. சிறுகதைகளின் கருப்பொருள்

திராவிட இயக்கத்தின் அடிப்படைக் கொள்கைகளைத் திராவிடநாடு இதழில் இடம்பெற்ற சிறுகதைகள் தாங்கிப் பிடித்தன எனலாம். பார்ப்பனர்களின் ஆதிக்க உணர்வுகளைப் படைப்பாசிரியர்கள் தம் படைப்புகளில் எடுத்துக்காட்டினர். முதலாளித்துவத்தின் கொடுமைகளை உணர்த்தும் வகையிலும், ஆதிக்க சக்திகளை எதிர்த்துப் போராட இயலாத அடித்தள மக்களின் அவலநிலையை எடுத்துரைக்கும் வகையிலும் பல்வேறு சிறுகதைகள் இடம்பெற்றன. மக்களிடம் பகுத்தறிவுச்

சிந்தனைகளை விதைக்கும் வகையில் பல படைப்புகள் அமைந்தன. மக்களிடம் புரையோடிக் கிடந்த பேய், பிசாசுகள் குறித்த மூடநம்பிக்கைகளை அகற்றி மாற்றுச் சிந்தனைகளை திராவிட இயக்க எழுத்தாளர்கள் தம் படைப்புகளில் படைத்தனர். தெய்வங்களைச் சிறுகதைகளில் பாத்திரங்களாக்கிப் பேச வைத்தனர். சமூக வாழ்வில் சாதி முற்றிலும் ஒழிக்கப்பட வேண்டும் என்ற திராவிட இயக்கச் சித்தாந்தங்களைத் திராவிட நாடு இதழ்ச் சிறுகதைகளில் காணமுடிகின்றது. பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் களையப்பட வேண்டும் என்ற சிந்தனையைத் திராவிட இயக்கப்படைப்பாளர்கள் தாங்கிப் பிடித்தனர். சமூக வாழ்வில் பெண்கள் முன்னேற்றம் அடைந்து உயர்ந்திட வேண்டும் என்ற கருத்தையும் இப்படைப்பாளர்கள் தம் படைப்புகளில் வலியுறுத்தியுள்ளனர். 'கலை வாழ்க்கைக்காகவே' எனும் கருத்திற்கு ஏற்றவாறு திராவிட இயக்கப்படைப்பாளர்கள் சமூகவாழ்வில் மக்களுக்குப் பாடமாக அமைகின்ற வகையில் பல்வேறு கருத்துகளைச் சிறுகதை வாயிலாக மக்களுக்கு வழங்கினர்.

தூய தமிழ்ச்சொற்களைச் சிறுகதைகளில் அறிமுகம் செய்து தமிழ்த்தொண்டாற்றிய பெருமை 'திராவிடநாடு' இதழுக்கு உண்டு. மேலும், சமகால அரசியல் நிகழ்வுகளும் சிறுகதைகளாக்கப்பட்டன. நாட்டுநிகழ்வுகளை மக்களிடம் எடுத்துரைத்து, மக்களிடம் நல்லனவற்றை அறிவுறுத்தி, புதிய சமூக வாழ்க்கையை உருவாக்கும் வகையில் திராவிடநாடு இதழில் சிறுகதைகள் இடம்பெற்றன. அவ்வகையில் சற்றொப்ப ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் குறிப்பிட்ட சில சிறுகதைகளின் சிறப்பியல்புகள் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

### 3.2.1. பாமாவின் பிரார்த்தனை

'காப்பியன்' என்ற பெயரில் 'பாமாவின் பிரார்த்தனை' என்ற சிறுகதை, 22.3.1942 மற்றும் 29.3.1942 திராவிடநாடு இதழ்களில் வெளிவந்தது. திராவிடநாடு இதழில் வெளிவந்த முதல் சிறுகதை இதுவாகும். திராவிட இயக்கம் சார்ந்த கொள்கைகள்

இச்சிறுகதையில் இழையோடுவதை வெளிப்படையாகக் காணமுடிகிறது. பார்ப்பனர்களின் வஞ்சகச் செயல்களை வெளிப்படுத்தும் நோக்கில் எழுதப்பெற்ற இச்சிறுகதை, ‘இளம் வயதில் கணவனை இழந்த கைம்பெண் ஒருத்தியின் துன்ப வாழ்க்கையை எடுத்துக் காட்டும் வகையில் அமைந்துள்ளது.

சிற்றூர் ஒன்றில் ‘கர்ணம்’ வேலை செய்து வந்த ‘சேஷய்யர்’ என்பவர் இறந்தமையின் காரணமாக அவ்வூரிலுள்ள சரவணமுத்து என்ற இளைஞன், அவ் வேலையைப் பெற முயல்கிறான். ஆனால் சேஷய்யரின் தூரத்து உறவினரான சிதம்பரய்யர், தன் முதிய வயதில் ஊராரை ஏமாற்றிக் கர்ணம் வேலையைப் பெற்றுவிடுகிறார். சரவணமுத்துவின் தந்தையான அப்புசாமியிடம், ‘தான் அனைத்து வேலைகளையும் சரவணமுத்துவிற்குக் கற்றுத் தருவதாகவும் தனக்குப் பின்னர் அவனே ‘கர்ணம்’ வேலையைப் பெறுவான்’ எனவும் கூறுகிறார். வேலைகள் தெரிந்து கொள்ள விரும்பிய சரவணமுத்து, சேஷய்யரின் வீட்டிலுள்ளோரிடம் நெருங்கிப் பழகுகிறான். சேஷய்யரின் இரண்டாவது மனைவியான ‘பாமா’ சரவணமுத்துவை விரும்புகிறாள். இருவரும் உள்ளத்தாலும் உடலாலும் கலக்கின்றனர்; ஊரார் இதனை அறிகின்றனர். இதனால் கலக்கமுற்ற சிதம்பரய்யர், ஆங்கில மருத்துவரான சேஷய்யரின் சகோதரரிடம் நடந்தவற்றை எடுத்துரைக்க, அவர் சரவணமுத்துவிற்கு ஒரு மருந்தினைக் கொடுக்கிறார். அதனால் அவன் மனநிலை பாதிப்படைகிறான். சரவணமுத்து நலம் பெறவேண்டிப் பாமா பிராத்தனை செய்கிறாள். அவள் செய்கின்ற பிரார்த்தனையின் வாயிலாகப் பார்ப்பனர்களின் இயல்புகளையும், இளம் விதவைப் பெண்களின் மனநிலையையும் கதையாசிரியர் வாசர்களுக்கு எடுத்துரைக்கிறார். இளம் வயதில் கணவனை இழந்த பாமாவின் நிலையை, “பாமா கட்டழகு வாய்ந்த மங்கை, கண்டோர் கருத்தைக் குலைக்கும் கரும்பெருங் கண்களைப் பெற்றவள், ஒல்லியான உடல், சிவந்தமேனி, சிங்காரமுகம், கொவ்வைச் செவ்வாய், முல்லைப்பற்கள், வீணைக்குரல், எடுப்பான இளமுலைகள், அழகுக்கு அழகுசெய்வதே போன்ற அருங்குணம், இருந்தென்ன பயன்? எல்லாம் வியர்த்தம். பாமா வியர்த்தம், பாமா

விதவையாய் விட்டாள்! அவள் வாழத் தகுதியற்றவளா?”[2] என்ற கேள்வியை வாசகர் முன்வைக்கிறார். பாரதிதாசனின் ‘கைம்மைப்பழி’ என்ற பாடலின் கருத்தையும் கதையின் இடையே எடுத்துரைத்துள்ளார் சிறுகதை ஆசிரியர்.

**“நாடப்படாதென்று சொல்லிவைத்தார்**
**நலஞ்செய் நறுங்கனியை – நாம்**
**தொடவும் தகாதென்று சொன்னார்**
**நறுந்தேன் துவைத்திடும்**
**பொற்குடத்தை” என்றார் மனம்புழுங்கி**
**அந்தப் புதுமைக்கவி சுப்புரத்தினம்” (பாரதிதாசன்)**

சரவணமுத்துவிற்காக மனம் இரங்கிப் பிரார்த்திக்கும் பாமாவின் செயலை, “தாயே! என் கணவரை நான் இழந்தது உண்மைதான் என்றாலும் எனது இன்ப துன்ப உணர்ச்சிகளை நான் இழந்துவிட்டேனா? இழக்காமலிருப்பது என் குற்றமாகுமா? முயன்றேன் முடியவில்லை. என் மனமாகிய வண்டு, தேனுள்ள இன்பமலரை நாடிச் சென்றது. சரவணமுத்து என்ற நற்குணமலரை நுகர்ந்தேன், இன்பம் பெற்றேன், ஏனோ ஊராருக்குப் பொறுக்கவில்லை! இந்தக் கிழவனுக்கென்ன வந்ததோ தெரியவில்லை. ஒரே கல்லில் இரண்டு குருவிகளை வீழ்த்திவிட்டானே பாவி! என் இன்பமும் போயிற்று, சரவணமுத்துவின் உத்தியோக ஆசையும் போயிற்றே! அவன் எவ்வளவு நல்லவன். ஐயோ! அவனுக்குப் பைத்தியம் வரும்படி மனதார மருந்து கொடுத்தானே, அந்தக் கோயம்புத்தூரான், அவன் வாழ்வானா? செய்தி வெளியானால் அவன் நிலைமை என்னவாகும்? உத்தியோகம், பதவி, பட்டம், பெருமைகளெல்லாம் இந்தச்சாதிக்குத்தான் இருக்கவேண்டுமா? மற்றவர்கள் வாழக்கூடாதா? பெருமை பெறக்கூடாதா? என்ன அநியாயம்! தாயே! உனக்குக் கண்ணில்லையா? கருணையில்லையா? என் சரவணமுத்துவின் பைத்தியத்தைத் தெளிவிக்கமாட்டாயா? அநியாயக்காரர்களை அழிக்கமாட்டாயா?”[3] எனக் கதையில் விவரிக்கிறார் கதையாசிரியர்.

இச்சிறுகதையில் பட்டம் பதவி, பெருமை ஆகியவற்றை அடைவதற்குப் சூழ்ச்சிகள் செய்வதில் பார்ப்பனர்கள் வல்லவர்கள் என்பதைக் கதைப் பாத்திரங்கள் விளக்குகின்றன. மேலும், இளம் வயதில் கணவனை இழந்த பெண்கள் அடைந்த

அவலங்களைப் பாமா எனும் பாத்திரத்தின் வாயிலாக அறியமுடிகிறது. கைம்பெண்கள் மறுவாழ்வு பெற வேண்டும் என்ற கதையாசிரியரின் நோக்கத்தை இச்சிறுகதை வெளிப்படுத்துகிறது.

### 3.2.2. இளைஞன் கனவு அல்லது பாக்கிஸ்தான் பிரேமை

கோவை எம்.ஏ. ரஹ்மான் எழுதிய 'இளைஞன் கனவு அல்லது பாக்கிஸ்தான் பிரேமை' என்ற சிறுகதை, பாக்கிஸ்தான் பிரிவினையை விரும்புகின்ற இளைஞன் ஒருவனின் கனவினை விளக்கும் வகையில் அமைந்துள்ளது. இச்சிறுகதை 12.4.1942 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது. இந்திய விடுதலைக்கு முன்னர் வெளிவந்த இச்சிறுகதை இசுலாமிய இளைஞர்கள் தம் உள்ளத்தில் கொண்டிருந்த பாகிஸ்தான் பிரிவினைக் கனவை எடுத்துரைக்கிறது. இன அடிப்படையில் திராவிடநாட்டுப் பிரிவினையை விரும்பிய திராவிட இயக்கத் தலைவர்கள், மத அடிப்படையில் பாக்கிஸ்தான் பிரிவினையை விரும்பிய இசுலாமியர்களின் எண்ணவோட்டங்களைத் தம் எழுத்திலும் பேச்சிலும் எடுத்துரைத்தனர். அந்தவகையில்,

இசுலாமிய இளைஞன் ஒருவன் மரத்தடியில் உறங்கிக்கொண்டிருக்கிறான். உறக்கத்தில் அவன் "ஹிந்துஸ்தான் ஹமாரா" எனக் கூறுகிறான். இத்தொடர் இசுலாமியக் கவிஞர் சர்.இக்பால் பாடலடிகளில் இடம்பெற்றதாகும். இளைஞன் உறக்கத்தில் உளறுவதை அருகிலிருந்து கவனித்த ஒருவர், அவன் அவ்வாறு கூறியமைக்கான காரணத்தை ஆய்வதாகக் கதை நகர்கிறது. இசுலாமிய மன்னர் பலரின் வரலாற்று நிகழ்வுகள் கதையில் விளக்கப்படுகின்றன. உறங்கிக் கொண்டிருந்த இளைஞனின் சட்டைப் பையிலிருந்து ஒரு துண்டுக் கடுதாசி கீழே விழுகிறது. இதனை மரத்தின் பின்புறத்திலிருந்து கவனித்துக் கொண்டிருந்த கதைசொல்லி எடுத்துப்பார்க்கிறார். "இளைஞன் ஏன் "ஹிந்துஸ்தான் ஹமாரா" என்று கனவில் கூறினான்? என்ற ஆராய்ச்சியில் தலைமறைவாக மரத்தின் பின்புறம் நின்றுகொண்டிருந்த யான் சீக்கிரம் சென்று அக்கடுதாசித்துண்டை எடுத்தேன்!

படித்துப்பார்த்தபிறகு அது லாகூரில் அண்மையில் நடைபெற்ற பஞ்சாப் மாகாண மாணவர் பாக்கிஸ்தான் மநாட்டு முதல் வகுப்பு டிக்கட் என்பது தெரியவந்தது! உடனே உறங்கிக் கொண்டிருந்த இளைஞன் கனவு பாக்கிஸ்தான் பிரேமை! என்பதை உணர்ந்து மட்டற்ற மகிழ்ச்சியடைந்தேன்”[4] இவ்வாறு சிறுகதை நிறைவடைகிறது. இஸ்லாம் சமயம் சார்ந்த இளைஞர்களின் மனவோட்டத்தை எடுத்தியம்பும் இச்சிறுகதை, பாக்கிஸ்தான் பிரிவினையைத் திராவிட இயக்கத் தலைவர்கள் ஆதரித்தமையை விளக்கி நிற்கிறது. சமகால அரசியல் நிகழ்வுகளைச் சிறுகதையாகப் படைத்துக் கருத்து வெளிப்பாடு செய்யும் உத்தியை இச்சிறுகதை வாயிலாக அறியமுடிகிறது. அரசியல் நிகழ்வுகளை மாணவச் சமூகம் அறிந்து கொள்ள வேண்டும் என்ற சிந்தனையையும் இச்சிறுகதை வெளிப்படுத்துகிறது.

### 3.2.3.கண்ணம்மா

சமூகவாழ்வில் சாதியப் பிளவுகளும், தீண்டாமைக் கொடுமைகளும் அகல வேண்டுமாயின் கலப்புத் திருமணங்கள் அதிகரிக்க வேண்டும் என்பது திராவிட இயக்கக் கொள்கைகளுள் முதன்மையானதாகும். “சாதியை ஒழிக்க விரும்புவோர் மேடைப் பிரசங்கம் மட்டும் செய்தால் போதாது! கலப்பு மணத்தைத் தவிர-வேறு சுயசாதி மணம் செய்யவே சுடாது.”[5] என்பது பெரியார் ஈ.வெ.இராமசாமியின் கலப்புத் திருமணம் குறித்த கருத்தாகும். “கலப்பு மணம் உலகம் முழுவதும் நடைபெறுதல் வேண்டும். அதற்கென்று ஆங்காங்குள்ள தலைவர்கள் பலதிற இயக்கங்களை நிறுத்திக் கலப்பு மணத்தில் கருத்திருத்தல் அறம். தலைவர்கள் குறிக்கோளெல்லாம் கலப்பு மண முயற்சியாதல் சிறப்பு. கலப்புமண இயக்கத்துக்கென்று பல ஆண்டு ஒதுக்குவதும் தவறாகாது. பள்ளிகளும், அரங்கங்களும், மகாநாடுகளும், நகரசபைகளும், சட்டசபைகளும், அரசுகளும் கலப்பு மண முயற்சிக்கு ஆக்கந்தேடும் காலமே நல்லகாலம். போதனைகளும், ஆடல்களும், பாடல்களும், தீர்மானங்களும், சட்டங்களும் பிறவும் கலப்பு மணத்தை உளங்கொள்வனவாதல் வேண்டும்”[6] எனத்

திரு.வி.கலியாணசுந்தரனார் கலப்புத் திருமணம் குறித்துக் குறிப்பிட்டுள்ள கருத்தும் இவ்விடத்தில் ஒப்பு நோக்கத்தக்கது.

இந்துசமயத்தார் தமக்குள் ˙சாதிப் பிரிவுகளைக் கொண்டிருக்கும் வரையில் சமூக வாழ்வில் உயர்வு, தாழ்வு அகலாதென்பதை உணர்ந்த திராவிட இயக்கத் தலைவர்கள் சமூக வாழ்வில் கலப்புத் திருமணத்திற்கு ஊக்கமளித்தனர். அவ்வாறு பலரும் திருமணம் செய்து கொண்டனர். கலப்புத் திருமணத்திற்கு ஊக்கமளிக்கும் வகையில் பல்வேறு புனைகதைகள் திராவிடநாடு இதழில் வெளிவந்தன. அவற்றுள் 'கண்ணம்மா' என்ற சிறுகதையும் ஒன்றாகும். இச்சிறுகதை 19.4.1942 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. சுயமரியாதை இயக்கத்தில் பற்றுக்கொண்ட பெண்ணொருத்தியைச் சிறுகதையில் பாத்திரமாக்கித் தம் கருத்தினை ஆசிரியர் விளக்குகிறார்.

நாயுடு குலத்தைச் சேர்ந்த இளைஞனான 'நகமன்னன்' என்பவன் குளத்தில் தவறிவிழுந்த கண்ணம்மாவைக் காப்பாற்றி இல்லம் சேர்க்கிறான். கண்ணம்மா கவுண்டர் இனத்தைச் சேர்ந்தவள். தன்னைக் காப்பாற்றிய நகமன்னனைக் கண்ணம்மா விரும்புகிறாள். இருவரும் ஒருவருக்கொருவர் மிகுந்த அன்புகொண்டவராகின்றனர். கண்ணமாளின் குணவியல்புகளை, "அத்தமிழணங்கு அன்பு, அழகு, அமைப்பு, ஆதரவு ஆகிய சிறந்த குணங்கள் யாவும் குறைவறப் பெற்றிருந்தாள். பத்தாண்டுகள் நிரம்பப்பெற்ற பொழுதிருந்தே செந்தமிழ் நாட்டுத் தண்டமிழ்ப் பெரியார் கண்ட தன்னுணர்வியக்கமதில் தீராப்பற்றுக் கொண்டிருந்தாள். பிறவிமொழித் தமிழை அவள் நேசித்த விதம் புட்சிக்கவிதைக் கவி பாரதிதாசனாலும் கூறவியலாது! படித்துப் பெரியதோர் பட்டம் பெற்றிருந்தும் தன்தந்தை இன்னமும் மதச்சின்னமாகிய அழுக்குப்படிந்த நாமம் போட்டுக் கொள்வது, கண்ணம்மாவிற்கு வெறுப்பூட்டும் மூடக் கொள்கையாகவே தோன்றிற்று. ஆரியம் அழிக்கப்பட்டபோது, கலப்பு மணம் காதல் மணம் நடைபெறும்போது, திராவிடம் விடுதலை பெற்றுச் செழிப்புமிக்குடையதாகும் என்பதே அவள் கண்ட முடிபு"[7] பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தில்

பற்றுள்ளவளாகப் பாத்திரத்தைப் படைத்துள்ளார் ஆசிரியர். கலப்பு மணத்தை ஏற்பவளாகவும், திராவிடநாட்டுப் பிரிவினையை விரும்புபவளாகவும், தமிழ்ப்பற்று மிக்கவளாகவும் இச்சிறுகதையில் கண்ணம்மா சித்திரிக்கப்பட்டுள்ளாள். மத அடையாளங்களை முகத்தில் இட்டுக்கொள்வதை விட்டொழிக்க வேண்டும் என்ற கருத்தையும் இச்சிறுகதை வெளிப்படுத்துகிறது.

கண்ணம்மா – நகமன்னனின் காதலை அறிந்த கண்ணம்மாவின் தந்தை அழகப்பக்கவுண்டர், கண்ணம்மாவை இற்செறிக்கிறார். நகமன்னன், சென்னை சென்று பத்திரிகை ஒன்றில் ஆசிரியராகப் பணியேற்கிறான். இந்நிலையில் இந்தி எதிர்ப்புப் போராட்ட நிகழ்வுகளைக் கதையில் இணைக்கிறார் சிறுகதையாசிரியர். "தமிழர் உணர்ச்சியற்றுப் போக அக்கிரகார மந்திரி சபையார் இந்திப்பாடையைக் கட்டாய பாடமாகப் பள்ளிகளில் நுழைத்தனர். வேற்றுமொழி வேண்டவே வேண்டாம், இனிய தமிழ் வாழ்க! எமக்குத் தமிழே வேண்டும். இந்தி ஒழிக!' என்று தமிழர் திரண்டெழுப்பிய சங்கநாதத்தில் தன்னுணர்வு இளைஞன் இருபத்து மூன்று அகவையே நிரம்பப்பெற்ற ஆண்டகை நகமன்னன் இரண்டறக் கலந்தான்."[8] எனக் கதையை நிறைவு செய்கிறார். மொழிக்காகக் காதலை விடுத்த பாத்திரமாக நகமன்னன் படைக்கப்பட்டுள்ளான்.

1938 ஆம் ஆண்டு தமிழகத்தில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்ட நிகழ்வுகளைக் கதையில் பின்னித் தமிழுணர்ச்சியை வாசகர்களுக்குச் சிறுகதையாசிரியர் ஏற்படுத்துகிறார். நகமன்னன் இந்திப் எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டமையைப் பத்திரிகை வாயிலாக அறிந்த கண்ணம்மா, சென்னை சென்று நகமன்னனுடன் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பங்குபெற்றுச் சிறை செல்கிறாள். விடுதலை அடைந்த இருவரும், "கன்னித் தமிழ்மணங்கமழ, ஆண்மைத் தமிழும் அழகுத் தமிழும் ஒன்றியனபோல் தன்னுணர்வு இயக்கத் தந்தையார் தோழர், ஈ.வெ.ரா.முன்னிலையில் நகமன்னனும் கண்ணம்மாவும் மண ஒப்பந்தம் செய்து கொண்டனர். ஈராண்டுகளுக்கு முன்னர், பங்குனித்திருநாளில் ஓர்நாள்! "வாழிய

செந்தமிழ். ‘திராவிடநாடு திராவிடர்க்கே’ என்பதுடன் கதை நிறைவடைகிறது. சாதிமறுப்புத் திருமணம், புரோகிதர் அற்ற திருமணம், சுயமரியாதைத் திருமணம், இந்திஎதிர்ப்பு, தமிழர் உணர்வு ஆகியனவற்றை முதன்மையாக வைத்து இச்சிறுகதை புனையப்பட்டுள்ளது.

### 3.2.4. இளைமைப் பலி

திராவிட நாடு இதழில் கலைஞர் மு.கருணாநிதி எழுதிய முதல் சிறுகதை ‘இளமைப் பலி’ ஆகும். கட்டுரை வடிவில் அமைந்த இச்சிறுகதை 26.04.1942 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. இச்சிறுகதையை அவர் தமது பதினெட்டாவது வயதில் எழுதியுள்ளார். சீர்திருத்த எண்ணம் கொண்ட இளம் படைப்பாளர்களைத் திராவிடநாடு இதழ் ஊக்குவித்ததை இதன்வழி அறியமுடிகிறது. இச்சிறுகதை வாயிலாக அண்ணாவிற்கும் கலைஞர் மு.கருணாநிதிக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. தம் படைப்பு திராவிடநாடு இதழில் வெளிவந்தமையால் தனக்கு இளவயதில் ஏற்பட்ட மகிழ்ச்சி குறித்து, “பள்ளி மாணவன் நான். நானே எழுதி நானே படித்து மகிழும் நிலை மாறிப் பத்து, நூறு பேர் படித்துப் பாராட்டும் நிலைக்கு வளர்ந்தேன். ஏதோ ஒரு ஆசையில் ஒரு கட்டுரை எழுதி ‘திராவிடநாடு, காஞ்சிபுரம்’ என்று அனுப்பி வைத்தேன். அடுத்த வாரமே கட்டுரை திராவிட நாட்டில் வந்துவிட்டது. நாடெங்கும் என் கட்டுரையைப் படித்து மகிழ்வார்கள் என்று எனக்குள் நானே புகழ்ந்து கொண்டேன்.”[9] என மு.கருணாநதி குறிப்பிடுவதிலிருந்து இளம் படைப்பாளர்களின் முற்போக்குச் சிந்தனைகளுக்கு அறிஞர் அண்ணா அளித்த ஊக்கம் குறித்து அறியமுடிகிறது.

இளம்பெண்களை முதிய ஆடவர்க்கு மணம் முடித்துக் கொடுத்தமையால் விளைந்த சமூகக் கொடுமைகளை அடிப்படையாக வைத்து இச்சிறுகதை படைக்கப்பட்டுள்ளது. “அன்று ஊர்மக்களே வாட்டமுற்றிருந்தனர். கண்ணீர்நல்கா நயனங்களில்லை. வாட்டமுறாத அகங்களில்லை. அவள் சிறுமி. பதினாறு வயது நிரம்பிய பைந்தொடி, எழில் ஒழுகும் பூங்கொடி. அழகான உருவம். அன்பான நோக்கு.

அன்னத்தை ஒத்த நடை. மின்னல் குலத்தில் விளைந்ததோ? வான் வில்லின் குலத்தில் பிறந்ததோ? கவிஞரின் கற்பனையே உருவம் பெற்றதோ? பொன்னின் உருக்கிப் பொலிந்ததோ? மலர்க்கூட்டமோ? என்றையுறும் வண்ணம் அமைந்த உருவம். எழிற்கருங்கண்கள்"[10] எனச் சிறுகதை தொடங்குகிறது. அவ்விளம்பெண்ணின் அழகுத்தோற்றத்தையும் அவளை மணந்து இறந்த கிழட்டு ஆடவனின் முதுமைத் தோற்றத்தையும் கதையாசிரியர் ஒப்பிட்டுக் காட்டும் பாங்கு கற்போர் நெஞ்சில் அவலச்சுவையை ஏற்படுத்துகிறது.

"எழிற்கருங்கண்மலர். அதற்கெதிரான குழிந்த கண்கள். தாமரை வதனம்! ஐயோ! அதனழகைக் கெடுக்கவந்த அனுமந்த முகம். ஒருசிறு மணியிடை. அந்தோ! அதைப்பழிக்கப் பருத்த தொந்தி. சுவைதருங்கனிவாய். மூடவைதீகமே! அதற்கெதிரான எச்சில் வழியக் குறட்டைவிடும் வாய். ததும்பிய இளமை, ஏ! தமிழுலகே தங்கியமுதுமை. எழுச்சியுற்ற காதல் ஏ! தமிழா! வழிந்தோடிய காமம். இவைகளே அம்மடந்தைக்கும் அவளின் மணவாளக் கிழவனுக்கும் உள்ள பொருத்தங்கள்"[11] என இருவரின் உடற்பொருத்தங்களை அழகுற எடுத்துக்காட்டும் கதையாசிரியர், முதுவயதுக் கணவனை இழந்த அப்பெண்ணின் நிலையை, "கடவுளின் பேரால் மனிதரை ஏமாற்றி வாழுங் கூட்டத்தினரின் வைதீக போதனையால் அவள் நல்லுடையணியா வண்ணம் தடுத்தது. திலகமிடா வண்ணம் கெடுத்தது. விதவை என்ற பட்டம் விரும்பிக் கொடுத்தது. துயரக்கணையைத் தொடுத்தது. என்னென்றியம்புவது பெற்றோரின் மடமையை? யாதென்றுரைப்பது கைம்மைக்கொடுமையை? மறுமணந்தான் உண்டா மங்கை நல்லாள் இன்பமுற? சீ என்றிகழப்பட்டாளே அச்சீரிள மங்கை? அந்தோ நாட்டினரே! இன்னுமா உறங்குகின்றீர்? பெண்களின் ஓலத்தைக் கேட்டிலீரோ? கைம்மைக் கொடுமையைக் கண்டு கலங்கீரோ? விதவைப்பட்டத்தை விரும்பி அளிக்கின்றீரோ! மனைவியிறந்தால் மறுதாரம் மணம் புரியும் நீங்கள் மங்கையரின் மறுமணத்தை வெறுப்பது நன்றா?"[12] என வினவி, "ஏ வீரப்புதல்வா! தலைநிமிர்ந்துபார் மேனாடுகளை. அங்கு தழைத்தோங்கி நிற்கின்றது பெண்களுரிமை! அதனால் அவை

அடைகின்றன மேன்மை. ஆகவே செந்தமிழ்ச்செல்வா! மங்கையர்தான் நம்நாட்டின் பொக்கிஷம் என்பதை மறவாதே, அவர்கள் வாழ்வைக் கெடுக்காதே! மறுமணத்தை மறுத்து அவர்கள் இளமையைப் பலியிடாதே"[13] எனக் கதையின் இறுதிப்பகுதி சமூகத்தினருக்கு உணர்த்தும் அறிவுரையாக நிறைவடைகிறது.

வயது முதிர்ந்த ஆடவரை மணந்த இளம்பெண்களின் வாழ்வியல் அவலங்களை இச்சிறுகதை விளக்கி நிற்கிறது. வைதீக சமயம் பெண்களுக்கு விதித்துள்ள கட்டுப்பாடுகளை உடைத்தெறிய வேண்டும், கைம்பெண்களுக்கு மறுவாழ்வு அளிப்பதற்குத் தமிழக இளைஞர்கள் முன்வருதல் வேண்டும் என்ற முற்போக்குச் சிந்தனைகளை இச்சிறுகதை வாயிலாக மு.கருணாநிதி விளக்குகிறார்.

**"மாண்டவன் மாண்ட பின்னர் - அவனின்**

**மனைவியின் உளத்தை**

**ஆண்டையர் காண் பதில்லை – ஐயகோ**

**அடிமைப் பெண் கதியே"[14]**

எனப் பாரதிதாசன் கைம்பெண்களின் வாழ்வியல் அவலங்களைத் தம் பாடல்களில் எடுத்துரைத்துள்ளார். அவரது பாடற் கருத்துகளை வெளிப்படுத்தும் வகையில் இச்சிறுகதை அமைந்துள்ளது. மேலும், கணவனை இழந்த பெண்களுக்கு மறுமணம் செய்து வைத்து, அவர்கள் வாழ்வில் ஒளியேற்ற வேண்டும் என்ற கருத்தை இச்சிறுகதை வலியுறுத்துகிறது.

### 3.2.5.அவள் முடிவு

கணவனை இழந்த 'அமிர்தம்' என்ற கைம்பெண்ணின் வாழ்வியலை 'அவள் முடிவு' எனும் சிறுகதை சித்திரித்துக் காட்டுகிறது. இச்சிறுகதை, 'பேகன்' என்ற புனைபெயரில் 4.11.1945 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. கணவனை இழந்த அமிர்தம், வைதீக சமயத்தின் கொடிய கட்டுப்பாடுகள் காரணமாக கைம்மை நோன்பு கொண்டு வாழ்நாளைக் கழிக்கிறாள். மனைவியை இழந்த அமிர்தத்தின் அண்ணன் மாதவன், சில நாள்களுக்குள் மறுமணம் செய்து கொள்கிறான். இந்துமதம்

பெண்களுக்கு இழைத்து வைத்திருக்கும் கொடுமைகளை ஆசிரியர் கதையில் எடுத்துக்கூறுகிறார். "மேனாட்லே, காலையில் மணவிலக்கு, மாலையில் மறுமணம் என அவள் படித்திருக்கிறாளே. ஆனால் இங்கோ? கணவன் இறந்தாலும் காரிகைக்கு உரிமை கிடையாது. மறுமணம் செய்து கொள்ள! அதற்குப் பதிலாகக் கட்டுப்பாடு, கைம்மையை மேற்கொள்ள. அவள் அண்ணனுக்கு மணம் நடந்ததல்லவா? அந்தக் கலியாணக் கூட்டத்திலே அவளைப் போல சில அபசகுணங்களைத் தவிர மற்றோர் தங்கள் கணவன்மாருடன் கொஞ்சிக் குலவுவதைப் பார்த்தாள். அவள் மிகவும் மனம் நொந்து கொண்டாள், இந்தச் சனியன் பிடித்த இந்துமதத்திலே பிறந்ததற்கு. சோகக் கடலில் மூழ்கினாள்"[15] என அமிர்தத்தின் நிலையைக் கதையாசிரியர் விவரிக்கிறார்.

சமூகத்தின் கட்டுப்பாடுகளைத் திருட்டுத்தனமாக உடைக்க முயன்ற அமிர்தம், எதிர்வீட்டில் புதிதாகக் குடியேறிய வாலிபன் ஒருவனுடன் பழகுகிறாள். தன்னை அவனிடம் இழந்த அமிர்தம், தன்னை மணம் செய்து கொள்ள வேண்டுகிறாள். ஆனால் அவனோ ஊரைவிட்டுச் சென்றுவிடுகிறான். "சமூகக்கட்டுப்பாட்டைத் திருட்டுத்தனமாக முறித்தெரிய முயன்ற அவளை அழித்துச் சமூகத்தின் அமைப்பு வெற்றி கொண்டது. அதோ அத்தி மரத்தடியிலே அவளின் உடல் காற்றிலே ஊசலாடிக் கொண்டிருக்கிறது! நம் சமூகம் சீர்படுமா"[16] எனச் சிறுகதை நிறைவுறுகிறது. கணவனை இழந்த இளம் மகளிரின் வாழ்க்கைப் போராட்டங்களை இச்சிறுகதை விளக்குகிறது. இந்து மதம் கணவனை இழந்த பெண்களுக்கு ஏற்படுத்தி வைத்துள்ள சமூகக் கட்டுப்பாடுகள் இச்சிறுகதையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. சமூகக் கட்டுப்பாடுகளை வெளிப்படையாக உடைத்தழிப்பதற்குப் பெண்கள் முன்வர வேண்டும். மறைவொழுக்கத்தின் வாயிலாக இன்பங் காணமுயல்வது துன்பத்தையே விளைவிக்கும் என்ற வாழ்வியல் சிந்தனையை இச்சிறுகதை விளக்கி நிற்கிறது.

### 3.2.6. சூதாடி

'சூதாடி' என்ற சிறுகதை 12.1.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. சமூக வாழ்க்கையில் உயர்ந்த இடத்தில் உள்ளோரின் சூதாடுகின்ற

களமாகப் பங்குச்சந்தை இருக்கிறது என்ற கருத்தையும், பங்குச் சந்தையில் முதலீடு செய்கின்ற பெருமூலதனக்காரர்கள், மற்றவர்களை ஏமாற்றி இலாபம் ஈட்டுகின்றனர். அவர்கள் பங்குச் சந்தைச் சூதாடிகள். ஆனால் சமூகத்தின் அடித்தளத்தில் உள்ள மக்கள் தமக்குள் பொழுது போக்கிற்காக ஆடும் 'சீட்டாட்டம்', முதலாளி வர்க்கத்தினரால் சூதாட்டமாகப் பார்க்கப்படுகிறது என்ற கருத்தையும் இச்சிறுகதை விளக்கியுள்ளது. பெரு முதலாளியான முத்துசாமி ஐயரிடம் ஓட்டுநராகப் பணிபுரியும் 'மோசஸ்' தன் போன்ற சக ஓட்டுநர்களுடன் சீட்டாட்டம் ஆடுகிறான். இதனைக் கண்ட முத்துச்சாமி ஐயர், மோசஸைக் கண்டிக்கிறார். "இந்தச்சூதாடும் பழக்கம் உனக்கிருக்கும்வரை நீ ஏதுடா உருப்படுவது? எப்பப்பார்த்தாலும், இந்தச் சூதாட்டம் தானே உனக்கு. நீ எப்படி யோக்யமாக, நாணயமாக இருக்க முடியும்? சூதாட்டக்காரப் பயலிடம் எப்படிடா நாணயம் இருக்கும்?:"[17] என்று புத்தி கூறுகிறார். ஆனால் முத்துச்சாமி ஐயரும், அவர் நன்பர் சீனுவும் ஷேர் மார்க்கெட்டில் பிறரை ஏமாற்றிப் பங்குகளை விற்றுப் பணம் ஈட்டுகின்றனர். இவ்விருவரின் ஏமாற்று வேலைக்கு முதலியார் ஒருவர் பலியாகிறார். பங்குச் சந்தை முதலீட்டை மிகப்பெரிய சூதாட்டம் எனக் குறிப்பிடும் முதலியார், தான் வாங்கிய 'லட்சுமிராஜ் சிங்' நிறுவனத்தின் பங்குகளை முத்துச்சாமி ஐயரிடம் குறைந்த விலைக்கு விற்கிறார். முத்துச்சாமி, சீனு ஆகியோரின் வஞ்சகச் செயலை அறிகிறான் ஓட்டுநர் மோசஸ். ஆனால் முத்துசாமி ஐயர் மோசஸிடம், "மோசஸ்! ஒரு விஷயம் கேள். சூதாடி என்னடா சம்பாதிக்க முடியும். இல்லை பணமே அதிலே கிடைக்கிறதுன்னே வைச்சிக்கோ, சூதாடிப்பிழைக்கிறது ஒரு பிழைப்பாகுமா?"[18] என அறிவுரை கூறுகிறார். பொழுது போக்கிற்காகவும், மனதிலே சிறு கிளர்ச்சிக்காகவும் சீட்டு ஆடுவதைச் சூதாட்டம் என்று சொல்வதை ஏற்காத மோசஸ், "முதலாளி முதல்தரமான சூதாட்டக்காரர், இஸ்பேட் - கிளாவர் - போன்ற சீட்டுகளில் அல்ல, லட்சுமிராஸ் - காமதேனு – காந்தா முதலிய ஷேர்களைச் சீட்டுகளாகக் கொண்ட சூதாட்டக்காரர் என்ற உண்மையை எப்படிப் பேசமுடியும்"[19] எனத் தன் மனதிற்குள் எண்ணுகிறான்.

சமூக வாழ்வின் ஏற்றத் தாழ்வுகள் மனிதரிடையே வாழ்வியல் நீதிகளை மாற்றியமைக்கின்றன எனும் கருத்து இச்சிறுகதையில் வெளிப்படுகிறது. பொருளாதார ஏற்றத்தாழ்வுகளுக்கு ஏற்ப தனி மனித ஒழுக்கங்களும் சமூகநீதிகளும் மாறுபடுகின்றன எனும் கருத்தை இச்சிறுகதை விளக்கி நிற்கிறது.

### 3.2.7. தீட்டுத்துணி

'கொழு' எனும் புனைபெயரில் 'தீட்டுத்துணி' என்ற சிறுகதை 12.1.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த ஆரோக்கியசாமியின் துன்ப வாழ்வியலைச் இச்சிறுகதை விவரிக்கிறது.

"பள்ளன், பறையன், தோட்டி, தொம்பன் உட்கார்ந்து கொண்டே எவ்வளவு நாள் சாப்பிடமுடியும்? ஏய்த்துப் பிழைக்கும் தொழில் ஆதிதிராவிட வர்க்கத்திற்கே விதிவிலக்கு. பிறர் இரத்தத்தை உறிஞ்சி உய்யும் கொடிய வேலை வேண்டவே வேண்டாம். பின்? அன்று சதிகாரரால் விதிக்கப்பட்ட தொழில்களில் ஒன்றாகிய— அதுதான், உடலை சன்னஞ் சன்னமாய் சீவி, இன்முகத்துடன் தத்தம் செய்யும் - காவல் வேலைக்கு ஓர் அந்தணனிடம் அமர்ந்தான் அடிமையானான்"[20] தந்தை ஆரோக்கியசாமியின் மறைவிற்குப் பின்னர், சுப்பிரமணிய ஐயர் வீட்டில் வேலை செய்யும் அந்தோணிசாமியின் நிலையை இவ்வாறு விளக்குகிறார் கதையாசிரியர். ஆதி திராவிட மக்கள் பிறரை ஏய்த்துப் பிழைப்பதை அறியாதவர் என்ற கருத்தை இச்சிறுகதையில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

ஆரிய வர்க்கத்தின் குணவியல்புகள் கதையில் விளக்கப்பட்டுள்ளன. "அவன் அடிமை. ஐயர் அதிகாரம் பண்ணவும் அந்தோணிசாமி அடிபணியவும் தானே, பூமியில் பிறந்திருக்கின்றனர்!"[21] என ஆரிய-திராவிட இனப்போராட்டத்ததை எடுத்துக்காட்டி, "அந்தோணிசாமியின் முழுப்பெயரையும் ஐயர் கூப்பிடுவதில்லை. அவன் பெயரின் இறுதியில் 'சாமி' என்ற சொல் இருப்பதனால் அவனை 'அந்தினி' என்று அழைக்கிறார். "பார்ப்பனர், ஏன், பார்ப்பாரல்லா எந்த எஜமானருமே, அதுபோன்ற அல்லது வேறு அழகான பெயருள்ள எந்த ஆதிதிராவிடனையும் அப்பெயர் முற்றிலும் சொல்லி

அழைப்பதில்லை. காரணமா? அப்பெயரின் கடைசியில் இருப்பது "சாமி' என்ற சொல்பாருங்கள்."[22] எனப் பார்ப்பனர்கள் கொண்டுள்ள ஆதிக்க மனப்பாங்கினையும் எடுத்துரைக்கிறார். பார்ப்பனர் அல்லாத சாதி இந்துக்களின் உயர்வு மனப்பான்மையும் இச்சிறுகதையில் காட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

இறந்து போன ஐயரின் மனைவி சேலையை இடுகாட்டில் அந்தோணிசாமி திருடிவிட்டதாகக் கூறி அவனை ஐயர், மரத்தில் கட்டிவைக்கிறார். அவன் மனைவி மாரியம்மாள் அவ்விடம் வந்து கணவனின் நிலைக்கு வருந்துகிறாள். ஐயரின் அடியாள் ஒருவர் அந்தோணிசாமியை அடித்துத் துன்புறுத்திச் 'சேலை எங்கே?' என வினவுகிறார். மறுநாளைக்குள் சேலையைக் கொண்டுவந்து ஒப்படைக்கவும் கட்டளையிடுகிறார். ஆனால் முந்தியநாள் தீட்டுத்துணிகளைத் துவைத்து வெளுப்பதற்காக எடுத்துப்போன மாரிமுத்து கொண்டுவந்த துணி மூட்டையில் அந்தோணிசாமி திருடியதாகக் கூறப்பட்ட சேலை இருந்தது. "மாரிமுத்து தந்த துணிகளில் ஒன்று அவர் மனையாளின் பழம்புடவை. மற்றது அவள் ரவிக்கை. மூன்றாவது? அதுதான் அந்தோனி 'திருடிய' தீட்டுத்துணி! 'நீ எடுத்ததை என் கண்ணால் கண்டேனே' என்று ஐயர் கர்ஜனை புரிந்தாரல்லவா? மரத்தில் கட்டி வைத்து அடித்தார்களல்லவா, மார் உடையப் பாடுபடும் அந்தினியை! அந்த ஏழை எந்தப் பழம் புடவையைத் திருடிக்கொண்டான் என்று பழிசுமத்தி, தண்டித்தார்களோ, அதே புடவை மாரிமுத்து வெளுத்துவந்து தந்திருக்கிறான்!. நீதிதேவன் விழித்துக்கொள்ளவில்லை"[23] என அந்தோணிசாமியின் நிலையை விளக்கிக் கதையை முடிக்கிறார் ஆசிரியர். ஆரிய-திராவிட வர்க்கப் போராட்டத்தினை இச்சிறுகதை வாயிலாக அறியமுடிகிறது. பொருளாதார நிலையில் மேம்பட்டிருந்த பார்ப்பனர் சிலரின் இழிசெயல்களைக் கதையில் சித்திரித்துள்ளார் ஆசிரியர். அடித்தள மக்களின் துன்ப வாழ்வியலை எடுத்துக்காட்டும் வகையில் இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 3.2.8. பேய் ஓடிப்போச்சி

சமூக அவலங்களை எடுத்துக்காட்டும் அண்ணாவின் சிறுகதைகளுள் ‘பேய் ஓடிப்போச்சி’ என்ற சிறுகதையும் ஒன்றாகும். இச்சிறுகதை 31.8.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. மனப்போராட்டங்களின் விளைவாகத் தனிமனிதர்களுக்கு ஏற்படுகின்ற மனநோயின் உண்மைத் தன்மையினை அறியாமல், பேய்பிடித்ததாகக் கருதிப் பல்வேறு மந்திரச் சடங்குகளை மேற்கொள்ளும் கிராமமக்களின் அறியாமையை இச்சிறுகதையில் விளக்கிக் காட்டுகிறார் அண்ணா. ‘ஓரூர்’ என்ற சிற்றூரில் வசிக்கும் செல்லாயி, அதே ஊரில் வாழ்ந்துவரும் வேலனை விரும்புகிறாள். செல்லாயியின் தந்தை செங்கோடனும் அவள் அண்ணன் சுப்புவும் அவளது காதலுக்குத் தடையேதும் விதிக்கவில்லை. திரைப்பட இயக்குநர் ஒருவர் ஓரூருக்குத் தன் குழுவினருடன் வந்து படம் எடுக்கிறார். திரைப்படக் கலையின் நுட்பங்களை அறியாத செல்லாயியும், வேலனும் இயக்குநர் கூறியவாறு நடிக்கின்றனர். ‘டிரிக் ஷாட்’ மூலம் செல்லாயி மற்றொருவனுடன் காதல் கொள்வதைப் போன்று இயக்குநர் படம் பிடிக்கிறார். அவ்வாறே வேலனையும் மற்றொரு பெண்ணுடன் பழகுவதைப் போன்று படம் பிடிக்கிறார். ‘எடிட்டிங்’ செய்து படத்தினை இருவருக்கும் காட்டுகிறார். இதனை அறியாமல் ஒருவர் மற்றொருவர் மீது சந்தேகம் கொள்கின்றனர். இதன் விளைவாகப் மனநிலை பாதித்த செல்லாயி, தன்னையறியாமல் பல்வேறு செயல்களைச் செய்கிறாள். ஊரார் அவளுக்குப் பேய்பிடித்துவிட்டதாகக் கருதுகின்றனர். இந்நிலையில் பூசாரி ஒருவர் மந்திரம் போட்டுப் பேய் ஓட்டுகிறார். செல்லாயி பழைய நிலைக்குத் திரும்புகிறாள். மந்திரத்தால் செல்லாயி பழைய நிலைக்குத் திரும்பியதாக அனைவரும் நம்புகின்றனர். ஆனால் செல்லாயிக்கு ஏற்பட்ட மனநோய்க்கான உண்மைக் காரணத்தை அவள் அண்ணன் சுப்பு கண்டறிந்து, அறிவியல் முறையில் தீர்க்கிறான். திரைப்பட இயக்குநர் செய்த செயல்கள் அனைத்தையும் அறிந்த சுப்பு, அவரிடம் தன் தங்கையின் நிலையை எடுத்துக் கூறுகிறான். இயக்குநர் உள்ளிட்ட அனைவரும் கிராமத்திற்குச் செல்கின்றனர்.

இயக்குநர் வேலனிடம் உண்மையை உரைக்கிறார். அவ்வாறே செல்லாயியிடமும் நடந்தனவற்றை உணர்த்துகிறார். செல்லாயி மனத்தெளிவு பெறுகிறாள். “இருவருக்கும் இடையே ஒரு திரைப்பட இயக்குநர் மூட்டிவிட்ட சந்தேகம் நாளாவட்டத்தில் ‘பிசாசு’ ஆயிற்று என்பதை வேலனும் சுப்புவும் புரிந்து கொண்டனர். ஆனால் இவற்றை அறியாத செல்லாயியின் தந்தை செங்கோடன், பூசாரியின் செயலால் தன் மகளுக்குப் பேய் ஓடிப்போய்விட்டதாக நம்புகிறான். “அவன் பூசாரி பொன்னனை வேண்டிக் கொண்டான். அவன் வழக்கமான வேப்பிலை வீச்சை நடத்தினான். இதற்குள் உண்மை விளங்கி, சந்தேகம் நீங்கிவிட்டதால், செல்லாயிக்கு இருந்துவந்த சஞ்சலம், அதன் விளைவாக ஏற்பட்ட மனக் குழப்பம், மயக்கம், ஏக்கம், திகில் யாவும் மறைந்துவிட அவள் பழையபடி சிரிப்புக்காரியானாள்.”[24] இவ்வாறாகக் கதை நிறைவடைகிறது. பகுத்தறிவாளனாகிய சுப்பு, அறிவியல் முறையில் தன் தங்கைக்கு ஏற்பட்ட நோயைக் குணப்படுத்தியதை இச்சிறுகதை விளக்குகிறது.

சிற்றூர்களில் வாழ்கின்ற மக்களின் அறியாமையைக் கதையில் விவரிக்கும் அண்ணா, மூடநம்பிக்கையை அகற்றி மக்களிடம் அறிவியல் சிந்தனைகளை இச்சிறுகதை வாயிலாக ஏற்படுத்துகிறார். அறிவியலுக்கும் பகுத்தறிவிற்கும் புறம்பான அர்த்தமற்ற சடங்குகள் மக்களிடையே நிலைபெற்றிருப்பதை எடுத்துக்காட்டும் அவர், உளப்பிணிகளுக்கான உண்மைத் தன்மையைக் கண்டறிந்து உரியமுறையில் சிகிச்சை அளிக்கவேண்டும் என்ற கருத்தை இக்கதைவாயிலாக மக்களிடையே ஏற்படுத்த முயன்றுள்ளார்.

### 3.2.9. இராக்காயி

ருக்மணி இராசாராம் என்பவரால் எழுதப்பட்ட ‘இராக்காயி’ என்ற சிறுகதை 14.12.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. முற்போக்குக் கருத்துகளை மக்களிடையே பரப்பி, அவர்களைப் பகுத்தறிவாளர்களாக்க முயன்ற ஓர் இளைஞனுக்கு, ஆதிக்க உணர்வு கொண்ட பார்ப்பனர்கள் விளைவிக்கும் தீமைகள் இச்சிறுகதையில் விளக்கப்பட்டுள்ளன. இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நிலவிய

ஆண்டான் - அடிமை வாழ்க்கை நிலையை இச்சிறுகதை புலப்படுத்துகிறது. “அவள் இராக்காயி மட்டுமல்ல, அடிமை இராக்காயும் ஆவாள். அல்லும் பகலும் ஆண்டையின் வீட்டில் வேலை செய்யவும், ஆண்டையிடும் கட்டளைகளைச் செய்து முடிக்கவும், பரம்பரையாக வந்த அடிமைக் குடியில் பிறந்தவள் இராக்காயி. சிறுவயதிலிருந்தே ஆண்டையின் வீட்டு வேலைகளைச் செய்து வருகிறாள். அதற்குப் பதிலாக ஆண்டை (ஐயர்) கொடுப்பதெல்லம் முந்தியநாள் மீதப்பட்ட பழைய சோறும், குழம்பும்தான். இதைத்தவிர வருடத்திற்கு ஒருமுறை இரண்டு கெஜம் துணி கிடைக்கும். வேறு சம்பளம் ஒன்றும் கிடையாது. அவள்தான் ஐயருக்கு உழைக்கப் பிறந்த பாவி மகளாயிற்றே. இது மனுநீதியின் நியதிப்படி. அடிமைகளின் தர்மகர்த்தாவான ஆண்டை ஐயர்களின் நீதிப்படி செய்யும் அகம்பாவமான அக்ரமான, ஒழுக்கமற்ற செயல்களில் ஒன்றாகும்”[25] என இராக்காயியின் பாத்திரப்படைப்பை விளக்கி, மனுதர்மம் என்ற பெயரில் சமூகத்தில் நிலவிவரும் அநீதியான செயல்களையும் ருக்மணி இராசாராம் விவரிக்கிறார்.

இராக்காயியின் மாமன் மகனான ‘மூக்கன்’ அரசியல் நாட்டம் கொண்ட சமூகச் தீர்திருத்தவாதியாகக் கதையில் படைக்கப்பட்டுள்ளான். இராக்காயியும் மூக்கனும் தமக்குள் ஒத்த அன்புடையவர்களாகின்றனர். சேரி மக்கள் மூக்கனை மிகவும் மதித்துப் போற்றுகின்றனர். அவனது சீர்திருத்தக் கருத்துகளைப் போற்றுகின்றனர். ஊர் மிராசுதாரரான ஐயருக்கு மூக்கனின் செயல் முற்றிலும் கோபத்தை மூட்டுகிறது. மூக்கனின் செயலால் மக்கள் மனமாற்றம் அடைந்துவிடுவரோ என அஞ்சும் அவர், தன் பண்ணையாட்களை ஏவி இராக்காயியைக் கொலைசெய்துவிட்டு, அவளைப் பேய் அடித்துவிட்டதாக ஊராரை நம்ப வைக்கிறார். “மறுநாள் சேரிவாசிகள் இராக்காயியின் உயிரற்ற சடலத்தை ஆற்றங்கரை நாணல் புதரிலே கண்டனர். ஆலமரத்துப் பேய் அடித்து அங்கே கொண்டுவந்து போட்டுவிட்டதாகப் பேசிக் கொண்டனர். அதில் ஒரு கிழவர் ‘அப்பவே சொன்னேன். இளம் பெண்களை வெளியேற வேண்டாம்’, என்று கூறவாரம்பித்தார். பாவம் பேதைகள். இப்போது மூக்கன் மேடையேறிப்

பிரசங்கிப்பதில்லை. ஆற்றங்கரையோரத்திலே பைத்தியம் பிடித்தவன்போல நாணல் புதரைச் சுற்றிச் சுற்றி வருகிறான். பைத்தியம்தான் என்று சேரிவாசிகள் கூறுகின்றனர். அதோ! அங்கே பாருங்கள் சிறிது தூரத்தில். மிராசுதாரும் அடப் பைத்திய ஜனங்களே எனக் கூறி நகைக்கிறார். என்ன அகங்காரமான நகைப்பு"[26] எனக் கதை நிறைவடைகிறது. மக்களைத் தொடர்ந்து அறியாமை என்ற இருளில் வைத்துப் பிழைப்பு நடத்தும் ஆதிக்க உணர்வு கொண்ட பார்ப்பனர்களின் கொடுஞ்செயலை இச்சிறுகதை வெளிப்படுத்துகிறது. சமூகச் சீர்திருத்தங்களை ஏற்படுத்த முயலும் இளைஞர்கள் தனிப்பட்ட வாழ்க்கையில் அடைகின்ற அவலங்களையும் இச்சிறுகதை எடுத்துக்காட்டுகிறது.

### 3.2.10. கடவுள் தண்டிப்பார்

நாளிதழ்களில் இடம்பெற்றுள்ள செய்திகளை அடிப்படையாக வைத்துச் சிறுகதை புனைகின்ற வழக்கத்தை திராவிடநாடு இதழ்ச் சிறுகதையாசிரியர்கள் கொண்டிருந்தனர். இதற்கு அண்ணாவே எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார். 'கடவுள் தண்டிப்பார்' என்ற சிறுகதை 26.12.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. சமகால அரசியல் நிகழ்வுகள் இச்சிறுகதைக்கான கதைக்கருவாக இடம்பெற்றுள்ளது.

"இன்று தேசமுள்ள நிலைமையில் உணவுப் பொருள்களைப் பதுக்கி வைப்பது அல்லது அது பொது ஜனங்களுக்குக் கிடைக்காமல் செய்வது, கொள்ளை லாபம் அடிப்பது போன்ற காரியங்களானவை மகா பாபமான காரியங்கள். இதற்குக் கடவுள் கட்டாயம் தண்டனை கொடுப்பார்."[27] எனச் சர்தார் வல்லபாய் பட்டேல் கூறிய கருத்து 20.12.1948 தினமணி நாளிதளில் வெளிவந்தது. இச்செய்தியின் அடிப்படையில் இக்கதை படைக்கப்பட்டுள்ளது. சமூகத்தில் நிலவும் கொடுமைகள் ஒழிக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு வாழ்பவர்கள் தங்களுக்கு நீதி வழங்க, தமக்கேற்பட்ட கொடுமைகளையும் குறைகளையும் களைவதற்குத் தங்கள் சக்திக்கு மீறிய, அக்கிரமக்காரர்களின் சக்தியைக் கருவறுக்கும் ஆற்றல் உள்ள சக்தி ஒன்றைத்

தேடுகிறார்கள்' என்பது இச்சிறுகதையின் கதைக்கருவாகும். வலியோரின் தீய செயல்களைப் பொறாத எளியோர், 'கடவுள் தண்டிப்பார்' என்று தமக்குள் கூறிக்கொண்டு அமைதிகாப்பதைக் கதையில் எடுத்துக்கூறி, சட்டம் இத்தகைய கொடியவர்களைத் தண்டிக்க வேண்டும் என்கிறார் அண்ணா. காத்தான், காமுகன், வள்ளல், கள்ளன் என்னும் நான்கு கதைப்பாத்திரங்களைப் இச்சிறுகதையில் படைத்து, அப்பாத்திரங்கள் நிகழ்த்திய கொடுமைகளைக் கதையில் விவரிக்கிறார். அவர்களால் இழி நிலைக்குத் தள்ளப்பட்டவர்கள் 'கடவுள் தண்டிப்பார்' எனக்கூறி அமைதி அடைகின்றனர். இச்சிறுகதையின் நிகழ்வுகளோடு நாட்டின் நிலைமையைப் பின்னுகிறார் அண்ணா. 'காத்தான்' எனும் சமூகவிரோதியின் தீய செயல்களால் மனம் நொந்த ஊர்மக்கள், அவனது தீய செயல்களைத் தடுக்கவியலாமல், 'அவனைக் கடவுள் தண்டிப்பார்' என மனதிற்குள் கூறிக்கொள்கின்றனர். இதனைப் படேலின் கூற்றோடு பொருத்திக்காட்டும் அண்ணா, "கல்முள் நிறைந்த பாதையை – கடவுள் தண்டிப்பார்! என்னும் சொல்லின் துணைகொண்டு மக்களின் கண்களுக்குப்படாமல் மறைத்து வைக்க முடியாது. மக்கள் சக்திக்கு 'கடவுள் தண்டிப்பார' எனும் வார்த்தை இனியும் கேடயமாக இருக்காது"[28] எனக் கதையை முடிக்கிறார்.

சுகவாழ்வு, சுதந்திரம், உரிமை ஆகியன தனிமனிதனுக்கு வேண்டிய பண்புகளாகும். இவற்றை ஒவ்வொரு குடிமகனுக்கும் கொடுத்து மக்களாட்சி முறையின் மாண்பினைக் காத்திட வேண்டும். கொடுஞ்செயல்கள் புரிந்து சமூக வாழ்க்கைக்குக் குந்தகம் விளைவிப்போர் சட்டத்தின் முன்நிறுத்தப்பட்டு அவர்களுக்கு உரிய தண்டனைகளைப் பெற்றுத்தரல் வேண்டும். கடவுள் தண்டிப்பார் எனக் கூறித் தம் பொறுப்பிலிருந்து விலகிவிடக் கூடாது. ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் இதனை உணர்ந்து செயல்படவேண்டும். என்ற கருத்தை இச்சிறு கதையில் அண்ணா எடுத்துரைத்துள்ளார்.

### 3.2.11. மரத்துண்டு

வாழ்வியல் சிந்தனைகளை எடுத்தியம்பும் வகையில் ‘மரத்துண்டு’ என்ற சிறுகதை அமைந்துள்ளது. கதையாசிரியர் பெயரின்றி இச்சிறுகதை, 13.06.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்துள்ளது. ‘தருமலிங்கம்’ எனும் பெருந்தனக்காரர், தன் பழைய வீட்டை நீண்டகாலம் முயன்று, செலவிட்டுப் புதுப்பிக்கிறார். ஊரார் அதனை வீண் வேலை என்றுரைக்கின்றனர். தன் முயற்சியில் தளராத தருமலிங்கம் விட்டை அழகுறப் புதுப்பித்துவிடுகிறார். வீட்டின் புறக்கடைக்குப் போகும் வழியில் ஒரு மரத்துண்டு இருப்பதை வீட்டிற்கு வருவோர் கண்டு அம்மரம் குறித்து வினவுகின்றனர். ஆனால் தருமலிங்கம் ஏதோ ஒரு செயலுக்காகத் தான் அதனை வைத்திருப்பதாகக் கூறுகிறார். மழை அதிகமாகப் பெய்த போது வீட்டின் சுவரை அம்மரத்துண்டை வைத்து முட்டுக் கொடுக்கிறார். பலர் விரும்பிக் கேட்டும் அந்த மரத்துண்டை ஒருவருக்கும் அளிக்காமல் வீட்டில் கிடத்துகிறார். இறுதியில் மரத்துண்டு செல்லரித்துப் பயனற்றதாகிறது.

“நான் திடமாக இருந்தேன் - பயன்பட்டிருப்பேன் - பலர் எதிர்பார்த்தனர் - எடுத்துரைத்தனர் - பயன்படுத்தவில்லை - மூலையில் கிடந்தேன் - இப்போது கரையான் தின்றுகொண்டிருக்கிறது – அதற்கு நான் என்ன செய்ய என்று கேட்க, வாய் ஏது மரத்துண்டுக்கு!”[29] எனக் கதை நிறைவடைகிறது.

சமூக முன்னேற்றத்தை விரும்பி உழைக்க முன்வரும் இளைஞர்களை உரிய காலங்களில் பயன்படுத்தாத மக்களின் செயல் இச்சிறுகதையில் உருவகமாக்கப்பட்டுள்ளது. மரத்துண்டு ஒன்றைப் பேச வைத்து வாழ்வியலின் எதார்த்தங்களைக் கதையில் ஆசிரியர் விளக்கியுள்ளார்.

### 3.2.12. செவ்வாழை

1949 ஆம் ஆண்டு மே முதல் நாள், தொழிலாளர் தினத்தன்று திராவிடநாடு இதழில் வெளிவந்த ‘செவ்வாழை’ என்ற சிறுகதை வெளிவந்தது. உழைப்பாளிகளின் அவல நிலையையும் முதலாளித்துவத்தின் கொடிய பண்புகளையும் இச்சிறுகதை

சித்திரித்துக்காட்டுகிறது. ‘செங்கோடன்’ என்ற ஏழைக் குடியானவனின் குடும்ப வாழ்க்கையை அடிப்படையாக வைத்துக் கதைப்பின்னலை அறிஞர் அண்ணா அமைத்துள்ளார். பொருளாதார நிலையில் பின்தங்கியுள்ள குடும்பத்தினரின் உழைப்பு, குடும்பத்தினரின் ஆசை, மேட்டுக்குடியினரின் வஞ்சகச் செயல், உழைப்பாளர்களின் ஏக்கம் ஆகியவற்றை இச்சிறுகதை வெளிப்படுத்துகிறது. செல்வக்குடிகளின் சீரிய நிலையும், ஏழைக் குடும்பத்தினரின் அவல நிலையையும் அண்ணா கதையில் ஒப்பிட்டுக்காட்டியுள்ளார். “பண்ணை வீட்டுப் பிள்ளைகள் ஆப்பிள், திராட்சை தின்ன முடிகிறது –கரியனும் முத்துவும் எப்படி விலை உயர்ந்த அந்தப் பழங்களைப் பெறமுடியும்? செவ்வாழையைத் தந்து தன் குழந்தைகளைக் குதூகலிக்கச் செய்ய வேண்டும்”[30] எனச் செங்கோடன் எண்ணவோட்டத்தைக் கதையில் காட்டி, “செவ்வாழை குழை தள்ளிற்று – செங்கோடனின் நடையிலேயே ஒரு புதுமுறுக்கு ஏற்பட்டுவிட்டது. நிமிர்ந்து பார்ப்பான் பெருமையுடன். பண்ணை பரந்தாம முதலியார் தமது மருமகப்பெண் முத்துவிஜயாவின் பொன்னிற மேனியை அழகுபடுத்திய வைரமாலையைக் கூட அவ்வளவு பெருமையுடன் பார்த்திருக்க மாட்டார்”[31] என்பதாகக் கதைப் போக்குச் செல்கிறது.

மருமகள் முத்து விஜயாவின் பிறந்தநாளைச் சிறப்பாகக் கொண்டாட எண்ணிய பண்ணையார், செங்கோடனின் செவ்வாழையைக் கொண்டுவரப் பணிக்கிறார். செங்கோடனும் தன் பிள்ளைகளை ஏங்கவைத்துச் செவ்வாழைத்தாரைப் பண்ணையாரின் இல்லத்தில் சேர்க்கிறான். அதிலிருந்து பெற்ற சில செவ்வாழைப் பழங்களைக் கணக்கப்பிள்ளை சுந்தரம் கடையில் விற்கிறான். குழந்தைகளின் ஆற்றாமையைக் கண்டு வருந்திய செங்கோடனின் மனைவி குப்பி, தன் மகன் கரியனிடம் காலணா கொடுத்துக் கடையில் பழம் வாங்கி உண்ணச் சொல்கிறாள். கடைக்குச் சென்ற கரியனிடம் கடைக்காரன் செவ்வாழைப்பழம் ‘ஒரு அணா’ என்று கூறி விரட்டுகிறான். மனத்துன்பத்துடன் வீட்டிற்கு வந்த கரியன், கொல்லைப் புறத்திலிருந்து தன் தந்தை செவ்வாழைக் கன்றையும் வெட்டிவருவதைக் காண்கிறான்.

அச்செவ்வாழைக்கன்று இறந்துபோன பார்வதிப்பாட்டியின் பாடையை அலங்கரிக்கச் செல்வதை அறிந்து அங்குச் செல்கிறான். “எங்க கொல்லையிலே இருந்த செவ்வாழை. குலையைப் பண்ணை வீட்டுக்குக் கொடுத்துவிட்டோம் - மரத்தை வெட்டி ‘பாடை’யிலே கட்டி விட்டோம்’ என்றான் கரியன். பாபம். சிறுவன் தானே! அவன் என்ன கண்டான், செங்கோடனின் செவ்வாழை, தொழிலாளர் உலகிலே சர்வசாதாரணச் சம்பவம் என்பதை.”[32] எனக் கதை முடிகிறது. முதலாளித்துவத்தின் சுரண்டல் தன்மையினையும் ஆதிக்க உணர்வையும் எடுத்துக்காட்டும் வகையில் இச்சிறுகதை அமைந்துள்ளது.

அறிஞர் அண்ணாவின் சிறுகதைகளின் சிறப்பியல்புகளை “இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம் தனிச்சிறப்பும்-மறுமலர்ச்சிப் போக்கும் உடையதாகும்: அது புரட்சியில் கிளைத்துப் புதுமை பூத்துப் பொலிகின்றது. இவ்வளர்ச்சியில் அறிஞர் சி.என்.அண்ணாதுரை அவர்கள் தலையாய இடம் பெறுகிறார்கள். இவருடைய சிறுகதைகள் புதுப்போக்கு உடையன. ஏழ்மையின் சார்பாக வாதிடும் நோக்கமும், செல்வச் செருக்கைக் கிள்ளியெறியும் கருத்துக் கூர்மையும் மிக்கன! ”[33] எனத் தமிழண்ணல் சிறப்பித்துப் போற்றுகிறார்.

### 3.1.13. வேதனைபுரிப் பயணம்

அன்றைய சென்னை மாகாண அரசியல் நிகழ்வுகளை அடிப்படையாக வைத்து ‘வேதனைபுரிப் பயணம்’ என்ற சிறுகதை புனையப்பட்டுள்ளது. அறிஞர் அண்ணாவைப் பின்பற்றி அரசியல் நிகழ்வுகளை அடியொற்றிச் சிறுகதை படைத்துள்ளார் இராம.அரங்கண்ணல். இக்கதை 4.12.1949 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. மாகாணத்தில் உள்ள குடியான மக்களிடம் ஓராண்டு நிலவரியை முன்னதாகவே வசூல் செய்யத் திட்டமிட்ட சென்னை மாகாண அரசாங்கத்தினரின் நிலையை இவ் உருவகக் கதை அங்கதச் சுவையுடன் விளக்கியுள்ளது. சிங்கம்பட்டி மிராசுதாரர் ஜெகவீரர், தன்னிடம் வேலை செய்யும் கந்தப்பன், பலமுறை வேண்டிக் கேட்டும் அவன் குடும்பத்தினரின் அன்றாட உணவிற்கு வேண்டிய நெல்லினைத் தர

மறுக்கிறார். மாறாகத் தன் குடிமக்களிடமிருந்து முன்கூட்டியே வருவாயாக அரிசியும் நெல்லும் தனக்குக் கிடைக்குமா? எனக் கணக்கப்பிள்ளை காத்தப்பனிடம் கேட்கிறார். கணக்கப்பிள்ளை மக்களின் நிலையை எடுத்துக்கூறி மறுத்துக்கூற, மிராசுதாரர் தலையாரியை வரவழைத்து, “ஒவ்வொரு குத்தகைக்காரனையும் பார்! ஐயா சொன்னாருன்னு சொல்லு! ஒவ்வொருத்தரும் வருடா வருடம் எவ்வளவு நெல் தந்து வருகிறாங்க என்று கணக்கப்பிள்ளையை வைத்துக் கொண்டு தெரிந்து கொள். அதன்படி, எல்லோரும் இப்பவே ‘அட்வான்சாக’ நெல் அளக்கணும்னு சொல்லு, கேட்டுப்பார் எப்படியும் வசூலித்துவிடு”[34] என்ற மிரசுதாரரின் கூற்றுடன் கதையை நிறைவு செய்து, “இந்த மிட்டாதரர் நிலையையும் கதையையும் காணும் தோழர்களுக்கு ஈதென்ன காட்டுராஜா தர்பாராகயிருக்கிறதே என்று கேட்கத் தோன்றும். விளைந்தபின் தரவேண்டிய குத்தகை நெல்லை. அட்வான்ஸ் கேட்கும் ஆளுமா இருக்கிறான், அவ்வளவு அட்டகாசமுமா நடைபெறுகிறது இந்தச் சுயராஜ்யத்தில்? என்று எண்ணலாம். ஆமாம், அத்ததுணையும் உண்மை. ஆனால் மிட்டாதார் என்ற இடத்தில் கொஞ்சம் மாகாணசர்க்கார் என்று வைத்துப் பாருங்கள் கதை புரியும். விஷயம் விளங்கும்”[35] என நாட்டின் நிலையைச் சிறுகதைப் பாத்திரத்துடன் உருவகப்படுத்திக் கருத்துவிளக்கம் செய்துள்ளார் இராம.அரங்கண்ணல். நாட்டு நிகழ்வுகளைச் சிறுகதை வாயிலாக மக்களுக்கு உணர்த்தும் உத்தியைத் திராவிட இயக்கத் தலைவர்கள் கையாண்டமையை இக்கதை விளக்கி நிற்கிறது.

### 3.2.14. சபலம்

அவசரத்தில் தவறாக முடிவெடுத்துத் தன் வாழ்க்கையை இழந்த ஆடவன் ஒருவன் செயலினை ‘சபலம்’ என்ற சிறுகதையில் கலைஞர் மு.கருணாநிதி விளக்கியுள்ளார். 14.01.1950 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு பொங்கல் மலரில் இச்சிறுகதை இடம்பெற்றுள்ளது. ஓடும் ரயில் வண்டியில் இச்சிறுகதையின் நிகழ்வுகள் அமைகின்றன. குமரேசன், தன் மனைவி சந்திராவுடன் திருச்சி நோக்கிச் சென்று கொண்டிருந்த புகைவண்டியில் பயணிக்கிறான். இரயில் பெட்டியில் எதிரே இருந்த ஒரு

வாலிபன் சந்திராவை திருட்டுத்தனமாக உற்றுநோக்குகிறான். முதலில் அவனைக் கண்ட சந்திரா பின்னர்த் தன் குழந்தையுடன் படுத்து உறங்கிவிடுகிறாள். குமரேசன் தன் மனைவி மீது தவறான எண்ணம் கொள்கிறான். அவளும் அவ்வாலிபனைப் பார்ப்பதாகச் சந்தேகம் கொள்கிறான். இரவில் சந்திராவை அறியாமல் அவள் கன்னத்தை வாலிபன் தடவுகிறான். இதனை அறிந்த குமரேசன் தன் மனைவியை ஒரு விபச்சாரியின் நிலையில் வைத்து எண்ணுகிறான். உறங்கிக் கொண்டிருந்த தன் குழந்தையை எடுத்துச்சென்று வெளியே வீசுகிறான். "ஒரு விபசாரியின் தொடர்பு இன்றோடு ஒழிந்தது. தன் பெயரைச் சொல்லி வருங்காலத்தை வீணாக்கமலிருக்க, குழந்தையும் ஒழிந்தது. இனிமேல் தான் தனி ஆள். இந்தத் தாசி அவனோடு போகட்டும்"[36] என மனதிற்குள் எண்ணுகிறான். மீண்டும் சந்திராவை அவ்வாலிபன் தீண்ட முற்பட, சந்திரா அவன் கன்னத்தில் மாறி, மாறி அறைகிறாள். வண்டியில் அனைவரும் விழித்துக் கொள்கின்றனர். 'சிறுவயதில் இறந்துபோன அண்ணன் மாதிரி இருந்தது' அதனால் தான் அவனை உற்றுப் பார்த்தேன் எனக்கூறிச் சந்திரா விம்மி அழுகிறாள். குழந்தையை அநியாயமாகக் கொன்ற குமரேசன் அவசரத்தில் தான் செய்த செயலை எண்ணி வருந்துகிறான்.

"ஏ அவசரக்கார குமரேசா! சபலக்கார முட்டாளே! என்ற ஒலி நாலாபுறமிருந்தும் அவன் காதில் சாட்டை ஒலியாய் ஒலித்தது"[37] எனக் கதையை நிறைவு செய்கிறார் மு.கருணாநிதி. ஆய்ந்தறியாமல் ஒருவர் மீது சந்தேகம் கொள்வது பெருந்துன்பத்தை விளைவிக்கும் என்ற வாழ்க்கைப்பாடத்தை இச்சிறுகதை உணர்த்துகிறது.

### 3.2.14. ஒரு அணா

ஏழைத் தொழிலாளர்களின் துன்ப வாழ்வியலை 'ஒரு அணா' என்ற சிறுகதை சித்திரிக்கிறது. இராம. அரங்கண்ணலின் இச்சிறுகதை 29.01.1950 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. **'**தொழிலாளி' என்ற வாரப்பத்திரிகையில் எழுத்துக்கோர்ப்பவனாக வேலைசெய்யும் கந்தசாமி, வறுமையின் பிடியில் உழல்கிறான். மனைவி கருப்பாயி மற்றும் இரு குழந்தைகளுடன் வாழ்ந்துவரும் அவன், வீட்டில்

உணவு இல்லாமையால், தன் சக பணியாளன் சாரங்கத்திடம் ஓரணா வாங்கிக் கொண்டு ‘சாந்தி கபே’ என்ற உணவகத்திற்குச் செல்கிறான். ஓரணாவிற்குத் தேநீர் அருந்துகிறான். பசியாற்றாத அவன், ஓரணா பில்லைப் பெற்றுக்கொண்டு, உணவகத்தின் மற்றோர் இடத்திற்குச் சென்றமர்ந்து பன்னிரண்டணாவிற்குப் பிரியாணி வாங்கி உண்கிறான். ஓரணா பில்லைக் காட்டி வெளிவரும் சமயத்தில் உணவகத் தொழிலாளர்களிடம் கந்தசாமி பிடிபடுகிறான். அச்சூழலில் அவன் நிலையை,

“கந்தசாமி திகைத்தான் தேம்பினான், செய்வது குற்றம் என்பதையுணர்ந்தான், எனினும் பசி அவனுடைய சபல நினைவைத் தட்டிவிட்டது. உண்மையைச் சொன்னான். விட்டுவிடுங்கள். நிச்சயம் நாளைக்குக் கொண்டுவந்து தந்து விடுகிறேன் என்ற கதறினான்! கந்தசாமியின் கதறல் கல்லுச்சாமியிடம் அர்ச்சனை செய்வது போல ஆயிற்றே ஒழிய எந்தப் பயனையும் தரவில்லை.”[38] எனக் கதையில் அரங்கண்ணல் விவரிக்கிறார். இறுதியில் கந்தசாமி காவலரிடம் ஒப்படைக்கப்படுகிறான். காவலர் அவனை அழைத்துச் செல்கின்றனர். வழியில் சுவரில் ஒட்டப்பட்டிருந்த தன் பத்திரிகை ‘வால் போஸ்டரைக் காண்கிறான்.

“தொழிலாளி - குடியரசு ஆரம்பம் - நேரு கர்ஜனை”[39]

என்ற வால் போஸ்டர் செய்தி அவன் கண்ணில் படுகிறது. “அன்று காலை, அவன் “கம்போஸ்” செய்திருந்த எழுத்துக்கள் அவனைக் கண்டு சிரிப்பது போலிந்தன”[40] என்பதாகக் கதை நிறைவடைகிறது. ஏழைகளின் அவலக் குரல்களைக் கடவுளர்களின் கல்படிமங்கள் கேட்பதில்லை. நாட்டு மக்களின் உண்மை நிலைமைகளை ஆட்சியாளர்கள் உணர்ந்து செயல்படுவதில்லை என்னும் கருத்துக்களை விளக்கும் வகையில் இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 3.2.15. கருப்பண்ணசாமி யோசிக்கிறார்

கருப்பண்ணசாமிக் கடவுளும் அவன் தேவியும் கோவில் ஒன்றில் தமக்குள் உரையாடுவதை அடிப்படையாக வைத்துக் ‘கருப்பண்ணசாமி யோசிக்கிறார்’ என்ற சிறுகதை அண்ணாவால் படைக்கப்பட்டுள்ளது. 4.2.1951 ஆம் நாள் திராவிடநாடு

இதழில் வெளிவந்த இச்சிறுகதை அன்றைய சமூக, அரசியல் நிலையை விளக்கும் வகையில் அமைந்துள்ளது. கோயில் நிர்வாகம் சம்பந்தமாக பக்தர்களின் இருபிரிவுகளுக்குள் தகராறு ஏற்பட, கருப்பண்ணசாமியை ஒரு மண்டபத்தில் வைத்துப் பூட்டுவிடுகின்றனர். இந்நிகழ்வினைக் கருப்பண்ணசாமி வேதனையுடன் தன் தேவிக்கு எடுத்துரைப்பதாகக் கதைப்பின்னல் அமைந்துள்ளது. இடையிடையே சுயமரியாதை இயக்கத் தோழர்கள் செய்கின்ற பிரச்சாரங்களையும் கருப்பண்ணசாமி தன் தேவியிடம் எடுத்துரைக்கிறார். பக்தர்கள் பல்வேறு வேண்டுதல்களோடு கோவிலுக்கு வருவதைக் கருப்பண்ணசாமி தன் தேவியிடம், "தேவி! பக்தர்களால் எனக்கு ஏற்பட்ட ஆபத்தும் சங்கடமும் உனக்கு என்ன தெரியும்! வரவர இந்த வேலையிலேயே எனக்கு வெறுப்பு வளர்ந்துகொண்டு வருகிறது. தான் செய்த மோசத்தை அரைபலம் கற்பூரப் புகையிலே மறைத்துவிடலாம் என்று எண்ணுகிறான். அதற்கு நான் உடந்தையாக இருக்கவேண்டும் என்று எதிர்பார்க்கிறான். இவனுடைய பேராசைக்கு நான் துணைசெய்ய வேண்டும என்று எண்ணுகிறான். காரணம் கேட்டால் பெரிய படையலிட்டிருக்கிறேன் என்று கூறுகிறான்."[41] எனப் போலிப்பக்தர்களின் பக்திநிலை குறித்துக் குறிப்பிடும் கருப்ண்ணசாமி, பக்தர்கள் தன்னைப் போலீசின் பாதுகாப்பிலே வாழவேண்டிய நிலைமைக்குக் கொண்டுவந்து விட்டதையும் அவர்களுடைய பேராசைக்குத் தான் துணைபோவதையும் தன் தேவிக்கு விவரிக்கிறார். 'பக்தி' எனும் பெயரால் சமயவாதிகள் செய்யும் இழி செயல்களையும் கதையில் காட்டுகிறார் அண்ணா.

"பக்தனுங்கன்னு பேர் வைத்துக் கொண்டு, என் எதிரே கன்னம் கன்னம்னு போட்டுக்கொண்டு, கற்பூரம்கொளுத்திக் காட்டிக்கிட்டு, இருக்கிறவங்க, நீதி, நியாயத்தைக் கவனிக்காமல், ஈவு இரக்கம் காட்டாமல் பழி, பாவத்துக்கு அஞ்சாமல் சாமியை இந்த அலங்கோலப்படுத்தலாமான்னு யோசிக்காமே, நெஞ்சழுத்தத்தோடு, என்னைப் பூட்டிப் போட்டுவிட்டாங்க — கேவலப்படுத்திவிட்டாங்க. நான் என்ன செய்ய முடிந்தது? எந்தப் புண்யவான் வந்து வெளியே விடுவாரோ? எத்தனை காலம் இங்கே அடைபட்டுக் கிடக்க வேணுமோ-எவனவன் கேலி செய்கிறானோ-ன்னு எண்ணி எண்ணி

ஏக்கப்பட்டுக் கொண்டிருந்தேன்."[42] எனத் தன்னிலையைக் கருப்பண்ணசாமி விவரிக்கிறார். இனிப் பகத்தர்களை நம்பிப் பிரயோஜனமில்லை, இனி அவர்கள் தயவு தனக்குத் தேவையில்லை எனத் தன் தேவியிடம் கூறுவதோடு கதை முடிகிறது. கருப்பண்ணசாமியைப் பேச வைத்து நாட்டு நடப்புகளையும், பக்தர்களின் நிலையினையும் இச்சிறுகதையில் அண்ணா விளக்கியுள்ளார். இக்கதை நாளிதழ்ச் செய்தி ஒன்றின் அடிப்படையில் படைக்கப்பட்டதென்பதை, "இவ்வாண்டு ஆகஸ்ட் மாதத்தில் லால்குடிக்குச் சமீபத்தில் உள்ள 'புஞ்சை சாங்குடி' என்ற கிராமத்தில், இருகட்சிகள் ஏற்பட்டு, கருப்பண்ணசாமியை மண்டபத்தில் போட்டு பூட்டிவிட, போலீஸ் உதவியுடன் பூட்டு உடைக்கப்பட்டு, சாமி கோயிலில் கொண்டு போய்ச் சேர்க்கப்பட்டார் என்ற செய்தி இந்தியன் எக்ஸ்பிரஸ் இதழில், ஆகஸ்ட் 22ல் வெளிவந்தது. அந்த உண்மைச் சம்பவத்தைப் பின்னணியாகக் கொண்டு தீட்டப்பட்டது இந்தக் கற்பனை."[43] எனக் கதையின் இறுதியில் பின்னுரையாகக் குறிப்பிட்டுள்ளார் அறிஞர் அண்ணா.

தமக்கு நேர்ந்த அவலங்களைத் தடுக்க இயலாத நிலையில் கடவுளர்கள் இருப்பதையும் கடவுளுக்கே காவல்துறையின் பாதுகாப்பு அளிக்க வேண்டியுள்ளதென்வதையும் கதையின் வாயிலாக அண்ணா எடுத்துக்காட்டியுள்ளார்.

### 3.2.16. கணக்குத் தீர்ந்தது

'கணக்குத் தீர்ந்தது' என்ற சிறுகதை, 6.5.1951 ஆம் நாள் திராவிடநாடு இதழில் 'அண்ணல்' என்ற பெயரில் வெளிவந்தது. பண்ணைத் தொழிலாளர்களின் வாழ்வியலை இச்சிறுகதை எடுத்துக்காட்டுகிறது. 'பரமன்' என்ற ஏழைக் குடியானவன், பரமசிவ முதலியார் பண்ணையில் தலைமுறை தலைமுறையாக உழைத்துவந்தான். தன் மகன் பொன்னனுக்கு முதலியாரிடம் கடன்பெற்றுத் திருமணம் செய்கிறான் பரமன். பரமனுக்கு மருமகளாக வரவுள்ள பெண், பண்ணைக்கு ஏற்றவாறு உழைக்கும் உடல்வாகு கொண்ட பெண்ணாக இருக்க வேண்டும் என்று பண்ணையார் விரும்புகிறார். ஆனால் பரமனின் மருமகளான 'பூமாலை' மெலிந்த தேகம்

உடையவளாகக் காணப்படுகிறாள். இதனால் மறுநாள் விருந்திற்கு வேண்டிய நெல்லைப் பண்ணையார் தர மறுக்கிறார். இந்நிலையில் நிகழும் பரமனின் உளப்போராட்டம் அக்கால நிலவுடைமைச் சமூகத்தின் ஆதிக்கப் போக்கினை எடுத்துக்காட்டுகிறது. "ஐயா! இதை, நினைச்சுப் பாருங்க. பூமாலை ஏழைதான். என்னைப் போல, இன்னொரு பண்ணையிலே வேலை பார்க்கிறவன் மகதான். அவள் ஒல்லியயாயிருப்பது அவ தப்புங்களா? மாநிறமாக இருப்பது பெத்தவங்க தவறுங்களா? அழகாத்தான் இருக்கா. அதுக்கு நான், என்னாங்க செய்வேன். அழகு- ஒரு குற்றங்களா? அவ, அழகு, நாளைக்கு வேலை செய்யாமலா, அவளைத் தடுத்துவிடப்போகுது?"[44] எனப் புலம்பும் பரமனுக்கு முதலியார் இரக்கம் காட்ட மறுக்கிறார். சேரிக்குத் திரும்பிய பரமன், அங்கு அனைவரும் மனமகிழ்வுடன் இருப்பதைக் காண்கிறான். மறுநாள் விருந்திற்கு என்ன செய்வது? எனப் புலம்பிய அவன், "கணக்குத் தீர்ந்தது" எனத் தன்மனதிற்குள் எண்ணிக் கொண்டு மாட்டுக்கொட்டகையில் தூக்கிட்டுத் தன் உயிரைப் போக்கிக் கொள்கிறான். நிலவுடைமைச் சமூகத்தினர் அடித்தள மக்களுக்கு ஏற்படுத்துகின்ற இன்னல்களை இக்கதை விளக்கியுள்ளது. தன்மானத்தை இழக்க விரும்பாமல் வாழ்க்கையை முடித்துக்கொள்கின்ற பரமனை,

**இளிவரின் வாழாத மான முடையார்**

**ஒளிதொழு தேத்தும் உலகு"[45]**

என்ற குறள் கருத்திற்கு ஏற்ற பாத்திரமாக அண்ணல் படைத்துள்ளார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

### 3.2.17. திருமலை கண்ட திவ்ய ஜோதி

மதுரையை ஆட்சி செய்த திருமலை நாயக்க மன்னரின் வாழ்க்கையை அடிப்படையாக வைத்துத் 'திருமலை கண்ட திவ்ய ஜோதி' என்ற சிறுகதையை அறிஞர் அண்ணா படைத்துள்ளார். 13.01.1952 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு பொங்கல் மலரில் இச்சிறுகதை இடம்பெற்றுள்ளது. "மதுரை மன்னன் திருமலையின்

மாய மரணம் பற்றிய குறிப்புகளைக் கொண்டு சித்திரிக்கப்படும் ஓவியம் இது, இட்டுக்கட்டியதோ என்று ஐயப்படுவோருக்கு, எம்.ஸ்.சுப்பிரமணிய ஐயர் தீட்டிய கன்னியர் வீரம் என்ற சிறு நூலில் பட்டர் புதல்வி எனும் சிறுகதையைப் பார்க்கும்படி கேட்டுக் கொள்கிறோம்"[46] என்ற முன்னுரையுடன் கதையைத் தொடங்குகிறார் அண்ணா. மதுரை மீனாட்சியம்மன் கோயில் பிரதம பட்டாச்சாரியாரான சந்திரசேகர பட்டரின் மகள் சுந்தரவல்லி மீது தீராக் காதல் கொள்கிறார் திருமலை நாயக்கர். சுந்தரவல்லி மன்னரின் போக்கினை உணர்கிறாள். "மன்னருக்கு மாதர்களிடம் மையல் அதிகம் என்று அப்பாவும் மற்றவர்களும் பேசிக்கொண்டது எனக்குத் தெரியும். முன்னூறு அழகிகள் இருக்கிறார்கள் அந்தப்புரத்தில் என்று சொன்னார்கள். நானோ பருவ மங்கை! அவரோ, அடிக்கடி நான் தனியாக இருக்கும் போது வருகிறார்."[47] என மன்னரின் போக்கு கதையில் விவரிக்கப்படுகிறது. மன்னரின் காமப்பசிக்கு ஆளான சுந்தரவல்லி, கருவுறுகிறாள். உண்மையைத் தந்தையிடம் கூறுகிறாள். அதிர்ச்சியடைந்த பட்டர், "சிவ, சிவ! என்ன பாபம் - என்ன கர்மம் இது! திருமலையா இத்தீய செயலைச் செய்தான். அழியாத அபகீர்த்தியை உண்டாக்கி விட்டான். என் குலக் கொழுந்தைக் கெடுத்தானா. மகளைக் கெடுத்தானா? பாபாவி – அடே பாதகா! வஞ்சகா! என் குடும்பத்தைக் கெடுத்தாயே- மகளே! பேதைப் பெண்ணே! எப்படியடி இடம் கொடுத்தாய்? உன் கையிலே ஒரு கத்தி கிடைக்க வில்லையா? அவனைக் கொல்ல உன்னால் முடியாவிட்டாலும் நீ செத்திருக்கலாமே"[48] என வெகுண்டு கூறுகிறார். இத்தகைய இழிநிலைக்குப் பின்னர் இவ்வுலகில் உயிர்வாழத் தகுதியற்றவள் என்பதை உணர்ந்த சுந்தரவல்லி, நஞ்சுண்டு தன் உயிரை மாய்த்துக் கொள்கிறாள். மன்னனைப் பழிவாங்க எண்ணிய பட்டர், லிங்கண்ணாவை அதற்கு மறைமுகமாகப் பயன்படுத்துகிறார். மன்னனை நேரிடையாக எதிர்த்து ஒழிக்க முடியாது என்பதை உணர்ந்து, 'மாமரத்தின் பின்னிருந்துதான் இந்த வாலியைக் கொன்றாக வேண்டும்' எனவும் தன் மனதிற்குள் எண்ணி, "மன்னன் நாஸ்திகனாகி வருகிறான். தேவியை மறந்துவிட்டான். புராதண மார்க்கத்தைப் பழிக்கிறான். மோசமாகிவிடடது,

மன்னன் போக்கு, இந்தக் கிருஸ்தவப் பாதிரிகளுக்கு இப்படியா இடம் தருவது! மதுரை கொந்தளிக்கிறது, மன்னன் ஏதும் நேரிடாது இருக்கிறான் மமதையுடன். என்னிடம் துளியாவது மதிப்பு இருக்கிறதா! என்ன செய்துவிடமுடியும் என்ற தைரியம்"[49] என அனைவரிடமும் மன்னர் குறித்துத் தூற்றுகிறார் சுந்தரேசபட்டர். லிங்கண்ணாவுடன் இணைந்து மன்னனை வஞ்சகமாகத் தேவி சன்னதியில் உள்ள இரகசிய சுரங்கத்திற்கு அழைத்துச் சென்று, சமாதியாக்கி விடுகிறார். "மதத்தைக் காப்பாற்ற, மன்னனானாலும் அருமை மைந்தனானாலும், தாய் தகப்பனானாலும், யாராக இருந்தாலும், கொல்வது புண்ணிய காரியம் என்றேன்"[50] என்ற கூற்று, பட்டரின் பழிவாங்கும் உணர்ச்சியை எடுத்துக்காட்டுகிறது. "மன்னன், கண்மூடி கரம் கூப்பி, மனனம் செய்தவண்ணம் இருக்கும்போது, பட்டாசாரியாரின் கண்களைப் பறித்துவிடும்படியான ஓர் ஜோதி தோன்றிற்றாம். அம்பாளிடமிருந்து. முகத்திலிருந்தா, காலிலிருந்தா என்று மட்டும் கண்டுபிடிக்க முடியவில்லையாம். ஜோதி தோன்றியதும், 'பக்தா' என்று தேவியின் குரல் கேட்டதாம். 'வந்தேன்' என்றாராம் திருமலை. அவ்வளவுதான், மன்னன் ஜோதியில் கலந்துவிட்டாராம்"[51] என மதுரை மக்கள் தமக்குள் பேசிக்கொள்வதாகக் கதை நிறைவடைகிறது. திருமலை நாயக்கரின் மரணம் குறித்துப் பல்வேறு வாய்மொழிக்கதைகள் மக்களிடையே வழங்கிவருதை அ.கி.பரந்தாமனார், "பட்டர் வகையினர் கோயிலின் நில அறையில் புதையல் இருப்பதாக அழைத்துச் சென்று, வெளியே வராதவாறு பெருங்கல்லை முகப்பில் மூடிவிட்டுவந்து, 'மீனாட்சியம்மன் பொற்பாத கமலங்களில் திருமலை மன்னர் ஒன்றுபட்டுவிட்டார் எனக் கூறிவிட்டனர்" எனக் குறிப்பிடுகிறார். இருப்பினும் அவர் இவ்வாய்மொழிக் கதையை உண்மையெனக் கொள்ளவில்லை. இக்கதைக்கு உரிய சான்றாதாரங்கள் இல்லை என்பது அ.கி.பரந்தாமனார் கருத்தாகும். இருப்பினும் எம்.ஸ்.சுப்பிரமணிய ஐயர் கருத்திலிருந்து இச்சிறுகதைக்கான கருவை எடுத்துள்ள அறிஞர் அண்ணா, பார்ப்பனர்கள் சூழ்ச்சிகள் செய்து பிறரை அழிப்பதில் வல்லவர்கள் என்ற கருத்தை நுட்பமாக இக்கதையில் எடுத்துக்காட்டுகிறார்.

### 3.2.18. தேவதையின் துயரம்

13.7.1954 ஆம் நாள் தினமணி நாளிதழில் வெளியான இரண்டு செய்திகளின் அடிப்படையில் ‘தேவதையின் துயரம்’ என்ற சிறுகதை, ‘வீரன்’ என்ற பெயரில் 18.7.1954 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது.

‘பத்மநாபமங்கலம்’ என்ற ஊரைச் சேர்ந்த முண்டக்குடும்பனும் அவள் மனைவி பேச்சியம்மாளும் ‘பொட்டாலூரணி’ என்ற சிற்றூரிலுள்ள தம் உறவினரைப் பார்த்தவிட்டுத் திரும்பும் வழியில். திருடன் ஒருவன் முண்டக்குடும்பனைத் தாக்கிப் பணத்தைக் கொள்ளையடிக்க முயன்ற வேளையில், முண்டக்குடும்பனின் மனைவி பேச்சியம்மாள், தன் கையிலிருந்த அரிவாளால் திருடனைத் தாக்கி வீழ்த்தியதால் திருடன் மருத்துவமனையில் இருக்கும் செய்தியையும், ஆத்தூர் கன்னிகாபரமேஸ்வரி அம்மன கோயிலில் சில திருடர்கள் புகுந்து அம்மனின் கிரீடத்தைக் களவாடிச் சென்ற செய்தியையும் இச்சிறுகதை பின்னணியாகக் கொண்டுள்ளது. உண்மை தழுவிய கற்பனையில் பேச்சியம்மாளையும், கன்னிகாபரமேஸ்வரி தெய்வத்தையும் உரையாட வைத்துக் கதையைப் பின்னியுள்ளார் சிறுகதை ஆசிரியர் வீரன். உலகம்மை கோயிலுக்கு வந்த பக்தர்களிடம் பேச்சியம்மாள் நடந்த நிகழ்வுகளை விவரிக்கிறாள். “படுபாவிப்பய, ஓங்கி அவர் மண்டையில போட்டான்! சே! இனி நாம்ம உயிரு என்ன வெல்லமான்னு தோணிச்சி. அவன் பெரிய சூரப்புலியாத்தான் இருக்கட்டும், நம்ம உயிர் போறதுக்கு முன்னே அவனை ஒழிக்க நம்மாலானதைசக் செய்தாகணும்னு தோணிச்சி. பத்ரகாளிபோல ஆயிட்டேன். எடுத்தேன் அரிவாளை, போட்டேன் அந்தப் படுபாவி கழுத்தைப் பார்த்து”[52] எனக் கூறுகிறாள். இவ்விடத்தில் கன்னிகாபரமேஸ்வரி அம்மனைக் கற்பனையாகக் கதையில் கொண்டுவந்து பேச்சியம்மாளுடன் உரையாடவைக்கிறார் சிறுகதையாசிரியர். தன் கோயிலில் திருடர்கள் கிரீடத்தைத் திருடும் போது தன்னால் ஒன்றும் செய்யாமல் இருக்க முடிந்த நிலையைக் கன்னிகாபரமேஸ்வரி பேச்சியம்மாளிடம் விளக்குகிறது. “பேச்சியம்மா! உன்போன்ற வீரப் பெண்மணிகளைத்தான் மக்கள் பாராட்ட வேணும், புகழவேணும்,

உன்போன்ற பெண்மணிகளோட கதையைத்தான் ஊரார் தெரிந்து வைத்துக் கொள்ள வேணும். அதை விட்டுவிட்டு, களவாடியவனைக் கூடப் பிடிக்க முடியாத என்போன்றவர்களைக் கொண்டாடுவதும், பூஜை போட்டுப் புகழ்பாடுவதும் காணிக்கை செலுத்துவதும் கற்பூரம் கொழுத்தி வைச்சி தாயே! தயாபரி! பரமேஸ்வரி! சகலலோக நாயகி! இப்படின்னு அர்ச்சனை செய்றதும் உப்புக்கும் உதவப் போவதில்லை”[53] எனக் கூறுகிறது. இறுதியில் பேச்சியம்மாளிடம் தானே கன்னிகாபரமேஸ்வரித் தெய்வம் என்று கூறி மறைவதாகக் கதை நிறைவடைகிறது. கோயில்களில் திருடுபவர்கள், கடவுள் தம்மை ஒன்றும் செய்யாது என்ற நம்பிக்கையுடன் திருடுகின்றனர். அவர்களைத் தடுக்க இயலாத நிலையில் தெய்வங்களும் உள்ளன என்பதை இக்கதை விளக்குகிறது.

### 3.2.19. உலகம் யாருக்கு?

ஏழை எழுத்தாளன் ஒருவனின் வாழ்வியலை அடிப்படையாக வைத்து ‘உலகம் யாருக்கு’ என்ற சிறுகதை புனையப்பட்டுள்ளது. ‘அண்ணல்’ என்ற பெயரில் இக்கதை 1.8.1954 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. ‘சூளாமணி’ என்ற எழுத்தாளன் தன் மாமன் மகள் ‘மல்லி’யை மணக்க விரும்புகிறான். ஆனால் அவன் மாமா, சூளாமணியிடம் பணம் இல்லை என்பதற்காகப் பெண் கொடுக்க மறுக்கிறார். நிலைமையைத் தன் நண்பனும் ஓவியனுமான ‘உண்மை’யிடம் விளக்குகிறான் சூளாமணி. பிச்சைக்காரன் ஒருவனை மாதிரியாக வைத்து ஓவியத்தைத் வரைந்து கொண்டிருக்கிறான் உண்மை. அப்போது அங்கு வந்த சூளாமணி, அவனை உண்மைப் பிச்சைக்காரன் எனக் கருதி ஒரு ரூபாய் கொடுத்து உதவுகிறான். ஆனால் அவன் மிகப் பெரிய பணக்காரன் என்பதையும், அவன் தன்னைப் பிச்சைக்காரன் போன்று ஓவியம் வரைய வேண்டியதையும் அதற்காகக் கந்தல் துணியை நூறு ரூபாய் கொடுத்துப் பெற்றதையும் சூளாமணியிடம் விவரிக்கிறான் ஓவியன் உண்மை. பிச்சைக்கார வேடத்திலிருந்த பணக்காரன், தன் வருங்கால மனைவி பார்த்து இரசிப்பதற்காக அந்த ஓவியத்தை வரையச் சொன்னதாகவும் சூளாமணியிடம் கூறுகிறான். மாமன் மகளை மணக்க இயலாத சூளாமணியின் துன்பநிலையை அறிந்த

வாலிபன், சூளாமணிக்கு ஆயிரம் ரூபாய் விரைவில் அனுப்புவதாகக் கூறிச் செல்கிறான். ஆனால் சூளாமணி நஞ்சுண்டு இறந்துவிடுகிறான். சூளாமணியின் மாமன் மகளையே அப்பணக்காரன் மணமுடிக்கவுள்ளதை ஓவியர் உண்மை பின்பு அறிகிறார். தற்கொலை செய்து கொள்வதற்கு முன் சூளாமணி எழுதிய கடிதம் வாழ்வியல் உண்மைகளை ஓவியர் உண்மைக்கு விளக்குகிறது. "நண்பா தூரிகை பிடித்தால், ஆகாயத்து நிலவு, வர்ணச்சீலைக்கு வந்துவிடுகிறது உனக்கு. பேனாவைப் பிடித்தால் நிலவிடம் இல்லாத வர்ணனைகளையெல்லாம் கொட்டிவிடுகிறேன் எழுத்தில். ஆனால் இந்த உலகில் கற்பனையைக் கரைத்துக் குடித்து வாழ முடியாது! பட்டுப்பூச்சி அழகாக இருக்கிறது என்பதால், நிலவிடம் யாரும் கொண்டுபோய் விடமாட்டார்கள்! பறந்து செல்ல அதற்கு சக்தி வேண்டும். 'மல்லி' எனக்கு நிலவு. பறந்து போகப் பணஇறகு இல்லை. அந்த இறகு இருக்க வேண்டும், இல்லையேல் அது இல்லாமலே வாழக்கூடிய நாள் வரவேண்டும். அது வரையில் இந்த உலகில் நம்போன்ற ஏழைகளுக்கு நிரந்தரமான சுகம் அளிப்பது சாவு ஒன்றுதான்."[54] பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்ற வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனையை அடியொற்றி இச்சிறுகதை படைக்கப்பட்டுள்ளது.

### 3.2.20. ஜோஸ்யமா தெரியும்?

சோதிடத்தை நம்பி வாழ்க்கையில் வீணாகக் குழம்பிக் கொள்ளக் கூடாது என்ற கருத்தை 'ஜோஸ்யமா தெரியும்?' என்ற சிறுகதை விளக்குகிறது. சந்தானம், சுந்தரேசன் என்னும் இரு நண்பர்கள் 'மௌனகுருசாமிகள்' என்ற சோதிடரைச் சந்திக்கின்றனர். இருவருக்கும் சோதிடப் பலன் கூறுகிறார் மௌனகுருசாமி. "சந்தானம் அடுத்த வருஷம்தான் பரிட்சையில் தேறுவான். அப்புறம் மூன்று வருஷம் படிப்பிருக்கிறது. 22வது வயதில் கல்யாணம். அதற்கப்புறம் 25 முடியும் வரை ஒரு குறையும் வராது. 26வது வயதிலிருந்து 33 வயதுவரை கஷ்டகாலம். நாற்பது வயதுக்குமேல் நல்லகாலம் ஆரம்பிக்கும். ஆயுள் கெட்டி. புத்ரசம்பத்து உண்டு"[55] என மௌனகுருசாமி சந்தானத்திற்குச் சோதிடப் பலன் கூறுகிறார். இதனைக் கேட்ட

சந்தானம் மிகுந்த மனக்குழப்பத்திற்கு ஆளாகிறான். சோதிடக்காரர் கூறியவாறே உடல்நலக் குறைவால் அவனால் தேர்வெழுத இயலாமல் போகிறது. திருமணத்திற்குப் பின்னர்த் தன் மாமனாரிடம் கோபித்துக்கொண்டு சென்னை வந்த சந்தானம் தன் பழைய நண்பன் சுந்தரேசனை எதிர்பாராமல் சந்தித்து நிலைமையை விளக்குகிறான். சோதிடக்காரர் கூறியவாறே தன் வாழ்க்கையில் அனைத்தும் நடைபெற்றதாகக் குறிப்பிடுகிறான். ஆனால் சுந்தரேசன் சோதிடத்தை நம்பி வாழ்நாளை நகர்த்துவது வீணான செயலெனக் குறிப்பிடுகிறான். இருவரும் மௌனகுருசாமியிடம் சோதிடம் பார்த்த அன்று, தான் 22 வயதிற்கு மேல் உயிர்வாழ வழியில்லை' என்று அச்சோதிடர் எழுதிக்கொடுத்ததை எடுத்துக்கூறி, அவ்வயதிற்குப்பின்னரும் தான் உயிர்வாழ்ந்து வருவதை விளக்கிக் கூறுகிறான். சோதிடர் கூறியது முற்றிலும் பொய்த்துப் போனதை விளக்குகிறான். மனத்தெளிவு பெற்ற சந்தானம், “நான் சென்னைக்கு வந்ததும் முதல்வேலை அந்த மௌனகுரு சாமியாரைப் பார்த்து ஓங்கி இரண்டு அறை கொடுக்கலாம் என்பதுதான். ஏனென்றால் அவன் கொடுத்த காகிதத்தால்தான் நான் நாலைந்து வருஷம் மனவேதனையில் காலங் கழித்தது. நான் வந்து பார்த்தபொழுது அந்த சாமியார் ஏதோ திருட்டு கேசில் தண்டிக்கப்பட்டதாகத் தெரிந்தது”[56] எனச் சோதிடர்களின் புரட்டு வாழ்வியலை எடுத்துரைக்கிறான். பின்னர்த் தன் மனைவி குழந்தைகளுடன் இன்ப வாழ்வினைத் தொடர்கிறான். திருட்டு வழக்கொன்றில் மௌனகுரு சாமியார் தண்டிக்கப்படுகிறார். பழவண்டியைத் தள்ளிக்கொண்டு அவர் தன் வாழ்க்கையை நடத்துகிறார். “அந்தக் கடைக்காரனை அதற்கு முன் எங்கேயோ பார்த்த ஞாபகம் சந்தானத்துக்கு இருந்தது. ஆனால் யாரென்று தெரியவில்லை. கடைசியில் தங்களுக்கெல்லாம் ஜோஸ்யம் சொன்ன மௌனகுரு சாமிகள்தான் இப்பொழுது அலைந்து, மாம்பழம் விற்கும் நிலையில் இருக்கிறான் என்று தெரிந்தது”[57]

எனக்கதை முடிகிறது. சோதிடர்கள் தம் வாழ்வை வளப்படுத்துவதற்காகப் பிறர் வாழ்வைப் பாழாக்குவதையும் அதனை நம்பி ஏமாறும் மக்களின் நிலையையும் இக்கதையில் ஆசிரியர் விளக்கியுள்ளார். செழியன் என்பவரால் எழுதப்பட்ட

இச்சிறுகதை 14.1.55 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது. சோதிடம் பார்த்து வாழ்க்கையை நடத்துவதென்பது பகுத்தறிவிற்குப் புறம்பான மூடநம்பிக்கையென்பதை இச்சிறுகதை விளக்கியுள்ளது.

### 3.2.21. ஆலமரத்துப் பிள்ளையார்

நிலஉச்சவரம்புச் சட்டத்தைக் கண்டு அஞ்சுகின்ற பண்ணையார் ஒருவரின் வஞ்சகச் செயலை 'ஆலமரத்துப் பிள்ளையார்' என்ற சிறுகதை விளக்குகிறது. இச்சிறுகதை 25.9.1955 ஆம் நாள் திராவிடநாடு இதழில் கதையாசிரியர் பெயரின்றி வெளிவந்துள்ளது. 'பரமன்' என்ற ஏழைக் குடியானவனின் சிறு நிலத்தை அபகரிக்க எண்ணுகிறார் பெருமாள் செட்டியார். அவர் பரமனின் நிலத்தில் அவனது உறவுக்காரனும் சிற்பியுமான சிதம்பரத்துடன் சேர்ந்து ஒரு பிள்ளையார் சிலையைச் செய்து புதைத்துவிடுகிறார். பரமன் அச்சிலையை வெளியில் எடுத்து வைக்க, உடன் வந்த பெருமாள் செட்டியார், பிள்ளையார் தன் கனவில் வந்து அவ்விடத்தில் தனக்குக் கோயில் கட்டவேண்டும் எனக்கூறியதாகக் கூறி பரமனிடமிருந்து நிலத்தை அபகரிக்கிறார். நிலத்தை இழந்த பரமன், அவ்விடத்தில் கோயில் கட்டுவதற்காகத் தன் மனைவி அஞ்சலையுடன் கல்சுமக்கிறான். இதனை அறிந்து சிதம்பரமும் மகிழ்கிறான்

நில உச்சவரம்புச்சட்டம் இயற்றப்பட்டால் தன் நிலம் பறிபோய்விடுமோ எனப் பயந்து வக்கீல் வரதாச்சாரியிடம் செல்கிறார் பெருமாள் செட்டியார். வரதாச்சாரி, செட்டியாருக்குத் தகுந்த ஆலோசனைகளை வழங்கி மூவாயிரம் ரூபாயை ஊதியமாகப் பெறுகிறார். பெற்ற பணத்தில் தன் மனைவிக்கு வைர நெக்லஸ் வாங்கிக் கொடுத்து உண்மைகளை விவரிக்கிறார். "பெருமாள் செட்டி கோயில் கட்டுறதைப் பற்றி பெரிய பக்திமான்னு ஊரெல்லாம் பேசறா. பத்திரிகையிலெல்லாம் அவன் படம் வந்திருக்குது! ஜமாய்க்கட்டும், எது எப்படியானாலும் நமக்கு லாபந்தான். ஆனால் இந்தக் காரியம் பக்தியாலே செய்றான் அப்படி இப்படீன்னு பேசறாளே! அதை நினைச்சாத்தான் சிரிப்பு வருது, என்ன ஜனங்க, எது சொன்னாலும் நம்புற ஜனங்க. காதும் காதும்

வைச்சாப்போல உனக்கு மட்டும் சொல்றேன். அடீயே! சர்க்காரிலே நிலச்சீர்திருத்தம் கொண்டுவரப் போவதாகவும் அதன்படி இத்தனை வேலி நிலம் தான் ஒரு மிராசுதார் வைத்திருக்கலாம்னு சட்டம் வரப்போவதாகவும் பத்திரிகையிலேயெல்லாம் போடறாளே, பார்த்தேயில்லையோ? அதைப் பார்த்துப் பயந்துபோய் என்னிடம் வந்தான் பெருமாள் செட்டி”[58] எனத் தன் மனைவியிடம் நிலைமையை விவரிக்கிறார். வரதாச்சாரியின் யோசனைப்படி தன் நிலங்களில் நூறு வேலியைக் கோயிலுக்கு எழுதிவைத்துத் தன் உறவினர்களைத் தர்மகர்த்தாக்களாக்குகிறார் பெருமாள் செட்டியார். கோயில் பெயரால் என்றென்றைக்கும் சொத்துக்களை அனுபவிக்க ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. பார்ப்பனரான வக்கீல் வரதாச்சாரி. தன் உறவுக்காரன் ஒருவனைக் கோயில் குருக்களாக்குகிறார். விநாயகர் சதுர்த்தி அன்று விநாயகர் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் நடைபெறுகிறது. “இந்த அரிய கைங்கரியத்தைச் செய்ததற்காக பெரிய பண்ணைக்கு ‘தர்மதாதா’ என்று பட்டம் அளிக்கப்பட்டது, அந்தப் பட்டமளிப்பு விழாவுக்கு மூன்று மந்திரிகள் வந்தனர். கவர்னர் வாழ்த்துச் செய்தி அனுப்பி இருந்தார்.”[59] எனக் கதை முடிகிறது. சமூக வாழ்வில் உயர்ந்த இடத்தில் இருப்போர் செய்கின்ற கீழான செயல்கள் இச்சிறுகதையில் புலப்படுத்தப்பட்டுள்ளன. ஏழை மக்களிடம் இருந்து நிலத்தை அபகரித்தல், சொந்த நலன்களுக்காக இறைப்பணி செய்தல், அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தி மக்களை ஏமாற்றுதல் முதலான செயல்களைச் செய்கின்ற பெரிய மனிதர்களின் நடத்தைகளை இச்சிறுகதை விவரித்துள்ளது.

### 3.2.22. புயல்

1955 ஆம் ஆண்டு தமிழிகத்தில் ஏற்பட்ட புயலின் சீற்றத்தை அடிப்படையாக வைத்துப் ‘புயல்’ எனும் சிறுகதை புனையப்பட்டுள்ளது. ‘நாயகம்’ என்பவர் எழுதிய இச்சிறுகதை 15.1.1955 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. புயல் நேர இரவுப் பொழுதில் நடைபெற்ற நிகழ்வுகளைச் சிறுகதை விவரிக்கிறது. புயல் காலத்து

இயற்கைப் புனைவுகள் அழகிய உவமைகளாகப் பின்வருமாறு சிறுகதையில் இடம்பெற்றுள்ளன.

**“பன்றிபோல வானம் கருத்து மின்னியது”**

**“தென்னை மரங்கள் நாணலைப் போல் ஆடின”**

**குடிகாரன் தன் மனைவியின் கூந்தலை உலுக்குவதுபோல**

**இவனும் மரங்களைப் பிடித்து ஆட்டி வைக்கிறான்”[60]**

இத்தகைய புயல் வீசுகின்ற வேளையில் பண்ணையார் பரமசிவம், காணாமல் போன தன் மாட்டைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காகப் ‘பிச்சையப்பன்’ என்ற பண்ணையாளை அனுப்புகிறார். மழையில் நனைந்து திரிந்து, பிச்சையப்பன் மாட்டைத் தேடிப் பிடித்துப் பண்ணையார் இல்லத்தில் சேர்க்கிறான். குளிரில் வாடிய பிச்சையப்பன் இடையில் கட்டிய ஆடையுடன் நிற்கின்றான். ஆனால், பண்ணையாரின் ஆட்கள் நனைந்து போன மாட்டைத் துணியால் துடைக்கின்றனர். பிச்சையப்பனைப்பற்றிச் சிந்திக்காத பண்ணையாரின் நிலையை, “அவனுக்கு மனைவி மக்கள் இல்லையா? அவர்கள் தன் மாட்டைவிடக் கேவலமானவர்களா? என்பதை பண்ணையார் சிந்திக்கவில்லை! பணம் இருக்கும் இடத்தில் ஏழைகளைப் பற்றிய சிந்தனை ஏது?”[61] என எடுத்துக்காட்டுகிறார் சிறுகதை ஆசிரியர்.

வெள்ளநீரில் பிச்சையப்பனின் சேரி முழுவதும் மூழ்கிவிடுகிறது. பிச்சையப்பனின் குழந்தையும் நீரில் அடித்துச் செல்லப்படுகிறது. பிச்சையப்பனின் மனைவி முத்தாயி, “தெய்வமே நீயும் இருக்கிறாய்? இந்த உழைக்கும் கூட்டத்தை ஏன் வதைக்கிறாய்? இரும்புப் பெட்டிகளோடு தூங்கும் கல் நெஞ்சங்களை விட்டுவிட்டு ஏன் எங்கள் நெஞ்சங்களைச் சிதைக்கிறாய்? என் பச்சைப் பாலகனின் உயிரை இந்தப் புயல் அழித்தபோது நீ பார்க்கவில்லையா? உன்னை, தாயினும் அன்புடையோய், என்கிறார்களே! நான் கதறுவது உன் காதுகளில் விழவே இல்லையா”[62] எனப் புலம்புகிறாள். அவளின் புலம்பல் அந்தக் கோயில் சுவர்களில் எதிரொலித்தது. கோயிலில் கடவுள், மனிதர்கள் தனக்கு அளித்த உருவத்துடன் வீற்றிருக்கிறார் எனக்

கடவுளின் நிலையை ஏளனத்துடன் சிறுகதையாசிரியர் எடுத்துக் காட்டுகிறார். அதே கோயிலில் பிள்ளையைப் பெற்றெடுக்கிறாள் முத்தாயி. பிச்சையப்பன் தன் முதலாளியிடம் சென்று உதவி கேட்கிறான். ஆனால் அவர் அவனுக்கு உதவி செய்ய மறுக்கிறார். பிச்சையப்பனும் அவன் மனைவியும் பிறந்த குழந்தையும் குளிரின் கொடுமையால் இறந்து விடுகின்றனர். தொழிலாளியின் நிலையை உணராத பண்ணையார் பரமசிவம் மாளிகையில் இன்பமாக வீற்றிருக்கிறார். இதுவே இச்சிறுகதையின் கதைப்பின்னலாகும்.

“ஏழை-பணக்காரன் என்ற மேடுபள்ளம் மிகுந்த இந்நாட்டிற்கு உழைக்க இளைஞர்களை அனுப்பக்கூடிய அந்தப் பள்ளியின் சுவர் அருகே மூன்று நாட்களாக பிச்சையப்பனின் பிணம் கழுகுகளால் வட்டமிட்டுக் கிடந்தது. செல்வச் சீமான்களின் கல் நெஞ்சங்களைத் தூள் தூளாக்கும் ஏ! புரட்சிப் புயலே! நீ என்று தான் இந்த நாட்டிற்கு வரப்போகிறாயோ”[63] என்பதாகச் சிறுகதை முடிகிறது. புயலை விளித்து நாட்டு நிலைமைகளைக் கூறும் சிறுகதையாசிரியர், செல்வந்தர்கள் நிறைந்த சமூக வாழ்வில் ஏழைகள் படும் அவலங்களை இச்சிறுகதையில் விளக்கியுள்ளார்.

### 3.2.23. போய்விட்டாள்

கணவன், மனைவி ஆகிய இருவருக்கிடையே ஓர் இரவு நடைபெறும் உரையாடலை அடிப்படையாக வைத்துப் ‘போய்விட்டாள்’ என்ற சிறுகதை புனையப்பட்டுள்ளது. ‘அண்ணல்’ என்பவர் எழுதிய இச்சிறுகதை 22.4.1956 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. கமலா, தன் வீட்டில் வேலை செய்த ‘அஞ்சுகம்’, ஊரை ஏமாற்றித் திருடும் ஒருவனைத் திருமணம் செய்து கொண்ட செய்தியைத் தன் கணவனிடம் விவரிக்கிறாள். “ஒரு குழந்தையின் கழுத்திலிருந்த சங்கிலியைத் திருடினானாம் - ஓடுகிற பஸ்ஸில் ஒருவரிடமிருந்த பர்சை அடித்தானாம்..அவனோடு இவள் எப்படி வாழப் போகிறாள்? என்ன சுகத்தைக் காணமுடியும் அவனிடம்? அப்பப்பா! அவளைப்போல நானிருந்தால், என் தலை போனாலும் சரி அவனைக் கலியாணம் செய்து கொள்ளமாட்டேன்”[64] எனக் கூறுகிறாள். கமலாவிடம் அவள்

கணவன், தனது மாதச் சம்பளம் எவ்வளவு என வினவ, அவள் ‘முந்நூறு ரூபாய்’ எனப் பதிலளிக்கிறாள். வருமானத்திற்கு அதிகமாகத் தாங்கள் இருவரும் செலவு செய்வதை எடுத்துரைக்கும் கமலாவின் கணவன், “அஞ்சுகத்தின் புருஷன் வயிற்றுக்கில்லாததால் திருடுகிறான்-சேப்டி அடிக்கிறான். ஆனால் வாழக்கூடிய அளவுக்கு வருமானம் இருந்தும் நான் இலஞ்சம் வாங்குகிறேன். உன் வைரநெக்லஸ் ஒரு வியாபாரியைக் கொலைக்குற்றத்தில் அகப்படாமல் செய்ததற்காக நான் பெற்ற பரிசு தெரியுமா? மாதா மாதம் உனக்கும் எனக்கும் ஏற்படுகிற செலவுகளுக்கு எங்கிருந்து பணம் வருகிறது என்பதைத் தெரிந்து கொண்டாயா? உன் கணவன் பெரிய அதிகாரியாக இருப்பதால் எப்படியெல்லாமோ சம்பாதிக்க முடிகிறது. நம் செலவுகளைச் சரிக்கட்ட நானும்தான் திருட்டு வழிகளில் செல்லுகிறேன். அவனாவது வயிற்றுக்காகத் திருடுகிறான். நானோ ஆடம்பரத்துக்காக இப்படி அக்கிரமமான வழிகளில் பணம் சம்பாதிக்கிறேன். இருவரில் யார் பெரிய அயோக்கியர்கள்? யார் பாக்தாத் திருடர்கள்?”[65] எனக் கேட்கிறான். இதைக் கேட்வுடன் கமலா, பக்கத்து அறைக்குப் போய்விட்டாள் என்பதாகக் கதை நிறைவுறுகிறது. வயிற்றுப் பிழைப்பிற்காக சிலர் திருடுகின்றனர். அரசாங்கத்தின் உயர்ந்த பதவிகளில் இருப்போர் ஆடம்பர வாழ்க்கைக்காக இலஞ்சம் என்ற திருட்டைச் செய்து வருகின்றனர் எனும் சிந்தனையை இச்சிறுகதையில் அண்ணல் விளக்கியுள்ளார்.

### 3.2.24. தம்புரா இசை

திராவிட இயக்க எழுத்தாளர்களுள் குறிப்பிடத்தக்கவரான பி.சி.கணேசன் படைத்த ‘தம்புரா இசை’ என்ற சிறுகதை 15.9.1957 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. மழைக்கால இரவு ஒன்றில் கதை தொடங்குகிறது. மழைக்கால நிகழ்வினைப் புனையும் கதையாசிரியர் பாரதியாரின்,

**“காற்றடிக்குது கடல்குமுறுது**
**கண்ணை விழிப்பாய் நாயகனே!**
**தூற்றல் கதவு சாளர மெல்லாம்**
**தொளைத்தடிக்குது பள்ளியிலே”**

என்ற பாடலைச் சிறுகதையின் இடையில் குறிப்பிடுகிறார். காதலில் தோல்வியுற்ற ஒருவன், தன் பழைய காதலியை நினைத்து ஏங்குகிறான். வேறொருவனுக்கு மனைவியாகிவிட்ட அவளை நினைத்து, “அவள் வேறொருவனுக்குச் சொந்தம். உடலால் அப்படித்தான், பெண்கள் மனம்தான் பச்சோந்திபோல் மாறும் தன்மை உடையதாயிற்றே! நான் இல்லாவிட்டால் அவளுக்கென்ன? யாருடனோ வாழ்க்கை நடத்துகிறாள். ஆனால் நான் மட்டும்? அவளையே எண்ணி எண்ணி என் உள்ளம் நெக்குருகுகிறது. இனி அவளை நினைக்க எனக்கு என்ன உரிமை இருக்கிறது? அறிவு அப்படித்தான் சொல்லுகிறது. ஆனால் மனம்? ஆமாம், அறிவும் மனமும் ஒத்து இயங்கிவிட்டால் வாழ்க்கையில் சுவையேது? சுறுசுறுப்பேது”[66] எனக் கையற்றுப் புலம்புகிறான். அந்த மழைக்கால இரவில் தம்புரா இசைத்துக்கொண்டு பிச்சைகேட்டு வந்த ‘கருப்பி’ என்ற பெண்ணின் அழகில் மயங்கிய கதைசொல்லி, அவளுடன் உறவுகொள்கிறார். மறுநாள் குளத்தங்கரையில் கிழவன் ஒருவன் இறந்து கிடக்க அவள் அருகில் கருப்பி நிற்பதைக் கண்டு, அக்கிழவன் அவளுடைய கணவன் என்பதை அறிகிறான். வயோதிகக் கணவனுக்காக பிச்சைகேட்டுவந்த அவளைத தன் இச்சைக்குப் பயன்படுத்திய கதைசொல்லியை அவள் காறி உமிழ்கிறாள். ஆனால் சில தினங்களுக்குப்பின்னர் அவள் வேறு ஒரு வாலிபனுடன் இணைந்து திரிகிறாள். “இசைக்கத்தானே தம்புரா? சுருதி கெட்டால் பெரிய நஷ்டமில்லை! கலைஞர்களுக்கு அது குற்றம். ஆனால் வாழ்க்கையில் தோல்வி கண்ட என் போன்றவர்களுக்கும், வாழமுடியாத கருப்பி போன்றவர்களுக்கும் அதுதானே வாழ்க்கை வேதாந்தம்?”[67] என்றவாறு கதை முடிகிறது. சமூகம் விதித்த கட்டுப்பாடுகளுக்குள் வாழ்க்கையை அமைக்க முயன்று மனம் அமைதிபெறாமல் அவதியுறுவதைவிட, மாறும் உலகத்து இயல்புகளுக்கு ஏற்ப வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். தம்புரா இசைப்பதற்குரியது. வாழ்க்கையும் வாழ்வதற்குரியதாகும் என்ற கருத்தை இக்கதை விளக்கி நிற்கிறது.

### 3.2.25. பயம்

தனிமனித உளவியலை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட 'பயம்' என்ற சிறுகதையில் எதார்த்தமாக நடந்துவிட்ட நிகழ்வுக்காக வருத்தப்பட்டுப் பின்னர் நண்பனின் அறிவுரையால் தெளிவுபெறும் ஒருவனின் வாழ்க்கைநிலை விவரிக்கப்பட்டுள்ளது. 'வண்டு' எனும் புனைபெயரில் இக்கதை 13.10.1957 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. அலுவலகத்திலிருந்து பேருந்தில் வீடு திரும்பிக்கொண்டிருந்த ஒருவன், பேருந்தின் கூட்ட நெரிசலில், தன் மேலதிகாரி நிற்பதை அறியாமல், "மூளைகூட இல்லாமல் இப்படி மறைத்துக் கொண்டு நிற்கிறீர்களே?"[68] எனக் கேட்டுவிடுகிறான். பின்னர் அவர் தன் மேலதிகாரி என்பதை உணர்ந்து வருந்தி மன்னிப்புக் கேட்கிறான். மனம் குழம்பிய நிலையில் இல்லம் திரும்பிய அவன், நடந்த சம்பவங்களை எண்ணிக் குழம்புகிறான். அவன் மனநிலையைத் தெரிந்து கொண்ட அவன் நண்பன் மாணிக்கம், 'செகாவ்'என்ற இரஷ்யச் சிறுகதை ஆசிரியர் தீட்டிய கதை ஒன்றைக் கூறித் தெளிவுபடுத்துகிறான். கச்சேரி ஒன்றைப் போலீஸ் அதிகாரி ஒருவர் மனம் விரும்பிக் கேட்டுக்கொண்டிருக்கும் சூழலில், பின்னாலிருந்த ஒருவனுக்குத் தும்மல் ஏற்பட்டுவிடுகிறது. இதனால் பயங்கொண்ட அவன், அவரிடம் மன்னிப்புக் கேட்கிறான். அவர் அதனைப் பொருட்படுத்தாமல் சென்றுவிட மறுநாள், அவர் இல்லத்திற்குச் சென்று மீண்டும் மன்னிப்புக் கேட்கிறான். அவர் அவன் செயலைக் கண்டு கோபமுற்று வீட்டுக்காவலனை விட்டு வெளியே அனுப்புகிறார். எண்ணாததெல்லாம் எண்ணி மனம் புண்ணாகிப் பயம் கொண்ட அவன் வீட்டிற்கு மனக் குழப்பத்துடனே செல்கிறான். அன்றிரவு அவன் இறந்துவிடுகிறான்' இக்கதையைத் தன் நண்பனிடம் கூறுகிறான் மாணிக்கம்.

"பயமே கூடாதென்பதல்ல கதையின் கருத்து. பயப்படவேண்டியதற்குப் பயப்பட வேண்டியதுதான். பாம்பு என்று தாம்புக் கயிற்றையும் கண்டு கலங்குவாருண்டோ? கோழை ஆயிரந்தடவைகள் சாகிறான். வீரன் ஒரே தடவை சாகிறான். அச்சத்தையும்

தவிர்க்க வேண்டும். அதேசமயம் அஞ்சுவதுக்கும் அஞ்சவேண்டும்”[69] திருக்குறள் கருத்தையும் மாணிக்கம் தன் நண்பனுக்கு எடுத்துக் கூறி மனத்தெளிவினை உண்டாக்குகிறான்.

“அடக்கம் வேண்டும். அடாவடித்தனம் கூடாது. அச்சம் தவிர்க்க வேண்டும். அதற்காக எவரையும் துச்சமென மதிக்கக் கூடாது. அஞ்சுவதுக்கு அஞ்ச வேண்டும். அதனால் எல்லாவற்றிற்கும் அஞ்சும் கோழையாகி விடக்கூடாது”[70] எனும் வாழ்வியல் சிந்தனை இச்சிறுகதையில் இடம்பெற்றுள்ளது.

நண்பன் மாணிக்கத்தின் இவ்வறிவுரைகளைக்கேட்டு மனக்குழப்பம் நீங்கித் தெளிபெறுவதாகக் கதை முடிகிறது. ‘பயம்’ என்ற தலைப்பு இச்சிறுகதைக்குப் பொருத்தமுற அமைந்துள்ளது. தனிமனித வாழ்க்கைக்குத் தேவையான வாழ்வியல் சிந்தனைகளும் அறிவுரைகளும் நிறைந்த சிறுகதையாக இக்கதையைக் குறிப்பிடலாம்.

### 3.2.26. துணை

‘அன்பு’ எனும் பெயரில் 9.3.1958 ஆம் நாள் திராவிடநாடு இதழில் ‘துணை’ என்ற சிறுகதை வெளிவந்தது. காதலனது திடீர் மரணத்தைப் பொறுக்க முடியாத காதலி தற்கொலை செய்து கொண்ட செய்தியை நாளிதழில் படிக்கிறார் கதைசொல்லி. காதலன் இறந்தமைக்காக ஏன் காதலியும் தற்கொலை செய்து இறக்க வேண்டும்? என்ற எண்ணம் அவருள் ஏற்படுகிறது. பழைய நிகழ்வு ஒன்றினை நாளிதழ்ச் செய்தியுடன் பொருத்திப்பார்க்கிறார். மாலைப் பொழுதில் நண்பருடன் சென்ற அவர், வானில் பறந்து கொண்டிருந்த இரு பறவைகளில் ஒன்றைச் சுட்டு வீழ்த்துகிறார். இணையின் துன்பத்தைப் பொறுக்க இயலாத பறவை, அவ்விடத்தை விட்டு அகலாது நிற்கிறது. தானும் வலிந்து துப்பாக்கிக் குண்டிற்குப் பலியாகித் தன் உயிரைப் போக்கிக் கொள்கிறது. பிரிவாற்ற இயலாத துணைப்பறவையின் அன்பைக் கதைசொல்லி விளங்கிக் கொள்வதாகக் கதையை நிறைவு செய்கிறார் ஆசிரியர்.

“உலகில் ஓர் இன உயிர், அதே இன மற்றறொரு உயிரின் துணையை நாடி நிற்கிறது. அந்தத் துணையின் பிணைப்பே ஈருயிர் ஈருடலாக இருந்து அவைகளை

ஒருயிர் ஈருடல் என்னும் உயர்ந்த பண்புக்கு உறைவிடமாக்கி விடுகிறது. அப்பண்பு வளர வளர அவ்வாறு சேர்ந்த உயிர்கள் இரண்டும் பிரிக்க முடியாதவைகளாகிவிடுகின்றன. அவ்வாறு இணைப்பில் ஒருயிர் பிரிந்தாலும், அப்பிரிவைத் தாங்காதனவும், துணை போய்த் தான் மட்டும் இவ்வுலகில் வாழமுடியாதனவும், தன் துணையின் அழிவையே தானும் தேடிக்கொண்டு இறப்பில் அமைதி காண்கிறது”[71] உலகில் இரு உயிர்கள் ஒன்றாகிவிட்டபின்னர் அவைகளின் பிணைப்பின் சக்தி மிக அதிகமானது என்பதைச் சிறுகதை உணர்த்துகிறது.

**“பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன**
**நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்**
**பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு**
**உடனுயிர் போகுக தில்ல கடனறிந்து**
**இருவேம் ஆகிய உலகத்து**
**ஒருவேம் ஆகிய புன்மையா முயற்கே”**[72]

என்ற குறுந்தொகைப் பாடற்கருத்திற்கேற்ப இச்சிறுகதை அமைந்துள்ளது. பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து கதைக் கருவினை எடுத்துக்கொண்டு புனைகதை படைப்பதில் திராவிட இயக்க எழுத்தாளர்கள் திறன்பெற்றவர்கள் என்பதற்கு இச்சிறுகதை சான்றாகும்.

### 3.2.27. அந்தக் கடிதம்

சமூக வாழ்வில் ஆடவர் செய்யும் தவறுகளால் துன்புறும் பெண்களின் நிலையை ‘அந்தக் கடிதம்’ என்ற சிறுகதை எடுத்துரைக்கிறது. ‘அகிலாண்டம்’ என்ற வயோதிகப் பெண்ணொருத்திக்குக் கடிதம் ஒன்று வருகிறது. அப்பெண்மணி தண்டத்தொகை கொடுத்துக் கடிதத்தைப் பெற மறுக்கிறாள். இருப்பினும் அக்கடிதத்தைப் பிரித்துப் படித்த தபால்காரர், அபலைப் பெண்ணொருத்தியின் துயரவாழ்வினை அறிந்து அவளுக்கு உதவிட முனைகிறார். பணிப்பெண்ணாக வேலை செய்யும் ‘தங்கம்’ என்ற அவ்விளம்பெண், வீட்டாரின் பல்வேறு இன்னல்களுக்கு ஆளாகிறாள். இவற்றையெல்லாம் உணர்ந்த தபால்காரர் தங்கத்தை மீட்டுக்கொணர எண்ணுவதோடு, அவளை மணம் முடிக்கவும் விரும்புகிறார். அவளை அழைத்துத் தன்

இல்லம் வருகிறார். தபால்காரரின் தாய் அவளை முதலில் தன் மருமகள் என எண்ணி வரவேற்கிறாள். பின்னர் அப்பெண், தன் மகள் என்பதை அறிகிறாள். தாய்வாயிலாகக் கதையை அறிகிறார் தபால்காரர். தன் தந்தை செய்த தவறு காரணமாகக் குடும்பத்தில் ஏற்பட்ட குழப்பத்தை அறிகிறான். "என் தந்தை நானும் தங்கமும் சிறுவர்களாக இருக்கும்போது அடிக்கடி வீட்டை விட்டுப் போய்விடுவாராம். என் தாய்க்குப் பிறகுதான் தெரியவந்தது, அவர் மற்றொருத்தியிடம் சிநேகிதம் கொண்டிருக்கிறார் என்பது. மறைமுகமாகச் சொல்லிப்பார்த்தார்களாம் என் தாய், கேட்கவில்லையாம் அவர். என் தந்தைக்கு என்னைவிடத் தங்கத்தின்மீது அதிக ஆசையாம். ஆசையின் காரணத்தால் அவளைத் தூக்கிக் கொண்டு போனவர் ஒருநாள், திரும்பி வரவே இல்லையாம். சில நாட்கள் கழித்து அவர்கள் ஊரைவிட்டே புறப்பட்டுப் போய்விடடார்கள். பிறகு அவர்களின் செய்தி ஒன்றுமே தெரியவில்லையாம். தந்தையாரின் ஆசை நாயகியின் பெயர் அகிலாண்டம் அம்மாளாம்"[73] குடும்ப வாழ்க்கையில் ஆடவர் செய்கின்ற தவறுகளால் சீரழிகின்ற பெண்களின் நிலை இக்கதையில் விளக்கப்பட்டுள்ளது. சமூகவாழ்வின் எதார்த்த நிலை இச்சிறுகதையில் வெளிப்பட்டுள்ளது. ச. இராமலிங்கம் என்பவரால் எழுதப்பட்ட இச்சிறுகதை 5.10.1958 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது.

### 3.2.28. வீடும் வெளியும்

தனிமனித வாழ்வியலை அடிப்படையாக வைத்து 'வீடும் வெளியும்' என்ற சிறுகதை புனையப்பட்டுள்ளது. இச்சிறுகதையாசிரியர் கரந்தை கணேசன் என்பவராவார். இக்கதை 2.11.1958 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. மனைவியை இழந்த சச்சிதானந்தம், தன் ஒரே மகன் மணிவண்ணனைக் கல்வியில் சிறந்தவனாக்குகிறார். படிப்பிற்குப்பின்னர் மகனை வேலைக்காக வெளியூருக்கு அனுப்புகிறார் சச்சிதானந்தம். தன் வாழ்நாளில் மகனைவிட்டுப் பிரிந்திராத சச்சிதானந்தம், வேலைக்குச் சென்ற மகனிடமிருந்து கடிதத்தை எதிர்நோக்குகிறார். மகனிடமிருந்து கடிதம் பெறாத சச்சிதானந்தத்தின் நிலையை, "மறுநாள் அஞ்சல்

நிலையத்திற்கே காலையில் சென்றுவிட்டார். உள்ளே அஞ்சல்களைப் பிரித்துக் கட்டிக் கொண்டிருக்கும் தபால்காரனை 'பசித்தவன் பிறர் முகம் பார்ப்பது போல' பார்த்துக் கொண்டிருந்தார்"[74] எனக் கதையாசிரியர் விளக்குகிறார். மகனிடமிருந்து கடிதம் வருகிறது. "நான் பிறந்தது முதல் துன்பத்தின் சாயலே படியாமல் என்னை வளர்த்தீர்கள். என் பின்னால் நிழல் போலத் தொடர்ந்து இதம் தந்தீர்கள். என்னைக் கலை முதல்வனாக்கினீர்கள். ஆனால் ஒன்றை மட்டும் நான் பெறாமல் செய்து வைத்திருந்தீர்கள். நான் இதைக் குற்றமாகக் கூறி உங்களைக் குற்றக் கூண்டிலே நிறுத்துகிறேன் எனக்கருதிவிட வேண்டாம். அந்த ஒன்றை நான் பெறாமல் போனதற்குக் காரணம் தங்களின் தலையாய அன்புதான். அன்பு சில வேளைகளில் தவறான விளைவுகளை ஏற்படுத்திவிடும் என்பதைத் தற்பொழுதுதான் உணர்கிறேன்"[75] எனக் கடிதத்தில் குறிப்பிட்ட மணிவண்ணன், தான் சென்ற கிராமத்தில் கண்டனவற்றைப் பின்வருமாறு தந்தைக்கு விவரிக்கிறான்.

"அந்தக் கிராமத்திலுள்ளவர்கள் அனைவரும் காலை முதல் மாலை வரை உழைக்கிறார்கள். பின் ஏன் இப்படி இருக்கிறார்கள்? இந்தக் கேள்விக்கு விடை? என் மனம் ஓயாமல் குடைகிறது. பிறப்பிலே உயர்வு தாழ்வு இல்லை என்கிறோம். வெளியிலே எத்தனை குழந்தைகள் கையேந்தி நிற்கின்றன. அக்குழந்தைகள் எல்லாம் இந்நாட்டுச் செல்வங்கள். செல்வங்களே இப்படிச் சீரழிந்தால், நாட்டு நிலை எப்படி? செல்வமாகிய பணத்திற்கு இருக்கிற பாதுகாப்பில் துளிகூட இந்தப் பிறவிச் செல்வங்களுக்கு இல்லை. அப்பா! நமது வீடு நல்ல குதுகுதுப்பாக இருக்கிறது. ஆனால் வீட்டுக்கு வெளியே எவ்வளவு பெரிய அனல் வீசிக்கொண்டிருக்கிறது தெரியுமா? இந்த அனலில் மற்றவர்கள், நம்மவர்கள் அவதிப்படும்பொழுது நாம் மட்டும் சுகமாக இருப்பதா? அனல் நம்மையும் அடைய எவ்வளவு காலம் ஆகும்"[76]

மகனின் இந்த நியாயமான குமுறலைச் சச்சிதானந்தம் ஏற்கிறார். வீட்டிற்கு அப்பால் உள்ள பரந்த வெளி வாழ்வியலின் எதார்த்தங்களை மணிவண்ணனுக்கு உணர்த்துகிறது. இதனை உணர்ந்த மணிவண்ணன், சமூகத்தில் உள்ள அனைவரும்

மேன்மையடைய வேண்டும் என எண்ணுகிறான். இத்தகைய சமூக அவலங்களைத் தனக்குக் காட்டாமல் தன்னைத் தன் தந்தை அன்புடன் வளர்த்தமையை உணர்ந்த மணிவண்ணன், பிறர்பொருட்டுக் கொள்கின்ற இரக்கத்தை இச்சிறுகதை எடுத்துக்காட்டுகிறது. அன்பின் காரணமாகப் பெற்ற பிள்ளைகளை விட்டுப் பிரிய இயலாத மனநிலையில் இருக்கும் பெற்றோருக்கு ஏற்ற அறிவுரைகளும் இக்கதையில் இடம்பெற்றுள்ளன.

### 3.2.29. சாதித்திமிர் சாய்ந்தது

சாதி வேற்றுமைகள் சமூக வாழ்வில் ஒழிக்கப்பட வேண்டும் என்ற கொள்கையினைத் திராவிட இயக்கச் சார்பாளர்கள் தம் எழுத்திலும் பேச்சிலும் வலியுறுத்திவந்தனர். அந்த வகையில் தென்னவன் என்பவரால் படைக்கப்பட்ட 'சாதித் தமிர் சாய்ந்தது' என்ற சிறுகதை 22.2.1959 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது. தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள் கல்வியில் மேன்மையுற்றுச் சமூக வாழ்க்கையில் உயர்ந்திடல் வேண்டும் என்ற சிந்தனையை இச்சிறுகதை வலியுறுத்துகிறது. தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த பரமசிவம், முருகேச முதலியாரின் தங்கை சுந்தரியைக் காதல் திருமணம் செய்துகொள்கிறான். இருவருக்கும் 'சங்கரன்' என்ற மகன் பிறக்கிறான். சங்கரன், உயர்நிலைப்பள்ளியில் பயில்கின்றபோதே தாய் சுந்தரியை இழக்கிறான். தந்தையின் முயற்சியால் நன்கு கற்று முன்னேறிய சங்கரன், தமிழ்க்கல்லூரியில் சேர்ந்து பயில விரும்புகிறான். பரமசிவத்தின் ஏழ்மை நிலை அதற்குத் தடையாக இருக்கிறது. இந்நிலையில் பரமசிவம் கடிதம் ஒன்றை எழுதிவைத்துவிட்டுத் தற்கொலை செய்து கொள்கிறார். "நான் உயிருடன் இருந்தால் படிப்பின் பொருட்டு நீ இடர்ப்படுவதை என்னால் சகிக்க இயலாது. மேலும், சாதி வெறி எனும் நச்சுக்கருத்தினைப் பெற்றுள்ள இச்சமூகம் என்னால் உன்னையும் வாழவிடாது. ஆகவே நான் இம் முடிவுக்கு வந்தேன். மதுரையில் உள்ள உன் அம்மாவின் அண்ணாவிடம் சென்று உதவிபெற்று, உன் எண்ணத்தை நிறைவேற்றிக்கொள். நான் இறந்துவிட்டதால், அவர் உனக்கு உதவுவார்

என எண்ணுகிறேன்”[77] எனக் கடிதத்தில் குறிப்பிட, மாமா முருகேச முதலியாரை அடைந்து தன் உயர் கல்விக்கு உதவுமாறு சங்கரன் வேண்டுகிறான். ஆனால் அவரோ “எனக்கு ஒரு தங்கை இருந்தாள் என்பதையே தலைமுழுகிவிட்டேனே. மானம் மரியாதை எதுவும் பாராமல் என்றைக்குச் சுந்தரி அந்தக்கீழ்ச்சாதிபய கூடப் போனாளோ, அன்றைக்கே நான் அவளை மறந்துவிட்டேனடா! இப்பொழுது நீ எந்த முகத்துடன் என்னைப் பார்க்க வந்தாய்? கீழ்ச்சாதிக்காரப்பய மகனுக்கும் எனக்கும் என்னடா உறவு?”[78] எனச் சாதித் திமிருடன் மறுத்துவிடுகிறார்.

பள்ளித் தலைமையாசிரியரின் உதவியால் கல்லூரிப்படிப்பைத் தொடர்ந்த சங்கரன், கல்லூரி வாழ்க்கையில் சுசிலா என்ற சகமாணவியைக் காதலிக்கிறான். இருவரும் வேறு வேறு சாதி என்பதை அறிந்தும் ஒருவரையொருவர் விரும்புகின்றனர். இருவரது உரையாடலில் பகுத்தறிவுப் பிரச்சாரத்தை இணைக்கிறார் கதையாசிரியர்.

“இட்டார் பெரியோர் இடாதோர் இழிகுலத்தார் என்ற ஔவையின் இருசாதிகளையும், பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்” என்ற வள்ளுவப் பெருந்தகையின் மனிதசாதி ஒன்றையும் நீங்கள் அறியவில்லையா? தமிழ் இலக்கியங்கற்ற நீங்களா இவ்வாறு பேசுவது”[79] சுசிலா வினவ அவளுக்கு மறுமொழியாகச் சங்கரன், “சுசிலா! நீ வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை எனும் மறையினைத் தந்த தமிழ்க்குடி மகள். ஆனால் உன் தந்தை மனுநீதி பெற்றெடுத்த இந்து மதத்தில் ஒருவர் அல்லவா! மதம் எனும் மதுவைக் குடித்து அதன் போதையிலே மயங்கி இருப்பாரல்லவா”[80] எனக் குறிப்பிடுகிறான். தமிழ் இலக்கியங்களின் கருத்துகள் சங்கரன் வாயிலாக வெளிப்படுகின்றன. இருவரும் வித்துவான் தேர்வில் முதல்வகுப்பில் வெற்றிபெறுகின்றனர். சுசீலா, சங்கரனைத் தன்னில்லத்திற்கு அழைத்துச்செல்கிறாள். அங்கு சென்ற சங்கரன் தன் மாமா முருகேசமுதலியாரின் மகள்தான் சுசீலா என்பதை அறிகிறான். முருகேசமுதலியார் மணம் மாறுகிறார். சங்கரனின் தமிழ்க்கல்விக்கு முன்னர் தன் சாதித்திமிரும்

பணத்திமிரும் சாய்ந்ததாகக் கூறி வருந்துகிறார். காதலர் இருவரும் இணைவதாகக் கதை நிறைவடைகிறது.

### 3.2.30. பகுத்தறிவு பெற்ற பரமசிவம்.

இளம் பெண்ணை பிறர் வற்புறுத்தலால் மணக்க இருந்த முதியவர் பரமசிவம், தன் நிலைமையை உணர்ந்து பகுத்தறிவு பெற்றுத் திருந்துவதை 'பகுத்தறிவு பெற்ற பரமசிவம்' என்ற சிறுகதை விளக்குகிறது. 11.10.1959 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இச்சிறுகதை வெளிவந்துள்ளது. பரமசிவ ஐயருக்கு நான்கு மனைவிகள். நால்வரும் இறந்துவிடுகின்றனர். குழந்தை இல்லாத பரமசிவ ஐயர் அறுபது வயதைக் கடந்துவிடுகிறார். அவ்வூரிலிருந்த 'அனுமந்த சர்மா' என்பவர், பரமசிவ ஐயருக்கு ஐந்தாவதாகப் பெண் பார்க்கிறார். சிங்கையூர் நாராயண ஐயருக்கு ஐந்து பெண் குழந்தைகள். குழந்தைகளை மணம் முடித்துக் கொடுக்க இயலாமல் வருந்தும், நாராயண ஐயரைச் சந்தித்த சர்மா, அவர் மகள் சீதாவைப் பரமசிவ ஐயருக்கு மணம்முடிக்க வேண்டுகிறார். தன் துன்ப நிலையை உணர்ந்து நாராயண ஐயரும் உடன்படுகிறார். ஆனால் இத்திருமணத்தை விரும்பாத சீதா, பரமசிவ ஐயருக்கு ஒரு கடிதம் எழுதி அதனைத் தன் அத்தை மகன் வரதன் வாயிலாகக் கொடுத்தனுப்புகிறாள். "தந்தையே! தாரமாக வேண்டியவள் தந்தையே என்று எழுதுகிறாளே எனத் திகைப்படையாதீர்கள். எனது தந்தையைக் காட்டிலும் பல்லாண்டுகள் மூத்தவரான தங்களைத் தந்தையே என்று எழுதாமல் வேறெப்படி எழுதுவேன்? நினைத்துப் பாருங்கள். தங்களுக்கு மகள் பிறந்திருந்தால் அவள் எனக்கு எத்தனையோ ஆண்டுகள் மூத்தவளாக இருந்திருப்பாளே. வயதில் அவள் எனக்கு அன்னையாக இருந்திருப்பாளே. வாழ்வின் எல்லைப் பாதையிலே தளர்நடைபோடும் தாங்கள் மடந்தையொருத்தியின் வாழ்வைப் பாழாக்குவதிலே என்ன சுகம் காண்பீர்கள்"[81] என்பதாகச் சீதா எழுதி அனுப்பிகிறாள். தன் தவறை உணர்ந்த பரமசிவ ஐயர் சீதாவைத் தன் மகளாக ஏற்றுக் கொண்டு அவளுக்குத் தன் சொத்துக்களை எழுதிவைக்கிறார். வைதீகத்தின் கொடிய பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு

பகுத்தறிவு பெற்றவராக மாறுகிறார் பரமசிவ ஐயர் என்பதாகக் கதை நிறைவடைகிறது. இளம்பெண்களை மணம் முடிக்க விரும்பும் பணம் படைத்த முதியோர்க்கு உணர்த்துகின்ற அறிவுறுத்தலாக இக்கதை அமைந்துள்ளது.

### 3.2.31. மழலை

'சிறுகதை மன்னர்' எனச் சிறப்பித்துப் போற்றப்படும் எஸ்.எஸ்.தென்னரசு, வாய்மொழியாக மக்களிடையே வழங்கிவந்த கதைகளின் அடிப்படையில் சில சிறுகதைகளைப் படைத்துள்ளார். அவற்றுள் 'மழலை' என்ற சிறுகதையும் ஒன்றாகும். சிவகங்கையை இராணி வேலுநாச்சியார் ஆண்ட காலத்தில், சிவகங்கைக்கு அருகிலுள்ள 'பெரியகோட்டை' என்ற கிராமத்தில் வேலுநாச்சியாரின் இரகசியப் படைத்தளம் இருந்தது. வேலுநாச்சியாரின் படைத்தளபதியாகப் பணியாற்றிய நாரணத்தேவரின் வாழ்வியலை அடிப்படையாக வைத்துப் பெரியகோட்டைப் பகுதியில் வாய்மொழியாக வழங்கிவந்த கதையினை 'மழலை' எனும் பெயரில் சிறுகதையாகப் படைத்துள்ளார் எஸ்.எஸ்.தென்னரசு. இச்சிறுகதை 31.1.1960 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது.

நாரணத்தேவரின் மனைவி திலகவதி. இருவருக்கும் குழந்தைகள் இல்லை. குழந்தை இல்லாத திலகவதியின் ஏக்கத்தை, "ஊருக்கு வெளியே வெகுதூரம் போய்வரும் கணவனை 'அப்பா' என்று அழைக்க ஒரு மழலை இல்லையே என்ற கவலை அவளை அரித்துத் தின்னத் தொடங்கிவிட்டது. எத்தனையோ முறை தனித்திருந்து துக்கித்திருக்கிறாள். புலம்பி அழுதிருக்கிறாள். எத்தனை சுகமிருந்தும் அவையனைத்தையும் குழந்தை இல்லாக் குறை விழுங்கி வந்தது"[82] எனக் கதையாசிரியர் விளக்குகிறார். குழந்தை இல்லாத திலகவதி, ஊராரின் ஏளனத்திற்கு ஆளாகிறாள். "திலகவதி உத்தமிதான். ஊரார் அதைப் புகழவில்லை. அவள் பணக்காரிதான், ஊரார் அதைச் சொல்லிப் பெருமைப்படவில்லை. அவள் சிறந்த அழகிதான். அந்தக் கிராமம் அதைக்கூடக் கூறவில்லை. ஆனால் அவள் மலடி என்பதை மட்டும் சுட்டிக்காட்டியது. நோயாளியின் வியாதியை என்ன என்று

கண்டுபிடிக்க முடியாமல் கைதேர்ந்த மருத்துவர்கள் கூடத் திண்டாடுகிறார்கள். ஒரு பெண் இன்னொரு பெண்ணின் குறையைக் கண்டுபிடிப்பதில் மட்டும் தவறியதே இல்லை”[83] எனக் கதைப்போக்குச் செல்கிறது. ‘சக்கந்தி’ எனும் சிற்றூரைச் சேர்ந்த கனகம், கதையில் இடம்பெற்றுள்ள மற்றறொரு பெண்பாத்திரம். நாரணத்தேவர் திலகவதியை மணப்பதற்கு முன்பே கனகத்திற்கும் நாரணத்தேவருக்கும் உறவு இருக்கிறது. அவ்வுறவின் பயனால் பிறந்த குழந்தையுடன் கனகத்தையும் பெரியகோட்டைக்கு அழைத்து வந்து தன் இல்லத்திற்கு அருகில் நாரணத்தேவர் குடிவைக்கிறார். அவளை வேலைக்காரி எனவும் கூறிவிடுகிறார். இதனை அறியாத திலகவதி, பிள்ளையில்லாத தனது குறையை மறைக்க, கனகத்தின் குழந்தையைத் தனக்காக அவளிடமிருந்து பெற்றுத்தருமாறு வேண்டுகிறாள். நிலைமைய உணர்ந்த நாரணத்தேவர், கனகம் தனது மூத்த மனைவி என்பதைத் திலகத்திடம் கூறி, இருவரையும் ஒற்றுமையாக இருக்க வேண்டுகிறார். குழந்தை நீலமணியைத் தம் குழந்தையாக நினைத்து வளர்க்கவும் வேண்டுகிறார். ஆனால் வஞ்சக எண்ணம் கொண்ட திலகவதி குழந்தையைக் கிணற்றில் தள்ளிக் கொலை செய்துவிடுகிறாள். “குழந்தை இருக்கிறது. ஆனால் பிணமாக இருக்கிறது” என்று அமைதியாகச் சொன்னாள். அந்த அமைதியில் வஞ்சகம் இருந்தது. பாதகம் இருந்தது. வெறி இருந்தது. நாரணர் எதுவும் பேசவில்லை. ஆனால் அவர் மனம் அவருக்கு ஒரு வினா விடுத்தது. நீலமணி என் குழந்தை என்று திலகவதிக்குத் தெரியாதிருந்தால் இந்தக் கொலை நிகழ்ந்திருக்குமா”[84] எனக் கதை முடிகிறது. தன் குறையை உணராத பெண்களின் மனப்பாங்கினை எடுத்துக்காட்டும் வகையில் இச்சிறுகதை அமைந்துள்ளது. சிவகங்கை வட்டாரத்தில் வாய்மொழியாக வழங்கி வந்த கதையை இச்சிறுகதை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

### 3.2.32. வாழவிடுமா சமுதாயம்?

இளம் விதவைப் பெண்ணின் துன்ப வாழ்க்கையை ‘வாழவிடுமா சமுதாயம்?’ என்ற சிறுகதை சித்திரிக்கிறது. சா. சதாசிவம் என்பவரால் எழுதப்பட்ட இச்சிறுகதை

1.5.1960 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. சிறுகதையின் இடையிடையே சமூகச் சீர்திருத்தக் கருத்துகள் இழையோடுகின்றன. “வாழும் சமுதாயம் ஒரு நீரோடை. சாதிவெறிச் சாக்கடையில் புரண்டெழுந்து மூடக் கொள்கையெனும் புழுக்கள் நெளியும் தண்ணீரைக் குடித்த சனாதன எருமைகள், நீரோடையைக் கலக்கும்போது அங்கே கேடு விளையுமே தவிர, நாடு செழிக்கும் நன்மையா கிடைக்கும்?”[85] எனக் கதையைத் தொடங்கும் ஆசிரியர், கணவனை இழந்த கைம்பெண்ணின் நிலையை, “மரம் பட்டுப்போனால், தழுவிநிற்கும் கொடியுமா கருக வேண்டும்? இலை உதிர்ந்துவிட்டால், மரம் தளிர்விடாமல் இருப்பதில்லை! ஆனாலும் பழையன கழிந்து புதியன பூத்துக் குலுங்க வேண்டிய இந்த நூற்றாண்டிலும், நூலறிவற்றோர் - எல்லோரும் வாழவேண்டும் என்ற எண்ணமற்றோர் - பித்துமனம் படைத்தோர் பிதற்றிச் சென்ற முடைநாற்றம் வீசும் மூடக் கருத்துக்களை – முட்டாள்தனமான சட்டதிட்டங்களைத் தேவவாக்கெனக் கருதித் தெள்ளிய நீரோடையில் நஞ்சு கலப்பதுபோல பாவையர் வாழ்வைப் பாலைவனமாக்குகின்றனர்!”[86] என்று குறிப்பிட்டுச் சமூக நிலையை உணர்த்துகிறார். மழைபொழியும் இரவு நேரத்தில் ஊரைவிட்டு வெளியேறும் அவ்விதவைப்பெண், வேறொரு ஊரில் மணிமுடி என்ற வாலிபனைச் சந்திக்கிறாள். தான் வாழ்வைத் தேடுவதாகவும், அவ்வாழ்வு தொடுவானம் போல் எட்டாத தொலைவிற்குச் சென்றுகொண்டே இருப்பதாகவும் தன்னிலையை உணர்த்துகிறாள். அவளை அவன் மறுமணம் செய்துகொள்ள விரும்புவதாகவும் கூறி, அவளைத் தன் இல்லத்தில் இருத்துகிறான். ஆனால் ஊரார் அவன் செயலை எதிர்த்து அவனைக் கல்லால் அடித்துத் துன்புறுத்துகின்றனர். தன்னால் எவருக்கும் துன்பம் வேண்டாமெனக் கருதிய அவள் கடலில் மாய்ந்து தன்னுயிரைப் போக்கிக்கொள்கிறாள். “ஆமாம்! சிரித்துக்கொண்டே சாகிறேன். இந்தச் சீர்கெட்ட சமுதாயத்தை நினைத்து! ஏ, பழைமை வெறியர்களே! பகுத்தறிவு பெறுவீர்!”[87] என்பதாகக் கதை முடிகிறது. கைம்பெண்களின் அவல நிலையை இக்கதையாசிரியர் எடுத்துக்காட்டுவதோடு,

கைம்பெண்களுக்கு மறுவாழ்வு அளிக்க முன்வரும் இளைஞர்களைத் துன்புறுத்தும் சமூகத்தினர் செயலைச் சாடுவதாகவும் அமைந்துள்ளது.

### 3.2.33. சாமியார்

ஊராரை ஏமாற்றிப் பிழைப்பதற்காகச் சாமியார் வேடம் பூண்டு திரியும் மனிதர்களை 'சாமியார்' என்ற தலைப்பில் வெளிவந்த சிறுகதை அடையாளப் படுத்துகிறது. போலித் துறவிகள் பலர் நாட்டில் நடமாடுவதை, "சிலர் மணம் செய்து கொள்ளாமல், செய்து கொள்ள முடியாமல் துறவறம் மேற்கொள்வார்கள். ஒருசிலர் மணம்முடித்துச் சில ஆண்டுகள் மனைவியுடன் இன்பமாகக் கூடிவாழ்ந்து, இரண்டு மூன்று பிள்ளைகளுக்குத் தகப்பனாகி, மனைவியையும் குழந்தைகளையும் நடுத்தெருவில் திண்டாடவிட்டு, இல்லற வாழ்வில் வெறுப்புற்றவர்களாகத் துறவறத்தை மேற்கொள்வர். மற்றொரு சாரார் கொலை, களவு போன்ற குற்றங்களைச் செய்துவிட்டுப் போலீசுக்கு மறைத்து சடாமுடியும் தாடியும் வளர்த்துக் கொண்டு துறவறத்தை மேற்கொள்வார்கள்"[88] எனக் கதையில் ஆசிரியர் எடுத்துரைக்கிறார். சாமியார் வேடம் பூண்டு முல்லைக்காட்டில் தங்கியிருக்கிறான் முத்தப்பன். அவனைக் கதையின் கடைசியில் அறிமுகப்படுத்திக் கதைத் தலைப்பைப் பொருத்துகிறார் ஆசிரியர். "இதே மாதிரி கால்களையுடைய மனிதனின் பெயர் முத்தப்பன் அல்லவா! இரண்டு ஆண்டுகளுக்கு முன்புவரை இதே ஊரில்தான் இருந்தான். ஆனால் இவன் கள்ளத்தனமாய்ச் சாராயம் காய்ச்சி வியாபாரம் செய்ததால் இவன்மேல் போலீசார் வழக்குத்தொடர்ந்து, இரண்டாண்டு சிறைத்ததண்டனையும் அளித்தனர் கோர்ட்டார். அன்று சிறைக்குப் போனவன்தான் இன்று சாமியார் வேடத்தில் முற்றும் துறந்த முனிவரைப்போல், அமைதியாக, தாடியும் சடாமுடியும் நெற்றியில் திருநீறும், கழுத்தில் உத்திராட்சமும் இடையில் ஓர் காவி உடையும் அணிந்து இந்தத் தோப்புக்கு வந்துவிட்டான் போலும்"[89] எனக் கதை நிறைவுறுகிறது.

சமூகக் குற்றங்களைச் செய்து தண்டனை பெற்ற சிலர் சாமியார் வேடத்தில் உலவுவதை கதையின் வாயிலாகக் காட்டுகிறார் ஆசிரியர். இச்சிறுகதை ஆதவன் என்ற பெயரில் 12.3.1961 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது.

### 3.2.34. மாறவில்லை

மக்களிடையே புரையோடியுள்ள குருட்டு நம்பிக்கைகளை அடிப்படையாக வைத்து 'மாறவில்லை' என்ற சிறுகதை புனையப்பட்டுள்ளது. இச்சிறுகதையாசிரியர் கனகு என்பவர் ஆவார். இச்சிறுகதை 27.8.1961 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. ஊரின் புறத்தே நிற்கும் கருவேலமரமும், புளியமரமும் தமக்குள் பேசிக்கொள்வதைப் போன்று படைக்கப்பட்டுள்ள இக்கதையில் சமகால மக்களின் வாழ்க்கைநிலை எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. ஊர்மக்களுக்கு நிழல் கொடுத்த கருவேல மரத்தைத் தாசில்தார் ஒருவர் வெட்டுவதற்கு உத்தரவிடுகிறார். அந்நிலையில் அங்கு பாம்பு ஒன்று சீறிவர, மரம் வெட்டும் முயற்சி தடைபடுகிறது. காலங்கள் ஓடுகின்றன. மரத்தை ஏலம் எடுத்த ஒருவர் மரத்தை வெட்டுவதற்கு முயல்கிறார். இந்நிலையில் இருமரங்களும் அதிலிருக்கும் சிட்டுக்குருவியும் தமக்குள் பேசிக்கொள்கின்றன. மக்களிடையே தெய்வநம்பிக்கை குறைந்து வருதைக் கருவேலமரம் எடுத்துக்கூறி, நம்பிக்கைகள் மாறிவருவதனால் தான் வெட்டப்படுவது உறுதியென உரைக்கிறது. ஆனால் மரத்திலிருந்த சிட்டுக்குருவி மக்கள் இன்னும் முழுமையான பகுத்தறிவு பெற்றவர்களாக மாறவில்லை என்று கூறுகிறது. "பழைமை மாறவில்லை, வைதீகப்பிடி தளரவில்லை. சாதி இல்லை, தீண்டாமை இல்லை என்பதெல்லாம் வெறும் பேச்சளவோடுதான் இருக்கிறது. நடைமுறையில் இல்லை. தீண்டாமையை ஒழித்துவிட்டோம் என்று மேடையதிரப் பேசுவார். அவரே தம்முடைய வீட்டுக்கு வந்துவிட்டால், தெருவோரத்தில் அவர் பண்ணையில் வேலை செய்யும் காத்தானைக் காண்பார். காத்தான் தீண்டப்படாத வகுப்பைச் சேர்ந்தவன். வந்தவனுக்குக் கஞ்சி ஊற்றச் சொல்லி இல்லக் கிழத்தியிடம் கட்டளையிடுவார். அந்த அம்மையார் தமது அடுக்களை ஆளிடம் பழைய கஞ்சியை ஒரு கலயத்தில்

கொண்டுபோய்த் தெருவில், காத்தானைக் குந்தவைத்து எட்டி நின்று ஊற்றச் சொல்லுவார்கள். இதுதான் இன்றைய நாட்டின் நிலைமை"[90] எனக் குருவி மரத்திடம் குறிப்பிடுகிறது. இறுதியில் சிட்டுக்குருவி செய்யும் தந்திரத்தால் கருவேலமரம் வெட்டப்படாமல் காக்கப்படுகிறது. வைதீகத்தின் பிடியிலிருந்து தமிழக மக்கள் விடுபடவில்லை என்பதை எடுத்துரைக்கும் இச்சிறுகதை, பழைய குருட்டு நம்பிக்கைகள், வேற்றுமை மனப்பான்மை உடையவர்களாக மக்கள் இருப்பதைப் புலப்படுத்துகிறது.

### 3.2.35. பெருமூச்சு

'பெருமூச்சு' என்ற சிறுகதை 8.4.1962 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. இச்சிறுகதை ஆசிரியர் 'ஈழம் மார.தமிழ்ச்செல்வன் ஆவார். மனிதன் துன்பத்தில் வெளியிடுகின்ற பெருமூச்சின் வரலாறானது ஒரு புதுமையான நிகழ்ச்சிகளின் தொகுப்பு என்பதைச் சிறுகதையில் குறிப்பிடும் ஆசிரியர், பெருமூச்சிற்குப் பொருள்காண விழைவது புதிருக்கு விடைகாண முயல்வதைப் போன்றதாகும் என்கிறார். தாயற்ற நிலையில் தந்தையின் அரவணைப்பால் வளரும் இருளப்பன், தந்தையின் அகால மரணத்திற்குப் பின்னர் செயலற்று, வாழவகையின்றி நிற்கிறான். அவனின் அத்தை மகள் முனியம்மா, இருளப்பனை விரும்புகிறாள். ஆனால் அவள் தந்தை, இருளப்பனை ஏற்காது இகழ்ந்துரைக்கிறார். இதனால் இருளப்பன் ஊரைவிட்டு வெளியேறும் எண்ணம் கொள்கிறான். அவனுடன் இணைந்து வாழவிரும்பிய முத்தம்மா வாழ்வியலை இருளப்பனுக்கு எடுத்துரைக்கிறாள். "முயற்சி மெய்வருத்தக் கூலிதரும் அத்தான். கூலி வேலை என்றாலும் கூடிச் செய்வோம். கூழ் என்றாலும் அதை அமுதமாக நினைத்து அன்புடன் குடிப்போம். எந்நாளும் குடும்பம் என்ற படகில் இரு துடுப்புக்களாக இருந்து, வாழ்க்கை என்ற ஆழ்கடலில், இல்லறமென்ற நல்லறத்தின் பயணத்தைத் தொடங்குவோம். பிணைந்தே வாழ்வோம். இறப்பென்றாலும் இணைந்தே இறப்போம்."[91] என உரைக்கிறாள். வாழ்க்கையின் உணமைகளை உணர்ந்த இருளப்பன், "பல்கலைக் கழகங்களில் சொல்லித்

தரப்படுகின்ற பாடங்களையும், புத்தகங்கள் அறிவுறுத்துகின்ற அறிவுரைகளையும்விடச் சமூகம் என்ற கலாசாலையில் ஏற்படுகின்ற அனுபவம் என்ற அறிவே சாலச்சிறந்ததென்பதை இப்பொழுது உணர்கிறேன்”[92] எனக் குறிப்பிட்டு, ஏக்கப்பெருமூச்சுவிட்டு உலக இயல்புகளை உணர்கிறான். சமூகவாழ்க்கையின் உண்மைநிலைமைகளை எடுத்துரைக்கும் வகையில் இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 3.2.36. நிம்மதி கிடைத்தது

மூடநம்பிக்கையின் அடிப்படையில் நடைபெறும் சடங்குகள், பொருந்தாமணம், இளம்பெண்கள் முதிய ஆடவரை மணப்பதால் நடைபெறும் சமூகச்சீர்கேடுகள், சமூகக் கட்டுப்பாடுகளை உடைத்து பகுத்தறிவிற்கேற்ற செயல்களைச் செய்தல் ஆகியவற்றை அடிப்படையாக வைத்து ‘நிம்மதி கிடைத்தது’ என்ற சிறுகதையை இரத்தினக்குமார் புனைந்துள்ளார். இக்கதை 23.12.1962 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. செல்லையா-சின்னம்மாள் தம்பதியினரின் ஒரே மகன் சீராளன். சிறுவயதில் கோவில்களில் ஆடுகளையும் பன்றிகளையும் பலியிடுவதைப் பார்த்த சீராளன், தெய்வத்திற்கு விலங்குகளைப் பலியிடுபவர்களைக் கெட்டவர்கள் என்று கூறுகிறான். இதைக்கேட்ட கோயில் பூசாரி, சீராளன் கழுத்தை நெறிக்கிறார். சாமியாடிய பூசாரியிடமிருந்து தன் மகனைச் சின்னம்மாள் விடுவிக்கிறாள். இருப்பினும் சீராளன் சில நாள்களில் இறந்துவிடுகிறான். மகன் இறந்த துன்பமிகுதியால் சின்னமாளும் இறக்கிறாள். இருவரையும் இழந்த செல்லையா, சச்சிதானந்த ஓதுவாரின் வஞ்சகச் செயலை அறியாமல் பதினாறு வயது பார்வதியை மணக்கிறார். இருப்பினும் அவளிடம் நெருங்கிப்பழக இயலாத நிலையில் செல்லையா இருக்கிறார். தோட்டக்காரன் கண்ணப்பனும், பார்வதியும் உறவுகொள்வதைப் பார்த்த செல்லையா ஒரு முடிவிற்கு வந்தவராக இருவருக்கும் திருமணம் செய்து வைத்து நிம்மதியடைகிறார். “தாலிதான் பெண்களுக்கு வேலி’ என்பார்கள். திருமணம் ஆகும் முன்பே கற்பை இழந்தவர்களும் உலகத்தில் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் பார்வதி திருமணமான பிறகும் கூடக் கற்பை இழக்கவிலலை. அவளுடைய கழுத்திலே இருக்கின்ற தாலி என்னைப்

பொறுத்தவரையில் இதுநாள்வரை வேலியாகவே இருந்து வருகிறது."[93] எனக் கூறிவிட்டு, "பார்வதி நீர் நிறைந்த குளத்தில் நீந்தவேண்டிய மீன். நானோ காய்ந்துபோன நிலம்-நீரற்ற குளம்! கடலில் கிடக்க வேண்டிய மீனைத் தூக்கித் திடலில் போட்டால் கிடக்குமா? நீருள்ள இடத்திற்குத்தானே துள்ளியோடும்! அது தேடி ஓடும் நீர் ஆற்று நீரோ, குளத்துநீரோ. கிணற்றுநீரோ எந்த நீராயிருந்தால் என்ன? கண்ணப்பா! நீர் நிறைந்தகுளம் நீ! அதில் நீந்த வேண்டிய மீன் பார்வதி! ஆகையினால்தான் சொல்லுகிறேன், இன்று முதல் நீதான் பார்வதியின் கணவன்! பார்வதிதான் உன் மனைவி"[94] எனக் கூறி இருவருக்கும் செல்லையா புரட்சிகரத்திருமணத்தைச் செய்து வைக்கிறார். பொருந்தா மணம், பெண்களை முறையற்ற பாலுறவிற்கு அழைத்துச் சென்று சமூகச் சீர்கேட்டை விளைவிக்கும் என்பதை இக்கதையின் வாயிலாக ஆசிரியர் உணர்த்தியுள்ளார்.

### 3.2.37. இரவல் மனைக்கட்டு.

வஞ்சக எண்ணம் கொண்ட பணக்காரர்களால் துன்புறும் ஏழையின் நிலையை விளக்கும் வகையில '‘இரவல் மனைக்கட்டு’ எனும் சிறுகதை புனையப்பட்டுள்ளது. 30.12.1962 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்த இச்சிறுகதை, ச.கனகராசன் என்பவரால் எழுதப்பட்டுள்ளது. ஏழைத் தொழிலாளியான முருகன், தன் முதலாளிக்கு உண்மை ஊழியனாக உழைக்கிறான். நிலத்தைப் பண்படுத்திச் செழிப்பாக்குகிறான். தனக்கென்று ஒரு வீட்டைக் கட்ட விரும்பிய முருகன் தன் முதலாளியிடம் சிறிது சிறிதாகப் பணத்தைக் கொடுத்து வைக்கிறான். அவன் கொடுத்த ஐந்நூறு ரூபாயைப் பெற்றுக் கொண்ட முதலாளி வெட்டவெளியாகக் கிடந்த ஒரு இடத்ததைக் காட்டி அதில் வீடு கட்டிக்கொள்ளச் சொல்கிறார். அனால் அவ்வீட்டிற்கு எவ்வித சாசனமும் அவர் செய்து தரவில்லை. "பகல் பூராவும் சம்பளத்திற்கு முதலாளிக்கு வேலை செய்துவிட்டு, இரவெல்லாம் மண்வெட்டி பிடித்து வெட்டிச் சீர்திருத்தினான். அதனைப் பண்படுத்த பட்டபாடு சொஞ்ச நஞ்சமல்ல. இரவென்றும் பகலென்றும் பாராது உழைத்துச் சீர்திருத்திய திடலில், தென்னையும் பலாவும் மாவும் வாழையும் போட்டுப்

பயிராக்கினான். புல்கூட முளைக்காத வறண்ட பூமி, எழில்வளமும் பயிர்வளமும் மிகுந்த தோட்டமாக உருப்பெற்றது"[95] என முருகனின் உழைப்பின் மேன்மையை விவரிப்புச் செய்துள்ளார் சிறுகதையாசிரியர் ச. கனகராசன். நிலத்தின் வளத்தைப் பார்த்த முதலாளி அந்நிலத்தை முருகனிடமிருந்து அபகரிக்கிறார். முதலாளித்துவத்தின் வஞ்சகச் செயல்களைப் படம்பிடித்துக்காட்டும் வகையில் இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 3.2.38. தங்கச் சங்கிலி

ப.கதிரவன் என்பவர் எழுதிய 'தங்கச் சங்கிலி' என்ற சிறுகதை 1.2.1963 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. குடிப்பழக்கத்தின் தீமையை எடுத்துரைக்கும் வகையில் இச்சிறுகதை அமைந்துள்ளது. பொன்னைக்காட்டிலும் 'சுயமரியாதை' மிகவும் உயர்ந்ததென்பதையும் இச்சிறுகதை எடுத்துரைக்கிறது. பொன்னம்மாளின் கணவன் மாரிமுத்து, குடிப்பழக்கத்திற்கு அடிமையாகிறான். அச்சுப்பட்டறைத் தொழிலாளியான அவனை, "அன்றாடம் உழைத்துத்தான் சாப்பிடவேண்டும் என்ற உன்னதநிலையில் இருப்பவன். அப்படி இருந்தும் ஓரிரு கெட்ட பழக்கங்கள் அவனை ஒட்டி இருக்கத்தான் செய்தன. அவனிடம் இருந்த குடிப்பழக்கம் அவனை அறியாமலேயே, அவன் குடியைக் கெடுத்து வந்தது. அரசாங்கத்தின் அனுமதியுடனேயே அவைகளையெல்லாம் அருந்துவதற்கு அவன் என்ற செல்வச் சீமானா? மறைந்தும் பதுங்கியும் அவன் இலட்சியத்தை நிறைவேற்றியே வந்தான்"[96] எனக் கதையில் அறிமுகம் செய்கிறார் ஆசிரியர். வேலையிழந்த மாரிமுத்து, கடனை அடைப்பதற்காகப் பொன்னம்மாளின் தங்கச்சங்கிலியைக் கேட்கிறான். அவள் மறுக்கிறாள். இதனால் இருவருக்கும் கருத்துவேறுபாடு முற்றுகிறது. தாய்வீட்டிற்குச் சென்ற பொன்னம்மாள் மீண்டும் வருகிறாள். அவள் கணவனைக் காவலர்கள் பிடித்துச் சென்றுவிடுகின்றனர். இந்நிலையில் தன் தங்கச் சங்கிலியைக் கொடுத்துக் கணவனை மீட்பதாகக் கதை நிறைவடைகிறது.

“கடனைத் தீர்த்துச் சுயமரியாதையைக் காக்க இந்தப் பொன் நகையைக் கொடுப்பதே சிறந்தது’ – என எற்கனவே முடிவு செய்திருந்த அவள், தற்சமயம் அதைவிட உயர்ந்த செயலுக்கு அதை அர்ப்பணித்து விட்டதாக எண்ணி அகமகிழ்ந்தாள். பொன்னகையைவிடப் புன்னகை மேலும் அவளுக்கு எழில் ஊட்டியது”[97] எனச் சிறுகதையில் இடம்பெற்றுள்ள கருத்து, பெண்களும் சுயமரியாதை கொண்டவர்களாகத் திகழவேண்டும் என்ற நோக்கத்தை வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது.

### 3.2.39. கள்ளத்தோணி

இலங்கைத் தமிழர்களின் இன்னல்களை ‘கள்ளத்தோணி’ என்ற சிறுகதை விளக்கிக்காட்டுகிறது. இச்சிறுகதையின் ஆசிரியர் த. கலைக்கோவன். இச்சிறுகதை 7.4.1963 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. கள்ளத்தோணி ஏறி இலங்கைக்குப் பிழைக்கச்சென்றவர்களின் நிலையை, “வாழ வகையின்றிப் பெற்றெடுத்த தாயையும், பிறந்த பொன்னாட்டையும், உற்றார் உறவினர், பெண்டு பிள்ளைகளை விட்டுக் கடல் கடந்து சென்று கூலி வேலைசெய்து குடலைக் கழுவுவோம், பெற்றடுத்தவரை, இன்பச் செல்வங்களைக் காப்பாற்றுவோம்’ என்று சென்றவர்கள் கடலிலே பிணமாகிக் கரையிலே கிடந்தனராம். வயிற்றுப் பசியைப் போக்க- வாழ்க்கையிலே சிறகடித்துப் பறக்கத் துடித்தவர்கள் கடலின் கோரப் பசிக்கு இரையானார்களாம்”[98] என ஆசிரியர் எடுத்துக்காட்டுகிறார். இவ்வாறு இறந்தவர்களுள் ஒருவருடைய மனைவி நஞ்சுண்டு மாண்ட செய்தியைச் செய்தித்தாளில் படித்த ஒருவரின் நிலையைக் கதையாக விவரிக்கிறது.

கள்ளத்தோணி ஏறி இலங்கை செல்லவிரும்பிய அமிர்தலிங்கத்தை அவன் மனைவி முத்தம்மாள் தடுத்து, உள்நாட்டிலேயே கூலிவேலை செய்து பிழைக்கலாம் எனக் கூறுகிறாள். அவளிடம் அமிர்தலிங்கம், “உன்னைத் தனியே விட்டுச் செல்கிறேனே என்று குமுறாதே முத்தம்மா! நீ உலகம் தெரியாதவள்! வறுமைப் பிடியிலே சிக்கித் தவிக்கும் நம்மை இந்த உலகம் மேலும் மேலும் வதைக்கத்தான்

செய்யுமே தவிர, வாழ்த்தாது முத்தம்மா! கரை சேர்க்காது முத்தம்மா! அதல பாதாளத்திலே தள்ளி ஆனந்தப் பண்ணிசைக்கும் இந்த உலகம்! காசு உள்ளவனைத்தான் கைகூப்பி வரவேற்கும். சொந்த நாட்டானைச் சோற்றுக்குத் திண்டாடவிட்டு வந்தவனுக்குத்தான் வாழ்த்துப்பாடும். ஒரு காலத்தில் சீரும் சிறப்புடன் வாழ்ந்தவர்கள் இன்று நாதியற்று, நடுத்தெருவிலும், நாட்டை விட்டு ஓடியும் பராரியாய், பஞ்சைகளாகத் திரிகின்றனர்”[99] என எடுத்துரைக்கிறான். திருமணமாகி ஆறு மாதங்களில் தமக்கு இந்நிலை ஏற்பட்டதற்கு வருந்துகிறாள் முத்தம்மா. கள்ளத்தோணி ஏறிச்சென்ற அமிர்தலிங்கம் கடலின் கோரப்பசிக்கு இரையாகி உயிர்விடுகிறான். நிகழ்வினைச் செய்தித்தாள் வழி அறிகிறாள் முத்தம்மா. “அலைகடலை நோக்கி ஆவேசம் கொண்டவளைப் போல ஓடினாள். வெறித்துப் பார்த்தாள். திரும்பி வீட்டை நோக்கி ஓடிவந்தாள். அவளுக்கென்ன சித்தம் கலங்கிவிட்டதா? ஓடினாள் வீட்டினுள்ளே, தாழ்ப்பாள் போட்டாள். எதையோ தேடி எடுத்து வாய்க்குள் போட்டு ‘மடக் மடக்’ என்று தண்ணீரைக் குடித்தாள். பாயை விரித்துப் படுத்தாள். உறக்கத்தில் ஆழ்ந்து விட்டாள்”[100] என நஞ்சுண்டு மாண்ட முத்தம்மாளின் நிலையை எடுத்துரைத்துக் கதையை நிறைவு செய்கிறார். சொந்த நாட்டில் வாழ, வழியற்றுக் குடும்பத்தை விட்டுப் புலம் பெயர்ந்து சென்ற தமிழர் வாழ்வியல் இச்சிறுகதையில் புலப்படுத்தப்பட்டுள்ளது.

## 3.3. தொகுப்புரை

- இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தமிழகத்தில் நிலவிய சூழல்களைத் திராவிட நாடு இதழில் இடம்பெற்றுள்ள சிறுகதைகள் உணர்த்தி நிற்கின்றன. வர்ணாசிரமத்தின் பிடியில் அமிழ்ந்து உழன்ற மாந்தர்களின் வாழ்வியல் நிகழ்வுகள், திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ள சிறுகதைகளில் விவரிக்கப்பட்டுள்ளன.

- வர்ணாசிரமக் கொள்கைகளின்பால் ஈடுபாடு கொண்ட பார்ப்பனர்கள், பணம் படைத்த முதலாளிகள், தன்னலம் சார்ந்த அரசியல்வாதிகள் போன்றோர் சிறுகதைகளில் எதிர்நிலை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.
- முதலாளித்துவம், சாதிய ஆளுமை, மூடநம்பிக்கை போன்றவற்றை எதிர்த்துப் போராடுகின்ற அடித்தள மக்கள், சிறுகதைகளின் கதைமாந்தர்களாய் அமைந்துள்ளனர். அடித்தட்டு மக்களைச் சமூக அநீதிகளுக்கு எதிராகப் போர்க்குரல் எழுப்புகின்ற ஆற்றல் வாய்ந்தவர்களாக மாற்றுவதற்குத் திராவிடநாடு இதழ் முயன்றுள்ளதைச் சிறுகதைகள் புலப்படுத்துகின்றன.
- சிறுகதைப் படைப்பாளாகள் தம் கதைகளில் சமுகச் சிக்கல்களை மட்டும் முன்னிறுத்தாமல் அவற்றிற்கான தீர்வுகளையும் முன்மொழிந்துள்ளனா். சில கதைகள், வாசகனிடம் வினாக்களை எழுப்பி அவனைச் சிந்தனைத் தளத்தினை நோக்கி நகர வைத்துள்ளது. சமுகச் சீர்திருத்தம் என்பது படைப்பாளனிடம் இருந்து வருவதைவிடச் சமுகத்திலிருந்து வருவது சிறப்பானது என்ற சிந்தனையைத் திராவிடநாடு இதழில் வெளிவந்த சிறுகதைகள் உணர்த்துகின்றன.
- இளம்வயதில் கணவனை இழந்த மகளிரின் துன்ப வாழ்வியலை இதழில் இடம்பெற்றுள்ள பல்வேறு சிறுகதைகள் எடுத்துரைத்துள்ளன. இத்தகைய கதைகளின் முடிவுகள் விதவை மறுமணத்தை ஆதரிப்பதாய் அமைந்துள்ளன.
- திராவிடநாடு இதழின் நோக்கம், இலக்கியம் வளர்ப்பது என்பது மட்டுமல்லாமல் இயக்கம் வளர்ப்பது என்றும் அமைந்தமையால் அத்தகைய கொள்கைகளை வெளிப்படுத்தும் பாத்திரங்கள் சிறுகதைகளில் மிகுதியும் இடம் பெற்றுள்ளன.
- முதலாளித்துவத்தின் ஆணவப் போக்கு, எதிர்த்துப் போராட இயலாத மக்களின் அவலநிலை, பெண்களுக்கு எதிரான கொடுமைகள், தீண்டாமைக் கொடுமைகள், சாதியின் பெயரால் நிகழ்த்தப்படுகின்ற சமூக அவலங்கள், அரசியலில்

செல்வாக்குப் பெற்ற மாந்தர்களின் தீச்செயல்கள் போன்றவற்றைத் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ள சிறுகதைகள் கதைக் கருக்களாகக் கொண்டுள்ளன.

❖ சிறுகதைகள் எளிய நடையில் அமைந்துள்ளன. தூய தமிழ்ச்சொற்களைப் பல்வேறு சிறுகதையாசிரியர்கள் தம் கதைகளில் பயன்படுத்தியுள்ளனர். இந்திமொழிக்கான எதிர்ப்புக்குரலும் திராவிடநாடு இதழ்ச் சிறுகதைப் படைப்பாளர்களிடம் காணப்படுகின்றது. தமிழ்மொழியின் வளர்ச்சி சார்ந்த சிந்தனைகள் அவர்தம் படைப்புகளில் இடம்பெற்றுள்ளன.

❖ சமகால அரசியல் நிகழ்வுகள், நாளிதழ்களில் இடம்பெற்றுள்ள செய்திகளின் அடிப்படையில் சில சிறுகதைகள் புனையப்பட்டுள்ளன. நடப்பு நிகழ்வுகளை சிறுகதை வடிவத்தின்வழி கொணர்ந்து மக்களின் கவனத்தை அதன்பால் ஈர்க்கும் உத்திமுறையைத் திராவிடநாடு இதழ் பின்பற்றியுள்ளது.

❖ தமிழ்ச் சிறுகதையாசிரியர்கள் பலரைத் தமிழ் இலக்கிய உலகிற்கு அறிமுகம் செய்த பெரும்பணியைத் திராவிடநாடு இதழ் செய்துள்ளது.

## சான்றெண் விளக்கம்.

1. சே. இராசேந்திரன், தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம், ப.133.
2. திராவிடநாடு, 29.3.1942, ப.11.
3. மேலது, ப.11
4. மேலது,12.4.1942, ப.4.
5. வே. ஆனைமுத்து (ப.ஆ.), பெரியார் ஈ.வெ.ரா.சிந்தனைகள், தொ.3, ப.1615.
6. திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், திரு.வி.கலியாணசுந்தரனார், ப.779.
7. திராவிடநாடு,19.4.1942, ப.9.
8. மேலது, ப.11.
9. மு. கருணாநிதி, நெஞ்சுக்கு நீதி, முதல் பாகம், ப.74.
10. திராவிடநாடு, 26.4.1942, ப.4.
11. மேலது.
12. மேலது.
13. மேலது.
14. தொ. பரமசிவன் (தொ.ஆ.), பாரதிதாசன் பாடல்கள்,ப.92.
15. திராவிடநாடு, 4.11.45, ப.9.
16. மேலது.
17. மேலது, 12.1.1947, ப.14.
18. மேலது. ப.15.
19. மேலது.
20. மேலது, ப.33.
21. மேலது.
22. மேலது. ப.34.
23. மேலது, ப.31.
24. மேலது, 31.8.1947, ப.16.
25. மேலது, 14.12.1947, ப.12
26. மேலது.
27. மேலது, 2.12.1948, ப.12.
28. மேலது.
29. மேலது, 13.6.1948, ப.3.
30. மேலது, 1.5.1949, ப.4.
31. மேலது, ப.13.
32. மேலது, ப.15.

33. தமிழண்ணல் குறள் நெறி, 15-09-1964, கழகக் குரல், 26-09-1976.
34. மேலது, 4.12.1949.ப.7.
35. மேலது.
36. மேலது, 14.1.1950, ப.3.
37. மேலது, ப.44.
38. மேலது, 29.1.1950, ப.2
39. மேலது.
40. மேலது.
41. மேலது, 4.2.1951, ப.5.
42. மேலது, ப.8.
43. மேலது.
44. மேலது, 6.5.1951,ப.1.
45. குறள்: 970.
46. திராவிடநாடு, 13.1.1952, ப.17.
47. மேலது, ப.18.
48. மேலது, பக்.19-20.
49. மேலது, ப.22.
50. மேலது. ப.24.
51. மேலது, ப.24.
52. மேலது, 18.7.1954.ப.3.
53. மேலது.
54. மேலது, 1.8.1954, ப.12.
55. மேலது, 14.1.1955, ப.83.
56. மேலது.
57. மேலது, ப.86
58. மேலது, 25.9.1955, ப.13.
59. மேலது.
60. மேலது, 15.1.1956. ப.24.
61. மேலது.
62. மேலது. ப.24.
63. மேலது, ப.25.
64. மேலது, 22.4.1956, ப.11.
65. மேலது.

66. மேலது, 15.9.1957, ப.8.
67. மேலது, ப.9.
68. மேலது, 13.10.1957, ப.15
69. மேலது, ப.15
70. மேலது.
71. மேலது, 9.3.1958, ப.11.
72. குறுந்தொகை, பா.57.
73. திராவிடநாடு, 5.10.1958. ப.12.
74. மேலது, 2.11.1958. ப.7.
75. மேலது.
76. மேலது, பக்.7-8.
77. மேலது, 22.2.1959, ப.11.
78. மேலது, ப.10
79. மேலது, ப.12.
80. மேலது.
81. மேலது, 11.10.1959. ப.7.
82. மேலது, 31.119.60, ப.5.
83. மேலது.
84. மேலது. ப.9.
85. மேலது, 1.5.1960.ப.3.
86. மேலது.
87. மேலது, ப.14.
88. மேலது, 12.3.1961. ப.7.
89. மேலது.
90. மேலது, 27.8.1961, ப.4.
91. மேலது, 8.4.1962, பக். 11-12.
92. மேலது. ப.12.
93. மேலது, 3.12.1962, ப.15.
94. மேலது, ப.16.
95. மேலது, 30.12.1962.. ப.11.
96. மேலது, 10.2.1963. ப.11.
97. மேலது, ப.12.
98. மேலது, 7.4.1963, ப.11.
99. மேலது.
100. மேலது, ப.12.

# இயல்-4

# திராவிடநாடு இதழில் நாடகங்கள்

## 4.0. முன்னுரை

நாடகக் கலை வாயிலாக இயக்கக் கொள்கைகளை மக்களிடம் எடுத்துச்சென்ற பெருமை திராவிட இயக்கத்தார்க்கு உண்டு. திராவிட இயக்கம் தமிழகத்தில் வேரூன்றத் தொடங்கிய காலக்கட்டத்தில் நாடகங்களும் திரைப்படங்களும் மிகச் சக்திவாய்ந்த மக்கள் தகவல் தொடர்புச் சாதனங்களாக விளங்கின. இவற்றைத் திராவிட இயக்கத் தலைவர்கள் மிகச்சரியாகப் பயன்படுத்திக் கொண்டு தம் கொள்கைகளை மக்களிடையே எடுத்துச் சென்றனர். நாடகங்களிலும் திரைப்படங்களிலும் முதன்மைப் பாத்திரங்களாக நடித்த நடிகர்களுள் சிலர் திராவிட இயக்கச் சார்பாளர்களாகத் திகழ்ந்துள்ளனர். திராவிட இயக்கக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்ட நாடகங்களைப் படைத்து அவற்றை மக்களிடையே கொண்டு சென்ற திராவிட இயக்கத் தலைவர்களுள் அறிஞர் அண்ணா முதன்மையானவராகவும் பிறருக்கு வழிகாட்டியாகவும் திகழ்ந்துள்ளார். திராவிடநாடு இதழில் பல்வேறு நாடகங்களையும், ஓரங்க நாடகங்களையும் படைத்துத் தமிழ் நாடகக் கலை வளர்ச்சிக்கு வித்திட்ட அறிஞர் அண்ணா, நற்கருத்துகள் நிறைந்த பிற படைப்பாளர்களின் நாடகங்களையும் திராவிடநாடு இதழில் வெளியிட்டார். திராவிடநாடு இதழில் வெளிவந்த பல நாடகங்கள் பின்நாள்களில் அரங்கேற்றம் செய்யப்பட்டுள்ளன. அறிஞர் அண்ணா உள்ளிட்ட திராவிட இயக்கத் தலைவர்களில் பலர் இந்நாடகங்களில் நடித்துள்ளனர். நாட்டு நிகழ்வுகளை அடிப்படையகாக் கொண்டும் புராண, இதிகாசங்களில் இடம்பெற்றுள்ள கருத்துகளை அடிப்படையாகக் கொண்டும் நாடகங்களுக்கான கதைக்கருக்கள் உருவாக்கப்பட்டன. புராண, இதிகாசங்களில் இடம்பெற்றிருந்த திராவிடர்களுக்கு எதிரான சூழ்ச்சிகள் நாடகங்கள் வாயிலாக எடுத்துக்காட்டப்பட்டன. மக்கள் வாழ்விற்குத் தேவையான நற்சிந்தனைகளும் நாடகங்களின் வாயிலாக எடுத்துரைக்கப்பட்டன. நாடக உரையாடல் வடிவில்

கருத்துகளை வழங்கும் புதிய உத்தியைத் திராவிடநாடு இதழில் அறிஞர் அண்ணா தொடங்கி வைத்தார். தமிழ் நாடகக்கலை வளர்ச்சிக்குத் திராவிடநாடு இதழாற்றிய பணி குறிப்பிடத்தக்கதாகும். திராவிடநாடு இதழில் வெளிவந்த நாடகங்கள் குறித்து ஆய்ந்தறியும் வகையில் இவ்வியல் அமைகிறது.

## 4.1.திராவிட இயக்கங்களும் நாடகங்களும்

தமிழ்மொழி இயல், இசை, நாடகம் என்னும் முப்பெரும் பாகுபாட்டினை உடையது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் நாடகக் கலை தமிழ்நாட்டில் புதிய வேகத்துடன் வளரத் தொடங்கியது. பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, பரிதிமாற் கலைஞர், சங்கரதாஸ் சுவாமிகள், பம்மல் சம்பந்தனார், தெ.பொ. கிருட்டிணசாமிப் பாவலர், மறைமலையடிகள் முதலானோர் மக்களை ஈர்க்கும் வகையில் பல்வேறு நாடகங்களைப் படைத்தனர். இந்நாடகங்கள் படிப்பதற்கேற்றவகையிலும் நடிப்பதற்கேற்றவகையிலும் அமைந்தன. பாவேந்தர் பாரதிதாசன் தொடக்ககாலங்களில் கவிதை வடிவில், உரையாடல்கள் அமையப்பெற்ற இயக்கச்சார்புடைய நாடகங்கள் சிலவற்றைப் படைத்தார். ‘இரணியன் அல்லது இணையற்ற வீரன்’ முதலான அவரது நாடகங்கள் இவ்வகையில் அமைந்தவையாகும்.

**“சீரியநற் கொள்கையினை எடுத்துக் காட்டச்**

**சினிமாக்கள் நாடகங்கள் நடத்த வேண்டும்”**[1]

என்ற கருத்தைப் பாரதிதாசன் திராவிட இயக்கம் சார்ந்த படைப்பாளர்களுக்கு அறிவுறுத்தினார். இக்கருத்திற்கேற்பத் தமிழில் நாடகங்களைப் படைத்தவர்களுள் அறிஞர் அண்ணாதுரை முதன்மையானவர். நாடகங்கள் வாயிலாகத் திராவிட இயக்கக் கொள்கைகள் தமிழகத்தில் பரவலாக்கம் செய்யப்பட்டமை குறித்துச் சு. சண்முக சுந்தரம், “ஏறத்தாழ 1945 ஆம் ஆண்டிலிருந்தே திராவிட இயக்க நாடகங்கள் புகழ்பெறத் தொடங்கின. நாடகக் கலைஞர்களுடைய பார்வை திசை திரும்பி திராவிடக் கழக நாடகங்கள் மீது படியத் தொடங்கியது. புகழ் மிக்க நாடகக்

கலைஞர்கள் திராவிட இயக்க நாடகங்களில் நடிக்கத் தொடங்கினர். கதர் ஆடையை அணிந்து கிருஷ்ணசாமிப் பாவலரின் நாடகங்களை உணர்ச்சியுடன் நடித்துவந்த கலைஞர்கள் அண்ணாவின் நாடகங்களில் நடித்துத் திராவிடக் கழகக் கொள்கையின் பிரச்சார எந்திரங்களாக மாறினர். இறைப்பற்றுடன் புராண நாடகங்களை உணர்ச்சித் ததும்ப நடித்த நடிகர்கள் அவற்றை ஒதுக்கித் தள்ளிவிட்டுப் பகுத்தறிவு விளக்க நாடகங்களை நடிக்க முன் வந்தனர். நாடக அரங்கம் திராவிடக் கழகக் கொள்கைகளைச் சுவையுடன் விளக்கி எளிதாகப் பரப்பும் இனிய சாதனமாக மாறியது"[2] என்று குறிப்பிடுகிறார். கல்வியறிவு பெற்ற மக்களிடையே திராவிட இயக்கம் சார்ந்த கொள்கைகளை இதழ்கள் வாயிலாகப் பரப்பிய திராவிட இயக்கத்தார், கல்வியில் குறைந்த மக்களிடம் நாடகங்கள் வாயிலாகத் தம் கருத்துகளைப் பரப்பினர். இதன் பின்னர் புராண, இதிகாச நாடகங்களுக்கு மாற்றாகச் சமூக நாடகங்கள் அதிக அளவில் நடைபெறத் தொடங்கின. சீர்திருத்தக் கருத்துகள் நிறைந்த சமூக நாடகங்கள் மக்களிடையே மாற்றத்தை ஏற்படுத்தும் என்பதை உணர்ந்த அண்ணா, பல்வேறு சமூகச் சீர்திருத்த நாடகங்களைத் திராவிடநாடு இதழில் வெளியிட்டார். அவற்றுள் பல நாடகங்கள் அரங்கேற்றம் செய்யப்பட்டன. சமூக முன்னேற்றத்திற்கு நாடகங்கள் உதவிட வேண்டும் என்ற கருத்தை அறிஞர் அண்ணா கொண்டிருந்ததை, "தற்காலம் தமிழில் வெளிவரும் நாடகங்கள் பெரும்பாலும் புராணக் கதைகளைத் தழுவி எழுதப்பட்டவைகளாகவே இருக்கின்றன. இந்நிலைமாறி 'இப்ஸன்', 'பர்னாட்ஷா' முதலிய மேலைநாட்டு ஆசிரியர்கள் எழுதி வரும் நாடகங்களைப் போன்று சமுதாய முன்னேற்ற நாடகங்களும் வெளிவர வேண்டுவது மிக்க அவசியமாகும்"[3] என்று குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. மேலைநாட்டு நாட்டு நாடக ஆசிரியர்களின் தாக்கம் அறிஞர் அண்ணாவின் நாடகங்களிலும் காணப்பட்டது.

## 4.2. நாடகக் கலையும் அறிஞர் அண்ணாவும்

உரையாடல் வடிவில் கருத்துக்களை வெளியிடுவதில் அறிஞர் அண்ணா வல்லவராகத் திகழ்ந்தார். மேலைநாட்டு நாடக இலக்கியங்களில் மிகுந்த ஈடுபாடு

உடையவராக அறிஞர் அண்ணா விளங்கினார். 1940 ஆம் ஆண்டு 'விடுதலை' பத்திரிகையில் அவ்வை தி.க.சண்முகம் குழுவினரின் 'குமாஸ்தாவின் பெண்' நாடகம் குறித்து ஒரு மதிப்புரையை அறிஞர் அண்ணா எழுதினார். அண்ணாவின் இம்மதிப்புரை குறித்துத் தி.க.சண்முகம், "ஒவ்வொரு கட்டத்தைப் பற்றியும் ஒவ்வொரு நடிகரைப் பற்றியும் விரிவாக எழுதிவிட்டு இறுதியில் 'பல நாட்களில் நான் கண்டறியாதன இதில் கண்டேன். நான் கண்டதைச் சுருக்கித் தான் எழுதினேன். முழுதையும் நீங்கள் காணவேண்டுமே. ஈரோடுவாசிகள் இன்றே செல்லுங்கள். மற்ற ஊரார் அழைப்பு அனுப்புங்கள் கம்பெனிக்கு. குமாஸ்தாவின் மகள் சினிமாகவும் வரப்போகிறது கவனம் இருக்கட்டும்!' என்று முடித்திருந்தார். இந்த விமர்சனம் எங்கள் நடிகர் அனைவருக்கும் மிகுந்த உற்சாகம் ஊட்டியது. பலமுறை படித்துச் சுவைத்தோம்"[4] என்று குறிப்பிடுகிறார். நாடகக் கலை மீது அறிஞர் அண்ணா கொண்டிருந்த ஆழ்ந்த ஈடுபாட்டினை இக்கூற்று வழியாக அறியமுடிகிறது. "தமிழில் நாடகங்கள் தோன்றவும், வளர்ச்சியடையவும் சங்கரதாஸ் சுவாமிகளும், பம்மல் சம்பந்தமுதலியார் அவர்களும் வித்திட்டார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் தமிழ் நாடகத் துறையில் புதியதொரு எழுச்சியும் மறுமலர்ச்சியும் ஏற்படக் காரணமானவர் பேரறிஞர் அண்ணாதான் என்பதை நாடகத்துறையில் உள்ளவர்களும் நற்றமிழ் நாட்டினரும் மறந்துவிடமாட்டார்கள்"[5] என நாகை தருமன், நாடகக் கலை வளர்ச்சிக்கு அறிஞர் அண்ணா ஆற்றிய பணிகளை மதிப்பிடுகிறார்.

அறிஞர் அண்ணா, எழுதி நடித்த முதல் நாடகம் 'சந்திரோதயம்' ஆகும். திராவிடநாடு பத்திரிகை வளர்ச்சி நிதிக்காக இந்நாடகம் தமிழகத்தின் பல்வேறு இடங்களில் நடத்தப்பட்டது. இந்நாடகம், ஈரோட்டிலுள்ள சென்ட்ரல் திரையரங்கில் 19-11-1943 ஆம் நாள் பெரியார் ஈ.வெ.ராமசாமி அவர்கள் முன்னிலையில் காஞ்சிபுரம் திராவிட நடிகர் கழகத்தினரால் அரங்கேற்றம் செய்யப்பட்டது. பின்பு இந்நாடகம் 27-02-1944 ஆம் நாள் சென்னையிலும் 15-5-1944 இல் புலியூர் கந்தசாமி அவர்கள்

தலைமையில் கரூரிலும் நடத்தப்பட்டது. பின்னர் 31-7-1944 சென்னை ஒற்றைவாடைத் திரையரங்கில் பெரியார் ஈ.வெ.ராமசாமி தலைமையில் நடத்தப்பட்டது.

8-4-1944 ஆம் நாள் சந்திரோதயம் நாடகம் மதுரையில் நடத்தப்பட்டது. இந்நாடகம் நடைபெறும் இடங்கள் குறித்த விளம்பரங்கள் திராவிடநாடு இதழில் வெளிவந்தன. திராவிட இயக்கக் கொள்கைகளை எடுத்துரைக்கும் வகையில் இந்நாடக விளம்பரம் திராவிடநாடு இதழில், “பரமசிவன் வந்து வந்து போவார்! பத்தினிக்குத் துக்கம் வரும், பழயபடி தீரும்! இதுவே நாடகமாக இருக்கும் இன்றைய நிலையை மாற்றி கலை, ஆரியவலையாகாமல் பாதுகாக்க ஒரு முயற்சி, அறிவு வளர்ச்சி நாடகம். இதற்கு ஆதரவு தருவது தமிழரின் கடமை. புரோகிதப் புரட்டு! இரசவாதம்! மடாதிபதிகள் கோலாகலம்! வைதீகத்தின் விளைவுகள்! ஆகியவற்றைச் சித்தரித்துக் காட்டும் நாடகம்!”[6] என்று வெளிவந்தது. நாடகம் குறித்துத் திராவிட இயக்கம் கொண்டிருந்த கொள்கைகளை இவ்விளம்பரம் தாங்கி நிற்கிறது. “எலும்பு பெண்ணுருவான அருட்கதைகளைப் பற்றிப் பாடியும் ஆடியும் வந்தது போதும். நமது பெண்மக்கள் எலும்புருவானது தவிரப் பலன் ஏதுமில்லை. இனிப்பெண்கள் எலும்புருவாகும் பரிதாப வாழ்வைச் சித்தரிக்கும் நாடகங்களை நடத்துங்கள். கண்ணைப் பெயர்த்தெடுத்து அப்பிய கண்ணப்பர் கதையை ஆடியதுபோதும். இனிக்கோயில் கட்டிக்கும்பாபிஷேகம் செய்பவன், ஊரிலே கொள்ளையடிக்கும் விஷயத்தை விளக்கும் நாடகத்தை நடத்திக்காட்டுங்கள். வாழ்க்கையைச் சித்தரித்துக் காட்டுங்கள். ஏழையின் கண்ணீர், விதவையின் துயரம், மதத்தரகரின் மமதை ஆகியவற்றை விளக்கும் அறிவுவளர்ச்சி நாடகங்களை நடத்துங்கள்”[7] என்ற அறிஞர் அண்ணாவின் கூற்று, சமூகச் சீர்திருத்த நாடகங்களுக்குத் திராவிட இயக்கத்தார் அளித்த முக்கியத்துவத்தை எடுத்துக்காட்டுகிறது.

தமிழ் நாடகக் கலையில் பல்வேறு புதுமைகளை அறிஞர் அண்ணா ஏற்படுத்தினார். படிப்பதற்கென்று சில நாடகங்களையும், நடிப்பதற்கென்று சில நாடகங்களையும் அவர் படைத்துள்ளார். அவரும் சில பாத்திரங்களை ஏற்று

நடித்துள்ளார். நடிப்பதற்கெனச் சில சீர்திருத்த நாடகங்களைத் தமிழகத்தின் தலைசிறந்த நாடகக் குழுவினர்க்கு எழுதிக் கொடுத்த அறிஞர் அண்ணா, திராவிடநாடு இதழின் தொடக்க காலம் முதலே பல்வேறு சீர்திருத்த நாடகங்களை இதழில் வெளியிட்டுவந்தார். மக்களின் வாழ்வியல் முறைகளை நாடகங்களில் புலப்படுத்திக் காட்டுவதில் அறிஞர் அண்ணா வல்லவராகத் திகழ்ந்தமையை, “இந்திய-தமிழகச் சமுதாய வாழ்க்கையின் வீழ்ச்சியையும் தாழ்ச்சியையும் மக்களின் மனநிலைகளையும் உணர்ச்சிகளையும் நெருக்கமாகக் கண்டுணர்ந்தவர் அண்ணா. அவற்றை அவர் தம்முடைய நாடக இலக்கியங்களில் ஆழமாகவும், அழுத்தமாகவும் எதிரொலிக்கச் செய்துள்ளார். கருத்து விளக்கம் தருவதில் அவர் பரிமேழலகரைப் போல் மதிநுட்பம் வாய்ந்தவராக விளங்கினார். மற்றவர்கள் மக்கள் குறைகளைக் கண்டு ஒதுங்கிய நேரத்திலும், எண்ணிய நேரத்திலும், அண்ணா அவைகளைப் பிசிராந்தையார், அப்பரடிகள், இராமலிங்க அடிகளைப் போலப் பரிவுடன் அணுகி, காரணங்களை ஆய்ந்து குறைகளைப் போக்கும் சிறப்பு மிக்க பண்பாளராகத் துணை நின்றார்.”[8] என்று இரா.சனார்த்தனம் எடுத்துரைக்கிறார்.

நாடகங்கள் நாட்டில் நடைபெறும் நிகழ்வுகளை எடுத்துக் காட்டுவதாக இருக்கவேண்டுமென்பதை அறிஞர் அண்ணா, “நாட்டின் நிலையை எடுத்துக்காட்டி, அங்கு நிலவும் அறியாமையை விளக்கி, இருளை நீக்கி, நல்வாழ்வுக்கான வழி காண வேண்டும் என்பதுதான் அறிவுப்பணியாளர்களுடைய ஆர்வமும், பொதுப்பணியுமாகும். இந்தப் பொதுநல அறிவு வளர்ச்சிப் பணிக்கு, ஆரம்பத்தில் எதிர்ப்பும் கண்டனமும் எழும்பினாலும் வரவர ஆதரவும் பலமும் அதிகமாகத்தான் செய்யும். இந்தப்பணி மக்கள் வாழ்வு பற்றியதாக இருப்பதால், பல ஆண்டுகள் முன் எதிர்ப்பு கிளம்பிய இடத்திலிருந்தே ஆதரவு கிளம்புகிறது. இப்போது, புராண நாடகங்களே வசூலைக் கொடுக்கும் என்று கூறியவர்களே ‘சீர்திருத்த நாடகங்கள்தான் தேவை பணப்பெட்டி நிரம்ப’ என்று கூறுமளவுக்கு வந்திருக்கிறார்கள். அவ்வளவு தூரம் மக்கள் மனதில்

சீர்திருத்தம், அறிவுப்பணி ஆகியவைகள் குறித்து ஆவலும் ஆர்வமும் அதிகமாகி வருகிறது”[9] என்று குறிப்பிட்டுள்ளார்.

அறிஞர் அண்ணாவின் நாடக உரையாடல்கள் கருத்துச்செறிவுடனும் உணர்ச்சியைத் தூண்டுவனவாகவும் அமைந்திருந்தன. “அண்ணாதுரையின் நடை, மிகவும் உருக்கமாகவும் தொண்டரோடு நேரடியான உறவு கொள்வதாகவும் பண்டையகாலத் தமிழ் இன, வீரவுணர்களோடு தொடர்பு படுத்தவதாகவும் அமைந்திருப்பதைக் காணலாம். புறநானூற்று மன்னரின் வஞ்சினம், மனோன்மணீயம் நாடகத்துச் சீவகனின் சூளுரை ஆகியவற்றை நினைவு கூரும் வகையில் அணிகளுக்கு ஓர் உத்வேகத்தை ஊட்டுவதற்கு அண்ணாதுரையின் நடை உகந்ததாக இருந்தது. ஒரு நோக்கத்துக்ககாகப் போராட்டம் திட்டமிடப்பட்டு அதற்கெனத் தொண்டர்களைத் திரட்டி, பின் போராட்டம் நடத்தாமல் தொண்டர்கள் சோர்வு அடையும் பொழுது அச்சோர்வை அகற்றுவதற்குரிய ஒரு நடையையும் அண்ணாதுரை தம் எழுத்துகளில் கொண்டிருந்தார்.”[10] என்று கோ. கேசவன் அறிஞர் அண்ணாவின் நாடக நடை குறித்துக் குறிப்பிடுகிறார். தொண்டர்களை உற்சாகப்படுத்திச் செயலாற்றத் தூண்டுகின்ற வகையில் அண்ணாவின் நாடக உரையாடல்கள் அமைந்திருந்தன.

## 4.3.திராவிடநாடு இதழில் நாடகங்கள்

திராவிடநாடு இதழில் நாற்பதிற்கும் மேற்பட்ட நாடகங்களை அறிஞர் அண்ணா படைத்துள்ளார். ‘அந்திக் கலம்பகம்’, ‘ஊரார் உரையாடல்’ என்னும் இரண்டு பகுதிகள் திராவிடநாடு இதழில் நாடக உரையாடல் வடிவில் அமைந்தன. தமிழ் இதழியல் வரலாற்றில் இப்புது உத்தியை அறிஞர் அண்ணா அறிமுகம் செய்தார். திராவிடநாடு இதழில் இடம்பெற்ற அறிஞர் அண்ணாவின் நாடகங்கள் குறித்தும் பிற படைப்பாளர்களின் நாடகங்கள் குறித்தும் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

## 4.4.அண்ணாவின் நாடகங்கள்

திராவிடநாடு இதழில் அறிஞர் அண்ணா எழுதிய நாடகங்களுள் ‘வாயை மூடிக்கிட்டாரே, விலை ஏறிவிட்டது, நீதிதேவன் மயக்கம், இரக்கம் எங்கே?,

தேவலோகத்தில், இரக்கம் ஒரு பயணம், கரைபோகவில்லை, சோணாசலம், அவினாசியார் காணவேண்டிய காட்சி, காசூரார் கருணை, கல்சுமந்த கசடர், மட மான்மீயம், தர்மம் தலைகாக்கும், பாங்கர் பணம் பெருத்தான், இளங்கோவின் சபதம், இருட்டறை, திரும்பிவந்த சிங்காரம், சன்மானம், களத்தில் வென்றான், கடவுளர் உலகில், செல்லுமிடந்தோறும், உப்பில்லாத சோறு, பக்தியின் பெயரால், பாரதம், ஆகியவை குறிப்பிடத்தக்கவை. இந்நாடகங்கள் திராவிடநாடு இதழில் வெளிவந்த கால அடிப்படையில் இந்நாடகங்களின் சிறப்பியல்புகள் விளக்கப்படுகின்றன.

## 4.4.1. வாயை மூடிக்கிட்டாரே

கிராமத்துச் சாவடியில் நடைபெறுகின்ற நிகழ்வுகளை அடிப்படையாக வைத்து 'வாயை மூடிக்கிட்டாரே' என்ற நாடகம் படைக்கப்பட்டுள்ளது. 12.1.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இந்நாடகம் வெளிவந்தது. கிராமப் புரோகிதர், உழவன் கந்தன், பட்டாளத்திலிருந்து திரும்பிய பழனி ஆகிய பாத்திரங்களைக் கொண்டு ஒரே ஒரு காட்சியை மட்டும் கொண்டதாக இந்நாடகம் அமைந்துள்ளது. பட்டாளத்திலிருந்து வந்த பழனி, போர் நிகழ்வுகளை விவரிக்கிறான். ஜெர்மனி நாட்டினரும் இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்தவர்களும் கிறித்தவர்கள் என்பதை ஐயர் பழனியிடம் எடுத்துக்கூறுகிறார். அவரிடம் பழனி,

"கௌரவர்கள் யார்? பாண்டவர்கள்யார்? சகோதராள்தானே! ஒரே குடும்பம். ஜெர்மானியரும் வெள்ளைக்காரனுமாவது வேறே வேறே தேசம், நடுவிலே கடல் இருக்கிறது. ஒரே குடும்பத்துச் சண்டைதானே மகாபாரதம்"[11] என்று குறிப்பிடுகிறார். ஐயருக்கும் பழனிக்கும் இடையே பின்வருமாறு உரையாடல் நடைபெறுகிறது.

"ஐயர்: அந்தக்காலத்திலே நிரபராதிகளைக் கொன்றது கிடையாது. இந்தக் காலத்திலே, பாருங்கோ, குண்டுவீசினா ஊரே அழிஞ்சி நாசமான்னா போகிறது!

பழனி: ஆமாம், ஆனா அந்தக்காலத்திலேயுந்தான் இருந்தது இந்த அக்ரமம். ஒரு உதாரணம் பாருங்கோ, இராவணன் சீதையைத் தூக்கிக் கொண்டு போனான்,

இலங்கைக்குத் தூதுபோனார் அனுமார். இராவணன் செய்த அக்ரமத்துக்காக இலங்கையையே கொளுத்திவிட்டாரே!

ஐயர்: எம்பா நீ என்ன இந்தச் சுனாமானாவோ சரி! நான் வருகிறேன், வேலை இருக்கு."[12]

என ஐயர் வாயை மூடிக்கொண்டு செல்வதாக நாடகம் நிறைவடைகிறது. சுயமரியாதை இயக்கப் பற்றாளர்களைச் ‘சுனாமானா’ என அழைக்கும் வழக்கம் அன்றிருந்ததை நாடகத்தில் அவ்வாறே பதிவிட்டுள்ளார் அறிஞர் அண்ணா. புராண, இதிகாசங்களில் இடம்பெற்ற செய்திகளை அடிப்படையாக வைத்து மக்கள் தமக்குள் தர்க்கம் செய்து கொண்ட அன்றைய காலச் சூழலை இந்நாடகம் எடுத்துக்காட்டுகிறது.

## 4.4.2.விலை ஏறிவிட்டது

‘விலை ஏறிவிட்டது’ என்ற நாடகம் 23.3.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. ‘கடூர்’ எனும் சிறு கிராமத்தில் நிலம் வாங்கிய சதாசிவம் என்பவரின் மருமகனான தம்பி என்பவர், அந்த நிலத்தை வாங்குவதற்காகச் செய்த சூழ்ச்சிகளையும் பின்னர் அந்நிலத்தின் விலையை ஏற்றுவதற்குச் செய்த தந்திரங்களையும் விளக்கும் வகையில் இந்நாடகம் படைக்கப்பட்டுள்ளது. நிலத்தை வாங்கிய தம்பி, பூதத்துவ ஆராய்ச்சி அறிஞர் ஒருவரின் வெளியிடவுள்ள நூலுக்கு ஐந்நூறு ரூபாய் உதவிசெய்து, அதில் கடூர் கிராமத்தில் காயகல்பக் கற்கள் இருக்கிறதென்று எழுதச் செய்கிறார். ஆசிரியரும் அதற்கு உடன்பட நூலும் வெளிவருகிறது. நூலின் கருத்திற்குக் கண்டனம் எழுகிறது. ஆனால் சிலர் அதனை நம்புகின்றனர். "கண்டனம்! கேலி! ஆனால் எங்கும் புத்தகத்தைப் பற்றியே பேச்சு. கடூர் கற்கள் ரொம்பப் பிரபல்யமாகிவிட்டன! யாரார் பலமாகக் கண்டித்தார்களோ, ஆராய்ச்சி என்ற பெயரால் புளுகுகிறான் என்று கடமையாகத் திட்டினார்களோ அவர்களில் பலரோ கடூர் மீது காதல் கொண்டனர். கடூர் நிலத்தின் விலை மளமளவென்று ஏறிவிட்டது! பலத்த போட்டி! கொழுத்தலாபம்"[13] என நாடகத்தை நகர்த்தும் அண்ணா, தம்பியின் வாயிலாக, "நிலம் மட்டுமல்ல மாமா, தந்திரத்தாலே எந்தப் பொருளையும், விலையை

ஏற்றிவிடவும் முடியும் இறக்கிவிடவும் முடியும்”[14] என்று குறிப்பிட்டு இத்தகைய நிகழ்வுகள், “நடந்தது என்று இறந்த காலத்தோடு நிறுத்திவிட முடியாது. படித்து முடித்த பிறகு நீங்கள் திருத்துவீர்கள் நடந்தது. நடக்கிறது என்று”[15] எனக் குறிப்பிடுகிறார். சமூக வாழ்க்கையில் பிறரை ஏமாற்றிப் பிழைக்க முயல்பவர்களின் செயல்களை இந்நாடகத்தின் வாயிலாக எடுத்துக்காட்டும் அறிஞர் அண்ணா, அறிவியல் முறையில் பிறரை ஏமாற்றுபவர்களின் சூழ்ச்சிக்கு அப்பாவி மக்கள் பலியாகிவிடக் கூடாதென்ற கருத்தையும் நாடகத்தின் வாயிலாக விளக்கியுள்ளார்.

### 4.4.3. நீதிதேவன் மயக்கம்

**‘**நீதிதேவன் மயக்கம்’ என்ற நாடகம் 8.6.1947 ஆம் நாள் திராவிட நாடு இதழில் வெளிவந்தது. நீதிதேவன் மயக்கம் நாடகத்தின் ஒரு கட்டம் 13.1.52 பொங்கல் மலரில் மீண்டும் வெளிவந்தது. மற்றொரு கட்டம் 1955 ஆம் ஆண்டு பொங்கல் மலரில் வெளிவந்தது.

இந்நாடகத்தில் கம்பரை நீதி மன்றத்தில் கொண்டு வந்து நிறுத்தி, நீதி தேவன் முன்னர் இராவணனை வாதாட வைத்துள்ளார் அறிஞர் அண்ணா. ‘‘கம்பரைப் படிக்காதவர்களும் இதன் மூலமாகக் கம்பனின் காவிய பாத்திரங்கள் பற்றிச் சர்சை செய்திடும் சூழ்நிலையினை அண்ணாவால் உருவாக்க முடிந்தது. திறனாய்வுத்துறையில் இத்தகைய சாதனையை வேறு எந்த நாட்டிலாவது சாதித்து இருப்பார்களா என்பது சந்தேகமே’’[16] என்று ச.சண்முகசுந்தரம் இந்நாடகத்தை மதிப்பிடுகிறார்.

‘இரக்கமெனும் ஒருபொருளிலா அரக்கன்’ இது கம்பரின் குற்றச்சாட்டு. ‘அரக்கர் பட்டியலில் சேர்க்கப்படாத இரக்கமற்றவர் உளர். இது இராவணனின் வாதம்’ முதல் கட்டத்தில், அறமன்றத்திலே, இராவணன், கம்பன் இருவரின் வாதிப் பிரதிவாதமும் நடைபெறுகின்றன. இரண்டாம் கட்டத்தில் இராவணன், அறமன்றத்திலுள்ள அறநெறிக்காப்பாளர்களுக்கு, தன் நிலையையும் வழக்கின் விளக்கத்தையும் தெரிவிக்கிறான். அது இது”[17] என்ற முன்னுரை நாடகத்தின் தொடக்கத்தில்

இடம்பெற்றுள்ளது. இராவணனுக்கும் கம்பருக்கும் இடையே நடைபெறும் உரையாடலை அழகுற நாடகத்தில் அமைத்துள்ளார் அறிஞர் அண்ணா.

கம்பர்: (எழுந்து நின்று நீதிதேவனுக்கு மரியாதை தெரிவித்துவிட்டு) உண்மைக்குச் சாட்சி தேவையில்லை. வைரத்துக்குப் பளபளப்புத்தர வேண்டியதில்லை -அமிர்தத்துக்கு இனிப்புக் கூட்டத் தேவையில்லை – அழகுக்கு அலங்காரம் தேவையில்லை.

இராவணன்: (கேலியாக) பாம்பின் பல்லுக்கு விஷம் தேவையில்லை – ஏராளம் அதனிடமே”[18]

என்பதாக இராவணனும் கம்பரும் உரையாடுகின்றனர். ‘கடமை, தவம், தொழில், வாழ்க்கைச் சிக்கல் முதலிய பல கொள்ளவேண்டியபோது, இரக்கம் காட்ட முடிவதில்லை, முடியாது, கூடாது’ என அறமன்றத்தில் வாதாடும் இராவணன், தன் கூற்றுக்கு ஆதரவாக தந்தையின் ஆணைப்படி தாயின் தலையை இரக்கமற்றுக் கொய்த பரசுராமன், மேனகையிடமும் குழந்தை சகுந்தலையிடமும் இரக்கம் கொள்ளாத விசுவாமித்திரர் ஆகியோர் செயலை எடுத்துக்காட்டி, நீதிதேவனிடம், “நான் இரக்கமற்றவன், ஆகவே அரக்கன்-எனவே நான் தண்டிக்கப்பட்டதும், என் அரசு அழிக்கப்பட்டதும், தர்ம சம்மதமான காரியம் என்று கவி பாடினாரே, அதற்குத்தான் நான் இப்போது மறுப்புரை கூறுகிறேன்”[19] என்று கம்பர் மீது இராவணன் குற்றம் சுமத்துவதாக உரையாடல் அமைகிறது. மேலும், ஏகலைவன் மீது இரக்கம் காட்டாமல் அவன் கட்டை விரலைக் காணிக்கையாகப் பெற்ற துரோணாச்சாரியார், பஞ்சகாலத்தில் கிடங்கில் குவித்து வைத்திருந்த நெல்லை எடுத்துண்ட, உணவுப்பொருளை எடுத்துண்ட ஏழை மக்களையும் பிறந்த சிசுவையும் இரக்கமற்று வெட்டிக் கொன்ற கோட்புலி நாயனார் செயலை எடுத்துக்காட்டி அவர்களை நீதிமன்றத்தில் நிறுத்தி இராவணன் வாதாடுகிறான்.

“இரக்கமற்றுப்படுகொலை செய்தவர், நாயனார்-அடியார்-கொலைக்கஞ்சாக் கோட்புலி! கட்டைவிரலைக் காணிக்கையாகப் பெற்ற துரோணர் - தாயின் தலையை வெட்டிய

தருமசொரூபி பரசுராமன், பெற்றெடுத்த குழந்தையையும் பிரியத்தை அர்ப்பணித்த காதலியையும் இரக்கமின்றி கைவிடத் துணிந்த விசுவாமித்திரன், இவர்களெல்லாம் தவசிகள் - ரிஷிசிரேஷ்டர்கள்-பரமன் அருளைப் பெற்றவர்கள் - நீதிதேவா! நான் அரக்கன் - இவர்கள் யார்? — என்னை விசாரிக்கக்கூடிடும் அறமன்றத்தில் இவர்கள் காப்பாளர்களாம். இரக்கமற்ற இவர்கள் இருக்கவேண்டிய இடம் இதுவா? குற்றக்கூண்டில் இருக்கவேண்டியவர்கள்! நீதிதேவா! அறம்-அன்பு-ஏதுமறியா இவர்கள், அறநெறி காப்பாளர்களா?”[20]

என்று இராவணன் நீதிதேவனிடம் கேட்க, “நீதிதேவன் மீண்டும் மயக்கமடைகிறார். கம்பர், பயந்து, அவசரமாக வெளியே செல்லப் பார்த்துக் கால் இடறிக் கீழே வீழ்கிறார். இராவணன் சென்று அவரைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு, வெளியே அழைத்துச் செல்கிறான்”[21] என்றவாறு நாடகம் நிறைவடைகிறது. அறிஞர் புராண, இதிகாசக் கதைமாந்தர்களைப் பாத்திரமாக்கி இந்நாடகத்தைப் படைத்துள்ளார். இக் கற்பனை நாடகம் அண்ணாவின் திறனாய்வுப் பண்பினை எடுத்துக்காட்டும் வகையில் அமைந்துள்ளது.

நீதி தேவன் மயக்கம் நாடகத்தைத் தமிழகத்தின் பல்வேறு ஊர்களில் அறிஞர் அண்ணா, தம் குழுவினருடன் நடித்துள்ளார். வண்ணாரப்பேட்டை சர்.தியாகராய கல்லூரி உதவி நிதிக்காக இந்நாடகம் 13.8.51 ஆம் நாள் நடத்தப்பட்டது.

### 4.4.4.இரக்கம் எங்கே?

அறிஞர் அண்ணாவின் இரக்கம் எங்கே? எனும் ஓரங்க நாடகம் பத்துக் காட்சிகளை உடையது. 17.8.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இந்நாடகம் வெளிவந்துள்ளது. பலரால் பல சமயங்களில் இரக்கம் கொள்ள முடியாமல் போவதற்கு வாழ்க்கையின் அமைப்பு முறைதான் காரணம் எனும் கருத்தை இச்சமூகநாடகம் விளக்குகிறது. ஏழையான வேலனுக்கு மருதை, ராஜாக்கண்ணு என இருமகன்கள். மருதை வயிற்றுவலியால் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் சூழலில் அவனுக்கு மருத்துவர் ‘தண்டம்’ இரக்கம் காட்டவில்லை. மிராசுதார் மாணிக்கம்

இரக்கம் காட்டவில்லை. இறுதியில் மருதை இறந்துவிடுகிறான். இந்நாடகத்தில் இடம்பெறும் உரையாடல்கள் சமூக வாழ்வின் அவலங்களை எடுத்துரைக்கின்றன.

“இரக்கம், இரக்கம்னு சொல்லிக் கொண்டா, எனக்குப் படிப்பு சொல்லித் தந்தார்கள்? பணம் கொடுக்க வக்கு, இல்லாதவன், டாக்டர் வீடு வருவானேன்? வேலை இல்லாமலா இருக்கிறோம். கண்ட இடத்துக்கு வந்து போக”[22] என்ற டாக்டர் தண்டத்தின் கூற்றும், “கோயிலைக் கட்டுவாங்க, குளத்தை வெட்டுவாங்க, தேரு, திருவிழா செய்வாங்க, ஏழைக்குக் குலை நோவு வந்தா, அவுங்களுக்கு என்ன? குடும்பமே நாசமானாத்தான் என்ன!”[23] என்ற மருதையின் கூற்றும் பொருளாதாரத்தின் மேல்மட்டத்தில் இருப்பவர் நிலையைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

“பழிகார உலகமே! ஏழையைப்பார்! குடிக்கவும் கூத்தி வீட்டுக்குப் போகவும், ஏழையின் வயிறு எரிய எரியப் பணத்தைப் பிடுங்கும் பணக்காரச் சமூகமே! உன் மனம், கல்லா, இரும்பா? இரக்கம் இல்லாத நெஞ்சு! ஈரமில்லாத நெஞ்சு! உன் வஞ்சகம் எப்போது ஒழியும்”[24] என்று நாடகத்தின் வாயிலாகத் தன் ஆற்றாமையை வெளிப்படுத்தும் அறிஞர் அண்ணா, சமூகவாழ்வில் ஏழைகள் படும் அவலத்தை இந்நாடகத்தின் வாயிலாக எடுத்துக்காட்டியுள்ளார்.

### 4.4.5.தேவலோகத்தில்

இராமன் குறித்துச் சீதை எத்தகைய எண்ணத்தைத் தன் உள்ளத்தில் கொண்டுள்ளாள் என்பதை விளக்கும் கற்பனை நாடகமாக ‘தேவலோகத்தில்’ என்ற நாடகம் அமைந்துள்ளது. இந்நாடகம் 10.8.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. திராவிட இயக்கத்தவரால் பெரிதும் திறனாய்வுக்கு உட்படுத்தப்பட்ட இதிகாசம் இராமாயணம் ஆகும். இராமனின் பண்பு நலன்கள் குறித்து முற்றிலும் எதிரான கருத்துக்களை திராவிடஇயக்கத்தார் கொண்டிருந்தனர். இராமன் குறித்துப் பெரியார் ஈ.வெ.ராமசாமி, “மனைவியிடம் சதா சந்தேகமுடையவனாகவே இருக்கிறான். மனைவி நெருப்பில் குளித்துவிட்டு வந்தபிறகும், பாமர மக்கள்மீது சாக்குப் போட்டு, அவள் கர்ப்பமானதைப் பற்றிச் சந்தேகப்பட்டு-அவளிடம் பொய் சொல்லிக்

கர்ப்பத்தோடு காட்டில் கொண்டுபோய்க் கண்ணைக் கட்டி விட்டுவிடச் செய்கிறான். 'சீதை கற்புடையவள்' என்று வால்மீகி சத்தியம் செய்தும் இராமன் நம்பவில்லை. அதனாலேயே அவள் சாகவேண்டியதாயிற்று"[25] எனக் குறிப்பிட்டுள்ளார். இராமனின் தீய பண்புகளைச் சீதைவாயிலாக இந்நாடகத்தில் அறிஞர் அண்ணா எடுத்துக்காட்டியுள்ளார்.

"புதிய புராணந்தான் -ஆனால் பூஜா மாடத்துக்கு அல்ல-புது முறைக்கான எண்ணம் தருவதற்குத் தீட்டப்படுவது. இராமனின் கலியாண குணங்களைத்தானே பாடி, ஆடி மகிழ்கிறார்கள்! அந்த இராமனைப் பற்றி, தர்மபத்தினி சீதா, என்ன எண்ணுவார் என்பதை விளக்கும் கற்பனை இது"[26] என்ற அண்ணாவின் முன்னுரையுடன் இந்நாடகம் தொடங்குகிறது. அகலிகை, சீதை, தோழி ஆகிய மூன்று பாத்திரங்களை இந்நாடகத்தில் அறிஞர் அண்ணா படைத்துள்ளார். தேவலோகத்தில் அகலிகைக்கும் சீதைக்கும் இடையே உரையாடல் நடைபெறுகிறது. இராமனுடைய இரக்கத்தால்தான் தனக்கு சாபவிமோசனம் கிடைத்ததாக அகலிகை கூற, அவளுக்கு மறுமொழியாகச் சீதை பேசுகின்ற உரையாடல் இராமனின் இரக்கமற்ற குணத்தைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

"சீதை: இரக்க சுபாவமா அவருக்கு! என்னைக் காட்டுக்குத் துரத்தினாரே, கண்ணைக் கட்டி, அப்போது நான் எட்டுமாதமடி! முட்டாளே! கர்ப்பவதியாக இருந்த என்னைக் காட்டுக்கு விரட்டின கல்மனம் இருந்தவரை இரக்கமுள்ளவர் என்று சொல்கிறாயே. எவனோ, எதற்காகவோ, என்னைப் பற்றிப் பேசினதற்காக ஒரு குற்றமும் செய்யாத என்னை —தர்மபத்தினி என்ற முறையிலே அவருடன் 14 வருஷம் வனவாசம் செய்த என்னை-ராவணனிடம் சிறைவாசம் அனுபவித்து அசோக வனத்தில் அழுது கிடந்த என்னை, கர்ப்பவதியாக இருக்கும்போது, காட்டுக்குத் துரத்திய காகுத்தனைக் கருணாமூர்த்தி என்று புகழ்கிறாயே!"[27]

என்று இராமன் மீது குற்றம் சுமத்துகிறாள் சீதை. மனைவியிடம் இரக்கமற்றவனாக நடந்துகொண்ட இராமனின் பண்புகளை எடுத்துக்காட்டும் வகையில் இந்நாடகத்தை அண்ணா படைத்துள்ளார்.

### 4.4.6.இரக்கம் ஒரு பயணம்

‘இரக்கம் ஒரு பயணம்’ என்ற ஓரங்க நாடகம் 24.8.1947 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது. ‘இரக்கம்’ என்ற சொல் குறித்து நாடகத்தின் தொடக்கத்தில் அழகிய முன்னுரையை அண்ணா படைத்துள்ளார். ‘மரகதம்’ என்ற பெண்மணி, தன் மகள் அம்பாளைப் படுகிழவர் ஒருவருக்கு மணம் முடிக்க முயல்கிறாள். சமூகச் சீர்திருத்தவாதிகளான சோமுவும் பாலனும் மரகதத்தின் செயலைத் தடுக்க முயல்கின்றனர். “ஒரு இளமங்கையைச் கிழவனுக்குக் கலியாணம் செய்வதென்பது, அவள் வாழ்க்கையைச் சித்திரவதை செய்வதாகுமே! அம்மா! அது தெரிந்ததா உமக்கு? பொருத்தமற்ற கலியாணத்தால், உன் மகளின் குணமும் நடையும்கூடக் கெட்டுவிடக் கூடுமே, அது தெரிந்ததா உமக்கு? வயோதிகரை மணந்து வேதனையுடன் போரிடும் புனிதவதிகளின் வழிகளிலே வழிந்தோடிய நீர் இந்த நாட்டையே அரித்து வருகிறதே. அது தெரிந்ததா அம்மா உனக்கு” என்ற கூற்றின்வழி அறிஞர் அண்ணா நாடகத்தில் வெளிப்படுகிறார். தன் மகளைக் காதலித்த சீமான் ஒருவனின் மகன், சாதி வேறுபாட்டின் காரணமாகத் தன் காதலை மறுத்துவிட்டமையால், தன்மகளுக்கு இத்தகைய முடிவினை எடுத்ததாக மரகதம் அந்த இளைஞர்களிடம் எடுத்துரைக்கிறாள். பாலுவும் சோமுவும் அச்சீமான் மகனைச் சந்திக்கின்றனர். தாயாரின் தற்கொலை மிரட்டலுக்குப் பயந்தே அத்தகைய முடிவினை எடுத்ததாகச் சீமான் மகன் குறிப்பிடுகிறான். மரகதத்தின் வீடு ஏலம் போகாமல் இருப்பதற்கும் அவன் உதவுகிறான். குறைந்த செலவில் புகழை விலைக்கு வாங்கமுயலும் மனிதர்கள் செயலைப் பாலு என்ற பாத்திரத்தின் வாயிலாக எடுத்துக் காட்டும் அறிஞர் அண்ணா, “மக்கள் மன்றத்திலே, காசி க்ஷேத்ர மகாத்மியம் பேசப்படுவது குறைக்கப்பட்டு, மாஸ்கோ மணத்தின் மாண்பு எடுத்துரைக்கப்பட வேண்டும். அதிகமாக உதவிசெய்-உத்தமன் என்று புகழப்படுவாய் என்று பேசப்படுவதற்குப் பதிலாக, உரிமையைக் கொடு! உலகத்தைக் கெடுக்காதே! என்று பகுத்தறிவு மொழி பேசப்பட வேண்டும்”[28] என்று நாடகத்தின் இறுதியில் ஒரு

செய்தியை அளிக்கிறார். ‘கலியாணம் என்பது அடிமைத்தனமல்ல, அன்பின் வெற்றி, பெண்ணின் பெருமை’ என்ற அறிஞர் அண்ணாவின் கருத்துகள் இந்நாடகத்தில் இடம்பெற்றுள்ளன.

### 4.4.7.கரை போகவில்லை

14.9.1947 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு இதழில் ‘கரை போகவில்லை’ என்ற நாடகம் வெளிவந்தது. தவச்சாலையில் சம்புகன் என்பவன் தவம் செய்து கொண்டிருக்கிறான். அங்கு வந்த இராமனின் குரலால் சம்புகனின் தவம் கலைகிறது. சம்புகன் இராமனை நோக்கிக் கோபக் கனலுடன் உரையாடுகின்றான். ஆரியர் அல்லாதார் தவம் செய்தலாகாது என்பதை இராமன், “அவரவர் தத்தம் குலத்துக்கேற்ப நடக்க வேண்டும் என்ற தர்மத்தைக் காப்பாற்றவே, நான் இந்தத் கடுமையான நடவடிக்கை எடுக்க நேரிடுகிறது.”[29] என்று குறிப்பிட்டு அவன் தலையைக் கொய்து விடுகிறான். அங்கு வந்த சம்புகனின் தாய் அழுது புலம்புகிறாள். கொன்றது இராமன் என்பதை அறியாமலேயே அவனிடம் நியாயம் கேட்கிறாள் சம்புகனின் தாய். மகனின் இரத்தத்தை இராமனின் கரத்தில் பூசிய பின்னர் உயிரற்று வீழ்கிறாள். பணியாட்கள் இராமன் கரத்தைக் கழுவ நீர் கொண்டுவந்து தருகின்றனர். இருப்பினும் இரத்தக்கறை அகலவில்லை என்பதாகக் கதை முடிவடைகிறது. ‘கறை’ என்ற சொல், எழுத்துப் பிழையாக இதழில் ‘கரை’ என்று இடம்பெற்றுள்ளது. இராமனின் கொடிய பண்புகளைச் சித்திரிக்கும் வகையில் இந்நாடகம் அமைந்துள்ளது.

### 4.4.8. சோணாசலம்

வாழ்க்கைச் சிக்கல் ஒன்றை மையக் கருவாக வைத்துச் ‘சோணாசலம்’ என்ற ஓரங்க நாடகம் 21.09.1947 ஆம் நாளிட்ட திராவிடநாடு இதழில் வெளிவந்தது. பலருக்கும் உதவிசெய்து நொடித்துப் போன கைலி வியாபாரி சோணாசலத்தின் வாழ்வியலைச் சிறுகதை போலத் தொடக்கத்தில் விவரித்துக்காட்டுகிறார் அறிஞர் அண்ணா. சோணாசலத்தின் மருமகன் தீனதயாளன், சீர்வரிசை சரியாகச் செய்யவில்லை எனக் கூறிச் சோணாசலத்தின் மகளை அவள் வீட்டில் விட்டுச்

செல்கிறான். மகளை நினைத்து நொந்து புலம்பும் சோணாசலத்தின் தனிமொழி, மருமகனின் நண்பனுடன் உரையாடல் என்றவாறு நாடகம் தொடர்கிறது.“அதோ போகிறானே, இரக்கத்தைத் தேடித் தேடிப் பார்த்து, கிடைக்காததால் கதிகலங்கி, அவன் இப்போது எதையும் செய்யச் சித்தமாக இருக்கிறான்-கொலை-களவு-பொய்-சூது-வஞ்சனை-இவை எதுவும் முடியாவிட்டால் தற்கொலை, இவ்வளவுக்கும் அவன் தயார்”[30] எனச் சோணாசலத்தின் நிலையை அறிஞர் அண்ணா நாடகத்தில் காட்டுகிறார். இறுதியில் காக்காவலிப்பால் மயங்கிக் கிடக்கும் ஆயா வைத்திருந்த குழந்தையிடம் இருந்து ஆறு சவரன் செயினைத் திருடிச் செல்கிறார் சோணாசலம். திருட்டுப்பழி வேறொருவன் மீது விழுகிறது. இத்துடன் நாடகம் நிறைவடைகிறது. சந்தர்ப்பச் சூழ்நிலைகளே சோணாசலம் போன்ற மனிதர்களைக் குற்றவாளியாக்குகின்றன என்ற கருத்தினை நாடகத்தில் விளக்கியுள்ளார் அறிஞர் அண்ணா.

### 4.4.9.அவனாசியார் காணவேண்டிய காட்சி

அறிஞர் அண்ணாவின் கல்வியியல் குறித்த கருத்துகளை விளக்குவதாக ‘அவனாசியார் காணவேண்டிய காட்சி’ என்ற நாடகம் அமைந்துள்ளது. புராண, இதிகாச கருத்துகள் அறிவியலுக்கும் பகுத்தறிவுக்கும் ஒவ்வாமல் இருப்பதை இந்நாடகம் எடுத்துக்காட்டுகிறது. தமிழாசிரியர், பூகோள ஆசிரியர், மாணவர் ஆகியோரைக் கதை மாந்தர்களாகக் கொண்டு 19.10.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இடம் பெற்ற இந்நாடகம், அன்றைய கல்வியமைச்சரான அவினாசிலிங்கம் செட்டியாரின் கருத்துகளை அங்கதச் சுவையுடன் எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது.

“மாணவன்: சார்! தமிழ் வாத்தியார், பாற்கடல் இருக்கிறதுன்னு சொல்றார்.
நீங்களோ, பசிபிக்கடல் இருக்கிறது என்று சொல்கிறீர்கள்.

ஆசிரியர்: ஆமாம், அதற்கென்ன செய்வது! தமிழ் வாத்தியார் பத்துத்தலை
ராவணன் கதைகூடச் சொல்லுவார். அதெல்லாம் நிஜமாகுமா?

மாணவன்: ஏன் சார், தமிழ் வாத்தியார் இப்படிப் புளுகு பேசுறார்?

ஆசிரியர்: (சிரித்துக்கொண்டே) போடா, அவரா பொய் பேசுறவர்? புத்தகத்துல அப்படி எழுதி இருக்கு"[31]

என்பதாக ஆசிரியர் - மாணவர் உரையாடல் அமைந்துள்ளது.

"பழயகதை, புராணம், இதிகாசம், இதெல்லாம் இருக்கே, அவைகளில் நிறையப் பொய்யும் புரட்டும் நிரம்பி இருக்கு. ஆனா அதை விளக்கிச் சொன்னா, மதத்தைக் கேலி செய்வதாகவும், குறைவாகப் பேசுவதாகவும் ஆகிவிடும். ஆகையாலே, இனி வாத்தியார்கள் இப்படியெல்லாம் பேசக் கூடாது, பேசினால், 'டிஸ்மிஸ்' என்று மந்திரி உத்தரவிட்டிருக்கிறார்"[32] என்ற கல்வி அமைச்சர் அவனாசிலிங்கம் செட்டியாரின் கருத்தைப் பள்ளி ஆசிரியர் வாயிலாகக் குறிப்பிட்டுப் 'பொய்யும் புரட்டும் நிறைந்துள்ள புராண, இதிகாசக் கருத்துகளைப் பயங்காட்டி மாணவர் மனதில் புகுத்தினாலும் கூட, அவை மாணவர் உள்ளத்தே நிற்பதில்லை' என்ற கருத்தை இந்நாடகத்தின் வாயிலாக அறிஞர் அண்ணா விளக்கியுள்ளார்.

### 4.4.10. காசூரார் கருணை

"உண்மை தழுவிய கற்பனை" என்ற முன்னுரையுடன் முடிவுபெறாத 'காசூரார் கருணை' என்ற நாடகம் 21.12.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்துள்ளது. 'இங்கிலாந்திடம் அடிமையாகக் கிடந்து விடுதலையடைந்த இந்தியா, அமெரிக்காவிடம் அடிமைப்பட்டு விடக்கூடாது' என்ற கருத்தை அடிப்படையாக வைத்து இந்நாடகத்தை அறிஞர் அண்ணா படைத்துள்ளார்.

"இந்திய விடுதலை விழாவிலிருந்து, அமெரிக்க நாட்டுத் தூதுவர், ஹென்றிகிரேடி இந்தியாவிடம் காட்டிவரும் 'அக்கறை' அனைவரும் அறிந்த விஷயம். அதை ஆதாரமாக வைத்து இந்நாடகம் தீட்டப்பட்டது"[33] என்று இந்நாடகம் குறித்துக் குறிப்பிடும் அறிஞர் அண்ணா,

**மாளிகை - இந்தியா.**

**பேசுபவர் - காங்கிரஸ் கட்சி**

**சீமான் - கிரேடி**

**காசூர் - அமெரிக்கா.**

**பிணியாள்- ஏழை**

என்று நாடகத்தின் பாத்திரங்களுக்கு விளக்கமும் அளித்துள்ளார். இந்நாடகம் உருவக நாடகமாக அமைந்துள்ளது. ‘காசூரின் நோக்கம், மாசுதுடைத்து, எங்கும் மகிழ்ச்சி வளரச் செய்வதுதான். உங்கள் மாளிகை, பிரமாண்டமானது-ஆனால் கவர்ச்சி இல்லை. கவர்ச்சிகரமானதாக்க முடியும் - பழுதுபார்க்க வேண்டும் - பல வர்ணம் தீட்ட வேண்டும் - சுற்றுச் சுவரைக் கட்ட வேண்டும்.”[34] இந்தியா என்ற பழைய மாளிகையைப் புதிப்பிக்க உதவிசெய்யும் நோக்கத்தில் வருகின்ற காசூரானின் கருணை, உள்நோக்கம் கொண்டது என்ற கருத்தை இந்நாடகம் விளக்குகிறது. இந்திய விடுதலைக்குப் பின்னர் நான்கு மாதங்கள் கழித்துத் திராவிடநாடு இதழில் வெளிவந்த இந்நாடகம், இந்தியா மீண்டும் எந்தவொரு நாட்டிடமும் அடிமைப்பட்டுவிடக் கூடாதென்ற கருத்தை மக்களிடம் பரப்புதற்காக எழுதப்பட்டுள்ளது.

### 4.4.11. கல்சுமந்த கசடர்

பத்துக் காட்சிகளை உடைய ‘கல்சமந்த கசடர்’ என்ற நாடகம், 13.3.1948, 20.3.1948 ஆகிய நாள்களில் வெளிவந்த திராவிடநாடு இதழ்களில் வெளிவந்தது. சேரன் செங்குட்டுவன், கண்ணகி படிமத்திற்குரிய கல்லை வடநாட்டு மன்னர் கனகன், விசயன் ஆகியோர் தலைமீது ஏற்றிக் கொண்டுவந்த வரலாற்று நிகழ்ச்சியின் அடிப்படையில் இந்நாடகம் படைக்கப்பட்டுள்ளது. அறிஞர் அண்ணாவின் செறிந்த தமிழ் நடை இந்நாடகத்தில் உரையாடல் வடிவில் வெளிப்பட்டுள்ளது.

“வில்லவன்: மன்னராக இருப்பதுடன் மமதையாளராகவும் உள்ளனர். அந்தப் பதர்கள். நம் தமிழ் மரபினைக் குறித்துக் கேவலமாகப் பேசினராம். கேலி செய்தனராம் தமிழ்க் குடியினரை. கேட்டீர்களா இந்தக் கெடுமதியாளர்களின் போக்கை! சிங்கத்தைக் கேலி செய்யும் செந்நாயைக் கண்டதில்லை. விழி பழுதானவன் வழி காட்டுவோனைக் கேலி செய்ததில்லை, வீணர்கள் வீரர்களைப் பழிக்கிறார்கள்”[35]

என்று வில்லவன் கோதையின் வீரவுரையை உரையாடலில் படைத்துள்ளார் அறிஞர் அண்ணா. நான்காவது காட்சியில் சேரன் செங்குட்டுவன் தன் படைவீரர்கள் முன் நிகழ்த்தும் வீரவுரை, தமிழர்களின் தன்மான உணர்விற்குச் சான்றாக அமைகிறது.

“மண், பெண், பொன் எனும் மூன்றிற்குமல்ல நாம் போரிடுவது. மானத்துக்கு. பல்லைக் காட்டி வாழ்ந்த கூட்டம், தமிழகத்தின் எல்லையைத் தாண்டி ஓர் கொல்லையை ஆண்டு வருகிறது. அது புன்னகைப் பூந்தோட்டமல்ல. செந்தமிழ் செழிக்கும் சோலையுமல்ல. கங்கைக் கரையோரத்திலே கசடர் இருவர் கனகன், விஜயன் எனும் பெயரினர். அரசர்களாக உள்ளனராம். சீறிப் போரிடும் வேங்கைகள் உலாவும் காட்டிலே சிறுநரிகள் உள்ளது போல! அங்கு அவர்கள் வாழ்வதை நாம் தடுத்தோமில்லை. பொருட்படுத்தவுமில்லை. மல்லிகைத் தோட்டத்தின் வேலி ஓரத்தில் உள்ள கள்ளி என்று அதனை மதித்தோம். அந்தக் கொல்லைக் காவலர் நாமெல்லாம் கல்லாகாதிருக்கும் இந்த நாளில் உமது கரத்திலே கட்கமும கருத்திலே வீரமும், உடலிலே தமிழ் இரத்தமும், உயிரிலே தன்மானமும், விளங்கும் இந்த நாளிலே, நான் நெடுமரமென நின்றிருக்கும் போது, என் முன்னோர்களின் வீரதீர வெற்றிகளையறிந்து மறவாதிருக்கும் நான் மண்டலத்தை ஆளும் நாளில், அந்த மமதையாளர்கள், மனுசந்ததியார் தமிழரை, தமிழகத்தை, தமிழ் வீரத்தை தன்மானத்தைப் பழித்துப் பேசினர், இழித்துரைத்தனராம்”[36]

“சேரமண்டலத்திலே வீரர் இல்லையா, இந்தச் செருக்கரின் சிரம் அறுக்க. போர் வீரர் கூட்டம் கூனி விட்டதா? போர்த்திறம் இழந்தோமா! தோள்வலியும் மனவலியும் போயினவா? முன்னோரின் புகழுக்கு நாம் மாசுகளா? முதுமொழிகளுக்குக் கரையான்களா? ஆண்மையற்ற கூட்டமா? அஞ்சி வாழும் ஆமைகளா? நயவஞ்சக நரிகளா? நாமா? திருஇடத்தவரா? ஒருபோதும் இல்லை. நாம் தமிழர். கொலை வாளைத் தூக்குவோம். கொடுமை களைவோம். மாற்றானின் ஆயுதங்களை நமது மார்பு எனும் மதிலில் வீசச்செய்வோம், மகிழ்வோம். தமிழகம் காணிக்கை கேட்கிறது; வீரத்தை, தியாகத்தைக் கேட்கிறது. இங்கே வீரர்கள் இல்லையா? ஆண்மையாளரே! கிளம்புங்கள். சிங்காரத் தமிழகத்தைச் சின்னாட்கள் மறந்திருங்கள். காதலை, கவிதையை, காட்சியை மறந்திடுங்கள். வானமே கூடாரம், தரையே பஞ்சணை. ஆயுதங்களே தோழர்கள். இதற்கழைக்கிறேன் உம்மை. உயிரைக் கரும்பெனக்

கருதுவோன் விலகட்டும். மானத்தைப் பெரிதென மதிப்போர் வாளை முத்தமிட வரலாம். வாகை சூடிடத் தமிழகம் நம்மை அழைக்கிறது."[37]

இவ்வாறு படையினர் முன் வீரவுரை நிகழ்த்துகிறான் சேரன் செங்குட்டுவன். வில்லவன் கோதையும் வீரர்களும் "தூக்குவீர் கத்தியை, தாக்குவீர் எதிரியை" எனக் கோஷமிட்டுச் சென்று கனகவிசயரை வெற்றி கொள்கின்றனர். வில்லவன் கோதை, கனகவிசயரிடம், "தமிழகத்தைத் தாழ்வாகப் பேசியவன் கதி என்னாயிற்று என்பதை உலகு உணரட்டும். கர்வம் பிடித்துத் தமிழரை ஏசிய நீங்கள் கல்சுமந்து வாரீர் தமிழகத்திற்கு. உங்கள் தலையிலே ஏற்றிவைக்கும் கல்கொண்டு, வீரப் பெண்மணி கண்ணகிக்குக் கோவில் கட்டுவோம்"[38] எனக்கூறி அவர்கள் தலையில் கல்லேற்றிக் கொண்டு வந்து சேரன் செங்குட்டுவன் முன் நிறுத்துகிறான். அவர்களிடம் செங்குட்டுவன், "ஆரியரே! உயிரைக் காப்பாற்றிக் கொள்ள உங்கள் இனத்தவர் எதையும் விட்டுக்கொடுக்கத் தயாராவீர்கள். போர் என்றால் புகை கிளம்பும் யாகம் செய்வீர்கள்! ஆண்டவனிடம் அஸ்திரம் கேட்பீர்கள்! வாள் வீசத் தெரியாத உங்களுக்கு ஏன் இந்த வம்பு? தமிழரைப் பொன் கேட்டீர் கொடுத்தோம். வாழ இடம் கேட்டீர் தந்தோம்! அந்த வாழ்வு பெற்ற பின்னர் தமிழரையா இகழ்ந்து பேசினீர்"[39] என்று வினவுகிறான். இவ்வாறு ஆரியர் இயல்பினைச் செங்குட்டுவன் வாயிலாக எடுத்துக்காட்டியுள்ளார் அறிஞர் அண்ணா. செங்குட்டுவனின் ஆணைப்படி கனகனும் விசயனும் சிறையில் அடைக்கபடுவதாக இந்நாடகம் நிறைவடைந்துள்ளது.

### 4.4.12. மட மான்மீயம்

மடாலயங்களிலே உள்ள நிலையை விளக்குகின்ற 'மட மான்மீயம்' என்ற கற்பனை நாடகம் 27.2.1949 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. மடாலயங்களின் அதிபர்களிலே சிலர், ஒழுக்கக் குறைவாகத்தான் இருக்கிறார்கள் என்பதை, "மடாலய நிர்வாக மசோதாவை எதிர்க்கும் மகானுபாவர்கள் கூட ஒப்புக் கொள்கிறார்கள். அவ்வித மட அதிபர்களிலே ஒருவர் வாழ்க்கை எப்படி இருக்கிறது என்பதை விளக்கும் கருத்தோவியம் இது"[40] என்று நாடக முன்னுரையில் அறிஞர்

அண்ணா குறிப்பிட்டுள்ளார். இந்நாடகத்தில் நான்கு காட்சிகள் இடம்பெற்றுள்ளன. மடாலய அதிபர், தரகரின் உதவியுடன் செல்வந்தர் ஒருவரை ஏமாற்றி மடத்திற்கு வேண்டியவற்றை இறைவன் பெயரால் பெறுகிறார். மடலாய அதிபர் பெண் இச்சை உடையவராக நாடகத்தில் காட்டப்படுகிறார். தரகர் அவருக்கு வேண்டிய இளம்பெண்களை ஏற்பாடு செய்துதருகிறார். வசந்த மண்டபத்தில் அவர் இளம்பெண்ணுடன், "சிங்காரி! உன்னைக்காண காலைமுதல் நான் தவித்துக் கிடந்தேன். மடத்திலேயோ மன்னார்சாமிகள் வருவதும் போவதும் ஓயவில்லை. என்மனமோ அங்கு தங்கவில்லை."[41] என்று காதல் மொழி பேசுகிறார். மதத்தின் பெயரால் மக்களை ஏமாற்றும் மடலாய அதிபரின் செயலை இந்நாடகத்தில் புலப்படுத்தியுள்ளார் அறிஞர் அண்ணா.

### 4.4.13. தர்மம் தலைகாக்கும்

'எங்கும் நடப்பது' என்ற அடைமொழியுடன் 'தர்மம் தலைகாக்கும்' என்ற சமூக நாடகத்தை 14.1.1950 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு பொங்கல் மலரில் அறிஞர் அண்ணா படைத்துள்ளார். மளிகைக் கடையில் வேலை செய்யும் குப்பன், பிச்சைக்காரன் ஒருவனுக்கு வெல்லக்கட்டியைக் கொடுத்துவிடுகிறான். இதனால் கோபமடைந்த முதலாளியான செட்டியார், குப்பனை வேலையை விட்டு நீக்குகிறார். அப்போது சென்னையிலிருந்து இருவர் வந்திறங்குகின்றனர். சென்னையில் சங்கீதசபா ஆரம்பிப்பதற்காகச் செட்டியாரிடம் நன்கொடை கேட்கின்றனர். சபாவின் வருமானத்தை வைத்து ஏழைகளின் கல்வி வளர்ச்சிக்கு உதவிட அவர்கள் எடுத்துரைக்கின்றனர். செட்டியார் மனவிருப்பமின்றி நூறு ரூபாய் அளிக்கிறார். ஆடிட்டர் அனந்துவும் அவர் நண்பரும் ரூபாயைப் பெற்றுக்கொண்டு வண்டியில் பயணிக்கின்றனர். அப்போது அவர்களுக்கு இடையே நடைபெறும் உரையாடல் வாயிலாகச் சமூகத்தின் நிலையை அறிஞர் அண்ணா எடுத்துரைக்கிறார். 'செட்டியார் கொடுத்த பணம் ஏழைகளுக்காக அன்று, செட்டியாரின் கணக்கு, தன்னிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் இருப்பதற்காகவே' என்று நன்கொடை பெற்றவர் தன் நண்பருக்கு விளக்குகிறார்.

“ஒரு வெல்லக் கட்டியை வேலையாள் பிச்சைக்காரனுக்குப் போட்டான் என்பதற்காக செட்டியார் அவனைக் கடையினின்றும் விரட்டினார்! வேதனைப்படும் அவனை ‘ஓடடா’ என்று ஓட்டினார்!

அவனும் தர்மம்தான் செய்தான், தலைகாக்கும் என்று சொல்கிறார்களே என்ற எண்ணத்தால்! அதற்குப் பரிசு அவனுக்குக் கடையிலிருந்து கல்தா. ஒரு ‘வெல்லக் கட்டியால் அவன் வாழ்வில் வேதனை வீச ஆரம்பித்தது!

ஆடிட்டரும் அவர் நண்பரும் சங்கீத சபாவுக்கு நிதி கேட்டனர்! செட்டியாருக்கோ கொடுக்க இஷ்டமில்லை, ஆனால் ஆடிட்டரை நினைக்கும்போது கொடுக்காமலிருந்தால் தொல்லை ஏற்படுமென்று தெரிகிறது ஆகவே, ‘தருமம்’ என்று சொல்லிக் கொண்டு பணம் தருகிறார், பெரிய தர்மிஷ்டர் போல!

‘தர்மம்’ நாட்டில் எப்படியிருக்கிறது என்பதன் ஒரு படப்பிடிப்பு இது! சுயநலம், சுயலாபம் இரண்டில் தான் ‘தர்மம்’ மலர்கிறது இங்கு”[42] என்ற உரையாடலோடு இந்நாடகம் நிறைவடைகிறது.

### 4.4.14.பாங்கர் பணம் பெருத்தான்

‘பணம் பெருத்தான் செட்டியார்’ என்ற பணக்காரர் செயலை அடிப்படையாக வைத்துப் ‘பாங்கர் பணம் பெருத்தான்’ என்ற நாடகத்தை அறிஞர் அண்ணா படைத்துள்ளார். இந்நாடகம் 19.2.1950 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. சட்டவிரோதமாக வெளிநாட்டிற்குப் பொருளை அனுப்பிய பணம்பெருத்தான் செட்டியார், காவல்துறையினரிடம் பிடிபடுகிறார். செட்டியார் மீது இன்ஸ்பெக்டர் வழக்குப் பதிவு செய்கிறார். வழக்கிலிருந்து விடுபட அவருக்குச் செட்டியார் இலஞ்சம் தர முயல்கிறார். வழக்குத் தொடர்பாக சந்தர்ப்ப முதலியாரைச் செட்டியார் சந்தித்து உரையாடுகிறார். பணம்படைத்த செல்வந்தர்களின் மனவியல்பை இவ்வுரையாடல் வெளிப்படுத்துகிறது.

“இரவென்னும் பாக்காமே, பகலென்னும் பாக்காமே ஓடியாடி அலைஞ்சு, சம்பாதிச்சு, கடைசியிலே இவனுகளுக்குக் கொட்டி அழத்தான் சரியாயிருக்கு!

சுயராஜ்யம் நடக்குதாம். யார்க்குன்னு கேட்கிறேன். வெளியே பேசினா ‘பணக்காரன் ஒழிக’ன்னு கூச்சல்! பணக்காரன் படுறபாட்டை, கேட்டால்ல தெரியும்”[43]

இவ்வாறு தன் போன்ற பணம் படைத்தவர்களின் நிலையை எடுத்துரைக்கும் பணம் பெருத்தான் செட்டியார், வட்டிக் கடை தொடர்பாக வருமானவரி அதிகாரிகள் அளிக்கின்ற தொல்லைகளைச் சந்தர்ப்ப முதலியாரிடம் குறிப்பிடுகிறார். அவரிடம் சந்தர்ப்ப முதலியார், தானும் வருமானவரி கட்டாததையும், அதனால்பட்ட துன்பங்களையும் எடுத்துரைத்து, இறுதியில் தன் மருமகன் யோசனைப்படி, ‘காங்கிரஸ் கட்சியில்’ இணைந்ததைக் குறிப்பிடுகிறார். அன்றைய அரசியல் நிலையை மறைமுகமாகச் சந்தர்ப்ப முதலியார் கூற்றில் வைத்து அறிஞர் அண்ணா வெளிப்படுத்துகிறார்.

“இப்ப ஒருவகையா, விவகாரங்கள் எல்லாம் ஒண்ணுப் பின்னாலே ஒண்ணு தீர்ந்துகிட்டு வருது! போன வாரம்கூட மந்திருக்கு ஒரு பார்ட்டீ வச்சேன் பாருங்க.”[44] என நிகழ்வினை விவரிக்க, அவர் முடிவைப் பணம்பெருத்தான் செட்டியார் வரவேற்கிறார்.

“ஆமாம் அண்ணாச்சி! நம்ப காரியத்தை நாம்பதானே கவனிச்சுக்கணும். அப்ப. கொஞ்சம் வாங்களேன் கதர் ஸ்டோர் வரைக்கும் போவோம். பணம் பெருத்தான் காங்கிரசில் சேர்ந்தார்! ஏழைகளுக்காக உழைக்க முன்வந்த வள்ளல்! என்ற தலைப்புகளிட்டு அவருடைய போட்டாவுடன் தினசரிப் பத்திரிகைகள் பிரசூரித்திருந்தன! தியாகி தேசிங்கு, குதூகலமடைந்தார், ஒரு பெரிய ஆளே காங்கிரசின் பெருமையுணர்ந்து சேர்ந்துவிட்டார் என்று! ஆனால் ‘அந்த இரண்டு உள்ளங்களையல்லவா கேட்க வேண்டும் உண்மைப் பதிலைப் பெற”[45] என இந்நாடகம் நிறைவுறுகிறது. 1950 ஆம் ஆண்டின் தமிழக அரசியல் சூழல் இந்நாடகத்தில் வெளிப்பட்டுள்ளது.

### 4.4.15.இளங்கோவின் சபதம்

சிலப்பதிகாரக் கதையை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட நாடகம் ‘இளங்கோவின் சபதம்’ ஆகும். இந்நாடகம் மூன்று காட்சிகளை உடையது. 25.6.1950 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இந்நாடகம் வெளிவந்தது. சேரமன்னன் இமயவரம்பன், அவன் மக்கள் செங்குட்டுவன், இளங்கோவன், நிமித்திகன் ஆகிய முதன்மைப் பாத்திரங்களைக் கொண்டு இந்நாடகம் படைக்கப்பட்டுள்ளது. முதல் காட்சியில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், தன்முதுமை கருதித் தன் மக்களை அரசுப் பொறுப்பேற்க வேண்டுவது இடம்பெற்றுள்ளது. இளங்கோவின் கவி உள்ளத்தை அறிந்த நெடுஞ்சேரலாதன்,

“மூத்தவன் முடி புனைவது முறை-அறம் என்றாலும் இளங்கோ, காவலன் வழிவந்த நீ, காவியம், ஓவியம் என்று நாட்டை மறந்து, நாவலர், பாவலர் போல, ஏடெடுத்து, பாட்டெழுதி, பதவுரை பகர்ந்து, விழுப்பொருள், கருப்பொருள் பேசி, பொழிப்புரை, கருத்துரை வழங்கிக்கொண்டிருந்தால் மட்டும் போதுமா?”[46] என்று வினவுகிறார். அப்போது அங்குவந்த நிமித்திகன் இளங்கோவை நோக்கி, ‘வருநாள் மன்ன’ என விளிக்கிறான். இவ்விடத்தில் இளங்கோவடிகள் கூறுவதாக நாடகத்தில் இடம்பெற்றுள்ள கருத்துகள், சோதிடத்திற்கு எதிரான பகுத்தறிவுக் கருத்துகளாக அமைகின்றன.

“அடடா, வரும் பொருள் உரைக்கும் திறன், ஆண்டவனருளால் அடைந்தவர் என்ற பெருமை உமக்குண்டே! தவறிவிட்டீரே.. உம் சோதிடம் சோரம் போய்விட்டதே! உம் வேதம் வீழ்ச்சிக் குழியில் விழுந்துவிட்டதே! ஆளப்போகும் அண்ணன் அருகிலே இருக்க, என்னை எதிர்கால மன்ன என்று கூறிவிட்டீரே! உம்மை நிமித்திகன் என்று வேறு அழைக்கின்றனரே! எதிர்காலத்தையும் அறிந்துரைக்க முடியும் என்பதெல்லாம் பித்தலாட்டந்தானே!”[47] எனக் குறிப்பிட்ட இளங்கோ, “உம் வார்த்தைகள் அத்தனையும் வடிகட்டின பொய்யென்று நாட்டிற்குச் சொல்ல இன்று முதல் நான் காவியேற்கிறேன் - துறவியாகிறேன். ஆம், நாட்டின் மீதுள்ள ஆசையை மட்டுமல்ல, இந்த மாநிலத்தின்

மீதுள்ள எப்பொருள் மீதும் ஆசை வைக்கப் போவதில்லை – காவியுடையுடன் கவியாக உலவுவேன்”[48] என்கிறார்.

இரண்டாவது காட்சியில் தமிழ்நாட்டு மன்னர்களைப் பழித்துப் பேசிய வடநாட்டு மன்னர்கள் குறித்து ஊரரார் பேசுகின்றனர். இளங்கோவடிகளின் சிலப்பதிகாரக் காப்பியத்தின் சிறப்புகள் இக்காட்சியில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

“தமிழன்னைக்குத் தக்கதோர் மணியாரம், அவர் எழுதிய ஒப்பிலா காப்பியம்-சீர்மிகு சிலப்பதிகாரம்”

“அதில் முத்தமிழும் சேர்ந்து தித்திப்புச் சமுத்திரமாகி விட்டதே!”

“பாவினிமை முழுதும் அதிலே பரவி விரிந்து கேட்பவர் செவியில் செந்தேன் பாய, சிந்தையில் சக்கரைச் சாறு ஓடச் செய்கிறதே!”

“நாடகக் காப்பியம் என்று புகழ்கிறார்கள்-கூத்துக்கு இதுவரை இருந்த குறையினைப் போக்கிவிட்டதே!”

“சொல்நயத்தை, பொருள் நுட்பத்தை, கருத்து திட்பத்தை என்னென்று புகழ்வது! வருணனை செய்ய வார்த்தைகள் கிடைக்கவில்லையே!”

“தாயகத்தின் பெருமைக்கு அவர் இயற்றிய காவியம்தான் நாயகமாகிவிடும், இனிமேல்!”

“சிலப்பதிகாரம், செந்தமிழ் நாட்டிற்கோர் ஈடு இணையற்ற காப்பியச்சிகரம்! கருத்துச் சுரங்கம் கற்பனைக் கருவூலம்”[49]

இவ்வாறு ஊரிலுள்ள பெரியவர்கள், அறிஞர்கள், காவலர்கள், பாவலர்கள், கலைஞர்கள், புலவர்கள், வீரர்கள் தமக்குள் பேசிக்கொள்வதாக இரண்டாவது காட்சி அமைந்துள்ளது.

மூன்றாவது காட்சியில் பழைய நிமித்திகன் வனத்தில் இளங்கோவைச் சந்திக்கிறான்.

“ஏடு புரட்டியாக இருந்தேன் இதுநாள்வரை! சொந்தச் சிந்தனையைத் தூரத்தே வைத்திருந்தேன். தெளிவு பெற்றேன். இப்பொழுது தேடியும் வந்திருக்கிறேன் தங்களை – எனக்குப் புதிய வாழ்வளிக்க வேண்டும் என்று வேண்டிக்கொள்ள”[50] என்று நிமித்திகன் இளங்கோவடிகளிடம் உரைக்கின்றான். சோதிடத்திற்கு எதிரான திராவிட இயக்கத்தாரின் கொள்கை நிமித்திகன் கூற்றில் வெளிப்பட்டுள்ளது.

நாடகத்தின் இறுதியில் இளங்கோவடிகள், செங்குட்டுவன், நிமித்திகன் ஆகியோரின் உரையாடலில் அறிஞர் அண்ணா, தமது இயக்கம் சார்ந்த் கொள்கைகளை சிலப்பதிகாரக் காப்பிய அமைப்பை அடிப்படையாக வைத்து விளக்கியுள்ளார்.

“இளங்கோ: காவியத்திற்கு காப்பு பாடியபோது கூட கடவுள்களைக் கூவியழைக்கவில்லை.

சேரன்: திங்களைப் போற்றுதும், திங்களைப் போற்றுதும், மாமழை போற்றுதும், மாமழை போற்றுதும், பூம்புகார் போற்றுதும், பூம்புகார் போற்றுதும்! என்றுதான் பாடியிருக்கிறான் தம்பி!

இளங்கோ: நிமித்திகரே, குறிப்பாகக் கவனியுங்கள் - இயற்கையை வணங்கவில்லை, போற்றியிருக்கிறேன். தொழவில்லை. வாழ்த்தியிருக்கிறேன்! உங்கள் போக்குக்கு இது மிகமிக எதிர்த் துருவமாயிற்றே”[51]

என்றவாறு நாடகத்தில் உரையாடல் அமைந்துள்ளது. நிமித்திகன் தன் போக்கினை உணர்ந்து திருந்துகிறான். இளங்கோ நிமித்திகனிடம்,

“இன்னும் உம்மைப்போல பழைய ஏற்பாடுகளை, எண்ணங்கனை நம்பிக் கொண்டுள்ளவர்கள் ஆயிரமாயிரம் - உம் குலத்தில் இருக்கிறார்களே! அவர்களுக்கு நீர் சொல்லும் - அந்தத் தொண்டைச் செய்யுங்கள் - இன்று முதல், உம் வாழ்நாள் முடியும்வரை”[52] எனக் குறிப்பிட்டு அனுப்புகிறார். நிமித்திகனும் இளங்கோவின் எண்ணப்படி நடப்பதாகக் கூறி விடைபெறுவதாக நாடகம் நிறைவடைந்துள்ளது.

### 4.4.16.இருட்டறை

14.01.1951 ஆம் நாள் திராவிடநாடு பொங்கல் மலரில் ‘இருட்டறை’ என்ற நாடகம் வெளிவந்தது. இந்திய புதிய அரசியல் திட்டத்தை அடிப்படையாக வைத்து இந்நாடகம் படைக்கப்பட்டுள்ளது. சட்டக்கல்லூரி மாணவர்கள் இந்நாடகத்தில் பாத்திரங்களாக இடம்பெற்றுள்ளனர்.

“சர்க்காரோ, சர்க்காரின் பொருளுதவியோடு கூடிய நிலையங்களினாலோ நடத்தப்படுகிற கல்விச் சாலைகளில், மதம், இனம். சாதி, மொழி இவைகளையோ, அல்லது இவைகளில் ஏதேனும் ஒன்றையோ காரணமாகக் கொண்டு ஒரு குடிமகனுக்கு அனுமதி மறுக்கப்படக் கூடாது”[53] என்ற கருத்தை அடிப்படையாக வைத்துச் சட்டக்கல்லூரி மாணவர்களான கோபுவும் சங்கரனும் உரையாடுகின்றனர்.

“சட்ட இருட்டறைக்குள் சிந்தனை விளக்கேந்திச் செல்லவேண்டும்”[54] என்ற கருத்தினை சங்கரன் வாயிலாக வெளிப்படுத்தும் அறிஞர் அண்ணா, மதம் காரணமாக வெவ்வேறு நீதிகள் வழங்கப்படக் கூடாதென்ற கருத்தையும் இந்நாடகத்தில் வெளிப்படுத்தியுள்ளார். இந்திய அரசியலமைப்பின் 13(1) ஷரத்தின்படி இதுவரையில் நடந்துவருகிற சட்ட திட்டங்கள், புதிய அமைப்புக்கு எதிராக இருந்தால் செல்லாது எனக் குறிப்பிடப்பட்டுள்ளதைக் குறித்தும் நண்பர்கள் தமக்குள் உரையாடுகின்றனர்.

“இந்துக் குடும்பத்திலே, மகன் மட்டும்தான் தந்தையின் சொத்தில் பாகம் பெறுகிறான். மகளுக்கு அந்த உரிமை மறுக்கப்படுகிறது. முகம்மதியக் குடும்பத்திலே பெண்ணும் தந்தையின் சொத்தில் பாகம் பெறுகிறாள். ஆனால் சகோதரன் பெறுகிற அளவல்ல – குறைவு”[55] என்று சங்கரன் குறிப்பிட, அவனுக்கு மறுமொழியாக லிலிதா

“மதத்தின் பெயரால் பால் வேற்றுமை நடைபெறுகிறது- உரிமை பறிபோகிறது எவ்வளவு சிக்கல்! எவ்வளவு சுழற்சிகள்”[56] என்று தன் கருத்தை வெளிப்படுத்துகிறாள்.

நாடகத்தின் இறுதியில் “சட்டம் இருட்டறை என்றார்கள்-சாளரங்களான வக்கீல்களோ, காற்றையும்விட மறுக்கிறார்கள், வெளிச்சத்திற்குத்தான் தடை போட்டாலும். இருட்டறைக்குள்ளே நுழைய நல்ல ஒளி வேண்டும். அதற்கேற்ற திறம்

வேண்டும்”[57] என்ற கருத்துகளைச் சங்கரன் வாயிலாக அறிஞர் அண்ணா மக்களுக்கு வழங்கியுள்ளார். திராவிடநாடு இதழில் நாடகங்கள் வாயிலாக சட்ட விளக்கங்களை அறிஞர் அண்ணா அளித்துள்ளமையை இந்நாடகம் எடுத்துக்காட்டுகிறது.

### 4.4.17.திரும்பி வந்த சிங்காரம்

ஆவடியில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டு நிகழ்வுகளை அடிப்படையாக வைத்துப் புனையப்பட்ட ‘திரும்பி வந்த சிங்காரம்’ எனடற நாடகம் 30.1.1955 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. சிங்காரம், முத்துப்பிள்ளை ஆகிய இருவருக்கும் இடையே நடைபெற்ற உரையாடல் நாடகத்தின் முதல் காட்சியாக அமைந்துள்ளது. மாநாட்டிலிருந்து திரும்பி வந்த சிங்காரம் பல்வேறு கருத்துகளை முத்துப்பிள்ளையிடம் எடுத்துரைக்கிறார்.

‘பொருளாதாரத்திலே நாடு முன்னேற வேண்டுமாயின், சோஷியலிசத்தின் அடிப்படையில் நாட்டைக் கொண்டுபோக வேண்டும் என்ற முக்கியமான தீர்மானம் ஆவடி மநாட்டில் நிறைவேற்றப்பட்டதைச் சிங்காரம் எடுத்துக்கூற, முத்துப்பிள்ளை சோஷியலிசத்திற்கு விளக்கம் கேட்கிறார்.

“சேஷியலிசம்னா, ஏழை பணக்காரங்க என்கிற பேதம் இல்லாமெ எல்லோரும் ஒண்ணா வாழ்றது”[58] என விளக்கமளிக்கிறார் சிங்காரம்.

“எழையும் பணக்காரங்களும் ஒண்ணாகணும்னா, பணம் எங்கே குவிஞ்சிருக்கோ அதையெல்லாம் சர்க்கார்லே கணக்கெடுத்து – ஆலையாகவும் வயலாகவும், கம்பெனியாகவும் காடாகவும் இருக்கிறதையெல்லாம் சர்க்காருடைய சொத்துன்னு சொல்லி, பிறகு அதுக்கு ஒரு ‘போர்டு’ ஒண்ணு வைச்சு. அந்த போர்டு மூலம் அந்தந்த தொழில் நடக்கும்படி செய்தா என்ன அண்ணே! அந்த போர்டுகளிலே வேணும்னா, எந்தெந்த தொழிலே எந்ததெந்த பணக்காரர் சிறந்து விளங்கினாரோ அவர்களுக்கு இடம் கூடக் கொடுக்கலாமேண்ணே.”[59] என்று விவசாயியான முத்துப்பிள்ளை கூறுகிறார். பின்னர் வந்த கந்தசாமி, முதலாளிகள் ஆடும்

பணவேட்டையைக் குறைக்கச் சொல்லும் தீர்மானம், ஆவடி மாநாட்டில் ஒத்தி வைக்கப்பட்டதை எடுத்துக் கூறுகிறார். ஆவடி காங்கிரஸ் மாநாட்டுத் தீர்மானங்களை அடிப்படையாக வைத்து இந்நாடகம் ஒரு கருத்துவிளக்க நாடகமாக அமைந்துள்ளது.

### 4.4.18.சன்மானம்

'சன்மானம்' என்ற நாடகம் 21.8.1955 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. பஜனைக் கூடமொன்றில் 'வெங்கடேச ஐயங்கார்' என்ற ஓய்வு பெற்ற என்ஜினியர் ஒருவர் நூற்றியெட்டு நாள்கள் இராமாயணச் சொற்பொழிவு ஆற்றுகிறார். அவருக்கு ஆயிரத்தியொரு ரூபாய் சன்மானமாக வழங்கப்படுகிறது. அத்தொகை அனைத்திற்கும் இராமாயண நூல்களை வாங்கிப் படித்து உபன்யாசம் செய்யப் போவதாக வெங்கடேச ஐயங்கார் மக்களிடம் குறிப்பிடுகிறார். ஐயங்காரின் மனைவி எச்சம்மாள், மகள் ஏமலதா வீட்டில் அனைத்துப் பணங்களையும் எண்ணிப் பார்க்கின்றனர். சன்மானப் பணத்தில் தன் மகளுக்கு வளையல் வாங்க எண்ணிய எச்சம்மாள், தன்மகளுடன் 'சேட்ராம்ஜீ' நகைக்கடைக்குச் செல்கிறாள். நகையை மறுநாள் வீட்டிற்குக் கொடுத்தனுப்பக் கூறிவிட்டு இருவரும் திரும்புகின்றனர். கடைவீதியில் தன் தோழி கண்ணம்மாவை எச்சம்மாள் சந்திக்கிறாள். எச்சமாளின் மகன் கல்யாணராமன், மோட்டார் சைக்கிளில் அங்கு வந்து தன் தங்கை ஏமலதாவைக் காந்தி சேவா சங்கக் கூட்டத்திற்கு அழைத்துச் செல்கிறான். கண்ணம்மாவின் மகனைத் தீயவர் சிலர் சூழ்கின்றனர். திருட்டு மதுவிற்பனையாளர்களைக் காவல்துறையினரிடம் காட்டிக் கொடுத்ததாகக் கூறி அவனைத் தாக்குகின்றனர். அவர்களிடம் மன்றாடித் தன் மகனைக் கண்ணம்மாள் விடுவிக்கிறாள். கல்யாணராமன் மதுவிற்பனைக் கும்பலுடன் கள்ளத்தனமாகத் தொடர்பு கொண்டிருக்கிறான். இருப்பினும் வெளியில் நல்லவன் போன்று தன்னைக் காட்டிக் கொள்கிறான்.

காந்தி சேவா சங்கக் கூட்டத்தில் கல்யாண ராமனுக்குப் பாராட்டு விழா நடைபெறுகிறது. போலிஸ் அதிகாரி கூட்டத்தில், "லேடீஸ் அண்டு ஜென்டில்மேன்!

அதாவது சகோதர சகோதரிகளே! நாமெல்லாம் இன்று ஒரு முக்கியமான காரியமாகக் கூடியிருக்கிறோம். மகாத்மாவோட கொள்கைகளைக் காப்பாத்தறதுன்னு சங்கல்பம் செய்துண்டு இருக்கிற நம்ம சர்க்கார் மதுவிலக்குச் சட்டம் கொண்டுவந்தா, சிலபேர் அதைமீறித் திருட்டுத்தனமாகக் குடிக்கிறா. அப்படிப்பட்ட பாபாத்மாக்களைக் கண்டுபிடித்து, ஒழிக்க வேணும்னா, தைரியமா பொதுஜனம் ஒத்துழைக்க வேணும். இப்ப பாருங்கோ ஸ்ரீமான் கலியாணராம ஐயர், வயதிலே சின்னவர்.. ஆனா நல்ல ஞானஸ்தன். மகாத்மாவிடம் அத்யந்த பக்தி."[60] என்று குறிப்பிட்டுத் திருட்டுச் சாராயக் கும்பலைப் பிடிக்க உதவியமைக்காக இருநூறு ரூபாய் சன்மானம் அளித்துப் பாராட்டுகிறார். ஏமலதாவிற்கும் 'சங்கீதபூஷணி' என்ற பட்டத்தை அளித்து, அவள் கன்னத்தைக் கிள்ளி அன்புடன் அணைத்துக் கொள்கிறார். தன் அண்ணனிடம் ஏமலதா, "ஏண்டா அண்ணா! அப்பாவுக்குக் கிடைச்ச சன்மானத்திலே நேக்கு வளையல் வாங்கித் தர்ரார் - உனக்குக் கிடைச்ச சன்மானத்திலே, நேக்கு நீ என்ன வாங்கித் தரப்போறே. சொல்லேன்"[61] என்று வினவுவதனுடன் நாடகத்தை நிறைவு செய்துள்ளார் அறிஞர் அண்ணா. 'பார்ப்பனர்கள் சூழ்நிலைகளைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்வதில் வல்லவர்கள்' என்பதை இந்நாடகத்தின் வாயிலாக அண்ணா விளக்கியுள்ளார்.

### 4.4.19. களத்தில் வென்றான்

திருச்சியில் நடைபெறவுள்ள திராவிட முன்னேற்றக் கழக மாநாட்டிற்குப் புறப்படுவதற்கு ஆயத்தமாகும் இரு நண்பர்கள் பேசிக்கொள்வதாகக் 'களத்தில் வென்றான்' என்ற நாடகம் அமைந்துள்ளது. இந்நாடகம் 29.4.1956 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. இந்நாடகத்தை நடனசபாபதி, செங்குட்டுவன் எனும் இரண்டு பாத்திரங்களை மட்டும் வைத்து அண்ணா படைத்துள்ளார்.

"இது வெறும் அரசியல் கிளர்ச்சி அல்ல —விடுதலை இயக்கம் - வீரர்க்கும் விவேகிக்கும் இதிலே பங்கு உண்டு — அறிவு இயக்கம் - தெளிவு தேடுவோர் அனைவருக்கும் இடம் உண்டு — சாக்ரடீஸ் காலமுதற்கொண்டு 'ஷா' காலம்

வரையிலே, உலகினை உயர்வித்தவர்களைப் பற்றிய கருத்தளிக்கும் காதைகளை, விஞ்ஞான வித்தகர்களின் வாழ்க்கைக் குறிப்புகளை, விடுதலைப்போர் நடாத்தி வெற்றி கண்ட வீரர் வரலாறுகளை எடுத்துக் கூறி, நமக்கு ஏற்றமளிக்க, இன உணர்வு ஊட்ட ஏழுச்சி தரும் சொற்பொழிவுகள், இன்னிசை, நாடகம், இவ்வளவும் உண்டு. சுவையும் பயனும் மிகுதியும் உண்டு"[62] என்று செங்குட்டுவன் சபாபதியிடம் குறிப்பிட, "நான் சபாபதியல்லடா, சபாபதி அல்ல. என் பெயர் 'களத்தில் வென்றான்' தெரிந்து கொள்"[63] என்று குறிப்பிடுகிறான். தன் பெயரைத் தமிழ்ப் பெயராக மாற்றிக்கொண்ட சபாபதியின் கூற்றுடன் நாடகத்தை அறிஞர் அண்ணா நிறைவு செய்கிறார்.

### 4.4.20.கடவுளர் உலகில்

தேவலோகத்தில் பாடலேசர், தேவி, அனுமன் ஆகியோர்க்கு இடையே நடைபெறும் உரையாடலை வைத்துக் 'கடவுளர் உலகில்' என்ற ஓரங்க நாடகம் படைக்கப்பட்டுள்ளது. 6.5.1956 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இந்நாடகம் வெளிவந்துள்ளது. தமிழகத்தில் இறைமறுப்பாளராக இருந்த ஒருவர், பின்னாளில் தன் கொள்கையிலிருந்து மாறி, கட்சி ஒன்றில் சேர்ந்து அமைச்சர் பதவியைப் பெறுகிறார். இச்செய்தியின் அடிப்படையில் எள்ளல் சுவையுடன் இந்நாடகம் படைக்கப்பட்டுள்ளது. அமைச்சர் பதவி பெற்றவர் கடவுள் மறுப்பு இயக்கத்திலிருந்தபோது தன்னைத் தூற்றியதைப் பாடலேசர் தன் தேவியிடம்,

"இந்த அமைச்சர், முன்பு, நாதனுக்கு உருவம் ஏது, நாயகிதான் எதற்கு? என்று ஏதேதோ கேட்டு நாத்தீகம் பேசும் நாயக்கர் கூட்டத்தில் இருந்து வந்தார் - இப்போது 'கனம்' ஆனார், பக்தனும் ஆகிவிட்டார்! நம்மை மறந்து, நிந்தித்துக் கிடந்தவர் வந்தனை வழிபாடு செய்திட வந்தது கண்டதால், எனக்கு மகிழ்ச்சி, மேலும். அமைச்சர் பதவி தனக்குக் கிடைத்ததற்குக் காரணமே என் அருள்தான் என்று உள்ளம் உருகி உரைத்திருக்கிறான் அந்த உத்தமன். பாடலேசரை நான் பணிந்து வருபவன். அவர் அருளாலேயே பட்டம் பதவி பெற்றேன் என்று பலரறியக் கூறினான் அந்தப் பரம பக்தன்."[64] என்று குறிப்பிடுகிறார். பாடலேசர் தன் தேவியிடம்

குறிப்பிட்டிருக்கும் வேளையில் அங்கு அனுமார் தோன்றுகிறார். அவர் பாடலேசரிடம் அந்தப் பக்தன் அமைச்சர் பதவி கிடைத்தவுடன் தன்னிடம் வந்து, “அனுமனே! இராம தூதனே! உன் அருளால் அமைச்சனானேன் என்று சொல்லி கன்னத்தில் போட்டுக் கொண்டார். நான் பூரித்துப் போனேன்”[65] என்று குறிப்பிடுகிறார். பின்னர் அனுமன் பாடலேசரிடம், “உடனே ஒரு அறிக்கை வெளியிடுங்கள் ஈசா, பக்தி வேடமிட்டுக் கொண்டவர்களால் கடவுளர் இவ்விதமாக ஏமாற்றப்படுகிறார்கள் என்பதை விளக்கியும், அமைச்சரின் போக்கை எடுத்துக்காட்டியும் ஒரு மறுப்பறிக்கை வெளியிடும்”[66] என்று வேண்டுகிறார். அமைச்சர் பதவிக்காகக் கொள்கைகளை மாற்றிக் கொள்கின்ற அரசியல்வாதிகளின் செயலை இக் கற்பனை நாடகத்தில் அறிஞர் அண்ணா எடுத்துக்காட்டியுள்ளார்.

### 4.4.21.செல்லுமிடந்தோறும்

உரையாடல் வடிவில் இடம்பெற்ற ‘செல்லுமிடந்தோறும்’ என்ற ஓரங்க நாடகம் 17.6.56 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. தமிழகக் காங்கிரஸ் தலைவரான கு.காமராசர் செயல்களைக் குறித்த நாடகமாக இது அமைந்துள்ளது. “வடநாட்டிலிருப்பவர்களுக்கு. தென்னாட்டுத் தலைவர்களைப் பற்றி எங்கே தெரிந்திருக்கிறது? சர்தார் பட்டேலைத் தெரிந்திருந்த அளவுக்கு சர்தார் வேதரத்தனத்தைப் பற்றி அறிவரோ? கலேல்காரை அறியுமளவுக்கு கக்கனைத் தெரிவரோ! பாட்டிலைப் பற்றித் தெரிந்த அளவுக்கு பக்தவத்சலத்தைக் கண்டிருப்பரோ”[67] எனத் தொடக்கத்தில் தமிழகத் தலைவர்களை வடஇந்தியர் அவ்வளவாக அறிந்திருக்கவில்லை எனக் குறிப்பிடும் அறிஞர் அண்ணா, பம்பாய் சென்ற காமராசருக்கு அங்குள்ள தாராவி வாழ் தமிழர்கள் வரவேற்பு அளித்தபோது அவர்களிடம் காமராசர், அவர்கள் நலம் குறித்துப் பேசாமல் தி.மு.க.வைக் குறித்துக் குறை கூறியிருப்பதைக் குறிப்பிட்டு, “இருந்தாலும் இப்போது காமராஜரின் வேலை சென்ற இடமெல்லாம் நம்மீது சீறுவது தானே”[68] என்று குறிப்பிடுவதுடன் இந்நாடக உரையாடல் நிறைவுறுகிறது.

### 4.4.22. உப்பில்லாத சோறு

மயிலாப்பூர் பள்ளி ஒன்றில் 'பாலசுப்ரமண்ய அய்யர்' என்பவர் பேசிய கருத்துகளை அடிப்படையாக வைத்து 'உப்பில்லாத சோறு' என்ற நாடகம் படைக்கப்பட்டுள்ளது. 'பக்தி இல்லாத ஒழுக்கம் உப்பில்லாத சோறு போல' எனும் அய்யரின் கூற்றிலிருந்து நாடகத்திற்கு அறிஞர் அண்ணா தலைப்பிட்டு, பக்தி, ஒழுக்கம் ஆகியவற்றை விளக்குகிறார். "பிறர் சொத்து விழையாமை,! பிறரைக் கெடுக்க ஆசைப்படாமை! கோபம் நீக்குதல், எளியார்க்கு இரங்குதல், காமம், களவு, கட்குடி முதலியவைகளில் ஈடுபடாமலிருத்தல், பிறன் மனைவியை விரும்பாமை, சுருக்கமாகச் சொன்னால், நல்லது செய்வதும், தீய வழிகளில் ஈடுபடாமலிருத்தலும் ஒழுக்கம் என்று கூறலாம்"[69] என்று ஒழுக்கம் என்பதற்கு விளக்கம் அளிக்கும் அறிஞர் அண்ணா, பிறன் மனை நோக்காமையைச் சிறந்த ஒழுக்கம் என்று எடுத்துரைத்து, சிவபெருமான் செயலைக் கதைக்குள் கொண்டு வருகிறார்.

"பக்தி தேவை என்று பாலசுப்ரமண்ய அய்யர் தெரிவித்தார் என்றாயே, அப்படிப்பட்ட பக்திக்கெல்லாம் அரசனான பரமசிவன்தான் மானாக்கஞ்சாற நாயனார் என்பவர்தான் மகளின் முடியை அறுத்துக் கொடுத்தவர்! இயற்பகை நாயனார் என்பவர்தான் மனைவியை மகேசன் பின்னால் அனுப்பியவர்.

செச்செச்சே!

காதுகளை மூடிக்கொள்ளாதே! பக்தியின் பேரால் ஒழுக்கத்தையே துறந்த கதைகள்தான் நமது புராணங்கள்! சேக்கிழார் விழா கொண்டாடியதாகச் சொன்னாயே, அவருடைய பெரிய புராணத்தைப் படித்துப் பார், சிந்தை நோகும். ஒழுக்கம் கெடக் கூடிய கதைகளாகத்தானிருக்கும்"[70]

என்றவாறு நாடகத்தில் உரையாடல் இடம்பெற்றுள்ளது. பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள சிவபெருமானின் செயல்களை நாடகத்தில் சாடுவதோடு பகுத்தறிவுச் சிந்தனைகளையும் இந்நாடகத்தில் அறிஞர் அண்ணா வெளிப்படுத்தியுள்ளார். இந்நாடகம் 24.6.1956 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது.

### 4.4.23. பக்தியின் பெயரால்

இரு உண்மை நிகழ்வுகளை அடிப்படையாக வைத்துப் 'பக்தியின் பெயரால்' என்ற நாடகத்தை அறிஞர் அண்ணா படைத்துள்ளார். இந்நாடகம் 1.7.1956 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. ராஜ்கோட்டைச் சேர்ந்த மார்வாடியான 'பகத்' என்பவரின் வியாபாரம் அதிகமாகி வருமானம் பன்மடங்கு உயர்கிறது. இதனால் வருமான வரித்துறையினர் அவரது கணக்கு வழக்குகள் குறித்த விவரங்களைக் கேட்டு நோட்டீஸ் அனுப்புகின்றனர். ஊர், பெயர், வருமானம் எனப் பலவிவரங்களை வருமானவரித் துறையினர் கேட்டனுப்ப, அனைத்திற்கும் 'ராமா, ராமா' என்று எழுதி அனுப்பி வைக்கிறார். இதைக் கண்ட அதிகாரிகள், மீண்டும் வரவு செலவுக் கணக்குகளைக் கேட்க, பகத் ஒரு மூட்டையில் இராமாயணம், மகாபாரதம், பகத்கீதை ஆகியவற்றை அனுப்பி வைத்த செயலை நாடகத்தில் அறிஞர் அண்ணா விவரித்துள்ளார்.

பீகாரிலுள்ள 'அரா' என்ற ஊரைச் சேர்ந்த சாது ஒருவர், சிறுமி ஒருத்தியைக் காளிக்குப் பலியாகக் கொடுத்த நிகழ்வினை நாடகத்தில் அறிஞர் அண்ணா,

'ஊர்ச்சொத்தைக் கொள்ளையடிக்கவில்லை, ஒருவருக்கும் வஞ்சனை செய்தறியாத வயது-உலகத்தில் புரளும் செல்வவானின் செங்கரும்பும் அல்ல. ஏழை! அங்கு, ஆடுமேய்த்துக் கொண்டிருந்திருக்கிறாள்'

அவளை இந்தச் சாது ஏன் இப்படிச் செய்தார்?

"பக்தியால்!"

பக்தியாலா?"

"ஆமாம்! அந்தச் சிறுமியின் உடம்பிலிருந்து வழிந்த இரத்தத்தைக் கொண்டுபோய் காளிக்கு அர்ப்பணம் செய்தானாம் சாது.."

"நாசகாலன்! எப்படி ஒரு குழந்தையைக் கொலை செய்ய அவனுக்கு மனம் வந்தது..?"

“பதறாதே! இந்தக் காரியம் தானே சிறுத்தொண்டர் செய்தது..?[71]

என எடுத்துக்காட்டி நாடகத்தை நிறைவு செய்துள்ளார். பக்தியின் பெயரால் நாட்டில் நடக்கும் தீய செயல்களை எடுத்துரைப்பதாக இந்நாடக உரையாடல் அமைந்துள்ளது.

### 4.4.24. பாரதம்

இந்தியர்கள் தமக்குள் இன அடிப்படையில் பிரிந்து ஒருவருக்கொருவர் கலகம் செய்வதைக் கதைக்கருவாகக் கொண்ட ‘பாரதம்’ என்ற நாடகம் 14.8.1960 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வந்தது. வங்காளிகளுக்கும் அசாமியர்களுக்கும் இடையே ஏற்பட்ட கலவரத்தை அடிப்படையாகக் கொண்டு இந்நாடகம் படைக்கப்பட்டுள்ளது. வங்கத்தில் உள்ள ‘சிலுகுரி’ இரயில் நிலையத்தில், வங்க இளைஞர்கள் அசாமியக் குடும்பம் ஒன்றினைக் காண்கின்றனர். வங்கத்தில் அசாமியர்கள் தாக்கப்படுவதற்கு மாற்றாக அசாம் குடும்பத்தினரை வங்க இளைஞர்கள் தாக்குகின்றனர். ‘எவனோ செய்த கொலைக்குத் தங்களைத் தாக்குவது நியாயம் இல்லை’ என அசாமியர் மன்றாடுகிறார். இருப்பினும் வங்காள இளைஞர்கள் அவர்களைத் தாக்குகின்றனர். காவலர்கள், அடிபட்ட அசாமியரைப் பத்திரமாக அசாமிற்கு இரயில் ஏற்றி விடுகின்றனர். வங்கத்தில் அடிபட்ட குடும்பத்தினர் ‘கௌஹாத்தி’ இரயில் நிலையம் வருகின்றனர். அவர்கள் வருவதை அறிந்த அசாமியர்கள் இரயில் நிலையத்தில் கூடுகின்றனர். அடிபட்ட அசாமியருடன் வந்த சிறுமியும் தாயும் உரையாடுவதை நாடகத்தின் இறுதியில்,

“அம்மா! அம்மா! இங்கேயும், அங்கே, கூச்சலிட்டார்களே, அதுபோலவே கூவுகிறார்களே.. பயமாக இருக்கிறதே”

“பயப்படாதே இவர்கள் நம்மவர்கள்”

“காலிகள் அல்லவா? அங்கே காலிகள் அட்டகாசம் என்று சொன்னாயே அதுபோலத்தானே இவர்களும் கூச்சலிடுகிறார்கள்”

"அதுவேறு! இதுவேறு கண்ணே! இவர்கள் நம்மவர்கள் நம்மை ஒன்றும் செய்யமாட்டார்கள்"

"வங்காளியைக் கண்டால் வெட்டுவார்களா"

"ஆமாம்! சும்மா விடுவார்களா?"

"செச்சே! இது என்னம்மா அக்ரமம்! வங்காளத்திலே, அசாமியரை வெட்டுவார்கள் - அசாமிலே வங்காளியை வெட்டுவார்கள் என்றால் நாடா, காடா?

"உரக்கப் பேசாதே, கண்ணே கோபிப்பார்கள்"

"உள்ளதைச் சொன்னாலா"[72]

என்று உணர்ச்சி ததும்ப அறிஞர் அண்ணா விவரித்துள்ளார். நாடகத்தின் பின்னுரையில், "சென்ற திங்கள் நடந்த அசாம் கலகத்தின்போது வங்கம் சென்று திரும்பிய 'கோஸ்வாமி' என்ற சட்டமன்ற உறுப்பினர் சிலுகுரி இரயிலடியில், வங்காளிகளால் தாக்கப்பட்டார். அந்தச் செய்தியைப் பின்னணியாகக் கொண்டு இந்த 'நாடகவடிவம்' அமைக்கப்பட்டிருக்கிறது"[73] என்று அறிஞர் அண்ணா குறிப்பிட்டுள்ளார். நாளிதழ்களில் இடம்பெற்ற செய்திகளை மக்கள் உணர்ந்து கொள்ளும் வகையில் நாடகமாகப் படைக்கும் அறிஞர் அண்ணாவின் படைப்பாற்றல் திறனை இந்நாடகத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

## 4.5.பிற படைப்பாளர்களின் நாடகங்கள்

சமூகமுன்னேற்றம், பெண்கள் மேம்பாடு, மூடநம்பிக்கை ஒழிப்பு, விதவை மறுமணம், வர்க்கப்போராட்டம், தொழிலாளர் மேம்பாடு, தமிழ் உணர்வு, தமிழர் நலன், திராவிடநாட்டு விடுதலை போன்றவற்றைக் கதைக்கருவாகக் கொண்ட பிற படைப்பாளர்களின் நாடகங்களும் திராவிடநாடு இதழில் அவ்வப்போது வெளிவந்தன. இவ்வாறு நாடகங்கள் படைத்த படைப்பாளர்களுள், அரவரசு, தில்லை வில்லாளன், மா.கி.தசரதன், கரந்தை கணேசன், மலர்மன்னன், மக்கள் செல்வன் முதலானோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர். அவர்தம் நாடகங்கள் குறித்த செய்திகள் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

### 4.5.1. அரவரசு

'டால்மியாபுரம்' என்ற பெயர் 'கல்லக்குடி' எனப் பெயர் மாற்றம் பெற்றதற்குப் பின்னர் வகுப்பறையில் ஆசிரியர் ஒருவருக்கும் மாணவர் ஒருவருக்குமிடையே நடைபெறும் உடையாடலை அடிப்படையாக வைத்து 'வகுப்பறையில்' என்ற ஓரங்க நாடகம், 14.1.1956 ஆம் நாள் திராவிடநாடு பொங்கல் மலரில் வெளிவந்தது. கல்லக்குடி என்ற பெயர் மக்களிடையே வழக்கத்தில் வரவேண்டும் என்ற நோக்கத்தோடு இந்நாடகம் புனையப்பட்டுள்ளது. நாடகத்தில் பார்ப்பன ஆசிரியர் ஒருவருக்கும் மாணவருக்குமிடையே பின்வருமாறு உரையாடல் நடைபெறுகிறது.

மாறன்: சார் 6 வது கேள்வியிலே எனக்கு ஒரு மார்க்கு விட்டுப் போச்சுசார்,

ஆசிரியர்: எந்தக் கேள்வியது? இங்கே கொண்டுவா.

மாணவன்: ஆறாவது வினா சார். அதாவது "சென்னை ராஜ்யத்தில் சிமெண்டுத் தொழிற்சாலைகள் எங்குள்ளன?" என்ற கேள்விக்கு நான் "திருச்சி ஜில்லாவில் கல்லக்குடி என்ற இடத்திலும் திருநெல்வேலி ஜில்லாவில் தாழையூத்து என்ற இடத்திலும் சிமெண்டுத் தொழிற்சாலைகள் உள்ளன" என்று எழுதியிருக்கிறேன்.சார். அதற்கு இரண்டு மார்க்கு தரவேண்டும் சார். ஆனால்நீங்க ஒரு மார்க்குதான்சார் போட்டிருக்கிறீர்கள்… பிச்சுமணிக்கு மட்டும் இரண்டு மார்க்கு கொடுத்திருக்கிறீர்கள் சார்"[74]

டால்மியாபுரம் என்ற பெயரை மாற்றிக் 'கல்லக்குடி' என்றுதான் அழைக்கவேண்டும் என்று அரசாங்கத்திலேயே உத்தரவு போடப்பட்டிருப்பதை மாணவர்கள் எடுத்துக்காட்ட இறுதியில் ஆசிரியர், மாணவர் கூற்றை ஏற்றுக் கொள்வதாக இந்நாடகம் நிறைவடைந்துள்ளது.

### 4.5.2. தில்லை வில்லாளன்

திராவிட இயக்கக் கொள்கைகளைத் தாங்கித் தம் படைப்புகளை வெளியிட்ட எழுத்தாளர்களுள் தில்லை வில்லாளன் குறிப்பிடத்தக்கவர். பல்வேறு சிறுகதைகளையும் புதினைங்களையும் படைத்துள்ள இவர், திராவிடநாடு இதழில் இரண்டு நாடகங்களைப் படைத்துள்ளார். 11.2.1951 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இவரது 'திரை' என்ற

வரலாற்று நாடகமும், 18.2.1951 திராவிடநாடு இதழில் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாளின் வாழ்வியலை அடிப்படையாக வைத்துக் கற்பனையாகப் புனையப்பட்ட ‘விடியற்காலை’ என்ற சமூக நாடகமும் வெளிவந்துள்ளன.

செஞ்சி மன்னன் இராஜா தேசிங்கின் வாழ்க்கை வரலாற்றை அடிப்படையாக வைத்துத் ‘திரை’ என்ற நாடகம் படைக்கப்பட்டுள்ளது. சோதிடர் பையராமகிருஷ்ணய்யர், ராஜா தேசிங்கு தன் மனைவியை மூன்று ஆண்டுகள் சோதிடப்படி பார்த்தல் கூடாதென்கிறார். அவ்வாறு பார்த்தால் நாட்டின் நல்வாழ்வு நசிந்துவிடும் என்றும், குடிமக்கள் வறுமையால் வாடுவர் என்றும் எச்சரிக்கிறார். சோதிடத்தை நம்பிய தேசிங்கு, தன் மனைவியைப் பார்க்காமல் இருக்கிறார். ‘திரை’ ஒன்றை இருவருக்குமிடையே கட்டச் செய்கிறார். இதனால் இராணி பெருந்துன்பம் அடைகிறாள். இதற்கிடையில் நவாப்பிற்குத் தேசிங்கு கப்பம் கட்ட மறுத்தமையால் போர் மூள்கிறது. போரில் தேசிங்கு உயிர்துறக்கிறார். போர்க்களம் நோக்கிச் சென்ற இராணி தேசிங்கின் உடலைக் கண்டு புலம்புகிறாள். சோதிடத்திற்கு எதிரான கருத்தை இராணி வாயிலாகத் தில்லை வில்லாளன் இந்நாடகத்தில் வெளிப்படுத்தியுள்ளார்.

“சோதிடம் ஒரு சூது, சாத்திரம் சிலரின் உளறல், வேதம் வேண்டுமென்று கட்டிக் கொண்ட ஏற்பாடு என்று தானே தெரிகிறது இல்லாவிட்டால், ஆண்டவ பக்தி அதிகமுள்ள என் காதலன் சாவானேன்?”[75]

என்று போர்க்களத்தில் சோதிடரிடம் ஆத்திரமாகக் கூறும் ராணி, தன் தோழியிடம், “தீயை வளர்த்து, அதில் தீயர் பகுத்தறிவுக்குக் கட்டும் திரையைப் போட்டுக் கொளுத்து – நாட்டையும், மக்களையும் நலியவைக்கும் ஏடுகளைக் கொளுத்து – பிறகு நான் இறங்கி விடுகிறேன் அச்செந்தீயில்”[76] எனக் கூறித் தன்னுயிரை மாய்த்துக் கொள்கிறாள்.

இராணியின் தோழி, அரண்மனைச் சோதிடரே இவற்றிற்கெல்லாம் காரணம் என்றுணர்ந்து சோதிடரைச் சாடுகிறாள். “சாத்திரப் பித்தரே – உமது நாற்ற வாயை மூடும். சாத்திரம், சாத்திரம் என்று கூறி ஒரு நாட்டையே பிணக்காடாக்கி விட்டீரே!

உமது சோதிட அறிவு, இந்த அழிவை முன்கூட்டியே ஏன் சொல்லக்கூடாது?”[77]என்று வினவிய இராணியின் தோழி, சோதிடரின் எதிர்காலம் எவ்வாறு இருக்கிறதென்று வினவுகிறாள்? அவர் தான் நவாபிடம் போய்விடப் போவதாகக் கூறுகிறார். தோழி அவரை எரியும் தீயில் தள்ளிவிட்டுத் தானும் உயிர் துறக்கிறாள். இறப்பதற்கு முன்பு, “தீயே திக்கெட்டும் பாவி, இத்தீயர்களின் திருட்டுத்தனங்களைத் தீய்த்துவிடு – பாழான கருத்துகளை பொசுக்கித் தள்ளு – தீயே நீ வாழ். நானும் சாகிறேன்”[78] எனக் கூறி உயிர் துறக்கிறாள். ‘சோதிட நம்பிக்கை கொண்டு, மக்கள் தமது வாழக்கையைப் பாழாக்கிக் கொள்ளுதல் கூடாது’ என்ற கருத்தை இராணி, தோழி ஆகிய இரு பாத்திரங்களின் வாயிலாக இந்நாடகத்தில் தில்லை வில்லாளன் வெளிப்படுத்தியுள்ளார்.

**‘**விடியற்காலை’ என்ற நாடகம் சமயக் கதையை வைத்துக் கற்பனையாகப் புனையப்பட்ட நாடகமாகும். எதார்த்தங்களின் அடிப்படையில் இந்நாடகத்தைத் தில்லை வில்லாளன் படைத்துள்ளார். பெரியாழ்வார், அவர்மனைவி, ஆண்டாள், ரங்கநாதன் ஆகியோர் இந்நாடகத்தில் முதன்மைப் பாத்திரங்களாவர். ஆண்டாள், ரங்கநாதன் ஆகியோரை மானிடப் பாத்திரங்களாக்கி, மனம் ஒத்த அவர்கள் இருவரும் திருமணம் செய்து கொள்வதாக இந்நாடகம் கற்பனையாகப் படைக்கப்பட்டுள்ளது. ஆண்டாளை அழைத்துக் கொண்டு செல்லும் ரங்கநாதன், கோயில் அர்ச்சகரிடம் தாங்கள் இருவரும் ஊரை விட்டுச் சென்றபின்னர், இருவரும் ஜோதியில் கலந்துவிட்டதாகக் கூறவேண்டும் என்கிறான்.

“ரங்கநாதன்: அரச்சகரே, கூறியதெல்லாம் நினைவிலிருக்கிறதா… நாங்கள் போய் ஒரு மணி நேரங் கழித்துக் கூவவேண்டும், எங்கே ஒருமுறை சொல்லும்,

அர்ச்சகர்: ஆ…. என்ன ஜோதி… தேவஜோதி… தெய்வீக வெளிச்சம்… ஆண்டாள் எங்கபோகிறாய்? ரங்கநாதர் ஆலிங்கணம் செய்கிறாரே! … ஆ.. அதோ, ஜோதியில் கலக்கிறாள். ஜோதியில் மறைந்துவிட்டாள்”[79]

என்று இருவரின் உரையாடலைத் தில்லை வில்லாளன் நாடகத்தில் அமைத்துள்ளார். அறிஞர் அண்ணா புராண, இதிகாசக் கதைமாந்தர்களைப்

பாத்திரங்களாக்கி நீதி தேவன் மயக்கம் நாடகத்தைப் படைத்தமையைப் போன்று, தில்லைவில்லாளன், ஆண்டாளை, மானுடப் பெண்ணாக இந்நாடகத்தில் படைத்துள்ளார்.

### 4.5.3.கரந்தை கணேசன்

திராவிடநாடு இதழில் சிறுகதையும் ஓரங்கநாடகமும் படைத்த எழுத்தாளர்களுள் கரந்தை கணேசன் குறிப்பிடத்தக்கவர். இவரது மூன்று ஓரங்க நாடகங்கள் திராவிடநாடு இதழில் வெளிவந்துள்ளன. அவை

1. **தலைகாத்த தமிழ்**
2. **துறவு**
3. **மானமறவன் சேரன் செங்குட்டுவன்**

என்பனவாகும். இம்மூன்று நாடகங்களும் தமிழ் இலக்கியக் கருத்துக்களின் அடிப்படையில் படைக்கப்பட்டனவாகும்.

'தலைகாத்த தமிழ்' என்ற ஓரங்க நாடகம் சங்கத் தமிழ்ப்புலவர் மோசிகீரனாரின் வாழ்வியலை அடிப்படையாக வைத்துப் படைக்கப்பட்டதாகும். இந்நாடகம் 22.6.1958 திராவிடநாடு இதழில் வெளிவந்தது.

**"நுரைமுகத் தன்ன மென்பூஞ் சேக்கை**
**அறியா தேறிய தென்னைத் தெறுவர**
**இருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை**
**அதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறிதல்**
**அதனொடு மமையா தணுக வந்துநின்**
**மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென**
**வீசியோயே வியலிடங் கமழ"[80]**

என்ற புறநானூற்றுப் பாடல் கருத்து இந்நாடகக் கதைக்கு அடிப்படையாகும். இந்நாடகத்தில் நான்கு காட்சிகள் இடம்பெற்றுள்ளன. மோசிகீரனார், சேரமன்னன் பெருஞ்சேரலிரும்பொறை, இந்நாடகத்தில் முதன்மைப் பாத்திரங்களாவர். முரசு கட்டிலில் மோசிகீரனார் களைப்பு மகுதியால் உறங்குவது நாடகத்தின் முதல்

காட்சியிலும், அரண்மனைப் பணியாளர்கள் கட்டிலில் துயிலும் புலவரைக் கண்டு தமக்குள் வியப்புடன் பேசிக்கொள்வது இரண்டாம் காட்சியிலும் இடம்பெற்றுள்ளன.

மூன்றாம் காட்சியில் பணியாளர்கள் மன்னனிடம் முரசுக் கட்டிலில் ஒருவன் உறங்குவதை எடுத்துரைக்கின்றனர். மன்னனின் செயல் நான்காம் காட்சியில் விவரிக்கப்பட்டுள்ளது. உறங்குவது புலவர் என்றுணர்ந்த மன்னன் தன் செயலுக்கு வருந்துகிறான். மன்னருக்கும் புலவருக்குமிடையே நடைபெறும் உரையாடலில் பண்டைத் தமிழ் மன்னர்கள், தமிழ்ப் புலவர்களுக்கு அளித்த சிறப்பினைக் கரந்தை கணேசன் விவரிக்கிறார்.

“மன்னன்: பாவேந்தரே! நான் தங்கட்கு விசிறவில்லை. தமிழுக்கு விசிறினேன். இதில் ஏதும் தவறில்லையே. மேலும் மன்னிக்கப்படவேண்டியவன் நான்தான்.

புலவர்: இல்லை மன்னவா. இல்லை. வந்த களைப்புக் காரணமாக வீர முரசம் வீற்றிருக்கும் கட்டில் என்றுகூட அறியாது அயர்ந்துவிட்டேன். ஆனால் அரசே! நான் அறியாமல் செய்தேன். அதைப் பொறுத்தருளவேண்டும்.

மன்னன்: முரசுக் கட்டிலிலே தமிழ் தூங்கிற்று.. என் தாய் தூங்கினாள். தகாது செய்ய இருந்தேன். என் தன்மையைப் பொறுத்தருள வேண்டியது தாங்கள் தான்.

புலவர்: காவலா.. என்னே. தமிழின் தனிப் பெருமை. தமிழ் பெற்றார் யாவருமே தரித்திரத்தைப் பெற்றாரெனும் இலக்குக்கோர் இலக்கியமாய் இங்கு வந்தேன். இங்கோ.. தமிழ் பெற்றார் யாவருமே உயிர் பெற்றாரெனும் உயர்நிலையைப் பெற்றேன். என்னே ‘தலைகாத்த தமிழின் தகைமை. வாழிய தமிழ். வளர்க நின் கொற்றம்!”[81]

புறநானூற்றுப் பாடற்கருத்தை அடிப்படையாக வைத்துப் புனையப்பட்ட இந்நாடகம் பண்டைத் தமிழ் இலக்கியக் கருத்துகளைத் தமிழ் மக்களிடம் கொண்டுசென்றும் நோக்கில் புனையப்பட்டுள்ளது.

கரந்தை கணேசனின் ‘துறவு’ என்ற ஓரங்க நாடகம் 14.9.58 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. சித்தாத்தரின் துறவு வாழ்க்கை இந்நாடகத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. இந்நாடகம், இரண்டு காட்சிகளைக் கொண்டதாகும்.

முதற்காட்சியில் சித்தார்த்தர் உலகியலை அறிந்து கொள்வதும், இரண்டாம் காட்சியில் மாயாதேவிக்கும் சித்தார்த்தருக்கும் இடையே நடைபெறும் உரையாடலும் இடம்பெற்றுள்ளன. சமூக வாழ்க்கையின் ஏற்றத்தாழ்வுகளைச் சித்தார்த்தர் கூற்றில் வைத்துக் கரந்தை கணேசன் விளக்குகிறார்.

“சித்தார்த்தர்: எவ்வளவோ மக்கள், கோடானு கோடி பேர்கள் உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, படுக்கப் பாயின்றி, குந்தக் குடிசையின்றி எச்சில் பட்ட மிச்சப் பண்டங்களே உணவாகவும், கிழிந்த கந்தல்களே உடையாகவும், மண் மாதாவின் மடியையே தங்களின் மாளிகையாகவும் கொண்டு வாழும்போது நமக்கு மட்டுமென்ன அரண்மனை, அந்தப்புரம், ஆடம்பர வாழ்வு! சுகபோகமே உருவான சொர்க்கலோகம் ஒருபுறம், துன்பமே உருவான நரகலோகம் ஒருபுறம், உலகில் மனிதர்கள் வாழத்தான் பிறக்கிறார்கள், வதைபட இல்லையே? வாழ ஒருகூட்டம், வதைபட ஒரு கூட்டம்! சீர்பெற ஒரு கூட்டம், சிதைவுற ஒர் கூட்டம், உண்ண ஓர் கூட்டம், உழைக்க ஓர் கூட்டம். நிம்மதிபெற ஒரு கூட்டம், நிலைகுலைய ஓர் கூட்டம் என்றா ஆண்டவன் பேதப்படுத்தி மனித குலத்தைப் படைத்திருக்கிறான்?”[82]

இவ்வாறு பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் நிறைந்த உலக இயல்புகளைச் சித்தாதர் வாயிலாக எடுத்துக்காட்டி, இத்தகைய உலகத்தை வெறுத்து அவர் துறவுக் கோலம் பூணுவதோடு நாடகத்தை நிறைவு செய்துள்ளார்.

கரந்தை கணேசனின் ‘மானமறவன் சேரன் செங்குட்டுவன்’ என்ற நாடகம், 15.5.1960 மற்றும் 22.5.1960 ஆகிய நாள்களில் வெளிவந்த திராவிடநாடு இதழ்களில் வெளிவந்தது.

**“கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்**
**எம்கோமகளை ஆட்டிய அந்நாள்**
**ஆரிய மன்னர் ஈர்ஐஞ்நூற்றுவற்கு**
**ஒரு நீ ஆகிய செருவெங்கோலம்**
**கண்விழித்துக் கண்டது கடுங்கண் கூற்றம்”[83]**

என்ற சிலப்பதிகார வஞ்சிக்காண்டப் பாடலடிகள் இந்நாடகத்திற்கு அடிப்டையாக அமைந்துள்ளன. இந்நாடகத்தில் எழு காட்சிகள் இடம்பெற்றுள்ளன. "சேரன் செங்குட்டுவன் காவா நாவினர்களான கனகவிசயர்களைக் கல் சுமக்கச் செய்து கண்ணகிக்குக் கற்கோயில் கட்டியது தமிழ் நல்லுலகம் நன்கு அறிந்தது. தமிழ் மானம் காக்கத் தண்டுகொண்டு சென்ற செங்குட்டுவன், கனக விசயர்களின் கடுஞ்சொல் கொண்டு மட்டும் வடக்கு நோக்கிச் செல்லவில்லை. அதற்கு முன்பே செங்குட்டுவன் உள்ளத்தே வடநாட்டுப் படையெடுப்புக்கான வகையான எண்ணங்கள் இருந்திருக்கின்றன"[84] என்ற முன்னுரை நாடகத் தொடக்கத்தில் இடம்பெற்றுள்ளது. நாடகத்தின் முதற்காட்சியில் செங்குட்டுவன் தன்மனைவி வேண்மாளிடம்,

"காவா நாவினாலே இன்று நம்மைக் களத்திற்கழைக்கின்றனர் தமிழாண்மை அறியாத தருக்கர்கள்! வடவாரிய அரசர்கள்! அன்றே அவர்களின் தலைகளைக் கொய்து வேல்களின் முடிக்கு மகுடம் சூட்டியிருப்பேன். என்தாய் நற்சோணையும், தளபதி வில்லவன் கோதையும் புனித நீராடப்போன இடத்தில் போர்முறை தகுதியற்றது எனத்தடுத்துவிட்டனர்"[85]

என்று குறிப்பிடுவதில் தமிழரின் பண்பாடு புலனாகிறது. நிகழ்ந்தவற்றை செங்குட்டுவன் வேண்மாளுக்கு விளக்குகிறான். ஆரியமன்னர்களுக்கென்ற அமைந்த கங்கை நீர்த்துறையில் நற்சோணையும் செங்குட்டுவனும் நீராடியதை அறிந்த ஆரிய மன்னன் பூஜ்யா, மன்னன் ஒருவனிடம் இதனை எடுத்துரைத்துப் போருக்குத் தூண்டுகிறான். அவ்வாறு போர்புரிய வந்த மன்னர்களுள் ஒருவன் செங்குட்டுவனிடம், நீர்த்துறை தீட்டுப்பட்டு விட்டமையால் ஓராயிரம் பொன் தண்டம் செலுத்த வேண்டுகிறான். செங்குட்டுவனின் அவர்களைத் தன் வாள்வீச்சால் துரத்துகிறான். நற்சோணை செங்குட்டுவனை அமைதிப்படுத்துகிறாள். அன்றே வட ஆரியர்களைப் போரில் வெல்வதற்குச் செங்குட்டுவன் எண்ணம் கொண்டதை இந்நாடகத்தின் வாயிலாகக் கரந்தை கணேசன் விளக்கியுள்ளார். வர்ணாசிரம தர்மம், மனுதர்மம்

ஆகியவற்றின் அடிப்படையில் ஆரியர்கள், திராவிடர்கள் மேல் கொண்டிருந்த காழ்ப்புணர்ச்சி இந்நாடகத்தில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

### 4.5.4. மலர்மன்னன்

உலக நாட்டு வரலாறுகள், மன்னர்களின் கதைகள், மேலைநாட்டு இலக்கியக் கருத்துகள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட நாடகங்களை மலர்மன்னன் திராவிடநாடு இதழில் படைத்தளித்தார். இவர் படைத்த நாடகங்களுள் எலும்பு, விழிப்பு, உண்மைக்கவிஞன், ஆகியன குறிப்பிடத்தக்கவை.

'எலும்பு' என்ற நாடகம் 8.12.1957 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. கிரேக்க மன்னன் அலெக்சாந்தரின் வாழ்வியல் நிகழ்வொன்றினை இந்நாடகம் அடிப்படையாகக் கொண்டது. கிரேக்கப் பேரறிஞர் டயோனிஸ் என்பவர் அலெக்சாந்தரின் ஞான ஆசிரியர்களுள் ஒருவராகத் திகழ்ந்தவர். அலெக்சாந்தரின் ஆதிக்க வெறியினைக் குறைப்பதற்கும், அவன் கொண்டிருந்த ஆண்டான் - அடிமை வேறுபாட்டினை உணர்த்துவதற்காகவும் டயோனிஸ் மேற்கொண்ட முயற்சியினை எடுத்துக்காட்டும் வகையில் இந்நாடகம் அமைந்துள்ளது. அலெக்சாந்தர், டயோனிஸ், ஒலோரஸ், தெரோப்ஸ் என்னும் நான்கு கதை மாந்தர்களைக் கொண்டு இந்நாடகம் படைக்கப்பட்டுள்ளது.

உலக நாடுகள் அனைத்தையும் தன் காலடிக்கீழ் வைத்திருக்கவேண்டும் என்ற அலெக்சாந்தரின் எண்ணத்தை உணர்ந்த டயோனிஸ், "எண்ணற்ற உயிர்களைப் பலிகொடுத்து மாற்றாரை அடிமைப்படுத்துவது மன்னர்களுக்குப் பொழுது போக்காக இருத்தலாகாது. உலக முழுமைக்கும் தானொருவனே ஆண்டானாக இருக்க வேண்டும் என்ற பேராசை மன்னர்களுக்கு இருக்கக்கூடாது; போராட்டம் என்பது பாதுகாத்துக் கொள்வதற்குத்தானே அல்லாமல் பொழுதுபோக்கிற்காக அல்ல."[86] என்று எடுத்துரைக்கிறார். இடுகாட்டிலிருந்து எலும்புத் துண்டுகளை எடுத்துவரச் செய்து அவற்றில் கிரேக்கத்தை ஆண்ட மன்னர்களின் எலும்புகளுக்கும், அவர்களிடம் அடிமைகளாக இருந்தவர்களின் எலும்புகளுக்கும் எத்தகைய வேறுபாடுகள்

காணப்படுகின்றன? என்பதைத் தான் ஆராய்ந்து கொண்டிருப்பதாக அலெக்சாந்தரிடம் டயோனிஸ் உரைக்கிறான். உலகியலை உணர்ந்த அலெக்சாந்தர், "மேதையே, இரத்தவெறியும் ஆதிக்க ஆசையும் கலந்த விலங்குப் பார்வையை இனி உலக நாடுகளின்மீது செலுத்தமாட்டேன். கிரேக்கத்தின் புகழ் பாரெங்கும் பரவுவதற்காகன திக்விஜயங்கள் இனி மேற்கொள்ளப்படும். போர்க்களத்தில் தோல்வியுறுவோரிடமும் பெருந்தன்மையோடு நடந்து கொள்வேன். 'அடிமைகள்' என அவர்களை இழிவாக நடத்தும் அகம்பாவக்காரனாயிருக்கமாட்டேன். அறிவுரையால் நன்னெறிகாட்டும் ஆசானே, இது உறுதி"[87] என்று உரைப்பதுடன் நாடகம் நிறைவடைகிறது. உலகநாட்டு வரலாறுகள், திராவிடநாடு இதழில் ஓரங்க நாடகங்கள் வாயிலாக மக்களுக்கு எடுத்துரைக்கப்பட்டமைக்கு இந்நாடகம் சான்றாக அமைந்துள்ளது.

மலர்மன்னன் படைத்த 'விழிப்பு' என்ற வரலாற்று நாடகம் கவிஞர் லாங்பெல்லோவின் கவிதையொன்றை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டதாகும். இந்நாடகம், 23.2.1958 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. அமெரிக்க மக்களை ஆங்கில ஏகாதிபத்தியத்தின் பிடியிலிருந்து காத்த 'பால்விரியரின்' செயலை இந்நாடகத்தின் வாயிலாக மலர்மன்னன் விளக்கியுள்ளார். சுதந்திரமா? அல்லது அடிமை வாழ்க்கையா? என்ற நிலையில் இருந்த அமெரிக்க மக்களைப் பால்விரியர் தன் வீரவுரைகளால் உணர்ச்சிபெறச் செய்து, அமெரிக்க நாட்டை அடிமை நிலமாக்காமல் பாதுகாக்கிறான். கடல் வழியாக நாட்டை முற்றுகையிட வந்த ஆங்கிலப் படையினர் ஊருக்குள் வராதவாறு தடுக்கப்படுகின்றனர். பால்விரியர் ஒவ்வொரு ஊராகச் சென்று மக்களைத் தட்டியெழுப்பித் தன்நோக்கத்தில் வெற்றிபெறுவது இந்நாடகத்தின் மையக் கருத்தாகும். இரவு நேரத்தில் தூங்கிக் கொண்டிருந்த மக்களிடம் பால்விரியர்,

"உறங்கிக் கொண்டிருக்கும் என்னருமைத் தோழர்களே, எழுந்திருங்கள்! அமெரிக்க அன்னையின் அரும் புதல்வர்களே, கண் விழியுங்கள்! உடலை நடுக்கும் குளிருக்குப் பயந்து வீட்டினுள் ஒடுங்கிக்கொண்டு விடாதீர்கள்! என்றென்றும் ஒடுங்கிக்

கொண்டிருந்தாக வேண்டிய நிலை பிறந்துவிடும். இத்தருணம் நீங்கள் உறக்கத்திலிருந்து விடுபடாவிடில் நிரந்தரத் தூக்கத்தில் ஆழ்த்தப்பட்டு விடுவீர்கள். விழித்துக் கொள்ளுங்கள்; இல்லையேல் என்றுமே விழித்துக்கொள்ள இயலாத நிலை ஏற்பட்டுவிடும்."[88]

என்று ஆற்றும் வீரவுரை, மக்களை ஒன்று திரட்டுகிறது. திராவிட இயக்கப் படைப்பாளர்கள் பண்டை வரலாறுகள், மேனாட்டில் நாட்டு விடுதலைக்காக, மக்களின் மேன்மைக்காகப் போராடிய தலைவர்களின் வரலாற்றை அவ்வப்போது நாடகமாக்கினர். தமிழக மக்களை உணர்வுப்பூர்வமாக ஒன்று திரட்டுவதற்கு இத்தகைய நாடகங்கள் பெரிதும் துணைநின்றன எனலாம்.

9.3.58. ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்த 'உண்மைக் கவிஞன்' என்ற ஓரங்கநாடகம், 'ஓட்ஸ்' என்ற கவிதை நூலை இயற்றிய 'ஹொரோஸ்' என்ற கவிஞனின் வாழ்வியலைக் குறித்ததாகும். ரோம் மன்னன் அகஸ்டஸ், அவன் அமைச்சர் 'மைக்கேன்னாஸ்', கவிஞர் ஹொரேஸ் ஆகிய மூன்று பாத்திரங்களை மட்டும் கொண்டு படைக்கப்பட்ட இந்நாடகம், மூன்று காட்சிகளை உடையது. அமைச்சர் மைக்கேன்னாஸின் அறிவுரைப்படி கவிஞர் ஹொரேஸைத் தன் அந்தரங்கச் செயலாளராக்க மன்னன் அகஸ்டஸ் விரும்புகிறார். அப்பதவியை ஏற்க மறுத்த கவிஞர் மன்னனிடம், "நான் கவித்துவ நெஞ்சம் படைத்தவன்; பந்தங்கள் ஏதுமற்ற விடுதலைப் பறவையாக இருக்கவே நான் விழைகிறேன். அரண்மனையின் ஆடம்பர வாழ்வில் திளைக்கவோ, அரசியலில் அமிழ்ந்து போகவோ நான் விரும்பவில்லை. மனம்போனபடியெல்லாம் சுற்றித்திரிவதையே நான் பெரிதும் வேண்டுகிறேன். காணும் காட்சிகளைப் பற்றியெல்லாம் கவிதைகள் பாட விழைகிறேன். இயற்கையின் அற்புதங்களை வர்ணிக்க ஆசைப்படுகிறேன். ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருக்கும் நீண்ட மலைத்தொடர்களைப் பார்த்துப் பார்த்து இரசிக்க விழைகிறேன். வெட்டவெளியில் நின்றபடி என்னைச் சூழ்ந்திருக்கும் இயற்கையிடம் பாடங்கற்க நினைக்கிறேன்"[89] என்று கூறி, அப்பதவியை மறுத்து விடுகிறான். மன்னன் அகஸ்டஸ்,

கவிஞர் ஹொரேஸை ‘உண்மைக் கவிஞன்’ எனப் போற்றி அவர் மனப்போக்கிற்கு ஏற்றவாறு விடுக்கிறான். அவர் கவிதை பல படைத்து உலகிற்கு அளிக்க வேண்டும் என்றும் வேண்டுகிறான். இவ்வாறு நாடகம் நிறைவடைகிறது.

### 4.5.5. மா.கி.தசரதன்

தனிமனிதனும் அவன் மனமும் உரையடுவதாக அமைந்த ஓரங்க நாடகம் ஒன்றை மா.கி. தசரதன், 14.1.1961 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு பொங்கல் மலரில் படைத்தளித்தார். இந்நாடகத்தின் பெயர் ‘இடையில் ஒரு நாள்’ என்பதாகும். தனிமனித வாழ்வியலுக்குத் தேவையான பண்புகளை இந்நாடகத்தின் வாயிலாக மா.கி.தசரதன் உணர்த்துகிறார். சோம்பல் என்பது மிகப்பெரிய நோயாகும் என்பதை ‘மனம்’ என்ற பாத்திரத்தின் வாயிலாக மா.கி.தசரதன்,

“சோம்பல்! அது நோய்தான். ஐயமே வேண்டாம்; அந்த நோய் பற்றிவிட்டதானால் அழிவு உறுதி. அதைத்தொடர்ந்து வேறுபல நோய்கள் ஒன்றின்பின் ஒன்றாக வந்தவண்ணம் இருக்கும். இரும்பிலே துருப்பிடிப்பது இரும்புக்கு எவ்வளவு கெடுதலோ, அவ்வளவு கெடுதல் மனித உடலில் சோம்பல் குடிபுகுவது. அதைவிடக் கெடுதல் மூளையிலே சோம்பல் நுழைவது”[90] என்று உணர்த்தியுள்ளார்.

மேலும், ‘சங்கத் தமிழர்களிடம் சோம்பல் இல்லை. இடைக்காலத் தமிழர் கொண்ட சோம்பலால் விளைந்த கேடுகள் பலவாகும்’ எனக் குறிப்பிட்டு, “உழைத்துவிட்டு அதனால் ஏற்பட்ட களைப்பால் சும்மா இருப்பது ஓய்வு. ஆனால், சோம்பல் அப்படி அல்ல. உழைக்காமலே சும்மா இருப்பது. ஓய்வு தேவையானது. சோம்பல் தீதானது”[91] எனறு சோம்பலுக்கும் ஓய்வுக்கும் உள்ள வேறுபாட்டை எடுத்துக்காட்டி,

“நெடுநீர் - இன்று செய்யவேண்டியதை அப்புறம், நாளை என்று ஒத்திப்போடுவது – மறலி – மறதி, மறப்பு, மடி-சோம்பல், துயில் - தூக்கம் இந்த நான்கும் இருந்தால் தனிமனித வாழ்க்கை மிகுந்த துன்பத்திற்கு உள்ளாகும்”[92] என்ற வள்ளுவரின் கருத்தையும் நாடகத்தில் விளக்குகிறார். இந்நாடகம் இடைக்காலத் தமிழர்களில் பலர்

அளவறிந்து வாழாமையால் விளைந்த கேடுகளை எடுத்துக்காட்டும் வகையில் அமைந்துள்ளது.

### 4.6. நாடக உரையாடல் வடிவம்

நாடகத்தில் இடம்பெறுகின்ற உரையாடல்களைப் போன்று அரசியல் நிகழ்வுகளையும் நாட்டு நடப்புகளையும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பாத்திரங்களை உரையாட வைத்து விளக்குகின்ற புதிய உத்தியை அறிஞர் அண்ணா திராவிடநாடு இதழில் மேற்கொண்டார். இவ்வாறாக நடைபெறுகின்ற உரையாடல்களுக்கு ஏற்ற தலைப்புகளையும் அவர் அளித்துள்ளார். ஆரியஉரையாடல், ஊரார் உரையாடல், அந்திக் கலம்பகம் என்ற தலைப்பில் இந்நாடக உரையாடல்கள் வெளிவந்தன. இப்பகுதிகள் இதழ்களில் தொடர்ந்து வெளியிடப்படவில்லை. அரசியல் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு இவ்வுரையாடல்களை அறிஞர் அண்ணா அவ்வப்போது வெளியிட்டார். அவை குறித்த செய்திகள் சுருக்கமாக விளக்கப்படுகின்றன.

### 4.6.1.ஆரிய உரையாடல்

திராவிடநாடு இதழ் வெளிவந்த தொடக்க காலங்களில் ‘ஆரிய உரையாடல்’ என்ற பகுதி இடம்பெற்றது. இயக்கக் கருத்துகளை நாடக உரையாடல்கள் வாயிலாகப் பரப்பும் புது முயற்சியை அறிஞர் அண்ணா முதன்முதலில் மேற்கொண்டார். தொடக்கத்தில் பார்ப்பனர்களின் உண்மை இயல்புகளை விளக்குவதற்கு இப்பகுதியை அவர் பயன்படுத்தினார். 24-09-1944 ஆம் நாள் திராவிட நாடு இதழில் வெளியான ஆரிய உரையாடல் பகுதியை இக்கருத்திற்குச் சான்றாகக் காட்டலாம்.

ஆரிய ஜோசியர் ஒருவரும், அர்ச்சகர் ஒருவரும் தமக்குள் உரையாடுவதாக இப்பகுதி அமைந்துள்ளது. ‘சித்திரபுத்தன்’ என்ற புனைபெயரில் அறிஞர் அண்ணா இவ்வுரையாடலை அமைத்துள்ளார்.

ஜோசியர்: அட நன்றிகெட்ட ஜென்மமே! அவர்கள் தானாகவா வருகின்றார்கள். நானல்லவா அவர்கள் ஒவ்வொருவர் வீட்டிற்கும் சென்று ஒவ்வொருவனையும் பார்த்து,

ஐயா! உமது ஜாதகத்திலே 8-ம் இடத்திலே சனி பார்க்கிறான். 9-ம் இடத்திலே ராகு உச்சம் பெற்று இருக்கிறான், 5-ம் இடத்திலே சுக்கிரனை வழி மறைத்துக் கேது நிற்கிறான். அதற்கு ஒருவாரம் நவக்கிரக பூசை பண்ணவேண்டும். அஷ்டோத்திரம் செய்ய வேண்டும், சகஸ்த்திர நாமம் பண்ணவேண்டும், எள்சாதம் படைக்க வேண்டும், மண்டலாபிஷேகம் பண்ணவேண்டும், கிரகசாந்தி செய்ய வேண்டும், என்றெல்லாம் சொல்லி அந்த மடைப்பயல்களைக் கோவிலுக்கு நானல்லவா விரட்டி அடித்தேன். அதை நம்பித்தானே அந்த மடைப்பயல்களும் இப்படி எல்லாம் செய்தால் இன்னும் கொள்ளை கிடைக்கும் என்றும், கிடைக்காவிட்டாலும் வந்த பணமாவது போகமல் இருக்கும் என்றும் கருதிக் கோவிலுக்கு ஓடிவந்து உமக்கு அழுதுவிட்டு வருகிறான்கள். நான் இப்படிச் சொல்லாமல் வேறுவிதம் சொல்லி இருந்தால் உமக்கு இந்தக் கொள்ளை கிடைக்குமா? நாளைமுதல் பாரும் இந்தக் கூட்டத்தை அப்படியே விஷ்ணு கோயிலுக்குத் திருப்பிவிடுகிறேன். இதிலிருந்தாவது என் சங்கதி தெரிந்து கொள்ளும்."[93] என்பதாக உரையாடல் அமைந்துள்ளது.

பார்ப்பனர்களின் தாசிமோகம், பணவேட்கை, மக்களை ஏமாற்றும் செயல் ஆகியவற்றை அடிப்படையாக வைத்து இந்நாடக உரையாடல் அமைந்துள்ளது.

### 4.6.2.ஊரார் உரையாடல்

தமிழகம் மற்றும் இந்திய அரசியல் நிகழ்வுகளை 'ஊரார் உரையாடல்' என்ற பகுதியில் நாடக வடிவத்தில் அண்ணா வெளியிட்டார். தொடக்கத்தில் இப்பகுதி ஆசிரியர் பெயரின்றி வெளியிடப்பட்டது. பின்னர் 'ஒற்றன்' என்ற புனைபெயரில் இப்பகுதி வெளிவந்தது. இனம், மொழி, அரசியல் சார்ந்த விழிப்புணர்வை ஊரார் உரையாடல்வழி மக்களிடையே உண்டாக்குகின்ற புதிய உத்தியை அறிஞர் அண்ணா கையாண்டார்.

13.7.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இடம்பெற்ற 'ஊரார் உரையாடல்' பகுதி, குடியரசு இதழின் பெருமைகளை வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது.

சிங்காரவேலர் என்பவருக்கு நல்லண்ணன் என்பவர் பகுத்தறிவுக் கொள்கைகளை விளக்கும் வகையில் இவ்வுரையாடல் அமைந்துள்ளது.

"ஏழைகளை வஞ்சிக்க ஒரு ஏற்பாடு, அதற்குப் பெயர் மதம்! உழைக்கிறவனை ஒடுக்குவது, அதற்குப் பெயர் ஜாதி! பகற்கொள்ளை அடிப்பது, அதற்குப் பெயர் பூஜை, சடங்கு, தட்சணை! மாட்டுச் சிறுநீரைக் குடிக்கச் சொல்வது, அதற்குப் பெயர், பஞ்சகவ்யம்! அறிவை இழக்கச் செய்வது. அதற்குப் பெயர் அரிதா காலட்சேபம்! அடா! அடா! அந்த ஆசாமிகள் ஒன்றா இரண்டா, செய்திருக்கிற அக்ரமம்"[94]

என்று நல்லண்ணன், ஆரியர்கள் இறைவனின் பெயரால் ஏற்படுத்திய அநீதிகளை விவரிக்கிறார்.

13.2.1955 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்த 'ஊரார் உரையாடல்' பகுதியானது நேருவின் இலண்டன் பயணம், மத்திய அமைச்சர் கிருஷ்ணமாச்சாரியின் பதவித்துறப்பு ஆகியன பற்றிச் சாமாசாஸ்திரிகள், சங்கரன், காத்தமுத்து என்னும் மூன்று பாத்திரங்கள் தமக்குள் பேசிக் கொள்வதாக் அமைந்துள்ளது. காத்தமுத்து எனும் பாத்திரத்தின் வாயிலாக, "ஏஞ்சாமி, ரஷ்யாக்காரங்க நம்ம தேசத்திலே, இரும்பாலை கட்டித்தரேனு வந்தா இவருக்கென்ன? வெள்ளைக் காரங்களோடு சேர்ந்து பிர்லா கட்டுறதுக்கு அனுமதிக்காம இதுக்கு அனுமதி கொடுக்கக் கூடாதுன்னா சண்டித்தனம் செய்யுறது"[95] என்ற கருத்தை அறிஞர் அண்ணா வெளிப்படுத்தியுள்ளார்.

15.7.1956 ஆம் நாள் திராவிடநாடு இதழில், இராஜாஜியின் சொற்பொழிவை அடிப்படையாக வைத்து 'ஊரார் உரையாடல்' பகுதி இடம்பெற்றுள்ளது. 24.5.1956 ஆம் நாள், சென்னை தக்கர்பாபா பள்ளியில் இராஜாஜி, "ஆண்டவனிடம் பக்தி செலுத்தினால் அவன் உங்கள் வீட்டை நாய் மாதிரி காவல் காப்பான், திருடன் உள்ளே புகாமல் தடுப்பான்" என்று உரைத்த கருத்தின் அடிப்டையில் சாஸ்திரிகள் இருவரும், காத்தமுத்து என்ற திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவரும் தமக்குள் உரையாடுகின்றனர். இராஜாஜியின் கருத்தின் அடிப்படையில் காத்தமுத்து, "சாஸ்திரிகளே! இவ்வளவு பேசுகிறாரே ஆச்சாரியார், இவர் இராத்திரிக்குத் தூங்கப்

போகும்போது வீட்டுக் கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போடாம இருக்கிறாரோ? ஏன் விழிக்கிறீர்!. இல்லை, ஆண்டவனிடம் பக்தியைச் செலுத்தும் எல்லோரும் அப்படி நடக்கிறீர்களா"[96] என்கிறார். நாத்திகர் - ஆத்திகர் என்ற அடிப்படையில் அமைந்த இவ்வுரையாடல், நாத்திகரின் கேள்விக்குப் பதில் கூற இயலாத நிலையிலிருக்கும் ஆத்திகர் செயலை, எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

நாட்டு நிகழ்வுகள் முற்றிலும் உருவக நிகழ்வுகளாக இப்பகுதியில் அவ்வப்போது இடம்பெற்றுள்ளன. திராவிட முன்னேற்றக் கழகத்தினரும் பிறகட்சியினரும் ஏற்ற பெயர்களில் இப்பகுதியில் பாத்திரங்களாக்கப்பட்டுள்ளனர். 1963 ஆம் ஆண்டு தமிழகத்தில் சில அரசியல் தலைவர்கள் செய்த குழப்பங்களை, 'பழிதுடைப்பான' என்ற பாத்திரத்தின் வாயிலாக அண்ணா விளக்கியுள்ளார்.

"பழிதுடைப்பான்: தீயை மூட்டிவிடுவோம். திக்கால ஒருவரா ஓடுவாங்க. அதே நேரத்திலே ஊரிலே ஜாதிச் சண்டை, சமயச்சண்டை, குலச்சண்டை, கோத்திரச் சண்டை, கட்சிச் சண்டை, காசுச் சண்டை இப்படிக் கிளம்பும். இப்படிக் கிளம்பி ஒருத்தரை ஒருத்தர் அடித்துக் கொண்டு கிடப்பாங்க. தீயை அணைக்கவும் கூடமாட்டங்க. நம்மை எதிர்த்து விரட்டவும் கூடமாட்டாங்க."[97]

என்ற பழிதுடைப்பானின் கருத்து, சமகாலச் சமூக நிலை விளக்கும் வகையில் அமைந்துள்ளது. அரசியல், சமூக விழிப்புணர்ச்சியை அறிஞர் அண்ணா நாடக உரையாடல் வாயிலாக ஏற்படுத்தியமைக்கு இவ்வுரையாடல் சான்றாகும்.

1963 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் இந்தியக் குடியரசுத் தலைவர் டாக்டர் இராதாகிருஷ்ணன் பாராளுமன்றத்தில் ஆங்கிலத்தில உரையாற்றினார். அவர் இந்தியில் உரைநிகழ்த்தவில்லை என்பதற்காகப் பொதுவுடைமைக் கட்சியினர் வெளிநடப்புச் செய்தனர். இவ் அரசியல் நிகழ்வின் அடிப்படையில் கருத்தூரார், கதரூரார், இதழூரார் என்னும் பாத்திரங்களைப் படைத்து 'ஊரார் உரையாடல்' பகுதியில் தன் கருத்தினை அண்ணா விளக்கியுள்ளார். 'கருத்தூரார்' என்ற பாத்திரம் திராவிட முன்னேற்றக்கழகக்

கொள்கையாளராகவும், ‘கதரூரார்’ என்ற பாத்திரம் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவராகவும் இருக்கின்றனர்.

“கருத்தூரார்: முக்கியமான விஷயத்தைக் கவனித்துப் பாருமய்யா கதரூராரே! சோஷியலிஸ்டுகள் என்றால் சமதர்மம் பற்றி அல்லவா அதிகமான அக்கறை காட்ட வேண்டும்? இவர்களுடைய அக்கறை எதிலே சென்றது கவனித்தீரா? இந்தி மொழி மீது!

கதரூரார்: நமக்குள் ஆயிரத்தெட்டு அபிப்பிராயபேதம் இருந்தாலும், இந்த இந்திமொழி ஆதிக்க வெறி பிடித்தவர்களை எதிர்த்து நிற்பதில் மட்டும் நாம் ஒன்றுபட்டு நிற்க வேண்டும். குடியரசுத் தலைவரையே துச்சமென்று கருதும் அளவுக்கு நடந்து கொண்டிருக்கிறார்கள்”[98]

என்றமைந்த இவ்வுரையாடல் வாயிலாகக் கட்டாய இந்தித்திணிப்புக்கு எதிராகத் தமிழர்கள் அனைவரும் ஒன்றுபட்டுப் போராடவேண்டும் என்ற கருத்தை அண்ணா வலியுறுத்தியுள்ளார்.

ஆங்கில மாதங்களைப் பாத்திரங்களாக்கி அவற்றை உரையாட வைத்துத் தமிழகக் காங்கிரஸ் கட்சியினரின் செயலை எள்ளல் சுவையுடன் அறிஞர் அண்ணா விளக்கியுள்ளார். தமிழகக் காங்கிரஸ் கட்சியினர், தி.மு.க.வினரை எதிர்ப்பதற்கு டில்லி அரசாங்கத்தினரின் தயவினை நாடக் கூடாது என்பதை,

“நீங்கள் ஆற்றலோடு அறிவோடு, அரசியல் அந்தஸ்தோடு, பிரச்சார யந்திரத்தோடு இருக்கும் போது, பாம்பை அடிக்க பக்கத்துவீட்டு ஆண்பிள்ளையைக் கூப்பிடுவது போல, எங்கள் தி.மு.கழகத்தை அழிக்க, டில்லி சர்க்காரின் தடைச் சட்டத்தைக் கூப்பிடுகிறீர்களே, இது கேவலம் இல்லையா, இதுகண்டு பரிதாபம் பிறக்காதா, என்போன்றவர்களுக்கு”[99]

என்று உவமை வாயிலாகக் கருத்து விளக்கம் செய்துள்ளார் அறிஞர் அண்ணா.

### 4.6.3.அந்திக் கலம்பகம்

அந்திப் பொழுதில் பெண்களிடையே நடைபெறுகின்ற உரையாடல், நாடகவடிவில் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளது. சமூக வாழ்வில் பெண்கள் வெறுமனே ஊர்க்கதைகள் மட்டும் பேசிக் கொண்டிருப்பவர்களாக இல்லாமல் அறிவார்ந்த பல்வேறு செய்திகளைத் தமக்குள் உரையாடி அறிவாற்றல் மிக்கவர்களாகத் திகழவேண்டும் என்பதை ‘அந்திக் கலம்பம்’ நோக்கமாகக் கொண்டுள்ளது. வரலாற்றுக் கதைகள், காதலோவியங்கள், உளப்பண்பு விளக்கச் சம்பவங்கள், அகத்துறை விளக்கத் துணுக்குகள் முதலியன இப்பகுதியில் இடம்பெற்றன. ‘சி.என்.ஏ.’ என்ற பெயரில் இந்நாடக உரையாடலை அறிஞர் அண்ணா எழுதியுள்ளார். இப்பகுதி 21.8.1960 ஆம் நாள் முதல் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. வத்சலா, ஏமலதா, பொன்னம்மா என்னும் பாத்திரங்களை உரையாட வைத்துப் பல்வேறு செய்திகளை இப்பகுதியில் அறிஞர் அண்ணா வழங்கியுள்ளார். ‘பொன்னம்மா’ என்ற பொன்னி பிறபெண்களுக்கு அறிவார்ந்த செய்திகளை விளக்குகிறாள். அவளின் அறிவாற்றல் குறித்து ஏமலதாவும் வத்சலாவும் பெருமைப்படுகின்றனர்.

“பொன்னி நிறையப் படிக்கிறா”

“படிக்கிறது மட்டுமில்லை. பொதுக் கூட்டங்களுக்கும் போய் கேட்கறா. அதனாலே நிறைய விஷயங்கள் தெரியறது”

“தெரிந்த விஷயங்களைப் பற்றி அவளா வேறே சிந்திக்கிறா. அதனாலதான் எதிலேயும் ஒரு தெளிவு இருக்குது, பொன்னிக்கு”[100] எனப் பொன்னியின் அறிவாற்றல் குறித்துப் பேசுகின்றனர்.

‘அந்திக்கலம்பகம்’, 1960 ஆம் ஆண்டு திராவிடநாடு இதழ்களில் சிலகாலம் வெளிவந்தது. 9.10.1960 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு இதழில் இராக்கெட்டில் மனிதர்கள் பயணித்த செய்தி இடம்பெற்றுள்ளது.

“ஊர் உலகமே அதிசயப்படுதே, கேள்விப்படவில்லையா? முன்னாலே நாய்க்குட்டிகளை அனுப்பினார்களே, இப்போது மனிதர்களே போயாச்சி.

“எந்தக் காலத்திலே பெரியவங்க கண்டுபிடித்தாங்களோ அகல்விளக்கு குத்துவிளக்கு, அதோடு நாம நின்றுவிட்டோமே. மற்ற இடத்திலே இதுபோதும்னு இருந்துவிட்டிருந்தா எலக்ட்ரிக் வந்திருக்குமா”[101] என்ற பொன்னியின் கூற்றின் வாயிலாக அறிவியல் முன்னேற்றத்தை எடுத்துரைத்துத் தமிழர்களின் நிலையையும் விளக்கியுள்ளார். குத்துவிளக்கு, அகல்விளக்கு என்ற அளவிற்காவது முன்னோர்களின் கண்டுபிடிப்பு இருந்தது. ஆனால் நாம் அந்த அளவோடு நின்றுவிட்டோம். அறிவியலில் உரிய வளர்ச்சியடையவில்லை. அவ்வளர்ச்சியை நோக்கி நாம் பயணிக்க வேண்டும் என்ற கருத்தை அந்திக்கலம்பகத்தில் இடம்பெற்ற மகளிர் வாயிலாக அண்ணா எடுத்துரைத்துள்ளார்.

பண்டிகை, விழா இவ்விரு சொற்களுக்கும் அந்திக்கலம்பத்தில் பொன்னி வாயிலாக விளக்கமளித்துள்ளார் அறிஞர் அண்ணா.

“பண்டிகை என்பது பெரிதும், பக்தி, புண்யம், போகிற கதிக்கு நல்லது தேடுவது என்பதற்காக நடத்தப்படுவது, ‘விழா’ என்றால் மகிழ்ச்சி தெரிவிக்க, வாழ்க்கையிலே நிம்மதி பெற”[102]

இவ்வாறு குறிப்பிடும் பொன்னி, தீபாவளி என்பது பண்டிகை என்றும், பொங்கல் என்பது விழா என்றும் விளக்கி, பொங்கல் திருநாளில், “கூடுமான வரையிலே, வீட்டிலேயே எல்லாவகையான பண்டமும் பலகாரமும் செய்து, குடும்பம், ஒண்ணா இருந்து சாப்பிட்டுக் குதூகலமா இருக்கணும்னு சொல்லுவேன். பொங்கல் திருநாளின் போது, புருஷனும் மனைவியும், தாயும் மகளும், அப்பாவும் பிள்ளையும், அக்காவும் தம்பியும் எல்லோருமா, வீட்டிலே இருந்து ஒருத்தர் காய்கறி நறுக்க, இன்னொருத்தர் அடுப்பு எரியவிட, இன்னொருவர், குத்திப் படைக்க, இன்னொருவர் கிளற, வடிக்க, மற்றொருவர் கூட்ட குழைக்க, இப்படி ஆளுக்கொரு வேலையை மகிழ்ச்சியாகப் பேசிக்கொண்டே செய்யணும். எல்லோரும் ஒன்றாக உட்கார்ந்து சாப்பிட்டு இன்பமாக இருக்க வேண்டும். குழந்தைகள் ஓடி விளையாடணும். இளம்பெண்கள் சீவிச் சிங்காரித்துக் கொண்டு, சிரித்த முகத்தோடு, வீட்டுக்கு விளக்கு ஏற்றிவைத்தா எவ்வளவு இலட்சணமா இருக்குமோ, அப்படி, வீடுகளிலே இருக்கவேண்டும்.

பெரியவர்கள் அதைப்பார்த்து, குடும்பம், தழைத்து வருகிறது என்று பெருமையும் பூரிப்பும் கொள்ளணும்”[103] என்று தன் வேட்கையைத் தெரிவிக்கிறார் அறிஞர் அண்ணா. நல்லதொரு குடும்பம் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைப் பொன்னியின் வாயிலாக அனைவருக்கும் எடுத்துரைத்துள்ளார்.

## 4.7.தொகுப்புரை

❖ இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் புராண, இதிகாச கருத்துகளின் அடிப்படையில் இயங்கிக்கொண்டிருந்த தமிழ் நாடகக் கலை, திராவிட இயக்கம் தமிழகத்தில் வீறுகொண்டு எழுந்ததின் காரணமாகப் பகுத்தறிவுப் பாதையை நோக்கிச் சென்றது.

❖ நாடகக்கலையை ஆரியத்தின் பிடியிலிருந்து மீட்டெடுக்கும் முயற்சியை முதன் முதலில் பாரதிதாசன் தொடங்கினார். அவரின் சீரியவழியில் பயணம் செய்த அறிஞர் அண்ணா, பாரதிதாசன் தொட்டுச் சென்ற பாதையைத் தொடர்ந்து சென்று புதிய நாடகங்களைப் படைத்தார்.

❖ அறிஞர் அண்ணா படிப்பதற்கேற்ற வகையிலும் நடிப்பதற்கு ஏற்ற வகையிலும் அமைந்த நாடகங்களைத் திராவிடநாடு இதழில் வெளியிட்டார். மக்களின் வாழ்வியல் முறைகளையும் சிக்கல்களையும் நாடகங்களில் வெளிப்படுத்திக் காட்டுவதில் அவர் வல்லவராகத் திகழ்ந்தார்.

❖ ஏழை, எளிய மக்களின் துன்பநிலை, கைம்பெண்களின் அவலநிலை, போலிப் பக்தர்கள் மற்றும் மடாதிபதிகளின் செயல்கள் ஆகியவற்றை அடிப்படையாக வைத்துச் சமூகச் சீர்திருத்த நாடகங்கள் படைக்கப்படவேண்டும் என்ற கருத்தை அறிஞர் அண்ணா கொண்டிருந்ததை திராவிடநாடு இதழில் வெளிவந்த அவரது நாடகங்கள் புலப்படுத்துகின்றன.

❖ சமூகச் சீர்திருத்தங்களை அடிப்படையாகக் கொண்ட நாடகங்களுக்குத் திராவிடநாடு இதழ் முன்னுரிமை அளித்தது. இயக்கத் தொண்டர்களின் சோர்வை நீக்கி, உற்சாகம் ஊட்டுகின்ற வகையிலான உரையாடல்களைத் தம் நாடகங்களில் அறிஞர் அண்ணா படைத்தார்.

- இராவணனுக்காக அனுமன் இலங்கையை அழித்த நிகழ்வு, அறிவியல் முறையில் மக்களை ஏமாற்றுவோர் செய்கின்ற தந்திரங்கள், இராவணனை இரக்கமற்றவனாகப் படைத்த கம்பனின் செயல், செல்வந்தரிடமிருந்து இரக்கத்தைப் பெற இயலாது துன்புறும் ஏழைகளின் நிலை, சீதைக்கும் சம்புகனுக்கும் இரக்கம் காட்டாத இராமனின் இரக்கமற்ற போக்கு, இளம் பெண்களை முதிய ஆடவர்க்கு மணம் செய்விப்பதால் விளையும் கொடுமைகள், வரதட்சணையால் விளையும் சமூகக் கேடுகள், போன்றவற்றை அடிப்படையாக வைத்துப் படைக்கப்பட்ட ஓரங்க நாடகங்கள் திராவிடநாடு இதழில் மிகுதியாக வெளிவந்தன.
- சமகால அரசியல் நிகழ்வுகளை அடிப்படையாக வைத்தும் திராவிடநாடு இதழில் அறிஞர் அண்ணா நாடகங்களைப் படைத்தார். அன்றைய அரசாங்கத்தினரின் கல்விக் கொள்கை, விடுதலைக்குப் பின்னர் இந்தியநாட்டின் நிலைமை, தன்மானம் மிக்க சேரன் செங்குட்டுவனின் வடநாட்டுப் படையெடுப்பு முதலியவற்றையும் நாடகங்கள் வாயிலாக அறிஞர் அண்ணா எடுத்துரைத்தார். தமிழரிடம் தமிழ் சார்ந்த உணர்வுகளை விதைப்பதற்குச் சேரன் செங்குட்டுவன் போன்ற நாடகங்கள் அவருக்குப் பயன்பட்டன என்பது தெரியவருகிறது.
- மதத்தின் பெயரால் மக்களை ஏமாற்றும் மடலாய அதிபர்களின் செயல்கள், ஏழைகளுக்கு இரங்காத செல்வந்தர்களின் போக்குகள், வரிகட்டாமல் அரசாங்கத்தை ஏமாற்றும் முதலாளிகளின் தவறுகள், சோதிடத்தின் தீமைகள், போன்றவற்றை விளக்குவதாய் அறிஞர் அண்ணாவின் நாடகங்கள் அமைந்திருந்தன.
- சமுகச் சீர்திருத்தங்களை அடிப்படையாகக் கொண்டு நாடகங்கள் படைத்தோர்க்குத் திராவிடநாடு இதழில் அறிஞர் அண்ணா உரிய இடமளித்தார். பிறநாட்டு வரலாறுகள், மன்னர்களின் வாழ்வியல், தனிமனித வாழ்வியலுக்குத் தேவையான பண்புகள் ஆகியன நாடகங்கள் வாயிலாக விளக்கப்பட்டன.
- நாடக உரையாடல் வடிவில் கருத்துவிளக்கம் செய்கின்ற புதிய உத்தியைத் திராவிடநாடு இதழில் அறிஞர் அண்ணா கையாண்டார். ஆரிய உரையாடல், ஊரார் உரையாடல், அந்திக்கலம்பகம் முதலான பகுதிகள் இவ்வகையில் அமைந்தவையாகும்.

## சான்றெண் விளக்கம்

1. பாரதிதாசன் பாடல்கள், ப.247.
2. சு. சண்முகசுந்தரம், அறிஞர் அண்ணா, ப.54.
3. திராவிடநாடு, 31.3.1957,ப.8.
4. அவ்வை தி.க.சண்முகம், எனது நாடக வாழ்க்கை, ப.33.
5. நாகை தருமன், இலக்கிய உலகில் அண்ணா, ப.210.
6. திராவிடநாடு, 19.03.1944, ப.8
7. மேலது, 20.02.1944.
8. இரா. சனார்த்தனம், அறிஞர் அண்ணா நாடகங்கள் ஓர் ஆராய்ச்சி, பக்.243-244.
9. திராவிடநாடு, 14.1.1950. ப.41.
10. கோ. கேசவன், திராவிட இயக்கமும் மொழிக் கொள்கையும், ப.147.
11. மேலது, 12.1.1947, ப.21.
12. மேலது, ப.-21.
13. திராவிடநாடு, 23.3.1947, ப.16.
14. மேலது.
15. மேலது. ப.13.
16. சு. சண்முகசுந்தரம், மு.நூ. ப.62.
17. திராவிடநாடு, 8.6.1947, ப.3.
18. மேலது.
19. மேலது.
20. மேலது, ப.2.
21. மேலது.
22. திராவிடநாடு, 17.8.1947,ப.13
23. மேலது, பக்.13-14
24. மேலது, ப.15
25. வே. ஆனைமுத்து(ப.ஆ.,) பெரியார் ஈ.வெ.ரா.சிந்தனைகள், தொ.3, ப.1438.
26. திராவிடநாடு 10-8.1947, ப.15
27. மேலது. 10-8.1947, ப.15
28. மேலது, 24.8.47, ப.2.
29. மேலது, 14-9-47, ப.7
30. மேலது, 21-9-47, ப.13.
31. மேலது, 19-10-1947, ப.13.
32. மேலது, ப.14.

33. மேலது, 21.12.1947. ப.16
34. மேலது, ப. 8.
35. மேலது, 13.3.1949, ப.8.
36. மேலது. ப.9.
37. மேலது.
38. மேலது, 20.3.1949, ப.15.
39. மேலது, ப.2.
40. மேலது, 27.2.1949, ப.13.
41. மேலது, ப.14.
42. மேலது, 14.1.1950,ப.29.
43. மேலது, 19.2.1950. ப.7
44. மேலது,
45. மேலது, ப.11.
46. மேலது, 25.6.1950. ப.2.
47. மேலது.
48. மேலது, பக்.3-4.
49. மேலது, ப.4.
50. மேலது, ப.13.
51. மேலது.
52. மேலது.
53. மேலது, 14.1.1951, ப.27.
54. மேலது.
55. மேலது, ப.28.
56. மேலது.
57. மேலது.
58. மேலது, 30.1.1955. ப.7
59. மேலது, ப.1.
60. மேலது, 21.8.1955. ப.10
61. மேலது.
62. மேலது. 29.4.1956, ப.10.
63. மேலது, ப.11.
64. மேலது, 6.5.1956,ப.7.
65. மேலது, ப.8.

66. மேலது. ப.9.
67. மேலது, 17.6.1956, ப.5.
68. மேலது.
69. மேலது, 24.6.1956. ப.13.
70. மேலது. பக்.13-14.
71. மேலது, 1.7.1956.
72. மேலது, 14.8.1960, ப.12.
73. மேலது.
74. மேலது, 14.1.1956, ப.8
75. மேலது, 11.2.1951, ப.7
76. மேலது.
77. மேலது.
78. மேலது,
79. மேலது, 18.2.1951.ப.5.
80. புறநானூறு, பா:50, அடி.7-13.
81. திராவிடநாடு, 22.6.1958, ப.12.
82. மேலது. 14.9.1958,ப.11.
83. சிலம்பு, வஞ்சிக்காண்டம், காட்சிகாதை, அடி.160-164.
84. திராவிடநாடு, 15.5.1960, ப.2.
85. மேலது.
86. மேலது, 8.12.1957, ப.7
87. மேலது. ப.9.
88. மேலது, 23.2.1958,ப.11.
89. மேலது, 9.3.1958, ப.7.
90. மேலது. 14.1.1961, ப.28.
91. மேலது.
92. மேலது.
93. மேலது, 24-9-1944. ப.6.
94. மேலது, 13.7.47,ப.15.
95. மேலது, 13.2.1955,ப.12.
96. மேலது, 15.7.1956,ப.13.
97. மேலது, 17.2.1963,ப.16
98. மேலது, 24.2.1963. ப.12

99. மேலது. 3.3.1963, ப.12.

100. மேலது, 28.8.1960,ப.9

101. மேலது, 9.10.196,ப.9.

102. மேலது,14.1.1961, ப.88.

103. மேலது, பக்.93-94.

# இயல் -5

# திராவிடநாடு இதழில் கட்டுரைகள்

## 5.0. முன்னுரை

புதிய எழுத்தாளர்களைத் தமிழ்கூறும் நல்லுலகிற்கு அறிமுகம் செய்து வைத்த அரும்பணியைத் திராவிடநாடு இதழ் வாயிலாக அறிஞர் அண்ணா செய்துள்ளார். தமிழ் இலக்கியம், வரலாறு, அறிவியல், அரசியல் எனும் பல்வேறு பொருண்மைகளில் அமைந்த கட்டுரைகள் திராவிடநாடு இதழில் வெளிவந்தன. புராணம், இதிகாசங்களில் இடம்பெற்றுள்ள பகுத்தறிவிற்கு ஒவ்வாத கருத்துகளைத் திராவிடநாடு இதழில் பல்வேறு கட்டுரையாளர்கள் எடுத்துரைத்துள்ளனர். திராவிட இயக்கக் கொள்கைகளை விளக்கும் வகையில் அமைந்த கட்டுரைகளுக்கும், தமிழ் இலக்கியத்தின் சிறப்புகளை எடுத்துரைக்கும் வகையில் அமைந்த கட்டுரைகளுக்கும் அண்ணா தம் இதழில் முக்கியத்துவமளித்தார். எதிர்ச்சிந்தனையாளர்களின் கருத்துகளுக்கு உரிய மறுப்புரைகளும் கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இயக்கக் கூட்டங்களில் திராவிட இயக்கத் தலைவர்கள் ஆற்றிய உரைகள் கட்டுரை வடிவில் இதழில் வெளியிடப்பட்டன. தமிழ் வளர்ச்சிக்குத் தமிழர்கள் ஆற்ற வேண்டிய பணிகள் குறித்து அறிஞர் பெருமக்கள் அவ்வப்போது வழங்கிய கருத்துகள் கட்டுரை வடிவில் திராவிடநாடு இதழில் இடம்பெற்றன. இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள செய்திகளை எடுத்துரைக்கும் வகையில் இவ்வியல் அமைகிறது.

## 5.1.தமிழ் வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகள்

திராவிட இயக்கம் தமிழகத்தில் வேரூன்றத் தொடங்கிய காலம் முதல் பல்வேறு இதழ்கள் வாயிலாகவும் மேடைச் சொற்பொழிவுகள் வாயிலாகவும் பண்டைத் தமிழ் இலக்கியங்களின் பெருமைகளை மக்களுக்கு எடுத்துரைத்த திராவிட இயக்கத்தினர், புராண, இதிகாசங்களில் காணப்பட்ட பகுத்தறிவிற்குப் புறம்பான கருத்துகளை மக்களிடம் விளக்கினர். சுயமரியாதை இயக்கத்தாரால் தமிழ்மொழி அடைந்த மேன்மைகள் குறித்து ம.பொ.சிவஞானம், "சுயமரியாதை இயக்கத்தால்

தனித்தமிழ்க் கொள்கையாளர் வலுப்பெற்றனர். தமிழில் கலந்த வடமொழிச் சொற்களை அகற்றி, தனித் தமிழிலேயே எழுதவும் பேசவும் வேண்டுமென்ற ஆர்வம் தமிழரிடையே வளர்ந்தது. வடமொழிக் காப்பியங்களை முதல் நூல்களாகக் கொண்டு தமிழில் தோன்றிய கம்பராமாயணம், வில்லிபாரதம் போன்ற வழி நூல்களை வெறுத்தொதுக்கும் உணர்ச்சியை மக்களிடையே வளர்க்க முயன்றனர் சுயமரியாதை இயக்கத்தார். அது வெற்றி தரவில்லை. ஆனால், திருக்குறள், புறநானூறு, அகநானூறு போன்ற சங்க இலக்கியங்களை விரும்பிப் பயிலும் புது உணர்வு தமிழ் இளைஞர்களிடையே ஏற்பட்டது”[1] என்று குறிப்பிடுகிறார். திராவிடநாடு இதழின் ஆறாம் ஆண்டு நிறைவையொட்டி அறிஞர் அண்ணா, “தமிழ்ப்பத்திரிகை உலகில் ‘திராவிடநாடு’ அளவில் சிறியது. ஆண்டில் இளையது. இருந்தாலும் எதிர்பாராத இடத்திலிருந்தெல்லாம் அதற்கு வரவேற்பு, சென்ற ஆண்டில் கிடைத்திருக்கிறது. பேனா பிடித்தவர்களிடம் எல்லாம் புது முறுக்கையும். புரட்சிக் கருத்தையும் தோற்றுவிக்கும் அளவிற்கு அன்போடு அவர்களை அணைத்துக் கொண்டிருக்கிறது திராவிடநாடு”[2] என்று குறிப்பிட்டுள்ளார். புதுமைக் கருத்துகளைத் தோற்றுவிக்கும் ஏடாகத் திராவிடநாடு திகழ்ந்தமையை இக்கூற்றிலிருந்து அறியமுடிகிறது. திராவிடநாடு இதழ் தொடங்கப்பட்ட போது அவ்விதழ் குறித்து ஏளனம் செய்தோர் பின்னாளில் அவ்விதழின் அழகிய தமிழ்நடையால் அவ்விதழ் தமிழுக்கு ஆற்றிய பணிகளைப் போற்றியுள்ளனர் என்பதையும் இதன்வழி அறியமுடிகிறது. “தமிழில் அரசியலையும் பொருளாதரப் பிரச்சினைகளையும் உலக வரலாற்றினையும் உள்ளத்தில் கிளர்ச்சி எழத்தக்கவகையிலே தீட்டிட இயலுமா? அகம் தெரியுமா? புறம் அறிவரா? தொல்காப்பியம்தனைத் தொட்டதுண்டா? ஏதறிவர், எங்ஙனம் தமிழ் தீட்டுவர், இலக்கணம் வழுவா முறையில், இலக்கியச் செறிவு துளியேனும் உள்ள வகையில் எழுதவல்லவரோ, இவர்களெல்லாம் செவிச்சுவை உணரா மாக்களன்றோ, தேன்சொட்டும் திருவாசகமும், இனிமை துள்ளும் சங்க நூற்களும், கற்பனை மணம் கமழும் கடவுட் காதைகளும் அறிவரோ, இவரிடம் தமிழ் எங்ஙனம் உறவு கொள்ளும்.

அகவல் அறியார். அந்தாரி தெரியார். கலம்பகம் கண்டவரல்ல. கட்டளைக் கலித்துறை படித்தோரல்ல. என்ன செய்வர்? எமது அகத்தியன் அருளிய தமிழ், இந்தச் சழக்கருக்குத் துணை நிற்குமா? எழுவாய், பயனிலை. செயப்படுபொருள் எனும் அடிப்படையேனும் அப்பழுக்கின்றி அறிவரா? என்று பேசியவர்களை 'திராவிட நாடு' அறியும். இன்று அவர்கள் சாட்டும் குற்றச்சாட்டு, தமிழின் அழகை முழுக்க முழுக்கப் பயன்படுத்திக்கொண்டு மக்களை மயக்கி, தகுதிக்கு மேற்பட்ட 'செல்வாக்கை' இவர்கள் தேடிக்கொண்டார்கள் என்பதாகும்"[3] எனத் திராவிடநாடு இதழ் தமிழ் வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகளைக் குறிப்பிடும் அண்ணா, "தமிழின் இனிமையை நாடு அறியும் நற்பணியினை ஓரளவு வெற்றியுடன் செய்திருக்கிறோம். பழந்தமிழரின் நெறியினை அறிந்திடவும், இடையே புகுந்த ஆரியத்தைக் களைந்திடும் உறுதி பெறவும் பணியாற்றினோம்"[4] எனவும் குறிப்பிட்டுள்ளார். திராவிட இனத்தின் உயர்விற்காகவும் தமிழின் இனிமையை மக்கள் அறிந்திடவும் திராவிடநாடு இதழ் பெரும்பணியாற்றியதென்பதை அறிஞர் அண்ணாவின் கருத்து உறுதி செய்கிறது.

திராவிடநாடு இதழில் 1942 முதல் வெளிவந்த பல்வேறு கட்டுரைகளின் சிறப்புகள் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

## 5.2. இயக்கம் சார்ந்த தலைவர்களின் கட்டுரைகள்

பகுத்தறிவுச் சிந்தனைகளைத் தொடக்ககாலத்தில் குடியரசு இதழில் எழுதிவந்தவர்களுள் பண்டிதர் எஸ்.எஸ்.ஆனந்தம், கைவல்யம் சாமியார், ஈழத்தடிகள் முதலானோர் குறிப்பிடத்தக்கவர். பின்னாளில் இவர்களுடைய கட்டுரைகள் திராவிடநாடு இதழிலும் வெளிவந்துள்ன. அறிஞர் அண்ணா, திராவிடநாடு இதழில் பல்வேறு பொருண்மைகளில் கட்டுரைகளைப் படைத்தளித்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர்களாக இருந்த இரா.நெடுஞ்செழியன், க.அன்பழகன் முதலானோரும் அவ்வப்போது தம் கருத்துகளை கட்டுரைகளாக வழங்கிவந்தனர். கல்லூரிகளில் பணியாற்றி வந்த பேராசிரியர்கள் பலர் திராவிடநாடு இதழில் தம் கருத்துகளைக் கட்டுரைகளாக வழங்கியுள்ளனர். மேலும், எதிர்சிந்தனையாளர்கள் கூட்டங்களில்

ஆற்றிய உரைகளுக்கும், அவர்கள் பிற இதழ்களில் படைத்த கட்டுரைகளுக்கும் உரிய சான்றாதரங்களோடு அமைந்த மறுப்புக் கட்டுரைகள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றன. அரசியல் மற்றும் இலக்கியக் கூட்டங்களில் தமிழ்ச்சான்றோர் பெருமக்கள் ஆற்றிய உரைகளின் சுருக்கம் கட்டுரை வடிவில் திராவிடநாடு இதழில் வெளிவந்தன. தமிழ் இலக்கியத்தின் மேன்மைகளை உணர்த்தும் வகையில் அமைந்த கட்டுரைகளுக்கு அண்ணா மிகுந்த முக்கியத்துவமளித்தார். புராண, இதிகாசங்களில் காணப்பட்ட பகுத்தறிவிற்கு ஒவ்வாத கருத்துகளும், திராவிடர்களை இழிவுபடுத்தும் வகையில் அமைந்த கருத்துகளையும் கட்டுரையாசிரியர்கள் தம் கட்டுரைகளில் எடுத்துக்காட்டினர். சங்க இலக்கியங்கள், திருக்குறள் முதலிய பண்டைத் தமிழ் நூல்களின் சிறப்பியல்புகள் தமிழறிஞர்களின் கட்டுரைகளில் எடுத்துக்காட்டப்பட்டன.

திராவிடநாடு இதழ் பல்வேறு இளம் எழுத்தாளர்களை நாட்டிற்கு அறிமுகம் செய்தது வைத்த தமிழ்ப்பணியைச் செய்துள்ளது. இது குறித்து அண்ணா, “பல இளம் எழுத்தாளர்களை நாட்டிற்கு அறிமுகப்படுத்தும் ஒரு நல்ல வாய்ப்பைத் திராவிடநாடு உண்டாக்கியதன் வாயிலாக நாட்டின் கருத்துச் செல்வம் படைத்த பல இளம் எழுத்தாளர்களை-குடத்திலிட்ட-விளக்கு-குன்றில் ஏற்றிய பேரொளியென எல்லோரும் அறியவும் பாராட்டவுமான நிலை ஏற்பட்டது.”[5] எனக் குறிப்பிடுகிறார். மேலும் “புதிது புதிதான கருத்தாழம் நிரம்பிய, தமிழ் மணக்கும் கட்டுரைகளுக்கும், கொள்கை விளக்கம் மிளிரும் கவிதைகளுக்கும், சிந்தனையைத் தூண்டும் சிறுகதைகளுக்கும் சுவை நிரம்பிடும் தொடர் சித்திரங்களுக்கும் ‘திராவிடநாடு’ இடம் தரும். பயன்படுத்திட வருக எனப் புது எழுத்தாளர்களை அழைக்கிறோம்”[6] என அண்ணா விடுத்த அழைப்பினை ஏற்றுப் பல்வேறு எழுத்தாளர்கள் தம் படைப்புகளைத் திராவிடநாடு இதழில் எழுதிவந்தனர். இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள கருத்துகள் கால அடிப்படையில் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

### 5.2.1.பண்டிதர் எஸ்.எஸ். ஆனந்தம்

பண்டிதர் எஸ்.எஸ்.ஆனந்தம், குடியரசு உள்ளிட்ட தொடக்ககாலத் திராவிட இயக்க இதழ்களான திராவிடன், குடியரசு முதலிய இதழ்களில் இவருடைய கட்டுரைகள் வெளிவந்துள்ளன. 1938 ஆம் ஆண்டு நடைபெற்ற முதலாம் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் இவர் பங்குபெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது.

#### 5.2.1.1.தமிழர் இயக்கமும் தமிழர் படையும்

பண்டிதர் எஸ்.எஸ். ஆனந்தம், தாய்மொழிக் கல்வியின் சிறப்புகள் குறித்தும் மொழி அடிப்படையில் இந்திய மாநிலங்கள் பிரிக்கப்பட வேண்டியதன் தேவை குறித்தும் 12.4.1942 திராவிடநாடு இதழில் தம் கருத்துகளை வழங்கியுள்ளார். 'தமிழர் இயக்கமும் தமிழர் படையும்' எனும் தலைப்பில் மொழி அடிப்படையில் இந்திய மக்கள் வாழிடங்கள் பிரிக்கப்பட வேண்டும் என்ற கருத்தை இக்கட்டுரையாசிரியர் எடுத்துரைக்கிறார். "ஒரு மொழியிலுள்ள சிறந்த நூல்களே அம்மொழி பேசுபவரது நாகரிகத்தை உணர்த்துதலின் மொழி என்ற சொல்லையே மொழி, கலை, நாகரிகம், என்பவற்றைக் குறிப்பதற்குப் பயன்படுத்தலாம். ஆந்திர தெலுங்குமொழி பேசுகின்றவர்கள் தங்கள் நாடு தனியாகப் பிரிக்கப்படவேண்டுமெனவும், தங்கள் அரசியலமைப்பு வேறாக இருத்தல் வேண்டுமென்றும் வாதாடினால் அவர்கள் கொள்கைப்படி அவர்கள் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள இடங்கொடுத்தலே பொருத்தமாகும். அவர்கள் கொள்கை தவறென்றும், அவர்கள் நோக்கம் பிழைப்பட்டதென்றும், அவர்களுக்கு அறிவுறுத்த முயலுதல் மனமாற்றத்திற்கும் உலகியலுக்கும் நடவாமைக்கும் ஏதுவாகும். அவர்கள் அரசியல் அமைப்பில் பொறுப்பாட்சி இருத்தல் வேண்டுமென்பதே கருதத்தக்கது. அதுவே பொதுக் கொள்கை. பிறவற்றைக் கட்டாயப்படுத்துதல் பெரும் பயன்தராது. கட்டாயமென்பது விலக்கப்பட வேண்டும். மொழிக் கொள்கையிலும் கட்டாயமென்பது ஒழிக்கப்படுதல் வேண்டும். தாய்மொழி ஒன்றே கட்டாயத்துக்குரியது. பிறமொழிகளைக் கட்டாயப்படுத்துதல் இயற்கைக்கு மாறாகும். தாய்மொழியைப் பார்க்கிலும் பிற மொழியைப் பேணுதல்

அவசியம் என்பது தவறு. தாய்மொழி, கட்டாயமாகப் பாடமாகக் கல்லூரிகளில் இல்லாதபோது பிறமொழியைக் கட்டாயப் பாடமாக வற்புறுத்துதல் பெருந்தவறு."[7] எனக் குறிப்பிடுகிறார். கட்டாயமாக ஒரு மொழியை மக்களிடையே திணிப்பது பயன்தராதென்ற கருத்தை எடுத்துரைக்கும் எஸ்.எஸ்.ஆனந்தம், பள்ளி மற்றும் கல்லூரிகளில் தாய்மொழியைக் கட்டாயப் பாடமாக வைத்தல் வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார். திராவிட இயக்கத்தினர் 1942 இல் கொண்டிருந்த இச்சிந்தனையின் அடிப்படையில் மொழி அடிப்படையில் இந்திய மகாணங்கள் 1956 ஆம் ஆண்டு பிரிக்கப்பட்டமை இவ்விடத்தில் கருதத்தக்கது.

### 5.2.2.கைவல்யம் சாமியார்

கைவல்ய சாமியாரின் இயற்பெயர் பொன்னுச்சாமி என்பதாகும். 'கைவல்யம்' என்ற தத்துவ நூலில் ஆழ்ந்த புலமை உடையவராக விலங்கியமையால் கைவல்யசாமியார் என அழைக்கப்பட்டார். தந்தை பெரியாரின் 'குடியரசு' இதழில் சமயம் தொடர்பான பல்வேறு கட்டுரைகளை எழுதியவர் கைவல்யம் சாமியார். புராண, இதிகாசங்களில் காணப்பட்ட பகுத்தறிவிற்கு ஒவ்வாத கருத்துகளைத் தம்கட்டுரைகளில் எடுத்துக்காட்டிய இவர், திராவிடநாடு இதழிலும் பல்வேறு பொருண்மையில் அமைந்த கட்டுரைகளைப் படைத்துள்ளார். கைவல்யசாமியாரின் கட்டுரைச்சிறப்பினைக் குறித்து, அ. இறையன், "எழுதிக் கொண்டேயிருந்தார் கைவல்யம். ஒன்றா, பத்தா, நூறா? இல்லை; ஆயிரக்கணக்கான செய்திகளை வரைந்து தள்ளினார்- ஓய்வறியாமல், ஊக்கம் குன்றாமல்! எதிரிகளிடமிருந்து பேச்சே காணோம். மூச்சே விடவில்லை அவர்கள்! பண்டிதர்களோ பதுங்கினார்கள், கருத்துப் போருக்கு முன்வரமாட்டாமல். காரணம் கைவல்யத் துறவியாரிடமிருந்து வெளியானவை அத்தனையும் வடிகட்டிய உண்மைகள் என்பததான். மனுஸ்மிருதியையும் பராசர ஸ்மிருதியையும் எழுத்தெழுத்தாய் ஆராய்ந்து பயின்ற சாமியவர்கள் வரைந்த கட்டுரைக்கு ஈடாக எவரும் எழுதியதில்லை"[8] எனச் சிறப்பித்துப் போற்றுகிறார்.

### 5.2.2.1.சைவத்தை நிலைநாட்ட

மதுரை சைவ சித்தாந்த சபையில் திரு.வி.கலியாணசுந்தரனார், 'அரசியல் அதிகாரம் கிடைத்தால்தான் மதம் ஒன்றுபட்டு சைவ சமயத்தை நிலைநாட்ட முடியும்' என்று குறிப்பிட்ட கருத்து 'சுதேசமித்திரன்' இதழில் வெளிவந்தது. திரு.வி.க.வின் கருத்திற்கு மறுப்பளிக்கும் வகையில் கைவல்யம் சாமியர் 2.4.44 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு இதழில் 'சைவத்தை நிலைநாட்ட' எனும் தலைப்பில் கட்டுரை ஒன்றை வெளியிட்டார். 'சைவம், கலை முதலியவைகளை வளர்க்க வேண்டுமானால் அரசியலதிகாரம் நம்கையிலிருக்கவேண்டும்' என்று குறிப்பிட்ட கருத்தினை ஏற்காத கைவல்யம், "சைவர்களே சுயமரியாதைக்காரர்கள் சைவத்திற்குப் பகைவரல்ல, நானும் சைவந்தான், எனது முன்னோர்களும் தமிழர்கள்தான். நம்முடைய ஆதிசைவத்தைக் கெடுத்து நம்மவர்களை எல்லாம் சூத்திரர்களாக்கி நமது சிவத்திற்கும் நூல் போட்டுப் பார்ப்பானாக்கிக் கொண்ட பார்ப்பார்களைக் குற்றம் சொல்கிறேன்."[9] என்று ஆதிசைவத்தைக் கெடுத்ததாகப் பார்ப்பனர்களைச் சாடுகிறார். இந்திய விடுதலைக்கு முன் வெளிவந்த இக்கட்டுரையில் காந்தியடிகள் இராமராஜ்ஜியத்தைக் கொண்டு வருவதாகக் குறிப்பிட்டதாலேயே முகமதியர்கள் தனிநாடு கேட்பதாகச் சாடுகிறார். "அரசியல் அதிகாரம் வந்தால் இராம ராஜ்ஜியத்தைக் கொண்டு வருவோம் என்று தோழர் காந்தியும், காங்கிரசும் சொன்னதால் வடக்கே உள்ள முகமதியர்கள் இந்துராச்சியத்தை நிலைநிறுத்தப்பார்க்கிறார்கள் என்று பாகிஸ்தான் கேட்பதுபோல, இங்கும் நீங்கள் சைவத்தை நிலைநிறுத்த அரசியல் அதிகாரம் வேண்டுமென்கிறீர்கானால், இங்கும் அவர்கள் பாகிஸ்தான் கேட்பார்கள்"[10] என்ற கைவல்யசாமியாரின் கருத்து, அரசியல் அதிகாரத்தை வைத்து சமயத்தை வளர்க்க முற்படுவது நாடு பிளவுபடுவதற்கு வழிவகுக்கும் என்ற கருத்தை விளக்குகிறது.

### 5.2.2.2.தமிழ் விருத்தியடைய வழி

'தமிழ் விருத்தியடைய வழி' என்ற கைவல்யசாமியாரின் கட்டுரை 23.4.1944 இதழில் வெளிவந்தது. தமிழ்மொழியை வளர்த்து விருத்தியடையச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு இக்கட்டுரையை அவர் எழுதியுள்ளார். பழந்தமிழின் சிறப்புகளைக் கட்டுரையில் எடுத்துக் கூறுவதோடு, மொழிவிருத்திக்கு ஆற்ற வேண்டிய பணிகளையும் கட்டுரைத்துள்ளார். "ஒரு மொழியானது சிறப்படைந்து மேன்மையாய் விளங்கவேண்டுமானால் அந்தமொழி கடவுளாலும், இராஜாவாலும் மதிக்கப்பட்டு அவர்களின் விவகாரங்கள் அதிலடங்கி, அந்தமொழி அவர்களுக்கும் அர்த்தமாகி அவர்களும் அங்கீகரிக்க வேண்டும். அதுவல்லாமல், புதிது புதிதாய் நடந்துவரும், மாறுதலின் இயற்கை என்னும் காலமானது தன்னியற்கைக் குணத்தால் உலகத்தைப் புதிது புதிதாக மாற்றிக்கொண்டே வருவதற்கு இசைந்தாற்போல, மனிதனின் அறிவு விருத்தியாவதாகும் உலகவிவகாரங்களை நடத்திவருவதற்குத் தொழில் முறையான சாஸ்திரங்களையுடைத்தாயிருக்க வேண்டும். அவ்விதம் தமிழ் மொழியில்லை. ஏன் இல்லை? எதனால் இல்லாமல் போயிற்று. இருக்க வேண்டியதற்கு இனி மார்க்கமென்ன? அதற்காகத் தமிழ் அபிமானிகளும் பண்டிதர்களும் செய்ய வேண்டிய காரியமென்ன, என்பவைகளை ஆலோசித்துப் பாரத்து உண்மை உணர்ந்து. சமூகங்களுக்குச் சொல்லுவது ஆராய்ச்சியின் பலனுமாகும்."[11] என்று குறிப்பிடும் கைவல்யம் சாமியார், தெய்வ வழிபாடுகள் அனைத்தும் தமிழ் மொழியில் நடைபெற வேண்டும் என்பதைக் கட்டுரையில் வற்புறுத்துகிறார். "நம்முடைய தெய்வம், வழிபாடு, இழவு, எட்டு, கருமாந்திரம் முதலிய எல்லாக்கருமங்களிலும் தமிழ்மொழி தெரியாத தேவதைகளை வைத்துக் கொண்டு தமிழ்மொழியை எப்படி விருத்தி செய்யமுடியும். அந்தத் தெய்வங்களை நாம் குடிவைத்த நன்றிக்கு அவையாகவே வந்து தமிழ் கற்றுக் கொள்ளாது. நாமே அவைகளுக்குத் தமிழ் கற்றுக் கொடுக்க வேண்டும். இனி தெய்வ வழிபாட்டிற்கும் கருமங்களுக்கும் உள்ள மந்திரங்கள் எல்லாம் தமிழிலேயே சொல்லிவிட்டோமானால் நமது தெய்வங்களுக்கும் தமிழ் தெரிந்துவிடும்."[12] எனும் அவர்

கருத்திலிருந்து தமிழர்கள் தம் தொன்மைக் கடவுளர்களைப் போற்றவேண்டும்; தமிழில் வழிபாட்டு முறைகள் அமைதல் வேண்டும்; ஆரியக் கடவுளர்களைப் புறந்தள்ள வேண்டும் என்பதை அறியமுடிகிறது.

### 5.2.2.3.சமயம் வேறு புரோகிதக் கட்டுபாடு வேறு

புராணம் மற்றும் இதிகாசக் கருத்துகள் குறித்த கைவல்யம் சாமியாரின் கட்டுரைகளைப் படிப்பதற்கு அன்றைய இளைஞர்கள் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்ததை, “நான் திருச்சி மாநாட்டிற்குச் சென்றிருந்தபோது பெருங்கூட்டமாக வாலிபர்களைப் பார்த்தேன். அவர்கள் ‘திராவிடநாடு’ பத்திரிகையில் அளவிலா ஆசை கொண்டுள்ளதைத் தெரிந்தேன். அவர்களும் புராணத்தைப் பற்றிப் பல தெரிந்து கொள்ள வேண்மென்று நினைத்துத்தான் எழுதுகிறேன்.”[13] எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

சமயங்கள் மக்களிடையே உள்ள அடிமைத்தளையைப் போக்கி விடுதலையைப் போதிக்கிறது. ஆனால் குருக்கள் புரோகிதக்கட்டுப்பாடு, அடிமைநிலையைப் புகழ்ந்து பாடி அடிமைத்தன்மையை ஆளநினைக்கிறது. என புரோகிதக் கட்டுப்பாடுகள் குறித்து விளக்கும் கட்டுரையாசிரியர், “பிராமண சூத்திரப்பட்டங்கள் இப்பொழுது இருக்கிறதே ஒழிய அப்பட்டங்கள் ஏற்பட்ட காரணங்கள் இப்பொழுதில்லை”[14] எனக் குறிப்பிட்டுள்ளார். பிராமணர்கள் தம் தொழிலை விடுத்துப் பிற தொழில்களைச் செய்து உலக போகங்களை அனுபவிப்பதைப் போன்று சூத்திரனும் அப்படியே தன் தொழிலை விட்டு எல்லா உலக போகங்களையும் அனுபவிக்க வேண்டுமென்பதே சுயமரியாதை இயக்கத்தவரின் கொள்கை என்பதை இக்கட்டுரையில் விளக்கியுள்ளார்.

### 5.2.2.4. கற்பு

சமூகத்தை முன்னேற்றி, மக்களை நல்வழிப்படுத்தி, உயர்நிலைக்குக் கொண்டுவருகின்ற வேலையைப் பண்டிதர்கள் செய்திட வேண்டுமே அன்றி, புராணப் பொய்க்கதைகளைச் சொல்லிப் பாமரமக்களை அறியாமை மிக்கவர்களாக ஆக்குதல்

கூடாதென்ற கருத்தை விளக்கும் கைவல்யம் சாமியாரின் கட்டுரை 15.6.1947 இதழில் வெளிவந்தது. இக்கட்டுரை, 'பெண்கள் கற்பு பெண்களுக்குத்தான் தெரியும் பண்டிதன் துணை வேண்டாம்' என்ற தலைப்பில் வெளிவந்தது.

தமிழறிஞர் ரா.பி.சேதுப்பிள்ளையின் 'கற்பு' குறித்த கருத்திற்கு மறுப்பாக இக்கட்டுரை வெளிவந்துள்ளது. கற்பு என்பது ஆண், பெண் ஆகிய இருபாலினருக்கும் பொதுவானதாக இருக்கவேண்டும் என்ற கருத்தைக் கைவல்யம் சாமியார் வலியுறுத்துகிறார். "கற்பின் குணம் பெண்கள் கூடவே பிறக்கின்றது. விலங்கு, பறவைகளின் பெண் இனங்கள் கற்பைக் காப்பாற்றிக் கொள்கின்றன. அன்னிய ஆண்களைப் பக்கத்தில் சேர்க்காது, பலாத்காரத்தை எதிர்த்துச் சண்டை போடும். அவைகளுக்கு எந்தப் பண்டிதனும் பிரசங்கம் செய்யவில்லை. சீதை. திரௌபதை, அருந்ததி அவைகளுக்குத் தெரியாது."[15] எனக் குறிப்பிட்டு, மகளிர் தம்மைத் தாம் காத்துக் கற்பு மிக்கவர்களாகத் திகழவேண்டுமேயன்றி புராண, இதிகாசங்களின் அடிப்படையில் பண்டிதர்கள் எடுத்துக்காட்டுபவர்களை முன்மாதிரியாகக் கொள்ளலாகாதென்கிறார். தமிழறிஞர் ரா.பி.சேதுப்பிள்ளை சீதை, திரௌபதி ஆகியோரின் கற்பின் திண்மையைப் பாரட்டிப் புகழ்ந்ததனை கைவல்யம் மறுக்கிறார். மேலும், "தனக்கு ஐந்து புருடர்கள் இருந்தும், கர்ணனிடம் தன் மனம் நாடுகிறதென்றும் ஆண்களேயில்லாவிட்டால் பெண்கள் கற்புடையவர் களாயிருப்பார்கள் என்று திரௌபதை சொன்னதும், அதற்குக் கிருஷ்ணன் ஒப்புக்கொண்டதும் எத்தகைய கற்பு என்பதைப் பண்டித சேதுப்பிள்ளைதான் சொல்லவேண்டும், அத்தகைய கற்பின் பிரசங்கத்தை நிறுத்திவிட வேண்டும்"[16] எனக் குறிப்பிட்டு, "உண்மையைத் தெரிவதற்கே கல்வி. அதைப் படிப்பதே படிப்பு. அந்தப் படிப்பை மறைப்பதே வஞ்சனை, மறைக்கப் பலதைப் பேசுவது பண்டிதர் பெருமையன்று."[17] என தமிழறிஞர்களுக்கு அறிவுறுத்துகிறார். புராண, இதிகாசங்களில் இடம்பெற்றுள்ள கருத்துகளை மறைக்காமல் பண்டிதர்கள் வெளியிடவேண்டும் என்ற கருத்து இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ளது.

### 5.2.3.ஈழத்தடிகள்

திராவிடநாடு இதழில் சமயம் தொடர்பான கட்டுரைளை மிக அதிக அளவில் எழுதியவர் ஈழத்துச் சிவனாந்த அடிகளாவார். 'ஈழத்தடிகள்' எனப் போற்றப்பட்ட இவர், 1938 ஆம் ஆண்டு நடைபெற்ற முதல் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் இரண்டாவது சர்வாதிகாரியாகப் பணியாற்றிச் சிறை சென்றவர். புராண, இதிகாசங்களில் ஆழங்காற்பட்ட ஈழத்தடிகள், அவற்றில் காணப்பட்ட பகுத்தறிவுற்குப் புறம்பான கருத்துகளைத் திராவிடநாடு இதழில் தொடர்ந்து எழுதிவந்தார். "ஈழத்தடிகள் தமிழில் ஆழ்ந்த பற்றும், ஆற்றலும் கொண்டிருப்பதுடன், தனித்தமிழில் எழுதியும் அதைப் பரப்பியும் வந்திருக்கிறார். தனித்தமிழில் எளிமையும் இனிமையும் சேர்ந்து எழுதக்கூடிய ஒரு பத்துப் பதினைந்து பேர்களில் ஈழத்தடிகளும் ஒருவர் ஆவார். அவர் பகுத்தறிவு இயக்கத்திற்கும் பெரும்பணி ஆற்றியுள்ளார். அவர் எழுதியுள்ள பெரியபுராண ஆராய்ச்சி நூல் சைவப் புலவர்கள் வட்டாரத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. பின்னர் உண்மையை உணர்ந்தவர்கள் இப்படிப்பட்ட ஆராய்ச்சி தேவை என்பதை ஒப்புக் கொண்டார்கள்"[18] என்று அறிஞர் அண்ணா ஈழத்தடிகளைப் பாராட்டியுள்ளார். இவரது கட்டுரைகள் 'அடிகள்', 'ஈழத்தடிகள்' என்னும் பெயர்களில் திராவிடநாடு இதழில் வெளிவந்தன. அவற்றுள் குறிப்பிடத்தக்க கட்டுரைகள் விளக்கப்படுகின்றன.

#### 5.2.3.1.இந்துமதமும் தமிழரும்

'நக்கீரன்' என்ற புனைபெயரில் 'இந்துமதமும் தமிழரும்' என்ற கட்டுரையை ஈழத்தடிகள் எழுதியுள்ளார். இக்கட்டுரை 5.4.1942 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. 'இந்து' என்ற சொல் குறித்த விளக்கத்தினை உரிய சான்றாதாரங்களுடன் அடிகள் விளக்குகிறார். மாக்ஸ்முல்லர் கருத்தின் அடிப்படையில் சிந்துநதிக்கரையில் தங்கியிருந்த ஆரியர்களே இந்துக்களாவார் எனக்குறிப்பிடும் ஈழத்தடிகள், 'இந்து' என்ற சொல்லிற்குரிய பொருண்மையை உபநிடத்திலிருந்து விளக்குகிறார். "எவன் ஒருவன் துன்பம் என்பதில் நின்று அல்லற்படுகிறானோ அவன் இந்து என அழைக்கப்படுகிறான்"[19] என்று குறிப்பிடும் அவர், தமிழர்கள் இந்துக்களாகார்

என்ற கருத்தையும் பதிவு செய்துள்ளார். “ஆரியரல்லாத தமிழ்மக்களை இந்துக்கள் என்றழைப்பது பொருந்தாதோவெனக் கடாவுவார்க்கும் பொருந்தாதென்றே கூறுவோம். ஏனெனில் தமிழ் மக்கள் தங்கள் வாழ்க்கையை நடத்த வகையறியாது ஊர் ஊராய்ச் சுற்றித் திரிந்து துன்புற்ற செய்தி எந்த வரலாற்று நூலிலும் காணப்படவில்லை.”[20] என்று தமிழரின் தொன்மைச் சிறப்பை இக்கட்டுரையில் எடுத்துரைக்கிறார். சமயக் கோட்பாடுகளின் அடிப்படையில் திராவிடர்களின் தொன்மைச் சமயம் இந்துசமயமன்று என்பதை இக்கட்டுரையில் ஈழத்தடிகள் நிறுவுகிறார். இத்தகைய கட்டுரைகள் அக்காலத்தில் பெரும் எதிர்ப்புகளுக்கு உள்ளாகின. இருப்பினும் தமிழர்களிடம் திறனாய்வுப் பண்பு அதிகரிப்பதற்கு இத்தகைய கட்டுரைகள் காரணமாய் அமைந்தன எனலாம்.

### 5.2.3.2. அறியாமைக்கு வித்திடுவதா?

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் திராவிட இயக்கச் சிந்தனைகள் மக்களிடையே பரவத் தொடங்கிய காலத்தில் புராண, இதிகாசங்களில் இடம்பெற்றிருந்த கருத்துகள் திறனாய்வுக்கு உட்படுத்தப்பட்டன. திருஞானசம்பந்தரின் ‘தோடுடைய செவியன்’ எனத் தொடங்கும் பாடல் குறித்த ஆய்வுக் கட்டுரை, ஈழத்தடிகளால் ‘அறியாமைக்கு வித்திடுவதா?’ எனும் தலைப்பில் 25.2.1945 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. ‘செவியன்’ என்ற சொல்லைச் சம்பந்தர் அப்பாடலில் ஏன் அமைத்துப் பாடினார் என்பதற்குரிய விளக்கத்தைக் கட்டுரையில் ஈழத்தடிகள் அளிக்கிறார். “சிவன் இப்படிப்பட்டவர், அவருடைய இயல்பு இத்தன்மையது என்பனவற்றைச் சம்பந்தர் ஒரு சிறிதும் அறியாத நிலையில் நின்றே ‘செவியன்’ என்ற சொல்லை அப்பாடலில் அமைத்துப் பாடியிருப்பதாகத் தெரிகிறது. சிவனையும் அவருடைய இயல்புகளையும் சம்பந்தர் அறிந்திருந்தால் அவர் ‘செவியன்’ என்ற சொல்லை அந்தப் பாடலில் அமைத்துப் பாடியிருக்கவே மாட்டார். தம்மால் பாடப்படும் பாடல் சிவனுடைய செவிக்கு எட்டவேண்டுமானால், அவருடைய செவியைச் சிறப்பித்துப் பாடுவதே முறையெனக்கருதி அங்ஙனம் பாடியிருக்கிறார்.”[21] என்றும் தம்

வேண்டுகோள் இறைவன் செவிகளில் எட்டவேண்டும் என்பதற்காகவே இவ்வாறு பாடியதாகவும் குறிப்பிடும் ஈழத்தடிகள், "எதிலும் பற்றற்றவர் சிவன் என்பதை நம்பி அவரை வழிபட்ட சம்பந்தருக்குச், சிவனாரின் செவியைச் சிறப்பித்துப்பாடவேண்டும், இல்லையேல் தம்முடைய பாடலைச் சிவன் கேட்கமாட்டான் என்ற எண்ணம் ஏன்-எப்படி உண்டாயிற்று என்று நாம் ஐயப்படுவதை எவரேனும் குற்றமென்று கூறமுடியுமா? ஒன்று சிவனுக்குக் கூறப்படும் இலக்கணங்கள் பொய்யாய் இருத்தல் வேண்டும் அல்லது சம்பந்தர் சிவனையும் அவரது இலக்கணங்களையும் அறியாதவராய் இருத்தல் வேண்டும். இவ்விரண்டில் ஒன்றாவது சிவ அன்பர்கள் பொய்யென்று ஒப்புக்கொண்டாலன்றி. அவர்களது சைவமும் அதன் கொள்கைகளும் நிலைத்திருக்கமுடியாது"[22] என்ற விளக்கத்தையும் அளிக்கிறார். அவ்வகையில், இலக்கிய ஆய்வு என்பது அறிவு வளர்ச்சிக்கு உதவிடவேண்டுமேயன்றி அறியாமையை வளர்ப்பதற்கு உதவிடக்கூடாது என்ற கருத்தை இக்கட்டுரையில் பதிவுசெய்துள்ளார்.

### 5.2.3.3.ஆற்றமுடியாத புண்

பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள சிவனடியார்கள் குறித்த திறனாய்வுக் கட்டுரைகளை ஈழத்தடிகள் திராவிடநாடு இதழில் தொடர்ந்து எழுதிவந்தார். 11.11.1945 ஆம் நாள் வெளிவந்த இதழில் 'ஆற்றமுடியாத புண்' என்ற தலைப்பில் இளையான்குடி மாறநாயனார் வாழ்வியல் குறித்த திறனாய்வுக் கட்டுரையை எழுதியுள்ளார். தனக்குரிய அனைத்தையும் விற்ற பின்னர், மாறனாயனாருக்கு வயலும் அவ்வயலில் விதைப்பதற்கு நெல்லும் எவ்வாறு இருக்கமுடியும்? என வினவுகிறார். "அடியவர்களிடத்துக் கொண்டிருந்த அன்புப் பெருக்கால், தம்மிடமுள்ள எல்லாவற்றையும் விற்று அன்னமிட்ட மாறனாருக்குத் தம்முடைய சொந்தமாக வயல் இருந்ததென்றும், அந்தவயலும் பசியோடு கூடிய அடியவர் வந்த அன்றே விதைக்கப்பட்டதென்றும் கூறுவது எத்துணைப் புளுகு என்பதை எண்ணிப் பாருங்கள் அன்பர்களே! இத்தகைய நிகழ்ச்சிகளைத்தான் புராணத்தோடு கூடவே பிறந்த ஆற்றமுடியாத பெரும் புண்கள் என்றும், இவற்றை அடியோடு அறுத்துத் தள்ளவேண்டும் என்றும் கூறுகின்றோம்.

இங்ஙனம் கூறுவது தவறா? இங்ஙனம் கூறுபவர்கள் நாத்திகர்களா? என்பதனைக் கடவுளன்பர்கள் எண்ணிப்பார்க்க வேண்டுகிறேன்”[23] என்ற சிந்தனையை முன்வைத்துப் பகுத்தறிவு கொண்டு பெரியபுராணக் கதையை அணுகியுள்ளார். மேலும், பெரியபுராணச் சான்றுகளை வைத்து அக்காப்பியத்தில் இடம்பெற்ற கதையை திறனாய்ந்துள்ளார் ஈழத்தடிகள்.

### 5.2.3.4.பெண்ணைப் பேயாக்கிய பெம்மான்

‘நக்கீரன்’ என்ற புனைபெயரில் ஈழத்தடிகள் காரைக்காலம்மையார் வரலாற்றை அடிப்படையாக வைத்துப் ‘பெண்ணைப் பேயாக்கிய பெம்மான்’ என்ற தலைப்பிலமைந்த கட்டுரை 12.10.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. புனிதவதி-பரமதத்தன் இல்வாழ்க்கை நிகழ்வுகளைப் பெரியபுராணத்தின் அடிப்படையில் கட்டுரைத் தொடக்கத்தில் விவரிக்கிறார் ஈழத்தடிகள். இக்கட்டுரையில் சிவனடியார், புனிதவதியார், பரமதத்தன் செயல்களை ஆய்ந்துள்ளார்.

“உணவு வேளைக்கு முன்னதாகவே வந்த அடியாரை நோக்கி அந்த அம்மையார் என்ன சொல்லியிருக்க வேண்டும்? “அடியவரே! அடிசில்வேலை இன்னும் முற்றுப்பெறவில்லை. சோறுமட்டும் சமைக்கப்பட்டுவிட்டது. சற்று நேரத்தில் கறியும் சமைக்கப்பட்டுவிடும். அதற்குள் உணவு கொள்ள வேண்டிய வேளையும் நெருங்கிவிடும். தாங்கள் உண்டு பசி தீர்ந்துபோகலாம்’ என்று தானே சொல்லியிருக்க வேண்டும், அதுதானே முறையும் இயற்கையும்கூட.”[24] என்று புனிதவதியார் செயலை எடுத்துக்கூறி, “வந்தவர் பசிதாங்க முடியாத பாலகனுமல்ல – பகற்பட்டினி, இராப்பட்டினி கிடக்கும் கொடிய நிலையைப் பெற்றுள்ள ஒரு பாட்டாளியுமல்ல. பரமனின் நல்லடியார்; பசிநோய் தெரியாத அல்லது அவற்றைப் பொருட்படுத்தாத நிலையைப் பெற்றுள்ள பெருந்துறவி. ஒருவேளை மீறிய பசி வந்துற்றாலும் அதனை அடக்கவல்ல ஐந்தெழுத்தை ஐயந்திரிபற ஓதி, அதனால் ஏற்படும் அன்பாம் இன்னருளமுதை நுகர்ந்து பேரின்பப் பெருங்கடலில் ஆழ்ந்து பசியறியாதிருக்கவல்லவர்

என்று கடவுளன்பர்களால் போற்றப்படுபவர்."[25] எனச் சிவனடியார் நிலையை எடுத்துரைக்கிறார்.

பரமதத்தனை இறைநம்பிக்கை இல்லாதவன் என்பதைப் பெரியபுராணத்திலிருந்து சான்றுகாட்டி விளக்குகிறார் ஈழத்தடிகள். "பரமதத்தன் கடவுளிடத்தில் நம்பிக்கை இல்லாதவன் என்பதை,

'ஈசனருள் எனக்கேட்ட இல்லிறைவன் அதுதெளியான்'

என்ற பெரியபுராணத் தொடரை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார். இச்சொற்றொடருக்கு, "திருவருள் நெறியில் நில்லாதவன்" என்று பெரியபுராண அரும்பத விசேட ஆராய்ச்சிக் குறிப்புரை எழுதிய திரு.வி.க. கூறுகின்றார். எனவே, பரமதத்தன் கடவுளிடத்து நம்பிக்கை கொள்ளாத ஒரு பகுத்தறிவாளன் என்பது இதனால் பெறப்படுகின்றது"[26] என்று குறிப்பிடும் அடிகள் தம்கருத்திற்கு திரு.வி.கலியாண சுந்தரனாரின் ஆராய்ச்சிக் குறிப்புகளையும் துணைகொள்கிறார்.

"கடவுளிடத்தில் நம்பிக்கையில்லாத ஒருவனையும், கடவுளிடத்தில் நீங்காத அன்புபூண்ட ஒருத்தியையும் ஒன்றாகப் பிணைத்துவிடுவதும், பின்னர் கடவுளிடத்தில் அன்பு பூண்டொழுகபவுளுக்கு மட்டும் பொதுநலமும் புனிதத் தன்மையும் கற்பிப்பதும், கடவுளிடத்து நம்பிக்கை கொள்ளாதவனுக்குத் தன்னலம் கற்பிப்பதும், வறிதே தமக்கிருக்கும் மதவெறியைக் காட்டுவதாகுமேயன்றி, உண்மையான ஒரு நடுநிலையைக் காட்டும் ஒரு சிறந்த பண்பாகாது."[27] என்ற ஈழத்தடிகளின் கருத்து மணவாழ்க்கையில் ஒத்த கொள்கை மிகவும் இன்றியமையாததென்பதை உணர்த்துகிறது. மேலும், "பரமதத்தன், தனக்குத் தன் பெற்றோர்களால் மணம் செய்து வைக்கபட்ட புனிதவதியாரோடு ஒற்றுமையாக இருந்து இல்வாழ்க்கையை நடத்த முடியாதென்பதனாலேயே, வேறொரு பெண்ணைத் தானாகவே மணந்து கொண்டான் என்றும் சொல்லப்படுகின்றது. இந்நிகழ்ச்சி, ஆண்பெண் ஆகிய இருவரையும், அவர்களுடைய உடன்பாடு பெறாமல் பிறரால் செய்து வைக்கப்படும் கட்டாய மணத்தின் கொடுமையை நன்கு விளக்கிக் காட்டுவதாக உள்ளது. அதோடு

பரமதத்தனுடைய தன்னலமற்ற சிறந்த குணத்தையும் விளக்கிக் காட்டுவதாக உள்ளது. எப்படியென்றால், தான் இரண்டாவதாக மணந்து கொண்டதன் துணைவிக்குப் பிறந்த பெண்குழந்தைக்குத் தன்னுடைய முதல் மனைவியின் பெயரான புனிதவதி என்பதையே பெயராகச் சூட்டினான் என்பது அவனுடைய உயர்ந்த பண்பைக் காட்டுவதாகும்."[28] என்று பரமதத்தனின் பண்புகளை எடுத்துரைக்கும் ஈழத்தடிகள், மண வாழ்க்கை சிறப்பதற்கு ஆண், பெண் ஆகிய இருவரது உடன்பாடு மிகவும் அவசியமென்பதை இக்கட்டுரையில் விளக்கியுள்ளார்.

### 5.2.3.5.அவசரக் கோலத்தில் அள்ளித் தெளித்தார்

விசாரசருமருக்குச் சிவபெருமான் சண்டேசுர பதம் அளித்த வரலாற்றின் அடிப்படையில் பெரியபுராணக் கதையை மதிப்பீடு செய்துள்ளார் ஈழத்தடிகள். இக்கட்டுரை 5.10.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள கதைகளுக்கும் தமிழகத்திற்கும் எவ்விதத் தொடர்புமில்லை என்பதை, "பெரியபுராணம் போன்ற தமிழிற் காணப்படும் சமயநூல்கள் எல்லாம், வடமொழிச் சமயநூல்களைப் பார்த்து எழுதப்பட்டனவேயன்றி, அவற்றில் கூறப்படும் நிகழ்ச்சிகள் தமிழ்நாட்டையோ அன்றித் தமிழ் மக்களையோ சார்ந்தன அல்ல"[29] எனக் குறிப்பிட்டுக் கதையை விவரிக்கிறார். அதாவது, தந்தையின் கால்களை மழுவால் வெட்டிய விசாரசருமனைத் திருத்தொண்டர்களுக்குத் தலைவனாக்கி, அவருக்கு உண்பன, உடுப்பன, அணிவன முதலியவற்றை அளித்த வரலாற்றை எடுத்துரைக்கும் ஈழத்தடிகள், இவ்வரலாற்றறைச் சேக்கிழார், 'சிவரகசியம்' என்ற நூலில் இருந்து எடுத்ததாகக் குறிப்பிடுகிறார். "சேக்கிழார், சிவரகசியம் என்னும் வடமொழி நூலை வைத்துக் கொண்டே, தாம் எழுதிய பெரிய புராணத்திற்கு ஒரு கதையை உண்டாக்கிக் கொண்டார் என்ற உண்மை தெள்ளிதிற் புலப்படும். சிவரகசியம் காலத்தால் முந்தியதாகையால், அதனைப் பார்த்தெழுதப்பட்டதே பெரியபுராணத்தில் காணப்படும் சண்டேசுர நாயனார் வரலாறு என்பது சிறிதும் ஐயத்திற்கு இடமின்றித் துணிந்து கொள்ளப்படும் உண்மையுமாகும். சேக்கிழார்

அறிவாரா, பெரியபுராணத்தைப் படிப்பவர்கள் அதில் பேசப்படும் நிகழ்ச்சிகள், வேறு நூல்களிலும் கூறப்பட்டுள்ளனவா என்று ஆராய்ந்து பார்ப்பார்கள் என்பதனை! என்னவோ அவசர கோலத்தில் அள்ளித்தெளித்தது போல், சமணம் புத்தம் முதலான சமயங்களை அழித்துச் சைவ சமயத்தை நிலைநாட்டியே தீரவேண்டும் என்ற ஆர்வத்தில் தாம் கொண்டதையும்-கண்டதையும்-காணாததையும்-கடன் வாங்கியதையும் சேர்த்து ஒன்றாகத் தொகுத்து, அதற்குப் பெரியபுராணம் என்று பெயரிட்டு, அதில் கூறப்படுவன எல்லாம் தமிழ்நாட்டுத் தமிழ்மக்களுடைய உண்மையான வரலாறுகள் என்று எழுதிவைத்ததோடு, சில கல்வெட்டுகளையும் உண்டாக்கி வைத்து, அவை யாராலும் அசைக்க முடியாத நிலைபேறுடைய உண்மை வரலாறுகள் என்று பிறர் நம்பும்படியும் செய்து வைத்துவிட்டார்."[30] என்று குறிப்பிடுகிறார். சிவரகசியம் என்ற நூலை அப்படியே பெயர்த்துப் பித்தளைக்குப் பொன்முலாம் பூசுவதுபோல், சில இடங்களில் சைவமுலாம் மிகுதியாகப் பூசி பெரியபுராணத்தைச் சேக்கிழார் படைத்ததாக ஈழத்தடிகள் கட்டுரையில் குறிப்பிடுகிறார். கம்பர் இராமயணத்தில் செய்த மாறுதல்களைவிடச் சேக்கிழார், பெரியபுராணத்திற்கிற்காகச் செய்த மாறுதல்கள் அதிகம் என்றும் ஈழத்தடிகள் இக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

### 5.2.3.6.கண்ணாடி வீட்டில் இருந்து கொண்டு கல் வீசுகிறார்

நாட்டிற்கு ஒரு பொதுமொழி தேவை. அதற்கு இந்தி மொழியே பொருத்தமுடையது என்று தமிழக இந்திப்பிரசார சபைத்தலைவர் வேதரத்தினம் விடுத்த அறிக்கைக்கு மறுப்புக்கட்டுரையாக இக்கட்டுரை ஈழத்தடிகளால் எழுதப்பட்டுள்ளது. இந்திப்பிரச்சாரச் சபையில் ஒருவர் இருந்து கொண்டு, இந்தியால் தமிழுக்கு ஆபத்தில்லை என்று கூறுவது, 'கண்ணாடி வீட்டுக்காரன் காரைவீட்டின்மீது கல் வீசினால், கண்ணாடிவீடு என்ன ஆகும் என்பதை இக்கட்டுரையின் வாயிலாக விளக்கியுள்ளார். அரசின் செல்வாக்கு இந்தி மொழிக்குக் கிடைத்து, அது மக்கள் செல்வாக்கைப் பெற்றுவிட்டால் தமிழ்மொழி தன் செல்வாக்கை இழக்கும் எனக் குறிப்பிடும் ஈழத்தடிகள், ஆங்கிலத்தால் தமிழ் மொழி அடைந்த நிலையை

எடுத்துக்காட்டுக்கிறார். “இந்தியால் தமிழுக்கு ஆபத்தில்லை என்று இன்று கூறப்படுவதைப் போலவேதான் அன்றும் ஆங்கிலத்தால் தமிழுக்கு ஆபத்தில்லை என்று கூறப்பட்டது. ஆங்கிலம் கற்பவர்களும், தங்களுடைய ஆங்கிலக்கல்வி, தமிழுக்கு ஆபத்தை உண்டாக்கும் அல்லது உண்டாக்க வேண்டுமென்ற எண்ணத்தோடும் அதனைக் கற்கவில்லை. ஆனால், இன்று ஆங்கிலம் கற்ற தமிழ் மக்கள் பேசும் தமிழையும் ஆங்கிலம் கல்லாத தமிழ் மக்கள் பேசும் தமிழையும் ஒப்பு நோக்கிப் பாருங்கள், ஆங்கிலம் கற்றவர்கள் பேசும் தமிழில், அவர்களையும் அறியாமல் எத்தனை ஆங்கிலச் சொற்கள் புகுந்து தமிழைக் கெடுத்து விடுகின்றன. ஆங்கிலம் அரசாங்கத்தின் செல்வாக்கைப் பெற்றிருந்த காரணத்தால், அதனைக் கல்லாதவர்கள்கூட அதற்கு மதிப்புக் கொடுக்க வேண்டுமென்ற அறியாமை மிகுந்த ஆர்வத்தால், அங்கும் இங்குமாகப் பொறுக்கி எடுத்த ஆங்கிலச் சொற்களை வைத்துக் கொண்டு தமிழ் மொழியிற் பேசும்போது அவற்றை அங்கங்கே தூவித் தமிழின் தூய்மையைக் கெடுத்து விடுகிறார்கள்.”[31] என்ற அடிகளின் கருத்திலிருந்து பிறமொழியால் தமிழ்மொழி அடைந்த கேடுகள் குறித்தறியமுடிகிறது.

தமிழ்நாட்டைத் தமிழ்தான் ஆள வேண்டும். பிற மொழிகளுக்குத் தமிழ்நாட்டில் செல்வாக்குக் கூடாது. தமிழ்நாட்டில் தமிழ்தான் அரசியல் செல்வாக்கைப் பெறவேண்டும் என்ற கருத்தை இக்கட்டுரை எடுத்தியம்புகிறது.

### 5.2.3.7. மெய்ப்பொருள் விளக்கம்

திருக்குறளில் ‘மெய்யுணர்தல்’ அதிகாரத்தில் இடம்பெற்றுள்ள குறள் ஒன்றிற்கான விளக்கமாக இக்கட்டுரை அமைந்துள்ளது.இக்கட்டுரை 13.1.1952 ஆம் நாள் இதழில் வெளிவந்தது.

**“பிறப்பென்னும் பேதைமை நீக்கிச் சிறப்பென்னுஞ்**
**செம்பொருள் காண்ப தறிவு”[32]**

என்ற குறளில் இடம்பெற்றுள்ள ‘செம்பொருள்’ என்ற சொல்லிற்கு ஈழத்தடிகள், “இக்குறள்வெண்பாவில் வரும் ‘செம்பொருள்’ என்ற சொல்லைச் சிவனுக்கு ஏற்றி

அவனைச் செம்மையான பொருளில் வைத்து வழங்குவாரும் உளர். ஈண்டுத் திருவள்ளுவர் கூறிய செம்பொருள் சிவனைக் குறித்ததன்று. மற்றுப், பிறப்பினால் உண்டாகும் அறியாமையினின்றும் நீக்கிச் சிறப்பைத் தருகின்ற செவ்விய பொருளை, அதாவது பகுத்தறிவைக் கண்டு அதன்படி நடப்பதே அறிவு எனப்படும் என்பதே இக்குறளில் போந்த உண்மையாகும்."[33] என்ற விளக்கத்தை அளிக்கிறார்.

ஒருவனுடைய பொது அறிவுக்குச் சிறப்புத் தந்து அவனை நல்வழியிற் செலுத்தும் பகுத்தறிவின்படி நடப்பதே அறிவெனப்படும் என்பது இக்குறளுக்கு அவர் தரும் விளக்கமாகும்.

வேதங்களும் புராணங்களும் மக்களின் மெய்யுணர்வை அழித்து, அவர்களுக்கு மூடநம்பிக்கையையும் அடிமை உணர்ச்சியையும் அளித்துவிட்டதாகக் குறிப்பிடும் அடிகள், "அப்பர்,சம்பந்தர்,மாணிக்கவாசகர், சுந்தரர் ஆகிய நால்வராலும் பாடப் பெற்றதாகச் சொல்லப்படும் தேவார, திருவாசகங்கள், ஆரிய வேதங்களான இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்பவற்றின் சாரமே என்று சைவ சித்தாந்தத்திற்குத் தாய்நூலான சிவஞானபோதச் சிறப்புரையிலே கூறப்பட்டிருக்கின்றது"[34] என்ற கருத்தையும் இக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

ஆரிய நூல்கள், பண்டைத் தமிழ் நூல்களின் சிறப்பை மக்கள் உணர்வதற்குத் தடையாய் இருந்தனவென்பதை, "வேத புராண இதிகாசங்களே மக்களின் மெய்யுணர்வை அழித்து, அவர்களுக்கு மூட நம்பிக்கையையும் உண்டாக்கி விட்டனவாகும். இதனால் அறிவை விளக்குஞ் சங்க நூற்கள் இருக்கும் இடந்தெரியாமற் போயின. இந்த நிலையில் வேத புராண இதிகாசங்களின் சாரமாய் எழுந்த தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திருப்புகழ் முதலான நச்சுப் பூண்டுகள் தோன்றித் தொல்காப்பியம், திருக்குறள், பரிபாடல், அகநானூறு, புறநானூறு, கலித்தொகை, பத்துப்பாட்டு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து முதலான அறிவுச் செழும் பயிர்களை அவை வளர்ந்தோங்கவிடாது மூடிப்படர்ந்து விட்டன"[35] என்று குறிப்பிட்டுள்ளார். அறிவினை அளிக்கும் தமிழ்நூல்களை

மூடிப்படர்ந்திருக்கும் நச்சுப்பூண்டுகளைக் களைந்தெறிய வேண்டிய செயலைத் தமிழறிஞர்கள் செய்திடல் வேண்டும் என்றும் தமிழர்கள் மெய்யுணர்வோடு வாழவேண்டுமாயின், புராண மூடநம்பிக்கையையும், கடவுளிடத்து வைத்துள்ள அடிமை உணர்ச்சியையும், பிறப்பில் உயர்வு, தாழ்வு காணும் இழிந்த மனப்பான்மையையும் முற்றிலும் ஒழித்திட வேண்டும் என்றும் இக்கட்டுரையில் ஈழத்தடிகள் வலியுறுத்தியுள்ளார்.

### 5.2.3.8.காஞ்சிக் கடவுளுக்குக் கல்லடி

பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள சாக்கியநாயனார் புராணத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்த இக்கட்டுரை 4.4.1948 ஆம் நாள் இதழில் வெளிவந்தது. பௌத்தத் துறவி ஒருவரின் வரலாறே பெரியபுராணத்தில் மாற்றுருவம் பெற்று இடம்பெற்றுள்ளதாக ஈழத்தடிகள் குறிப்பிடுகிறார். திருச்சத்தமங்கை என்ற ஊரில் வாழ்ந்த சாக்கியநாயனார், தான் எச்சமயத்தைச் சார்ந்தவர் என்பதை அறியாது காஞ்சிபுரத்தை அடைந்து பல்வேறு சமயக் கோட்பாடுகளையும் ஆய்ந்து முதலில் பௌத்த சமயத்தை ஏற்றுப் பின்னர் இறுதியில் தான் சைவசமயத்தைச் சார்ந்தவன் என்பதை அறிந்து அச்சமய நெறியில் வாழமுற்பட்டார். ஒவ்வொரு நாளும் சிவலிங்கத்தைக் கல்லால் எறிவதை வழக்கமாகக் கொண்டிருந்த சாக்கியநாயனாரைச் சிவன் தன்னுடன் சிவலோகத்திற்கு அழைத்துச் சென்றதாகப் பெரியபுராணத்தில் இவர் வரலாறு இடம்பெற்றுள்ளது. சாக்கியர் புத்தசமயத்தை ஏற்றமை குறித்து ஈழத்தடிகள், “சாக்கியர் என்பவர், ஒரு நேர்மையான ஆராய்ச்சியாளர் என்பதும், அவர் பல சமயங்களை ஆராய்ந்ததில் புத்தசமயமே ஓரளவுக்கு உண்மையான சமயமாக அவருடைய ஆராய்ச்சிக்கு எட்டியதென்பதும் அதனாலேயே அவர் புத்த சமயத்தைத் தழுவினார் என்பதும், புத்த மதத்தைத் தழுவிய பின்னரும் வேறு பல சமய நூல்களை ஆராய்ந்ததில் சைவ சமயமே மிகவும் அருவருப்பான சமயமாகத் தெரிந்ததேன்பதும், அதனாலேயே அவருக்கு அளவு கடந்த சினம் ஏற்பட்டுச் சிவலிங்கத்தைக் காணும் போதெல்லாம் அதனைக் கல்லால் அடித்தார் என்பதும் சிறிதும் ஐயறவுக்கு இடமின்றி

அறியப்படும் உண்மையெனக் கொள்க"[36] எனக் குறிப்பிட்டு, "திரித்துக் கூறப்பட்ட கதைகளில் சாக்கியர் நிகழ்ச்சியும் ஒன்று. புத்த சந்நியாசி ஒருவருடைய வரலாற்றைத் தலைகீழாக்கி, அதனை ஒரு சிவனடியாரின் வரலாறாக மாற்றிவிட்டனர் என்ற உண்மை, இந்தநிகழ்ச்சியை ஆராய்ச்சியுணர்வோடு படிக்கும் எவருக்கும் எளிதில் விளங்கக் கூடிய ஒன்றாகும். இல்லையேல், பாலால் முழுக்காட்டிப் பச்சிலையாலும் மலராலும் அருச்சித்து வழிபடவேண்டிய சிவலிங்கததை ஒருவன் கல்லால் அடித்தான் எனக் குறிப்பிடுகிறார். "இளங்குளவிகள் எது செய்யினும், அது, பெற்றோர்களுக்கு இன்பூட்டுவது போல், இச்செய்கை சிவனுக்கும் இன்பூட்டிற்று" என்றும் மனமறிந்த பொய் கூறுவார்கள்? சாக்கியர் சிவலிங்கத்தைக் கல்லால் அடித்தற்குரிய காரணத்தை விளக்க வந்த சேக்கிழார் இவ்விதம் கூறியுள்ளார்"[37] என்று கட்டுரையை நிறைவு செய்யும் ஈழத்தடிகள் சாக்கியநாயனார் புத்தசமயத்தைச் சார்ந்தவரே என்பதைக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

### 5.2.3.9.கதிர்காமம் - ஒரு விளக்கம்

இலங்கைத் தென்கோடியில் உள்ள கதிர்காமம் என்ற இடத்திலிருக்கும் சுப்பிரமணிய சுவாமி கோயிலைக் குறித்த கட்டுரை 7.3.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது.

கதிர்காமக் கோயிலைப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மாற்றும் வழக்கம், காட்டில் உள்ள யானை ஒன்று திருவிழாக் காலங்களில் தானாகவே வந்து கதிர்காமக் கடவுளுக்கு வாகனமாக இருந்து பணியாற்றிவிட்டு மறுபடியும் காட்டுக்குள்ளே போய்விடுவதாகக் கூறப்படும் கதை, கதிர்காமத்தில் திருநீறு தானாக விளைகிறதென்று கூறப்படும் செய்தி ஆகியவற்றை அறிவியல் பூர்வமாக இக்கட்டுரையில் ஈழத்தடிகள் விளக்கியுள்ளார்.

"வள்ளியைச் சுப்ரமணியர் மணம் செய்துகொண்ட இடம் கதிர்காமம்தான் என்று சொல்லப்படுவதும் பலமுறை கேட்டுப் பழக்கப்பட்ட ஒரு பழங்கதை. அதில் உண்மை எதுவும் இல்லை. சுப்பிரமணியர் ஆலயங்கள் எங்கெங்கு இருக்கின்றனவோ,

அங்கெல்லாம் இந்தக் கதைக்கு ஆதாரமாகச் சில அடையாளங்களை உண்டாக்கி வைத்துக் காட்டுவது அந்தந்தக் கோயிற் பூசாரிகளின் வழக்கமாகும். கதிர்காமத்தில் இந்தக்கதை நன்கு வலியுறுத்தப்படுவதற்குக் காரணம், அந்தக் கோயில் ஒரு காட்டில் இருப்பதாலும், அதற்குப் பூசை செய்பவர்கள் வேடுவர்குல வழித் தோன்றல்கள் என்று சொல்லிக் கொள்வதினாலுமேயாகும்."[38] என்று கதிர்காமத்தின் இருப்பிட அமைப்புக் குறித்து ஈழத்தடிகள் குறிப்பிட்டுள்ளார். மேலும், "வள்ளியை அச்சுறுத்த வந்ததாகச் சொல்லப்படும் யானையின் அடிச்சுவடுகள் அங்குள்ள கற்பாறைகளில் பதிந்திருப்பதாகக் கூறி அத்தகைய அடையாளங்கள் காட்டப்படுவதன் உண்மை என்னவென்றால், யானையின் அடிச்சுவடு போன்ற சில குறிகள் அங்குள்ள கற்பாறைகளில் காணப்படுவதுதான். அவை, காட்டு யானைகள் அந்தப் பாறைகளின்மீது நடமாடுவதால் ஏற்படும் குறிகளாகும். எப்படியென்றால், மழை பெய்வதால் ஏற்படும் ஈரத்தால் கற்பாறைகளில் பாசி படிகின்றது. பாசிபடிந்த கற்பாறைகளின்மீது யானைகள் நடமாடுகின்றன. அந்த நடமாட்டத்தால் யானைகளின் அடிச்சுவடுகள் பாசிபடிந்த கற்பாறைகளில் நன்கு பதிந்து, அடிச்சுவடுகளில் அகப்படும் பாசி, தூரிகை(பிரஷ்) போட்டுத் துப்புரவு செய்யப்படுவது போல் சுத்தமாக நீங்கி விடுகின்றது. இதனால் யானைகளின் அடிச்சுவடுகள் பட்ட இடங்கள் வெண்மையாகவும், மற்ற இடங்கள் பாசி படிந்திருப்பதால் கருமையாகவும் காணப்படுகின்றன. இப்படி ஏற்பட்ட அடிச்சுவட்டை ஆதாரமாகக் காட்டித்தான், சுப்பிரமணியர் வள்ளியைத் திருமணம் செய்து கொண்டது கதிர்காமத்தில்தான் என்பதை மெய்ப்பிக்க அங்குள்ள பூசாரிகள் அரும்பாடுபடுகின்றனர் என்பதை அன்பர்கள் உணரவேண்டும்."[39] என்று யானையின் அடிச்சுவடு கற்பாறைகளில் பதிந்திருப்பதற்கான காரணத்தை அறிவியல்முறையில் ஈழத்தடிகள் விளக்கியுள்ளார்.

கதிர்காமக் கோயில் காட்டில் இருப்பதால் கோயிலுக்கு மிக அருகாமையில் காட்டுயானைகளும், புலி முதலிய பிற விலங்குகளும் அங்கே நடமாடுகின்றன எனக்குறிப்பிடும் ஈழத்தடிகள், "இங்கு பேசப்படும் கோயில் யானை, காட்டிலிருந்து

வருவதுமில்லை; திருவிழாமுடிந்து பழையபடி அது காட்டுக்குப் போவதும் இல்லை. அந்த யானை, கதிர்காமக் கோயிலுக்குச் சொந்தமானது; கோயிலாட்களாலேயே வளர்க்கப்படுவது. திருவிழாக் காலமல்லாத மற்றக் காலங்களில், அந்த யானை, கதிர்காமக் கோயிலின் சொந்தக்காரரான பண்டார நாயக்கர் என்பவர் வீட்டுக்கு அனுப்பப்படுவதுண்டு. இவ்வளவே அந்த கோயில் யானையைப் பற்றிய விளக்கம்."[40] என்று குறிப்பிடுவதிலிருந்து கதிர்காமக் கோயில் யானை குறித்த செய்தியை அறியமுடிகிறது. கதிர்காமத்தில் திருநீறு தானாக விளைவது குறித்து, "கதிர்காமத்துக்கு அருகாமையில் உள்ள ஒரு இடத்தில் திருநீறுபோன்ற ஒருவகை வெள்ளை மண் கிடைக்கிறது. இத்தகைய வெண்ணிற மண், கதிர்காமத்தில் மட்டுமல்ல, வேறுபல இடங்களிலும் கிடைக்கிறது. கதிர்காமம் என்ற கோயிலுக்கு அருகாமையில் அந்த வெள்ளை மண் கிடைப்பதால், அதனை மண் என்று கூறாமல் மகிமைவாய்ந்த திருநீறு என்று கூறப்படுகிறது."[41] என்று கதிர்காமத்துத் திருநீறு பற்றிய விளக்கத்தையும் கட்டுரையில் அளித்துள்ளார்.

கதிர்காமக் கோயிலில் உள்ள பெட்டி, திருவிழாக் காலங்களில் யானையின் மீது ஏற்றப்படும் போது, அப்பெட்டியானது யானை சுமக்கக்கூடிய அளவு பாரம் மிகுந்ததாக இருக்கும் என்றும் அப்பெட்டி, எடை கூடுவதும் குறைவதுமான இயல்பைப் பெற்றுள்ளதாகக் கூறப்படும் கதைக்கு மதுரையில் உள்ள சங்கப்பலகை குறித்துக் கூறப்படும் கதையை எடுத்துக்காட்டி உண்மையை எடுத்துரைக்கிறார். அதாவது "மதுரையில் சங்கம் இருந்த காலத்தில் அங்கே ஒரு பலகை இருந்ததாம். அதில் நாற்பத்தொன்பது புலவர்கள் இருந்து சங்கத் தமிழை வளர்த்தனராம். யாராவது ஒரு புலவர் அந்தச் சங்கத்தில் சேர விரும்பினால், அந்தப் பலகையில் வீற்றிருக்கும் புலவர்கள் அந்தப் புலவரை நோக்கி, 'நீர் இச்சங்கத்திலிருந்து தமிழை வளர்க்கக் கூடிய தகுதியுடையவரா என்பதை அறிய, இதோ நாங்கள் வீற்றிருக்கும் பலகைதான் தேர்வு (பரீட்சைக் கருவி) எனவே இந்தப் பலகை நீர் இருப்பதற்கு இடம்தருமாயின், நாங்கள் உம்மை ஏற்றுக் கொள்வதில் தடையில்லை' என்று கூறுவார்களாம். புலவர்

அந்தப் பலகைக்குக் கிட்டப் போவாராம். புலவர் அதில் இருக்கத் தகுதியுடையவர் என்பதைப் பலகை அறிந்தால், அது வளர்ந்து அந்தப் புலவர் இருப்பதற்கு மட்டும் இடம்கொடுக்குமாம். தகுதியற்றவர் என்றால் அது வளராதாம். திருவள்ளுவர், தமது குறளை அரங்கேற்றுவதற்காக அங்கு சென்ற போது, அந்தப் பலகை, திருக்குறள் எழுதப்பெற்ற ஏடு மட்டும் இருக்கக் கூடிய அளவுக்குச் சுருங்கிவிட்டதாம். அப்போது அந்தப் பலகையில் வீற்றிருந்த நாற்பத்தொன்பது புலவர்களும் பலகை சுருங்கச் சுருங்க ஒவ்வொருவராக மதுரைப் பொற்றாமரைக் குளத்தில் விழுந்து கரை ஏறினராம். இந்த நிகழ்ச்சி சங்கப் புலவர்களின் திறமைக்கும், திருக்குறளின் ஒப்புயர்வற்ற தன்மைக்கும் ஒரு எடுத்துக்காட்டாகக் கூறப்பட்டதென்றால் அதனை யாரும் வரவேற்காமல் இருக்கமுடியாது. ஆனால், அந்தப் பலகை, உண்மையாகவே வளர்ந்து கொடுப்பதும், சுருங்குவதுமாகத் தான் இருந்தது என்றால், அதனை எவருமே நம்பமாட்டார்கள். ஒரு பலகைக்கு இயற்கையாகவே வளர்ந்து பெரிதாகும் தன்மையோ அன்றிச் சுருங்கிக் குறையும் தன்மையோ இருக்காது - இருக்கவும் முடியாது. உலகம் போற்றும் -ஒப்புயர்வற்ற – உயிரனைய திருக்குறளுக்கு உயர்வு காட்ட முயன்ற பிற்காலப் புலவர் பெருமக்கள், அந்தப் பலகைக்கும் உயர்வும் உயிரும் கொடுத்துவிட்டனர் போலும், என்னே அவர்தம் அறிவுத் திறன்!”[42] இவ்வாறு இக்கட்டுரையில் கதிர்காமக் கோயில் குறித்து வாய்மொழியாக வழங்கப்படும் கதைகளை எடுத்துக்கூறி அக்கதைகள் அனைத்தையும் அறிவியல் முறையில் ஈழத்தடிகள் விளக்கிக் குறிப்பிட்டுள்ளார்.

### 5.2.3.10. நாம் நாஸ்திகரல்ல பகுத்தறிவாளர்கள்

காரைக்குடியில் நடைபெற்ற கம்பன் விழாவில் பொதுவுடைமை இயக்கத் தலைவர் ப.ஜீவானந்தம் ஆற்றிய உரைக்கு மறுப்பும் எதிர்ப்பும் கூறும் வகையில், வடார்க்காடு மாவட்டச் சமூகச் சீர்திருத்த மாநாட்டில் ஈழத்தடிகள் ஆற்றிய உரை, கட்டுரை வடிவில் 27.6.1954 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது.

இராமனையும் கம்பனையும் புகழ்ந்து ப.ஜீவானந்தம் குறிப்பிட்ட பல்வேறு கருத்துகளை மறுத்துரைக்கும் வகையில் இக்கட்டுரை அமைந்துள்ளது. அதாவது,

“கம்பராமாயணத்தில் பேசப்படும் இராமன், மனித வர்க்கத்தின் விடுதலைக்காக, மனித வர்க்கத்தின் இன்பத்திற்காக தன்னையே சர்வசங்க பரித்தியாகம் செய்யும் குணவானாக அமைந்திருந்தான்” என்று பேசியிருக்கிறார்”[43] என ஜீவானந்தம் அவர்களின் கூற்றை ஈழத்தடிகள் எடுத்துரைத்து, “இராமனால் விடுதலையடைந்த மனித வர்க்கம் எது என்பதை இவர் விளக்கவில்லை. எந்தவிதமான இன்பத்தை இராமனால் விடுதலையடைந்த மனித வர்க்கம் நுகர்ந்தது என்பதற்கும் விளக்கம் தரவில்லை”[44] என அவர் கூற்றை மறுத்துரைக்கிறார். கம்பராமாயணத்தில் ஜீவானந்தம் தன் கூற்றுக்கு ஏற்றவாறு எடுத்தாண்ட பாடலின் முழுப்பாடலையும் ஈழத்தடிகள் கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

**“செட்டிமக்கள் வாசல்வழி செல்லோமே செக்காரப்**
**பொட்டிமக்கள் வாசல்வழி போகோமே – முட்டிபுகும்**
**பார்ப்பா ரகத்தைஎட்டிப் பாரோமே எந்நாளும்**
**காப்பாரே வேளாளர் காண்”**

இப்பாடல் முழுவதையும் தன்னுரையில் ஏன் ஜீவா அவர்கள் குறிப்பிடவில்லை? என வினவி, “புராண, இதிகாசங்களில் சீர்திருத்தம் காண முயன்றால், நண்பர் ஜீவானந்தம் அடைந்த நிலையைத்தான் அனைவரும் அடைய நேரிடும். புராண இதிகாசப் பேச்சுக்கள், எப்பொழுதுமே சந்தர்ப்பத்தையும் சூழ்நிலையையும் அனுசரித்துப் பேசி தப்பித்துக் கொள்ளும் ஒரு நிலையைத்தான் உண்டாக்கும். ஆகவேதான், நாம் ஒரு புதுப்பாதையைக் கண்டு பிடித்துச் சமூக சீர்திருத்தத்தை கடந்த முப்பது ஆண்டுகளுக்கு மேலாகவே செய்து வருகிறோம். அந்தப் பாதைக்குத்தான் பகுத்தறிவு என்று பெயர்”[45] என்ற விளக்கத்தையும் ஈழத்தடிகள் அளித்துள்ளார்.

### 5.2.4.அறிஞர் அண்ணா

திராவிடநாடு இதழில், அரசியல், கலை, இலக்கியம், அறிவியல், வரலாறு எனப் பல்வேறு பொருண்மைகளில் அண்ணா கட்டுரைகளைப் படைத்துள்ளார்.

அண்ணாதுரை, பரதன், சம்மட்டி, நக்கீரன், குடியரசு, சி.என்.ஏ., ஒற்றன், நக்கீரன் ஆகிய பெயர்களில் கட்டுரைகள் வெளியாயின. சற்றொப்ப நூற்றுத் தொண்ணூறு கட்டுரைகள் திராவிடநாடு இதழில் வெளிவந்துள்ளன. பல கட்டுரைகள் கட்டுரையாசிரியர் பெயரின்றி வெளிவந்துள்ளன. இக்கட்டுரைகளில் பெரும்பாலானவை அண்ணாவால் எழுதப்பட்டதாகும். அண்ணாவின் எழுத்தாற்றல் குறித்தும் கட்டுரைகளில் இடம்பெற்ற அவர்தம் நடைச்சிறப்புக் குறித்தும் அ.இறையவன், "ஆங்கில இலக்கியங்களை ஆழமாகவும் அகலமாகவும் பயின்றதன் பயனாக அண்ணா அவர்களிடம் எந்த இந்திய – தமிழ் எழுத்தாளர்க்கும் கைவரப்பெறாதவொரு புதுமையான நடை – பாணி குடிகொண்டது! அதைக் கையாண்டு ஆயிரக்கணக்கில் தன்மான விளக்கக் கட்டுரைகள் எழுதி, ஆரியத்தின் அடிவயிற்றைக் கலக்கினார்; மூடநம்பிக்கைகளின் முதுகெலும்பை நொறுக்கினார்; மானமற்ற தமிழர்க்குப் புதுக்குருதி புதுத்தினார்; ஈரோட்டுப் படைக்கு எண்ணற்ற இளைஞர்களைத் திரட்டினார்"[46] எனக் குறிப்பிடுகிறார்.

### 5.2.4.1. கொந்தளிப்பில்

8.3.1942 ஆம் நாள் வெளிவந்த திராவிடநாடு முதல் இதழில் அறிஞர் அண்ணாவின் 'கொந்தளிப்பில்' என்ற கட்டுரை வெளிவந்தது. இரண்டாம் உலகப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்த சூழலில் திராவிடநாடு இதழைத் தொடங்கியமைக்கான காரணத்தை இக்கட்டுரையில் அண்ணா குறிப்பிட்டுள்ளார். தமிழருக்குப் பணியாற்றுவதே திராவிடநாடு இதழின் நோக்கம் எனக்குறிப்பிடும் அண்ணா, "உலகெங்கும் போர்! நகரமெங்கணும் இருட்டு! பாதைகளிலெல்லாம் பதைபதைத்த உள்ளத்தோடு செல்லும் மக்கள். கடல் கடந்து சென்றிருந்த தமிழரின் துயரம் ஒருபுறம், இங்கேயே எதிரியின் குண்டுகள் எந்தநேரத்திலும் பாய்ந்து வரக்கூடுமே என்ற திகில் மற்றோர் புறம், உயிர், உடைமை, உரிமை யாவற்றினும் ஆபத்து நேரிடுமோ என்ற அச்சம் பிறதோர் புறமாக இருந்து கொண்டு நமது தோழர்களின் நெஞ்சைக் குழப்பிக்கொண்டுள்ள இந்த நேரத்தில் 'திராவிடநாடு' வெளிவருகிறது."[47] என்கிறார். மேலும், திராவிடர்களின்

விடுதலைக்காகப் பாடுபடுவதே தனது நோக்கம் என்றும் பெரியாரிடம் பெற்ற பயிற்சியைத் துணையாகக் கொண்டு, கடமையைச் செய்ய வேண்டிய போது கலங்கக் கூடாது என்ற உண்மையையும் உறுதுணையாகக் கொண்டு தான் இப்பணியை மேற்கொண்டாதாக இக்கட்டுரையில் குறிப்பிடுகிறார். திராவிடர் மேன்மைக்காகத் தொடங்கப்பட்ட திராவிடநாடு இதழ், எவ்வித அச்சமும், தயை, தாட்சணியமின்றிப் புரட்டுகளை வெளிப்படுத்திப் புல்லர்களைப் பொசுக்கிப் புதுமைக்காகப் போராடும் என்ற கருத்தையும் குறிப்பிட்டுள்ளார். முதல் இதழில் எழுதிய இக்கட்டுரையின் வாயிலாகத் திராவிடநாடு இதழின் நோக்கம் குறித்துத் தெளிவாக அண்ணா குறிப்பிட்டுள்ளார்.

### 5.2.4.2. வர்ணாஸ்ரமம் ஒழிக

'பரதன்' என்ற புனைபெயரில் அண்ணா எழுதிய 'வர்ணாஸ்ரம் ஒழிக' என்ற கட்டுரை 12.12.1943 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. வர்ணாஸ்ரமத்திற்கு எதிராகக் குரல் கொடுத்த சர்.சண்முகத்தின் கருத்தைக் கட்டுரையில் விளக்கும் அண்ணா, வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுவதாய் அமைந்த,

**"சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல்"**[48]

எனத் தொடங்கும் அகநானூற்றுப் பாடற்கருத்தைக் கட்டுரையில் எடுத்தாண்டுள்ளார். சமகால அரசியல் நிகழ்வுடன் இப்பாடற் கருத்தைப் பொருத்திக் காட்டுகிறார். அதாவது, "தலைவியைப் பிரிந்து, தலைவன் சென்றான். தத்தளித்தாள் தளிர்மேனியாள். தத்தையிடம் பேசித்தவித்துக் கிடந்தாள். சென்றவிடம் சிறப்புப் பெற்று, தேரிலே மீள்கிறான் தலைவன். மானினத்தினிடம் காதல் பாடம் காண்கிறான், மங்கைநல்லாளை எண்ணி ஏங்குகிறான், அவள் மனையிலேயும் அன்னங்கள் காதற்களியாட்டத்திலே ஈடுபட்டு உலவுமே என்பதை எண்ணினான், நாணமுடைய நங்கை நெஞ்சிலேயுளதை வீட்டார் அறியக் கூடாதே என்றெண்ணி அஞ்சிப் பிரிந்து போன தலைவன், வருவார்! இன்று வருவார்! என்ற இன்சொலை எவரேனும் பேசிடக் கேட்டால் புண்ணாறும் என்று கருதிப் பேசிட ஓர் பைங்கிளியை எடுத்துத்தன்

அங்கையில் ஏந்தி, பலபேசிச் சலசலப்புண்டாக்கி மனையுளோருக்குத் தன்னைக் கிளிகாட்டிக் கொடுத்துவிடுமோ என்று அஞ்சி, கிளியே அவர் இன்று வருவார் என்ற சொல்மட்டுமே உரைத்திடு என்று கேட்பாள், எனத் தலைவன் எண்ணி, வேகமாகத் தேரைச் செலுத்து! என்று எண்ணி தேர்ப்பாகனுக்குக் கூறுகிறான். அவனை ஊக்குவிக்கக் கருதி, நற்றிறம் படைத்த பாகனே! என்றும் அவனைப் புகழ்கிறான். காதல் பாதையைக் கவி இளநாகனார் கன்னித் தமிழிலே கவிதையாக்கிக் கூறியுள்ளார், அகநானூறு எனும் அருந்தமிழ் நூலிலே"[49] எனக் குறிப்பிடும் அண்ணா, இப்பாடற்கருத்தை அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் சர்.சண்முகம் அவர்கள் ஆற்றிய உரையோடு பொருத்திக் காட்டுகிறார். "அவருடைய சொற்பொழிவுக்கும், உனக்கு அகநானூற்றுச் செய்யுள் நினைவிற்கு வந்ததற்கும் என்ன சம்பந்தம் என்பது தெரியக்காணோமே என்றே அன்பர்கள் கேட்பீர். தோழர்களே, சர்.சண்முகம் தமது சொற்பொழிவின் இறுதியிலே, வர்ணாஸ்ரமம் ஒழிய வேண்டும்! ஒரு இன ஆதிக்கம் அழிய வேண்டும்! ஏபோக உரிமை மடியவேண்டும்! பேராசைப் பித்தம் போகவேண்டும்! என்று முழக்கமிட்டாரே, அந்தப் பகுதி. என் செவிக்கு, தேரை விரைவாகச் செலுத்துவாய் பாகனே! என்று தலைவன் கூறும் செய்யுள் போன்றிருந்தது. சர் சண்முகம். வர்ணாஸ்ரம ஒழிப்புக்காகவே வாழும் கட்சியை விட்டுப் பிரிந்து வேறுவினையில் ஈடுபட்டு, நெடுநாட்கள் பிரிந்திருந்தார். அவர்பிரிய நேரிட்டதால் திராவிடக் கட்சி தவித்துக் கிடக்கிறது காவல் மிகுந்த மனையிலே கன்னி நிற்பது போல, வினைமுற்றிய தலைவன் விரைந்து சென்று தலைவியின் துயர்தீர்த்தல் போல சர். சண்முகம், தன் நெஞ்சமெனும் பாகனுக்குத் தேரை விரைந்து செலுத்து எனக் கூறுமாறு வேண்டுகிறார்."[50] சர். சண்முகம் திராவிடக்கட்சி என்ற தலைவியை விடுத்து நெடுநாட்கள் பிரிந்திருந்தமையால், அக்கட்சி தலைவியைப் போன்று நலிவடைந்திருந்ததாகவும், தேரை விரைந்து செலுத்து எனக் கூறிய அகநானூற்றுத் தலைவனைப் போன்று ஆர்.கே. சண்முகம் திராவிடக் கட்சியை நோக்கி விரைந்து வந்துகொண்டிருப்பதால் திராவிடர் துன்பம் ஒழியும் என்றும் விளக்கம் அளித்துள்ளார்.

இக்கட்டுரையைத் தொடர்ந்து மூன்று வாரம் எழுதிய அண்ணா, 26.12.43 இல் வெளிவந்த இதழில் கலித்தொகைப் பாடலை மேற்கோள் காட்டிப் பாரப்பனர் இயல்பினை விளக்குகிறார்.

**"பொன்மலை சுடர்சேரப்புலம்பிய விடனோக்கித்**
**தன்மலைந் துலகேத்தத் தகைமதி யேர்தரச்**
**செக்கர்கொள் பொழுதினா னொலிநீவி யினநாரை**
**முக்கோல்கொள் அந்தணர் முதுமொழி நினைவார்போல்**
**எக்கர்மே லிறைகொள்ளும் இலங்குநீர்த் தண்சேர்ப்ப"[51]**

"நாரையைக் கண்டதும். பார்ப்பனரின் நினைவு கவிக்கு! ஆற்றோரத்திலே, அந்திவானத்திலே, நிற்கும் நாரை, மந்திர உச்சாடனம் செய்வது போன்ற பாவனையுடன் நீர்நிலையங்களருகே நித்த நித்தம் அமர்ந்துள்ள, பார்ப்பனரின் உருவம் போன்றிருந்ததாம் கவிக்கு! எந்தக் காலத்துக் கவி? கலித்தொகைக் காலம்!. அந்தக் காலத்திலேயே, ஆரிய இனம், காரியம் பலிக்கக் கபடவேடமிட்டுக் கிடந்தது என்பதற்குச் சான்றுகள் அனேகமுண்டு."[52] பார்ப்பனர்கள் எக்காலத்திலும் தம் இயல்பினின்றும் மாறார் என்ற கருத்தை விளக்குவதற்காகக் கலித்தொகைப் பாடலைத் தம் கருத்திற்கு மேற்கோளாகச் சுட்டுகிறார் அண்ணா. சங்கப்பாடல் கருத்துகளை திராவிடநாடு இதழ் மக்களிடம் பரப்பும் தமிழ்ப்பணியைச் செய்தமைக்கு இக்கட்டுரை சான்றாக அமைகிறது.

### 5.2.4.3.வ.ரா.அக்ரகாரத்து அதிசய மனிதர்

வ.ராமசாமி அய்யங்காரின் 'சுந்தரி' என்ற புதினத்தில் இடம்பெற்றுள்ள சமூகசீர்திருத்தக் கருத்துகளை எடுத்துரைத்து அவரைப் போற்றும் வகையில் அமைந்த 'வ.ரா.அக்ரகாரத்து அதிசய மனிதர்' என்ற கட்டுரை 18.5.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. வ.ராமசாமி 1917 ஆம் ஆண்டில் வெளியிட்ட 'சுந்தரி' என்ற புதினத்தில், விதவை மறுமணத்திற்கான ஆதரவுக் குரல் இடம்பெற்றிருப்பதை அறிஞர் அண்ணா கட்டுரையில் எடுத்துக்காட்டியுள்ளார். பழைய கோட்பாடுகள் என்ற குரங்குப்பிடிக்குள் சிக்கியுள்ள தமிழ்ச்சமுதாயம் விதவைகளையும்

பெண்களையும் மிகுந்த கொடுமைகளுக்கு உள்ளாக்கி விட்டதாகப் புதினத்தில் வ.ராமசாமி குறிப்பிட்டுள்ள கருத்தை அண்ணா சுட்டிக்காட்டியுள்ளார். ‘மனிதர்களுக்குள் எவ்வித வேறுபாடுகளுக்கும் இடமில்லை. தொழில் அடிப்படையில் கவிஞன், வைத்தியன், வியாபாரி என்ற வேறுபாடுகளே உண்டு’ எனும் கருத்தை அக்ரகாரத்திலிருந்து முன்வைத்த வ.ராமசாமி அய்யங்காரை ‘அக்ரகாரத்து அதிசயமனிதர்’, ‘அக்ரகாரத்து அதிசயப்பிறவி’ என அறிஞர் அண்ணா போற்றுகிறார். இதனை, “சுந்தரி 1917ல் பிறந்தவள். சுயமரியாதை இயக்கம், தமிழகத்தில் தவழ்வதற்குத் தொடங்கும் நாட்கள் என்ற கூறலாம். அந்த நாளிலே வெளிவந்த ‘சுந்தரி’யில் காணப்படும் கருத்துகள் எப்படிப்பட்டவை என்பதைக் காணும்போதுதான், வ.ரா. அக்ரகாரத்து அதிசயப்பிறவி என்று நாம் கூறமுடிகிறது”[53] என்று அண்ணா குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. சுயமரியாதை இயக்கம், பார்ப்பனர்களுக்கு எதிரானதன்று. சமூகச் சீர்திருத்தத்திற்கும் மூடநம்பிக்கை ஒழிப்பிற்கும் ஆதரவாக இருக்கும் பார்ப்பனர்களை இவ்வியக்கம் போற்றுமென அண்ணா விளக்குவதை, “அந்த இயக்கம், சமூகப்புரட்சி இயக்கம், புத்துலக அமைப்புக்கான கருவி என்பதைச் சரியாக அறிந்துகொள்ளாமல், சுயமரியாதை இயக்கமென்றால், பார்ப்பனனின் உச்சிக்குடுமியையும், பிச்சுக்கொள்கையையும், நச்சுநினைப்பையும், தவளை நடையையும் கேலிசெய்வதையே பெருநோக்கமாக, முழுநோக்கமாகக் கொண்டது, வேறெதுவுமில்லை என்று கருதும் தோழர்கள் இருக்கக்கண்டு, மனவேதனைப்பட்டதுண்டு. வ.ரா. இந்த இயக்கத்தவரல்ல; ஆனால் இதிலே நாம் எதைஎதை முக்கியமாக வலியுறுத்துகிறோமோ, எந்த உயிர்ப்பிரச்சனைமீது இந்த இயக்கம் கட்டப்பட்டு இருக்கிறதோ, அதனை உணர்ந்து, கடந்த 30 ஆண்டுகளாக, எழுதியும் பேசியும், நடந்தும் வருபவர் என்பதைத் தெரிந்துகொள்ளும்போது, மகிழ்ச்சி மலரத்தான் செய்யும்.”[54] என்று குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. முற்போக்குச் சிந்தனைகள் நிரம்பப் பெற்ற பார்ப்பனர்களையும் திராவிட இயக்கத்தார் போற்றியுள்ளனர் என்பதை இக்கட்டுரை வாயிலாக அறியமுடிகிறது.

### 5.2.4.4.இராவண காவியத்துக்குத் தடை

இராவணனைப் போற்றிப் புலவர் குழந்தை படைத்த இராவணகாவியம் அறிஞர் அண்ணா அளித்த முன்னுரையுடன் 1948 ஆம் ஆண்டு வெளிவந்தது. நூலின் சிறப்பினைக் குறித்து அறிஞர் அண்ணா, "இந்நூல் பழமைக்குப் பயணச்சீட்டு; புதுமைக்கு நுழைவுச் சீட்டு! தன்மான இயக்கத்தார் தமிழ்ப் பகைவர்கள், காவியம் அறியாதார்,கலையுணர்வு இல்லாதார் என்ற அவமொழியினை அடித்துத் துரத்தும் ஆற்றலாயுதம்! தமிழ் மறுமலர்ச்சியின் தலைசிறந்த நறுமலர். நெடுநாள் ஆராய்ச்சியும் நுண்ணிய புலமையும் இனப்பற்றும் ஒருங்கமைந்த ஓவியம்! தமிழரின் புதுவாழ்வுக்கான போர்முரசு! 'காவிய உருவில் ஆரியத்தைப் புகுத்தி விட்டோம்; எனவே இது அழிந்துபடாது' என்று இறுமாந்து இருப்போருக்கு ஓர் அறைகூவல்!"[55] என்று குறிப்பிட்டுள்ளார். இந்நூலை அன்றைய தமிழக அரசு தடைசெய்தது. இதனைக் கடிந்துரைத்து அண்ணா எழுதிய கட்டுரை 20.6.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. மக்களின் எழுத்துரிமையைப் பறித்த அரசாங்கத்தினர் செயலைக் கடிந்துரைத்துள்ள அண்ணா, இராவணகாவியம் முறையற்ற வகையில் தடைசெய்யப்பட்டுள்ளதாகவும் குறிப்பிடுகிறார். இராவணகாவியம், "தமிழ் இலக்கியத்தின் அணிகலமாய் இருக்கத் தகுந்த அருமையான காவிய நூல்" என்ற நாரண.துரைக்கண்ணனின் கருத்தினை எடுத்துரைத்து, "இராவண காவியம், கவிநயம் அற்றதென்றோ, கவிநயத்துக்காக மக்கள் அதனைப் படிக்கக்கூடாதென்றோ எவரும் கூறமாட்டார்கள். ஆகையால், கம்பராமாயணம் இந்நாட்டில் இருக்கத் தகுதியுடைய நுல் என்றால், அதைப் பார்க்கிலும் பலவகையிலும் சிறந்த இலக்கிய நூலான இராவணகாவியமும் இந்நாட்டில் இருக்கலாம். கம்பர், இராமனைக் கடவுளாக்கியது போல, தோழர் குழந்தை இராவணனைக் கடவுளாக்கவில்லை. வால்மீகியும் கம்பரும் பிறரும் இராவணனைக் கெட்டவன் என்று கூறியதைத் தக்க ஆதாரங்களோடு மறுத்து, இராமனே கெட்டவன், இராவணன் நல்லவன் என்பதையே இந்நூல் ஆசிரியர் விளக்கிக் காட்டியுள்ளார். இதனைக் குற்றமென்றும், ஆபத்தை விளைவிக்கக் கூடியதுமென்றும்

சர்க்கார் கருதுமானால் குற்றவாளி யார்? என்பதைச் சர்க்காரால் கண்டுபிடிக்க முடியவில்லை என்றுதான் முடிவு செய்யவேண்டும்”[56] என்ற கருத்தையும் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். இராமனை நல்லவன் என்று கூறும் உரிமை சிலருக்கு இருக்கும்போது, இராவணனை நல்லன் என்று கூறும் உரிமை சிலருக்கு ஏன் இருக்கக்கூடாது? என வினவுகிறார் அண்ணா. எதிர்சிந்தனையை முன்வைக்கும் படைப்பாளர்களின் படைப்புகளைத் தடைசெய்வதென்பது இலக்கியவளர்ச்சிக்கு விதிக்கப்படும் தடையாகும்’ என்ற கருத்தை இக்கட்டுரையில் அண்ணா குறிப்பிட்டு, ஆட்சியாளர்களின் செயலைக் கடிந்துரைத்துள்ளார்.

### 5.2.4.5. புலவர் பெருமக்கட்கோர் வேண்டுகோள்

கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்துத் திராவிடர் கழகம் நடத்துகின்ற மறியல் போராட்டத்திற்கு ஆதரவு வேண்டித் தமிழாசிரியர்களுக்கு அண்ணா விடுத்த அழைப்பு, ‘புலவர் பெருமக்கட்கோர் வேண்டுகோள்’ என்ற தலைப்பில் கட்டுரையாக 5.9.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது. இந்தி மொழியானது தமிழ்நாட்டையும், மக்களையும் தமிழ் மொழியையும் அழித்துவிடும் என்பதைக் கட்டுரையில் குறிப்பிட்டு, “தமிழுக்கு ஆபத்து வந்துவிட்டதென்பதை ஐயந்திரிபற உணர்ந்த ஆசிரிய அன்பர்களே! இனியும் நீங்கள் வாளா இருத்தல் முறையாகாது. தமிழ் உங்களால் வளர்கிறது – வளம் பெறுகிறது – பாதுகாக்கப்படுகிறது என்ற உண்மையினை நிலை நாட்டும் இந்த அரிய வாய்ப்பைக் கைவிடாதீர்கள். ஆம்! நீங்கள் எல்லோரும் வந்துதான் தீரவேண்டும். திராவிடர் கழகத்தார் இப்போது நடத்தும் இந்தி எதிர்ப்பு மறியல், அரசியலைக் கைப்பற்றுவதற்காகச் செய்யப்படும் சூழ்ச்சி என்ற காங்கிரசன்பர்களின் சூதுரையைச் சுக்குநூறாக்கி, அது உண்மையான கலாச்சார மொழிப் போராட்டமே என்பதை ஆளவந்தார்களுக்கு உணர்த்தி, அவர்களின் தவறான போக்கைத் திருத்தும் பணியிலும் தமிழ்மொழியைப் பாதுகாக்கும் தொண்டிலும் புலவர்களாகிய நீங்களும் எங்களுடன் பங்கு கொள்ள வேண்டுமென்று

கேட்டுக்கொள்கிறேன்"[57] எனத் தமிழ்ப்புலவர்களுக்கு வேண்டுகோள் விடுத்து இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பங்குபெற வேண்டுகிறார்.

### 5.2.4.6.அவர் காணவிரும்பிய நாடு

அண்ணல் காந்தியடிகளின் அகால மரணத்தையடுத்து அவரைப் போற்றிச் சிறப்பிக்கும் வகையில் அமைந்த அண்ணாவின் இரங்கல் கட்டுரை, 'அவர் காண விரும்பிய நாடு' என்ற தலைப்பில் 15.2.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. காந்தியடிகள் பல்வேறு சூழல்களில் ஆற்றிய உரைகளை இக்கட்டுரையில் அறிஞர் அண்ணா சுட்டிக்காட்டி காந்தியடிகள் ஆற்றிய பணிகளைப் போற்றியுள்ளார். "ஏழை ஈடேற வேண்டும், ஏழை உரிமை பெற வேண்டும், ஜாதிபேதம் ஒழிய வேண்டும் ஒற்றுமை மலர வேண்டும் என்று கூறினதுடன், இத்தகைய இந்தியா உருவாகவேண்டும் அதுவே என் இலட்சியம், அதற்கே நான் பாடுபடுகிறேன்."[58] என்ற காந்தியடிகளின் கருத்தை எடுத்துரைத்து, "இந்தநாடு, - காந்தி நாடு-காண்பது தான், நமது தலைமுறைக்கு உள்ள வேலை. இதைச் சாதிக்க, அனைவரும் ஒன்றுபட, நமது தலைவர்களெல்லாம் கூடிப்பேசி, அனைவரின் ஆற்றலையும் ஒரு முகப்படுத்தி, இந்த அரும்பணியை வெற்றிகரமாக முடிக்க வேண்டும். நாடெங்கும், நகரெங்கும், இலட்சக் கணக்கிலே கூடினர் மக்கள் - அவர்கள், மறைந்த உத்தமருக்குத் தமது கண்ணீரை அர்ப்பணித்தனர் - அவர்காட்டிய வழிச்சென்று தீட்டிய சித்திரத்தைக் காண, இனிப் புதியதோர் ஆர்வத்துடன், அனைவரும் ஒன்று பட்டு பணிபுரிய மக்களுக்கு நேர்வழி காட்டுவதும், ஒற்றுமைக்காண திட்டம் தீட்டுவதும் தலைவர்களின் கடமை"[59] என அனைத்து மக்களும் அண்ணல் காந்தியடிகள் வழியில் நின்று ஆற்றவேண்டிய பணிகள் குறித்து அண்ணா எடுத்துரைத்துள்ளார்.

### 5.2.4.7.ஒரே நிலவு

பாவேந்தர் பாரதிதாசனின் பிறந்தநாளன்று அவரைச் சிறப்பிக்கும் வகையில் அமைந்த 'ஒரே நிலவு' என்ற கட்டுரை 29.4.1951 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. எது கவிதை? கவிஞன் யார் என்பதற்கு வால்ட்விட்மன், ஷெல்லி,

வால்டேர் ஆகியோர் அளித்த விளக்கங்களைத் தமிழாக்கம் செய்து, பாவேந்தரின் கவிதைச் சிறப்புகளை விளக்குகிறார்.

**“கவிஞன் ஓர் காலக் கண்ணாடி**
**பழமைச் சாயலின் பிரதி பலிப்பல்ல!**
**உள்ளத்தில் ஆவேசம், உணர்ச்சியில் புயல்**
**எழுப்பிடும் அவனது இதய கீதம்!**
**எதுகை, மோனை, எழில்தரும் உவமை**
**வசீகர வர்ணனை பழைமைக்கு மெருகு**
**இத்தனையும் தேடி, எங்கெங்கோ ஓடி**
**வார்த்தை முடையும் வலைஞன் அல்ல”**

என்ற வால்ட்விட்மனின் விளக்கத்தையும்,

**“உயர்ந்த உள்ளங்களின் உன்னத நேரங்கள்**
**வடித்துக் காட்டும் வரலாற்றுத் துளிகள்**
**அவையே கவிதை அதுவே வாழ்வின்நூல்”**

என்ற ஷெல்லியின் கருத்தையும்,

**“உயர்ந்த எண்ணம் உயர்ந்த உணர்ச்சி**
**எழுப்பிக் காட்டும் இனிய சங்கீதம்**
**அதுவே கவிதை”**

என்ற வால்டேரின் சிந்தனையையும் இக்கட்டுரையில் எடுத்துக்காட்டி இப்பெருமக்கள் அளித்த விளக்கங்களுக்கேற்பக் கவிதை படைத்தவர் பாரதிதாசன் என அண்ணா குறிப்பிடுகிறார். மேலும், “நம்முடைய தலைமுறையிலே தமிழகம் ஒப்பற்ற ஒரு கவிஞனை உருவாக்கியிருக்கிறது. தமிழ்மொழியிலே இப்படிப்பட்ட ஈடு இணையற்ற கவிஞரைக் கண்டதில்லை என்று நாடு இன்று இறுமாப்பு அடைகிறது. அவரது கவிதையிலே தமிழ் கொஞ்சி விளையாடுகிறது. அங்கே தென்றல் இருக்கிறது. புயல் இருக்கிறது. நெருப்பு இருக்கிறது. குளுமையான நிழல் இருக்கிறது. புன்னகை, கண்ணீர், பெருமூச்சு, அழுகுரல், புலம்பல், வீரமொழி, மழலை அத்தனையும் பின்னிக் கிடக்கின்றன. தமிழ் மக்களின் உள்ளத்தின் உன்னதப் படப்பிடுப்பு அங்கே தெரிகிறது”[60] எனப் பாவேந்தர் கவிதைச் சிறப்புகளை அண்ணா எடுத்துரைத்துள்ளார் மேலும், “அந்தக் கவிதைகளிலே பழமைக்குப் பல்லவியில்லை. பழம் புலவர்கின்

பாட்டுக்குத் தாளமாகவில்லை. இலக்கணப் புத்தகத்திற்கு அடகு வைக்கப்பட்ட தாகவுமில்லை. இன எழுச்சிக்கு ஊக்கம் ஊட்டுவதாய், இதய கீதத்தை இலக்கிய வட்டிலிலே வடித்து வைத்திருப்பதாய் மனதார உணருகின்றனர். அவரது கவிதை நாட்டின் கேட்டினையும், கேடு களையப்பட வேண்டிய அவசியத்தையும் எடுத்துரைக்கிறது. எதிர்காலத்தில் உருவாக்க வேண்டிய சமுதாயத்திற்கு முன்னறிவிப்பு விடுகிறது."[61] எனவும் பாரதிதாசனின் கவிதைச் சிறப்புகளை அறிஞர் அண்ணா எடுத்துரைத்துள்ளார்.

### 5.2.5. இரா. நெடுஞ்செழியன்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் மாணவராக இருந்த காலந்தொட்டே திராவிட இயக்கத்தின் தீவிரப் பற்றாளராக இரா.நெடுஞ்செழியன் இருந்துள்ளார். 1940 ஆம் ஆண்டு திருவாரூரில் நடைபெற்ற நீதிக்கட்சியின் மாநில மாநாட்டில் கலந்து கொண்டதற்குப் பின்னர் பெரியார் ஈ.வெ.இராமசாமி அவர்களுடன் நெருங்கிய தொடர்பினைப் பெற்றார். 1944 ஆம் ஆண்டு சேலத்தில் நடைபெற்ற நீதிக்கட்சியின் மாநில மாநாட்டில் 'திராவிடர் கழகம்' என்ற பெயர்மாற்றத் தீர்மானத்தை அறிஞர் அண்ணா முன்மொழிய, இரா.நெடுஞ்செழியன் அத்தீர்மானத்தை வழிமொழிந்தார். 1948 இல் அண்ணாவின் அழைப்பினை ஏற்று திராவிடநாடு இதழின் துணையாசிரியராகவும் நெடுஞ்செழியன் பணியாற்றினார். நாராயணசாமி என்ற இயற்பெயருடைய அவர், திராவிட இயக்கச்சார்பின் காரணமாத் தன் பெயரை நெடுஞ்செழியன் என மாற்றிக் கொண்டார். 'நாவலர்', 'நடமாடும் பல்கலைக் கழகம்' எனச் சிறப்பிக்கப்பட்ட இவர் திராவிட நாடு இதழில் அவ்வப்போது கட்டுரைகள் பலவற்றை எழுதியுள்ளார். அக்கட்டுரைகளில் சிலகட்டுரைகளின் சிறப்பியல்புகள் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

#### 5.2.5.1.புரட்சிக் கவிஞர்

பாரதிதாசனின் பாடற் சிறப்புகளை விளக்கும் 'புரட்சிக் கவிஞர்' என்ற தலைப்பிலமைந்த கட்டுரை 4.11.1945 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது.

“புரட்சிக் கவிஞரின் கவிதைகளிலே உள்ள கலையழகையும், கவிநயத்தையும், கருத்தின்பத்தையும் பகுத்தறிவுப் பாதையில் நடக்கக் கற்றுக்கொண்ட பண்பினரேயன்றி மற்றையோர் போற்றார். போற்றார் என்பது மட்டுமல்ல உணரார். காலத்திற்கு ஒட்டிய கருத்துக்களை முன்னேற்றப் பாதையிலே ஒட்டி, படித்தவரோடு பாமரரையும், பாட்டாளி மக்களையும், சேர்த்திழுத்துச் செல்லுகின்றவன் எவனோ அவனே புத்துலகைத் தோற்றுவிக்கும் புரட்சிக் கவியாகக் காட்சியளிக்கிறான். அவனே ஒடிந்த உள்ளங்களுக்கு உணர்ச்சி ஊட்டும் கவி! உயிர்க்கவி! மூடப்பழக்க வழக்கங்கள், குருட்டு நம்பிக்கை, மகோன்மத்தர்களின் போக்கு, மமதையாளரின் செருக்கு, மதக்குருக்களின் கொடுமை, உலுத்தரின் உல்லாசவாழ்வு, வஞ்சகர்களின் சூழ்ச்சி ஆகியவற்றை நமது புரட்சிக் கவிஞர் கண்டிக்கும் அளவுக்கு எந்தக் கவிஞனும் இந்த நாட்டில் இதுவரையில் சென்றதில்லை”[62] எனப் பாரதிதாசனைப் போற்றும் இரா.நெடுஞ்செழியன், சமூகத்தில் புரையோடிக் கிடக்கின்ற மூடநம்பிக்கைகளையும், சமயவாதிகளின் உண்மையற்ற வாழ்வியலையும், சூதுமதியாளர்களின் நடத்தைகளையும் கடிந்துரைக்கும் பெரும்பணியைக் கவிஞர்கள் செய்திடல் வேண்டும் என்ற கருத்தை இக்கட்டுரை வாயிலாகக் குறிப்பிட்டுள்ளார்.

### 5.2.5.2.தமிழ் வளர்ச்சி

புதிய கலைச்சொற்களைத் தமிழில் மிக எளிதாக உருவாக்கிக் கொள்ளமுடியும் என்ற கருத்தை ‘தமிழ் வளர்ச்சி’ என்ற கட்டுரையில் இரா.நெடுஞ்செழியன் முன்வைத்துள்ளார். ‘தமிழ் வளர்ச்சி’ என்ற தலைப்பில் இக்கட்டுரை 3.11.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. புதிய அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கு ஏற்ற வேர்ச்சொற்கள் தமிழில் உள்ளன என்பதைக் கட்டுரையில் விளக்கியுள்ளார். அதாவது, “ஆங்கிலத்தைப் போலத் தமிழ், வேர்ச்சொற்கள் பஞ்சமுடையதல்ல இருந்தும் ஆங்கிலம் வளர்ந்தது. தமிழ் தாழ்ந்தது. இடையில் பல நூற்றாண்டுகளாகத் தடையேற்படாமல் இருந்திருந்தால், புத்தம் பதிய கருத்துக்களைத் தெளிவு படுத்தத் தமிழ் பயன்பட்டிருக்கும். ஆங்கிலத்தைப் போல்

பிறன் மொழிச் சொற்களைக் கடன் வாங்க வேண்டிய நிலையில்லாமல், தமிழில் வேர்ச் சொற்களைக் கொண்டே புத்தம் புதிய சொற்களை உண்டாக்கிக் கொள்ள இயலும். எடுத்துக்காட்டாக, ‘சைக்கிள்’ என்ற ஆங்கிலப்பெயருடைய பொருள் தமிழ் நிலத்தில் வந்திறங்கும்போது. அதனைச் சுட்டிக் காட்டுவதற்குரிய தமிழ்ச்சொல் இல்லாமலிருப்பது இயற்கையே. அதன் வடிவு, பண்பு, இயக்கம் முதலியன கண்டறிந்து அதற்கேற்ற தமிழ்ப் பெயர் கொடுக்க இயலுமா என்று பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கும்பொது ‘ஒற்றைச் சுவட்டு வண்டி’ அல்லது ‘ஈருரிளி வண்டி என்ற காரணப் பெயரைச் சூட்டுவது பொருந்துவதாகும். இந்த முறையில் பெரும்பாலான புதிய பொருள்களுக்குப் புதிய சொற்களை உண்டாக்க வேண்டும். இந்த வேலையைப் புலவர் குழாம் செய்ய முடியும்; செய்ய வேண்டும். பொருள்களுக்கும், கருத்துக்களுக்கும் புதிய சொற்களைத் தமிழிலேயே கண்டுபிடிக்க இயலாதவிடத்துத் தமிழ் ஒலிக் குறிப்பிற்கேற்ப அவைகளைத் திருத்திக் கொள்ள வேண்டும். எடுத்துக் காட்டாக ‘Penciline என்ற ஆங்கிலப் பெயரமைந்த புதியமருந்து ஒன்று இப்பொழுது வந்திருக்கிறது, அதற்கேற்ற தமிழ்ப் பெயரைத் தமிழிலிருந்தே எடுத்தமைத்துக் கொள்வதென்பது எளிமையுடையதல்ல. இத்தகைய நிலையில் ‘பென்சிலின்’ என்று தமிழில் கொள்வது தவறாகாது.”[63] என்று குறிப்பிட்டுள்ளார். மேலும், தமிழில் சொற்களை உண்டாக்க இயலாத நிலையில் தமிழ் ஒலிக்குறிப்புகளுக்கு ஏற்றவாறு ஆங்கிலத்திலேயே அச்சொற்களை வழக்கில் வழங்கலாம் என்ற கருத்தை எடுத்துரைத்து, “பெரு வழக்குடைய பிறமொழிச் சொற்களுக்கேற்பத் தமிழில் சொற்கள் இருக்குமேயாயின் அவற்றைப் பெருவழக்குடைய சொற்களாக ஆக்கும் பெரும்பணியை இலக்கிய அறிஞர்கள் மேற்கொள்ள வேண்டும. எடுத்துக்காட்டாகச் சாதம், ஜலம், சந்தோஷம் க்ஷேமம் போன்ற சொற்களுக்கு மாறாக, சோறு, நீர், மகிழ்ச்சி, நலம் போன்ற சொற்களை எடுத்தாளச் சிறிது முயற்சி எடுத்துக் கொள்ளப்படுமேயானால் நாளடைவில் மொழி வளர்ச்சியடைய ஏதுவாகும்.”[64]எனக் குறிப்பிடுவதிலிருந்து, பிறமொழிச்சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச்சொற்கள் இருக்கும்போது

அவற்றைப் பயன்படுத்தி வழக்கில் கொண்டுவருகின்ற பெரும்பணியினை இலக்கிய அறிஞர்கள் மேற்கொள்ள வேண்டும் என்றும் வலியுறுத்தியுள்ளார்.

### 5.2.5.3. அறிவியல் வளர்ச்சி

அறிவியலின் வளர்ச்சி மக்களைப் பகுத்தறிவுள்ளவர்களாக மாற்றும் என்ற தலைப்பில் அமைந்த ‘அறிவியல் வளர்ச்சி’ என்ற இரா. நெடுஞ்செழியனின் கட்டுரை 9.11.1947 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. கட்டுரையில் காலந்தோறும் அறிவியல் வளர்ந்த வரலாற்றினை அவர் எடுத்துரைத்துள்ளார். சான்றாக “சிக்கிமுக்கிக் கற்களை ஒன்றோடொன்று உராய்ந்து அதிலிருந்து தீப்பொறியினைப் பெறக் கற்றுக் கொண்ட காட்டுமிராண்டிக் காலத்திலிருந்து, அணுவின் ஆற்றலைக் கண்டு பிடித்த இக்காலம் வரையிலும் அறிவியல் பழமையோடு பல போராட்டங்கள் நடத்தியே வளர்ந்து வந்திருக்கிறது. பழமைக்கும் அறிவியலுக்கும் போராட்டங்கள் பல ஏற்பட்டன என்றாலும் ஒவ்வொரு போராட்டத்திலும் அறிவியலே வெற்றி பெற்றிருக்கிறது. அதுதான் வெற்றி பெற முடியும்”[65] என்று குறிப்பிடுவதிலிருந்து, மக்களுக்கு எதிராக இயங்கும் பழைமைவாதிகளை அறிவியலின் துணைகொண்டே எதிர்த்திடவேண்டும் என்ற கருத்தை விளக்குகிறது. மேலும், “நாட்டை நடத்திச் செல்லும் துறைகளின் முன்னணியில் எப்படியோ இடந்தேடிக் கொண்டு நிற்பவர்கள் மக்கள் வாழ்வைப் பக்குவப்படுத்தித்தரும் அறிவியலைப் போற்றி வளர்க்க மறுக்கிறார்கள். எனவே, இங்கு வாழ்வு பூக்க, புதுமையொளி வீசப்படாமல் தடைப்படுத்தப்பட்ட நிலை இருக்கிறது. காலந் தாழ்க்கும் என்ற குறையேற்படுமேயொழிய புதுமையொளி வீசாமல் நின்றுவிடும் என்று அஞ்சத் தேவையில்லை. பழமை விரும்பிகள், புராணக்காரர்கள், மதத்தலைவர்கள், குருக்கள்மார்கள், புதுமையை வெறுப்பதே விவேகம் என்று கருதுவோர் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், எதிர்த்தாலும் எதிர்க்காவிட்டாலும், தடுத்தாலும் தடுக்காவிட்டாலும் அறிவியல் உலகம் அவர்களை இழுத்துச் சென்றே தீரும் என்பதில் ஐயமில்லை.”[66]

எனக் குறிப்பிடுகிறார். ‘அறிவியலின் வளர்ச்சியே பழமைவாதிகளின் செயலை வென்றெடுக்கும்’ என்ற கருத்தை இக்கட்டுரை உணர்த்துகிறது.

### 5.2.5.4. புத்துலகக் கல்வி,

காலத்திற்கு ஏற்பக் கல்விமுறையில் தேவையான மாற்றங்களைக் கொண்டு வருதல் அவசியம் என்ற கருத்தை முன்வைத்து இரா.நெடுஞ்செழியன் படைத்த ‘புத்துலகக் கல்வி’ என்ற கட்டுரை, 14.9.1847 மற்றும் 21.9.1947 ஆகிய நாள்களில் வெளிவந்த திராவிடநாடு இதழ்களில் இடம்பெற்றுள்ளன. புராணக் கருத்துகளுக்கு எதிர்க்கருத்துகள் அறிவியலில் இருக்குமானால் அவற்றை ஏற்றுக் கொள்வதற்குக் கல்வியாளர்களும் ஆட்சியாளர்களும் தயங்குதல் கூடாதென்று இரா.நெடுஞ்செழியன் வலியுறுத்துகிறார். “மக்கள் நல்லவழியில் செல்லப் பெருந்தன்மை உள்ளத்தில் குடியேற வேண்டும். பெருந்தன்மை ஏற்படக், காட்டுமிராட்டிக் காலத்திலிருந்து அறிஞர்கள் காட்டிய பெருஞ்செயல்களும், கண்ட கனவுகளும் மாணவர்கள் முன்நிறுத்தப்பட வேண்டும். காலத்திற்கும், கருத்திற்கும் ஒவ்வா மூடக்கட்டுக்கதைகளும் குருட்டு நம்பிக்கைகளும் ஒழிந்த, பகுத்தறிவு செய்து காட்டிய பெருஞ்செயல்கள் உணர்த்தப்பட வேண்டும். பெருஞ்செயல்களை வரலாற்றிலிருந்தும், பெருங்கனவுகளை இலக்கியத்தினின்றும் கொழித்து எடுத்துப் பாடமாக்கப்பட வேண்டும். அவற்றைப் பாடமாக்கினால் உள்ளம் பண்படும்; பெருந்தன்மை பெறும். எண்ணும் பொழுதும், சொல்லும் பொழுதும், செயலாற்றும் பொழுதும் பகுத்தறிவின்பாற்பட்ட பெருந்தன்மை விளங்க வேண்டும். வெறியையுண்டாக்கும் மதவுணர்வும் அறிவை அடகுவைக்கச் செய்யும் பொய்ப்புராணக் கதைகளும், பகுத்தறிவை அழிக்கும் காவியக்கதைகளும், இவைபற்றிய வரலாறுகளும் பெருந்தன்மையைப் பயக்கா. பயந்ததில்லை”[67] என்ற கருத்தை எடுத்துரைத்துள்ளார்.

அன்றைய தமிழகக் கல்வி அமைச்சரான அவினாசிலிங்கம் செட்டியார், தமிழகப் பள்ளிகளில் ஆசிரியர்களுள் சிலர் திராவிடஇயக்கக் கருத்துகளை மாணவர்களிடம் பரப்புவதாகக் குற்றம் சாட்டியதை, “மதத்திற்கு மாறுபட்ட எந்தச்

சொல்லும், செயலும் பள்ளிக் கூடங்களின் எல்லைகளுக்குட்பட்ட இடங்களில் நடைபெறக் கூடாதென்றும், ஆசிரியர்களின் செயல்கள் மாணவரையும் பாதிப்பதால் வெளியிடங்களிலும் ஆசிரியர்கள் மதத்திற்குமாறுபட்ட பிரச்சாரமும், நாஸ்தீகப் பிரச்சாரமும் நடைபெறக்கூடாதென்றும் அப்படி நடைபெற்றால் அந்தக் குறிப்பிட்ட பள்ளிக்கூடங்களுக்கோ, அல்லது குறிப்பிட்ட ஆசிரியர்களுக்கோ சர்க்காரல் கொடுக்கப்பட்டு வரும் உதவிப் பொருளை நிறுத்துவதற்குத் தக்க நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளக் கல்வி அதிகாரிகளுக்கு அதிகாரம் உண்டு”[68] என்று எடுத்துக்காட்டியுள்ளார்.

‘அவர் தொடுக்கும் போர்’ என்ற தலைப்பில் 21.9.47 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இப்பொருள் தொடர்பாக மற்றொரு கட்டுரை ஒன்றையும் இரா. நெடுஞ்செழியன் வெளியிட்டார். அறிவியல் சார்ந்த கருத்துகளைக் கொண்டதாக இக்கட்டுரை அமைந்துள்ளது. “மதக்கருத்துக்கு மாறுபட்ட, பகுத்தறிவால் தெளியப்பட்ட கருத்துக்களை எடுத்துக்கூறும் ஆசிரியர்களுக்குக் குறிப்பாகத் தமிழாசிரியர்களுக்கு வாய்ப்பூட்டு உத்தரவு போட்டதின் காரணம் பொருத்தமுடையதா என்று ஆய்ந்து பார்க்கும் முன் கல்வியின் கடமையை உணரவேண்டும். உலகம் தட்டை என்று ஒருகாலத்தில் மக்கள் நம்பினர். அது அக்காலத்திற்கு ஏற்றதாக இருக்கலாம். அந்தக் காலத்தில் எழுந்த இலக்கியங்களில் அந்தக் கருத்து இடம்பெற்றிருக்கலாம். உலகம் தட்டையல்ல, உருண்டைதான் என்று மறுக்க முடியாத காரணங்களால் நிலைபெறுத்தப்பெறும் கருத்து வழங்கும் இருபதாம் நூற்றாண்டில் பள்ளிக்கூடத் தமிழ்ப்பாடப் புத்தகத்தில் உலகம் தட்டையானது என்றிருந்தால், தமிழாசிரியர் உலகம் தட்டை அல்ல உருண்டைதான் என்று எடுத்துக் கூறுவது குற்றமாகுமா? உலகம் தட்டை என்ற புராணக்கதையின் மீது எழுந்த புராணங்கள் பொய்ம்மையுடையன என்று தமிழாசிரியர் கூறினால் தவறா? இப்படிக் கூறுவதற்காக வாய்ப்பூட்டு உத்தரவைத் தமிழாசிரியர்களுக்கு இடும் கல்வி மந்திரியாரின் செயல் நீதியா என்று கேட்கிறோம். இயற்கையறிவும், சூழ்நிலையும் ஒப்புக்கொள்ளும் பாடங்கள் கல்வி முறையால்

சொல்லிக் கொடுக்கப்பட வேண்டும் என்பதை அறிஞர் ரூசோ ‘கல்வியை நாம் இயற்கையிலிருந்தும், உறவினரிடமிருந்தும், சுற்றுப்பக்கத்திலுள்ள மக்களிடமிருந்தும் பெறுகிறோம்’ என்றார். காலத்திற்கேற்ற கருத்தமையாது. பொருந்தாத பாடங்களைப் பள்ளிகளில் வைத்துவிட்டு. அவற்றிலுள்ள பொருந்தாக் கருத்துக்களை எடுத்துக் கூறக்கூடாது என்பது அறிவுக்கு விடுதலை வழங்கியதாக ஆகாது”[69] என்று அன்றைய கல்விச் சூழலைக் கட்டுரையில் விவரித்துள்ளார். ஆசிரியர்களின் கற்பித்தல் செயல்பாடுகளில் அரசாங்கத்தினர் தலையிடுதல் தவறு என்ற கருத்தை இக்கட்டுரை வாயிலாக இரா.நெடுஞ்செழியன் உணர்த்தியுள்ளார்.

### 5.2.6. க.அன்பழகன்

மாணவப் பருவம் முதற்கொண்டு திராவிட இயக்கத்தில் தீவிரமாகப் பங்குபெற்றவர் க. அன்பழகன். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பயின்ற காலத்தில் திராவிட இயக்கம் சார்ந்த பல்வேறு கூட்டங்களில் உரையாற்றிய சிறப்பும் இவருக்கு உண்டு, சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றிய இவர், பின்நாள்களில் அப்பணியிலிருந்து விலகித் தம்மை முழுநேர அரசியலில் ஈடுபடுத்திக் கொண்டார். தமிழக அமைச்சராகப் பொறுப்பு வகித்து இவர் ஆற்றிய பணிகள் பல. பல்வேறு நூல்களை படைத்தளித்த இவர், ‘புதுவாழ்வு’ என்ற இதழையும் நடத்தியுள்ளார். திராவிடநாடு இதழில் இவர் கட்டுரைகள் அவ்வப்போது இடம்பெற்றுள்ளன. அக்கட்டுரைகளின் சிறப்புகள் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

### 5.2.6.1.தமிழா கேள்

அண்ணாமலைப் பல்கலைக்கழக மாணவராக இருந்த க.அன்பழகன், 19.2.1944 ஆம் நாள் கும்பகோணத் திராவிட மாணவர் மாநாட்டில் ஆற்றிய உரை கட்டுரை வடிவில் 2.4.1944 ஆம் நாள் திராவிடநாடு இதழில் ‘தமிழா கேள்’ என்ற தலைப்பில் வெளிவந்தது. தென்னிந்திய மொழிகளுக்கெல்லாம் தமிழே தாய் என்பதை க. அன்பழகன், “தென்னிந்திய மொழிகளை நன்றாய் ஆய்ந்த அறிஞர் கால்டுவெல், இவை

வடமொழியினின்று தோன்றியவை அல்லவென்றும், வடமொழி, திராவிடத்தினின்று கடன்பட்டுள்ளதென்றும் கூறியுள்ளார். இந்தியக் கலையின் அடிப்படை திராவிடக் கலையே என்று டாக்டர் கில்பர்ட் ஸ்லேட்டர் அவர்களும் இந்தியக் கலைகளை ஆராய்ந்து வெளியிட்டுள்ளார்”[70] என்று குறிப்பிட்டுள்ளார். வடமொழி இலக்கியங்களில் தமிழர்கள் பற்றுக்கொண்டமையாலேயே தமிழ் தன்னிலையினின்று தாழ்ந்தது என அவர்குறிப்பிடுவதை, “இலக்கியங்களிலே பற்பல மூடநம்பிக்கைகள் புகுந்து. பழமை மலிந்து, மக்கள் கருத்தைப் பாழாக்குகிறது என்பது ஒருபுறமிருக்க. புலவர் பெருமக்கட்கே உரிய இலக்கணங்கள் நிலைதான் என்ன? தொல்காப்பியத்தில் சில இடைச்செருகல். வீரசோழியமும் நன்னூலும் வடமொழி இலக்கணத்தைத் தழுவியவை. இவைகளின் உரைகளோ ஒப்பியன்மொழி தோன்றாக் காலத்திலேயே தமிழ்மொழி வடமொழி ஒப்பிலங்கணங்களாக அமைந்தன. ஆனால் பிற்கால இலக்கணங்களில் ‘ஐந்தெழுத்தால் ஒருபாடையுண்டென அறையவும் நாணுவரே மக்கள்” என்று இலக்கணக் கொத்துச் சாமினாததேசிகர் கூறுகின்ற அளவுக்குத் தமிழ் இழிந்தது. எதனால்? வடமொழி இலக்கணத்தில் ஆழ்ந்து தமிழ்மொழி இலக்கணத்தைப் புறக்கணித்தாலன்றோ”[71] என்பதன் வாயிலாக அறியமுடிகிறது.

மேலும், வெண்பாப் பாட்டியல் (வச்சணந்தி மாலை) என்ற பிற்கால இலக்கண நூல்கருத்துகளை இக்கட்டுரையில் அன்பழகன் மறுத்துரைக்கிறார். இந்நூல்கருத்துகள் கற்பனை நிறைந்ததாகவும் கருத்திற்கு ஒவ்வாததாகவும் இருக்கிறதென்பது அவர் கருத்தாகும். “பாட்டியலில் பன்னீருயிரும், முதலாறு மெய்யும் பார்ப்பன வருணம் என்றும். நான்கு மெய்கள் வைசிய வருணம், பிற இரண்டும் சூத்திர வருணம் என்றும் கூறப்படுகிறது.”[72] என்பதை எடுத்துக்காட்டி, பார்ப்பனரை வெண்பாவாலும், அரசரை ஆசிரியப்பாவாலும், வணிகரைக் கலிப்பாவாலும், சூத்திரரை வஞ்சிப்பாவாலும் பாடவேண்டும் என்ற வெண்பாப் பாட்டியல் கருத்து ஏற்புடையதாகாதென்பதையும் எடுத்துரைத்துள்ளார். அவ்வாறே, கலம்பகம் எனும் சிற்றிலக்கிய வகைமை குறித்துக் குறிப்பிடும் வெண்பாப்பாட்டியல், தேவருக்கு நூறு செய்யுளும், பார்ப்பனருக்கு

95 செய்யுளும், அரசருக்குத் தொண்ணூறு செய்யுள்களும், அமைச்சருக்கு எழுபது செய்யுள்களும் வணிகருக்கு ஐம்பது செய்யுள்களும் மற்றவர்க்கு முப்பது செய்யுள்களும் பாடவேண்டும் என்ற விதி வகுத்திருப்பதை எடுத்துக்காட்டி, அரசனை விட மற்றவர் உயர்ந்தவர் அல்லர் என்பதை அன்பழகன் விளக்கியுள்ளார். பாட்டியல் நூற்கருத்து தமிழ்மொழிக்கு எவ்வகையிலும் ஏற்புடையதகாதென்பதை இக்கட்டுரை நிறுவியுள்ளது.

### 5.2.6.2.வள்ளுவர் தோற்றம்

கம்பரும் இராமாயணமும், சேக்கிழாரும் பெரிய புராணமும் மக்களிடையே பரப்பபட்ட அளவிற்கு வள்ளுவர் புகழோ, திருக்குறள் நெறியோ மக்களிடம் பரப்பப்படவில்லை என்பதை ‘வள்ளுவர் தோற்றம்’ என்ற கட்டுரையில் க.அன்பழகன் எடுத்துரைத்துள்ளார். இக்கட்டுரை 7.3.1949 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. புலவர்கள் திருக்குறளின் சிறப்புகளை எடுத்துரைக்காமல் புராணப் பிரசங்கங்களில் தம் கவனத்தைச் செலுத்தியுள்ளதாகக் குறிப்பிடும் க.அன்பழகன், வள்ளுவரின் தோற்றம், திருக்குறளின் சிறப்புகளை இக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். வள்ளுவரின் பிறப்புக் குறித்த கதைகளை மறுக்கும் வகையில், “ஆதி – தாயுமல்ல. பகவன் தந்தையுமல்ல. அதைவிட நிச்சயமாக – அவர்கள் கற்பித்துள்ளபடி புலைச்சியுமல்ல – பார்ப்பனனுமல்ல. அவர்கள் இரண்டுபேர் இருந்தார்களா இல்லையா என்பது ஒருபுறமிருக்க- வள்ளுவருடைய காலத்திலே யார் புலைச்சி –யார் பார்ப்பனர் என்று தெளிவாகத் தெரிந்து கொள்ளும் அளவுக்கும் பேதம் இருந்திருக்கவே முடியாது”[73] என எடுத்துரைத்துள்ளார். மேலும், “திருவள்ளுவர் இயற்றிய நூலின் எந்தவிடத்தும் சாதி என்ற சொல்லே இல்லை. சாதி-வடமொழி-எனவே தமிழில் அதற்கீடான சொல் வந்திருக்கலாமோ எனில் இல்லையென்றே கூறவேண்டும். பிறப்பு-குடி-குலம் என்ற சொற்கள் வந்துள்ளனவே எனிலோ-அவற்றுள் எதுவும் சாதியைக் குறிப்பன ஆகா என்பதைக் குறள் கற்றோர் உணர்வர்”[74] எனக் குறிப்பிட்டுள்ளார்.

இக்கருத்துகளின் வாயிலாக வள்ளுவர் சாதிவேற்றுமைக்கு இடமளிக்காத பண்பினை உடையவராக இருந்தமையைக் க. அன்பழகன் எடுத்துக்காட்டியுள்ளார்.

### 5.2.6.3.திருவள்ளுவர் திருநாள்

தமிழறிஞர் மறைமலை அடிகள் கருத்தின்படி வள்ளுவர் ஆண்டுக்கணக்கை மேற்கொள்வது ஏற்புடைத்து என்று க.அன்பழகன் குறிப்பிடுகிறார். இதனை விளக்கும் வகையில் 'திருவள்ளுவர் திருநாள்' என்ற கட்டுரையை அவர் 25.7.1954 ஆம் நாள் திராவிடநாடு இதழில் எழுதியுள்ளார். குறிப்பாகப் பொங்கல் திருநாளையொட்டி வள்ளுவர் திரு7நாளையும் கொண்டாடுவது சிறப்புடையதாகும் என்ற கருத்தைக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். "பேரறிஞர் மறைமலையடிகளார் கிருத்துவின் காலத்திற்கு முப்பது ஆண்டுகள் முந்தியவர் திருவள்ளுவர் என்று அறிவித்த கருத்தைத் தழுவி வள்ளுவர் ஆண்டைக் கணக்கிட, தைத்திங்கள் துவக்கத்தையே வள்ளுவர் ஆண்டுத் துவக்கமாகவும் மேற்கொண்டு பொங்கலோடு இணைத்தே வள்ளுவர் நாளையும் கொண்டாடுவராயினர். "உலகோர் உயர்வதற்கான நல்வாழ்வின் அடிப்படையான குறள் நெறியை, அறமுறையை, அன்பு வழியை, அருட்சிறப்பை, இன்பத்தின் இலக்கணத்தை, ஒழுக்கத்தின் உயர்வை, வாய்மையின் பெருமையை, அறிவின் நலத்தை நாட்டோருக்கு எடுத்தற்குரிய நன்னாளே அந்நாள். மொழிப்பற்றும், நாட்டுப்பற்றும், கலை ஆர்வம், கடமை உணர்ச்சியும், விடுதலை வேட்கையும், சமத்துவ இலட்சியமும் பூத்திடச் செய்வதற்கான பொன்னாளே அந்நாள்"[75] என்று திருவள்ளுவர் திருநாளின் சிறப்புகளைக் கட்டுரையில் எடுத்துரைத்துள்ளார்.

## 5.3.தமிழறிஞர்களின் கட்டுரைகள்

தமிழிசை வளர்ச்சி, தமிழ் வளர்ச்சி, தமிழ் இலக்கியச் சிறப்புகள், வடமொழி இதிகாசப் பாத்திர இயல்புகள் ஆகியவற்றை விளக்கித் தமிழறிஞர்கள் திராவிடநாடு இதழில் கட்டுரைகள் படைத்துள்ளனர். அவர்களுள் இங்கர்சால், அ. முத்தையா, ஆ. ஷரபுதீன், இளந்தமிழன், நாரண.துரைக்கண்ணன், ம. சங்கரலிங்கம், சி.எம்.இராமச்சந்திரன் செட்டியார், ஔவை சு. துரைசாமி, க.வெள்ளைவாரணர், இருதயராஜ், நாவலர் சோமசுந்தர

பாரதியார், மா.கி. தசரதன், பி.சி. கணேசன், நா. இராசகோபாலன், மா. இராசமாணிக்கனார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவராவர். இக்கட்டுரைகள் குறித்த செய்திகள் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

### 5.3.1. இங்கர்சால்

'இங்கர்சால்' என்பவர் 28.11.1943 ஆம் நாள் திராவிட நாடு இதழில் 'தமிழ் இசையும் தமிழ்நாடும்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை படைத்துள்ளார். தமிழ் இசையின் சிறப்புகளை இக்கட்டுரை எடுத்தியம்புகிறது. தமிழர்கள் இசைக்கருவிகளை எங்ஙனம் உருவாக்கினார்கள்? என்பதைக் கட்டுரையாசிரியர் திறம்பட எடுத்துரைத்துள்ளார். "வண்டுகள் சோலையிலுள்ள மரக்கிளை, கொம்புகளை, கொடிகளை துளைப்பதினால் உண்டான துளைகளில் காற்றுப் பலமாக வீசுவதினால் உண்டாகும் இனிய ஓசைகளைக் கண்டறிந்து குழல் போன்ற துளைக்கருவிகளைக் கண்டனர் தமிழர்கள். வில்லில் இணைக்கப்பட்ட நரம்புகளை இழுத்து அம்புகளை எய்வதினால் உண்டாகும் இனிய ஓசைகளைக் கண்டறிந்து யாழ் போன்ற நரம்புக் கருவிகளைக் கண்டனர் நம் மூதாதையர். காட்டிலே வேட்டையாடிக் கொன்ற புலி, மான் முதலிய மிருகங்களின் தோல்களைக் கரம் கொண்டு அடிப்பதினால் உண்டான ஓசையைக் கண்டு பேரிகை போன்ற தோற்கருவிகளைக் கண்டார்கள். இசையைத் தம் உயிரென ஓம்பி வந்தனர் தமிழர். இவ்வளவு சீரும் சிறப்பும் வாய்ந்த தமிழ் இசை முத்தமிழ் மணிகளில் ஒன்றாயிருந்த தமிழிசை மறைந்தொழிந்ததன் காரணம் ஏன்? இதற்கு ஒரே பதில் தான். ஆரிய உறவால் அழிந்தது தமிழ் இசை."[76] என்று கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார் மேலும், ஆரியர் வருகையால் தமிழிசை தமிழ்நாட்டில் வழக்கற்றுப் போனதாகக் குறிப்பிடும் கட்டுரையாசிரியர், "தமிழிசைவாணர்களை, தமிழகத்தின் நலங்கருதி, தமிழ்மொழி வளர்ச்சி கருதி, தமிழர் முன்னேற்றங்கருதி நான் கேட்பது என்னவென்றால், இன்றுமுதல் கடவுள் பாட்டுகளை பாடும் பழக்கத்தை விட்டுவிடுங்கள். அறிவுக்கொத்த பாடல்களை, தமிழர் முன்னேற்றங்கருதும் பாடல்களை, இயற்கைக் காட்சிகள் முதலியவைகளைப் பற்றின பாடல்களை, மூடநம்பிக்கையை.

குருட்டு எண்ணத்தை, மடைமையை, அடிமைத்தனத்தைத் தகர்த்தெறியும் பாடல்களைப் பாடுங்கள். அதனால் தமிழர் முன்னேறட்டும். இந்தப் பெருந்தொண்டை நீங்கள் செய்வீர்களானால் தமிழர் உம்மை என்றும் மறவார்”[77] என்று தமிழிசைவாணர்களுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளார்.

### 5.3.2. அ. முத்தையா

சென்னைப் பச்சையப்பன் கல்லூரி உதவிப் பேராசிரியர் அ.முத்தையா 23.1.1944 ஆம் நாள் திராவிடநாடு இதழில் ‘இசை வழக்கு’ எனும் கட்டுரையைப் படைத்துள்ளார். தமிழிசையைத் தமிழர் மறந்தமையால் ஏற்பட்ட தீமைகளை இக்கட்டுரையில் அவர் சுட்டிக்காட்டியுள்ளார். அதாவது, “ஆரிய நாகரிகப் பரத்தையின் இன்பத்தையே நுகர்ந்து, தம் இல்லக்கிழத்தியையும் ஏனைய நலன்களையும் மறந்திருந்த தமிழனுக்குத் தமிழர் அரசியல் இயக்கமாகிய உற்ற தோழன், தமிழன் கடமையை உணர்த்தி வந்தான். அதன் பயனாகத் தமிழன் தன்இன்ப இல்லத்திற்குத் திரும்பிவந்தபோது, வழியில் “தேசியப்” பெயர் கொண்ட “மோகினி”யை அனுப்பித் தன்வீட்டிற்கு வந்துசேராது வேறு களியாட்டிடங்கட்கும் போய்ச்சேரும்படி செய்துவிட்டனர். சங்கக் காலத்திலிருந்தே நம்முடன் இருந்து ‘சேவை’ செய்யும் ஒரு குறித்த சமூகத்தைச் சேர்ந்த “பாங்கர்கள்”. எனவே, தமிழ்ச் சமூகமாகிய தலைவி, அத்தமிழனிடம் மொழி உணர்ச்சி, கலைஉணரச்சி முதலிய தோழிகளை அனுப்ப வேண்டி நேரிட்டுவிட்டது. தமிழ்த் தலைவியின் நன்மையையும் இன்பத்தையும் பெரிதும் விரும்புவோராகிய தோழிகள், அத்தமிழனை அவன் இல்லத்தில்கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டால், தங்கள் பிழைப்புக் கெட்டுவிடுமே என்று, “ஆரியப் பரத்தையையும்”, “தேசிய மோகினியையும்” தம் வாழ்க்கைக்கான வருமானத்திற்காகப் பயன்படுத்தும் “பாங்கர்கள்” தமிழ்த்தலைவன் மனதைக் கலைப்பதென்பது இயல்பானதொருகாரியந்தானே. இப்பாங்கன் செய்கையைக் கண்டு நாம் வியப்படைய வேண்டுவதில்லை. அவன் வலையில் விழாது, மறுமுறையும் சிக்குண்டு வருந்தாது, கருத்துடன் வீடுவந்து

விரைவில் சேரவேண்டுவதே தமிழன் கடன்"[78] எனத் தன் கருத்தை அ.முத்தையா எடுத்துரைத்துள்ளார்.

அவ்வகையில் தமிழ்த்தலைவி, இசை, கலை, மொழி, நாகரிகம், குறிக்கோள் முதலிய பலவகைப்பட்ட நலன்களை உடையவள். தமிழ்த் தலைவன் அவற்றை நுகர்ந்து எந்நாளும் இன்புற வேண்டும் என்பதை இவ்வுருவகக் கட்டுரை அடிப்படையாகக் கொண்டுள்ளது. தமிழர்கள் தமிழிசையை மட்டுமே போற்றுதல் வேண்டும் என்ற கருத்தினை இக்கட்டுரையில் அ.முத்தையா வலியுறுத்தியுள்ளார்.

### 5.3.3.ஆ.ஷரபுதீன்

புறநானூற்றுப் பாடற்கருத்துகளை மேற்கோள்காட்டி ஆ.ஷரபுதீன் 'தமிழணங்கு' என்ற கட்டுரையைப் படைத்துள்ளார். இக்கட்டுரை 17.9.1944 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. கடல் சூழ்ந்த உலகில் வழங்கும் மொழிகளுக்கெல்லாம் தமிழ்மொழியே தாயாக விளங்குகிறது. தமிழகத்தைப் பண்டைத் தமிழ் மன்னர்கள் ஆட்சிபுரிந்த காலத்தில் ஏழிசையாகவும், இசைப்பயனாகவும் தமிழ்மொழியே தாண்டவம் புரிந்தது எனக் குறிப்பிடும் ஷரபுதீன், "நீ பிறந்த நாடு-நீ வளர்ந்த நாடு-நீவாழும் நாடு-நீ வாழப்போகும் நாடு புலிநிகர் தமிழ் வேந்தர் வாழ்ந்த நாடு என்பதை மறவாதே. 'பகைவரைப் பொருவேன் இல்லையேல் மலைமீதேறி வீழ்ந்தாயினு மிறப்பேன்' என்ற பண்டைத் தமிழரின் வீரத்தை மறவாதே"[79] எனத் தமிழர்களுக்கு அறிவுரை பகர்ந்து,

**"நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்"[80]**

எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாடற் கருத்தையும் கட்டுரையில் எடுத்துக்காட்டுகிறார். மேலும்,

**"புத்தம் புதிய கலைகள் - பஞ்ச**
**பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்**
**மெத்த வளருது மேற்கே — அந்த**
**மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை"[81]**

என்ற பாரதியாரின் பாடற்கருத்தை, "புத்தம் புதிய கலைகள் நித்தம் வளர்கின்றதாம் மேலைநாட்டிலே, அந்த மேன்மைக் கலைகள் யெமது மொழியில் இல்லையே தோழா!

கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்த்திடுவீர். இசைத் தமிழை ஏற்றமுறச் செய்ய இடிமுழக்கம் செய்வீர். நாடகக் கலையை நானிலம் கண்டு வியக்க நன்னிலைப் படுத்துவீர். கொட்டுக முரசு முத்தமிழ் முழங்க”[82] எனக் குறிப்பிட்டு முத்தமிழும் மேம்பட்டுத் தமிழன்னை சிறப்புறும் வகையில் தமிழ்ப்பணியாற்ற இக்கட்டுரை வாயிலாக அழைப்பு விடுத்துள்ளதை அறியமுடிகிறது.

### 5.3.4. இளந்தமிழன்

தமிழ்மொழி வளர்ச்சிபெறுவதற்கான வழிமுறைகளைக் குறிப்பிட்டு இளந்தமிழன் எழுதிய ‘தமிழ் வளர’ என்ற கட்டுரை 25.2.1945 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. உரையாசிரியர்கள் கருத்தை முற்றிலுமாக ஏற்றுக் கொள்ளும் வழக்கத்தைத் தமிழறிஞர்கள் கைவிடுதல் வேண்டும்; பண்டைத் தமிழ்நூல்களுக்குப் புதிய உரைகள் படைத்திடவேண்டும் என்று இளந்தமிழன் வலியுறுத்தியுள்ளார். “பண்டிதர்கள் இன்னும் அந்தப் பழைய குட்டையிலேயே ஊறிக்கிடத்தலாகாது. பழைய உரையாசிரியர் கூறிய வழியே சென்று கொண்டிருத்தலாகாது. உலகத்தையும் விழித்துப் பார்த்தல் வேண்டும். உலகப் போக்கிற்கேற்பப் பழையன கழித்துப் புதியன கொள்ளல் வேண்டும்”[83] எனக் குறிப்பிட்டுச் சங்க இலக்கியக் கருத்துகளிடையே பரப்புகின்ற பணியினைத் தமிழ்ப்பண்டிதர்கள் மேற்கொள்ளவேண்டும் என்ற கருத்தையும் கட்டுரையில் வலியுறுத்தியுள்ளார். இதனை, “பண்டிதர்கள் பெண் இழிவு, துறவு, நிலையாமை ஆகியவற்றைக் கூறும் பிற்காலச் சிற்றிலக்கியங்களையே பெரிதும் போதிக்கிறார்கள். அவற்றைத் தள்ளிச் சங்க இலக்கியங்களை மக்களுக்குப் புகட்டுதல் வேண்டும். பண்டிதர் இன்னல்கள் ஓராயிரமிருக்கின்றன. எனினும் அவற்றை மறத்தற் பொருட்டு ஒவ்வொருவரும் நாள்தோறும் ஒருமணி நேரம் சங்க இலக்கியங்களைப் பாடஞ் செய்வார்களாக. இதுதான் தமிழ்த்தொண்டு.”[84] எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. சங்க இலக்கியப் பரவலாக்கத்திற்குத் திராவிடநாடு இதழாற்றிய பணியினை இக்கட்டுரை வாயிலாக அறியமுடிகிறது.

### 5.3.5. நாரண. துரைக்கண்ணன்

1948 ஆம் ஆண்டு சென்னையில் மறைமலை அடிகள் தலைமையில் நடைபெற்ற இந்தி எதிர்ப்பு மாநாட்டில் நாரண. துரைக்கண்ணன் பங்கு பெற்றார். காங்கிரஸ் கட்சியில் மிகுந்த ஈடுபாடு உடைய இவர், தமிழ் மீது கொண்ட ஆர்வம் காரணமாக இம்மாநாட்டில் கலந்து கொண்டார்.

'இலக்கியத்தில் இலட்சியம்' என்ற தலைப்பில் நாராண.துரைக்கண்ணன் எழுதிய கட்டுரை 3.5.1948 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்துள்ளது. மானுட இலட்சியங்களைப் பாதுகாத்து வழங்கும் பெட்டகங்களாக இலக்கியங்கள் இருந்திடல் வேண்டும் என்ற கருத்தை இக்கட்டுரையில் நாரண.துரைக்கண்ணன் வலியுறுத்தியுள்ளார். அதாவது, "இலக்கியம் சமுதாயத்தின் விளைபொருளாகும். இலக்கியத்துக்கும் சமுதாயத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு. சமுதாய நிலையைப் பிரதிபலித்துக் காட்டுவதுதான் இலக்கியம் ஆகும். சமுதாயத்தின் தன்மையை அதனிடத்துத் தோன்றிய இலக்கியங்கள் காட்டும். சமுதாயத்தின் தன்மை காலநிலைக்கு ஏற்றவாறு மாறுபடும். இவ்விதம் காலந்தோறும் மாறுபட்டுவரும் சமுதாயத்தின் தன்மையையும் அவ்வக்காலத்துத் தோன்றிய இலக்கியங்கள் தாம் காட்டும். ஒவ்வொரு காலத்துத் தோன்றிய இலக்கியங்கள் அவ்வக்காலத்துள்ள சமுதாய நிலையைப் பொறுத்தவையாயிருக்கும். நம் நாட்டின் கலை நாகரிகங்களையும் நம் முன்னோர்களின் பண்பாட்டையும், லட்சியத்தையும் இன்றளவும் அழியாமல் காத்து அவற்றின் பெருஞ்சிறப்பை உலகுக்குத் தெரிவித்துக் கொண்டிருப்பவை பண்டைத் தமிழ் இலக்கியங்களே அல்லவா! அவைகளை நம் இலக்கியங்கள் தமக்குள் பாதுகாத்து வைத்து விடுவதால்தான், வழி வழி வரும் பிற்கால சந்ததிகளும் அறிந்து போற்றிப் பயன்பெறக் கூடியவையாயிருக்கின்றன. ஆகவே. நாம் சிருஷ்டித்துவரும் இலக்கியங்களும் உண்மையும் அழகும் நிரம்பிய சொற்களால் வாழ்க்கையைப் புலப்படுத்தி, மனிதனது ஆன்மாவையும் அவன் கருத்துக்கள், உணர்ச்சிகள், கலை நோக்கங்கள் முதலியவற்றையும் சொல்வடிவில்

தீட்டி, மேற்குறித்த மனித நாகரிகம் முதலியவைகளுக்கு அடிப்படையாயுள்ள இலட்சியங்களை மானிட சமுதாயத்துக்குப் பாதுகாத்து வழங்குவதாகவும் பிற்காலச் சந்ததிகளும் விரும்பிப் படித்துப் பயன்பெறத் தக்காகவும் இருக்க வேண்டும். ஏனென்றால் உண்மை பற்றிய இலட்சியங்கள் அழிவில்லாத இலக்கியங்கள் வாயிலாகத்தான் புலனாகி நிலைபெற்றிருக்கின்றன."[85] என்று குறிப்பிட்டுள்ளார். இலக்கியங்கள் அவ்வக்கால சமூக நிலையை எடுத்துக்காட்டவல்லனவாதலின் அவை மானுட இலட்சியங்களைப் பாதுகாத்து வழங்கும் வகையில் அமைதல் வேண்டும் என்ற கருத்தை இக்கட்டுரை புலப்படுத்தியுள்ளது.

### 5.3.6. ம. சங்கரலிங்கம்

பண்டைத் தமிழ் மக்களின் வேளாண் தொழில் குறித்து ம.சங்கரலிங்கம் 6.2.1949 ஆம் நாள் திராவிடநாடு இதழில் 'வள்ளுவன் வகுத்த விவசாய விஞ்ஞானம்' என்ற தலைப்பில் கட்டுரையைப் படைத்துள்ளார். பழந்தமிழர்களின் உழவாரப் பணிகள் குறித்த செய்திகள் அனைத்தும் திருக்குறளில் இடம்பெற்றுள்ள பாங்கினை இக்கட்டுரையில் அவர் விளக்கியுள்ளார். மேலும், சமகால அறிவியல் ஆய்வாளர்கள் விவசாயிகளுக்கு உணர்த்தியுள்ள செய்திகளைக் குறித்து, "பயிர்கட்கு வேண்டிய உணவுப் பொருள்களெல்லாம் எரு, சாம்பல் முதலிய பொருள்களில் தான் அமைந்திருக்கின்றன. இவைகளிலே இருக்கிற 'நைட்ரஜன்' 'பாஸ்ப்பரஸ்', பொட்டாஷ்' முதலிய உரங்கள் சூரியனிடத்துள்ள வெப்பத்தில் இயல்பாக அமைந்து கிடக்கின்றன. அந்த நைட்ரஜன் முதலிய உரச்சத்துக்களை பிராணவாயுவானது எடுத்துப் பூமிக்கு வேண்டிய அளவு கொடுக்கின்றது. பூமி எவ்வளவுக்கெவ்வளவு நன்றாகக் காய்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு உரச்சத்துகள் பூமிக்குக் கிடைக்கின்றன. இது ஆய்வுகள் பல ஆற்றி அறிவு கண்ட ஆராய்ச்சியாளர்கள் அறிதியிட்டுக் கூறும் உறுதிமொழி-பகுத்தறிவு பெற்ற விஞ்ஞானிகள் வகுத்தறிந்து விவசாயிகளுக்கு விடுத்த விண்ணப்பம்"[86] என்று குறிப்பிட்டுள்ளார். அறிவியலாளர்கள் உழவர் பெருமக்களுக்குக் குறிப்பிட்டுள்ளனவற்றைக் கட்டுரையில் விளக்கி, "இவ்வுண்மைகளையெல்லாம் சுமார்

2000 ஆண்டுகட்கு முன்னரே தமிழ்நாட்டு விவசாயிகட்கு, ஏன் உலக விவசாயிகட்கும் சேர்த்தே – மிக அழகாய், குறட்பாவில், இரண்டே அடிகளில், ஏழே சீர்களில் எழிலுற எடுத்தியம்புள்ளான் தெய்வப் புலவன் திருவள்ளுவன்"[87] எனக் குறிப்பிட்டுள்ளார்.

**"தொடிப் புழுதி க.்.சா உணக்கிற் பிடித்தெருவும்**
**வேண்டாது சாலப் படும்"[88]**

**"ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்**
**நீரினும் நன்றதன் காப்பு"[89]**

என்னும் குறட்பாக்களின் கருத்துகளைக் கட்டுரையில் எடுத்தாண்டு, வள்ளுவர் காலத்தமிழகத்தின் உழவுத்தொழில் முறைகளையும் கட்டுரையில் விவரித்துள்ளார். "பயிர்த்தொழில் நிலத்தை மென்மேலும் உழுதல் நல்லதாயினும் உரம் வைத்தல் உழுதலினும் நல்லது. உரம் சிறப்புடையதாயினும் களை பிடுங்குதல் உரம் வைத்தலினும் நல்லது. களையெடுத்தல் நல்லதாயினும் முறையாய் நீர்பாய்ச்சுதல் களையெடுத்தலினும் நன்று. ஏற்ற முறையில் நீர்ப்பாய்ச்சுதல் நல்லதாயினும் அப்பயிரைக் காத்தல் அதனினும் நன்று. எனவே உழுதல், உரம் வைத்தல், களைபறித்தல், நீர்ப்பாய்ச்சுதல், காத்தல் என்கின்ற 5 பிரிவுகளும் உழவுத் தொழிலாளர்களுக்குத் தேவையெனத் தெரிவிக்கின்றார் தெய்வப் புலவர் திருவள்ளுவர். இவ்வைந்துவகைப் பிரிவுகளுடன் 'வித்துக்களை' நல்ல முறையில் சேகரிப்பது' எனும் ஒரு பிரிவைச் சேர்த்துள்ளனர் இன்றைய வல்லுநர்கள்"[90] எனச் சமகால உழவுத்தொழில் முறைகுறித்தும் கட்டுரையில் விளக்கியுள்ளார்.

### 5.3.7. சி.எம். இராமச்சந்திரன் செட்டியார்.

தொல்காப்பியத்தின் சிறப்புகளை விவரித்து, சி.எம்.இராமச்சந்திரஞ் செட்டியார், 14.1.1949 ஆம் நாள் திராவிடநாடு பொங்கல் மலரில் 'தொல்காப்பியம்' என்ற தலைப்பில் அமைந்த கட்டுரையைப் படைத்துள்ளார். தமிழர்கள் தம் நுண்மையான அறிவால் ஆராய்ந்த பல அரிய செய்திகளைத் தாங்கியுள்ள நூலாகத் தொல்காப்பியம் திகழ்வதாகக் இக்கட்டுரையில் சி.எம். இராமச்சந்திரன் செட்டியார் குறிப்பிடுகிறார்.

“அரிஸ்டாட்டிலைப்போல் தமிழ்நாட்டில் சகல அறிவுகளையும் ஆராய்ந்து வெளியிட்ட ஒரு பெரியார் இருந்தார், அவரே தொல்காப்பியர் என்ற பெரும் புகழ்பெற்ற பெரியார். அவர் உலக நன்மைக்காக வெளியிட்டிருக்கும் பெரு நூலுக்குத் “தொல்காப்பியம்” என்று பெயர். அது பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டது. இக்காலத்தார் அதற்கு இலக்கணம் என்ற பெயரிட்டு அதனை முதல் இலக்கணமாகக் கொள்ளுகிறார்கள். உண்மையில் இது வெறும் இலக்கண நூல் அல்ல. அக்காலத்தில் ஆராய்ந்திருந்த சகல அறிவுகளையும் திரட்டி அமைத்த நூலாகும். ஆகவே அதனைத் தமிழ் அறிவு நூல் என்று பெயரிட்டால் தகுதி எனலாம்”[91] எனத் தொல்காப்பியச் சிறப்புகளை விவரித்து, தொல்காப்பியர் ஆராய்ந்து வெளியிட்ட அறிவு சார்ந்த செய்திகளைப் பிற்காலத் தமிழர்கள் விருத்தி செய்யவில்லை. மாறாக இலக்கியம், செய்யுள், அணி இவைகளை மட்டுமே விருத்தி செய்ததாகக் குறிப்பிடுகிறார். இலக்கிய நூல்கள் சிறப்படைந்த அளவிற்குத் தமிழில் அறிவியல் நூல்கள் எவையும் விருத்தியாகவில்லை என்ற குறையையும் சுட்டிக்காட்டித் தமிழர்கள் இக்குறையைக் களைய முயலவேண்டும் எனக் கட்டுரையில் வேண்டுகிறார்.

### 5.3.8. ஔவை சு.துரைசாமி.

தமிழ்மொழியைச் சிறப்பாக வளர்ப்பதற்குரிய கருத்துகளை உள்ளடக்கிய ‘மொழி வளர வழி’ என்ற ஔவை சு.துரைசாமி அவர்களின் கட்டுரை 11.6.1950 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. அகத்தியர் தமிழ்நாட்டிற்கு வருவதற்கு முன்னரே தமிழகத்தில் தமிழ் மொழியில் திருந்திய இலக்கணமும் பொருந்திய இலக்கியங்களும் நிறைந்திருந்தன என்ற கருத்தை ஔவை சு. துரைசாமி கட்டுரையில் விளக்குகிறார். சங்ககாலம் முதற்கொண்டே முத்தமிழும் சிறப்புற்றுத் திகழ்ந்தமையை, “முத்தமிழும் சங்க காலத்தில் வாழ்ந்த வேந்தர்களாலும் செல்வர்களாலும் பெரிதும் ஆதரித்து வளர்க்கப்பெற்றது. புலவர்களை ஆதரிக்கு முகத்தான் இயற்றமிழையும், பாணர்களை ஆதரித்து இசைத்தமிழையும், கூத்தர்களை யூக்கி நாடகத் தமிழையும்

வளர்த்து வந்தார்கள் என்பதைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன”[92] எனக் கட்டுரையில் எடுத்துரைத்துள்ளார்.

மேலும், தமிழகத்தில் தமிழ் மொழி சிறப்புற்று வளரவேண்டுமாயின் மொழிபயிலும் இடங்களான அரசியல் நிலையம், சமய நிலையம், கல்வி நிலையம் ஆகியவற்றில் தமிழ் தனது உரிமை இடத்தைப் பெறவேண்டும். குறிப்பாகக் கல்வி நிலையங்களில் தமிழ் மொழி முதல் இடத்தைப் பெறவேண்டும் என்ற கருத்தை இக்கட்டுரையில் முன்வைத்துள்ளார். வீழ்ந்த தமிழனை எடுத்தற்கும், வீழ்ந்த தமிழ்மொழியை மேம்படுத்துவதற்கும் உரிய நல்ல முயற்சிகளை அனைவரும் ஒருங்கிணைந்து மேற்கொள்ளவேண்டும் என்ற கருத்தை இக்கட்டுரையில் அவர் வலியுறுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

### 5.3.9. க. வெள்ளை வாரணர்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றிய தமிழ்ப்பேராசிரியர்களுள் க.வெள்ளைவாரணர் குறிப்பிடத்தக்கவர் ஆவார். தமிழகத்தில் தமிழ் மொழி சிறப்புற்றுத் திகழ்வதற்கு இவர் அறிவுறுத்திய கருத்துகள், 18.6.1950 ஆம் நாள் திராவிட நாடு இதழில் ‘மொழி வளர’ என்ற தலைப்பில் வெளிவந்தன. “தமிழ்நாட்டுக் கல்வி நிலையங்களிலெல்லாம் எல்லாக் கலைகளையும் தமிழ் வழியே பயிற்றுதற்கேற்ற திட்டஞ் செய்தல் வேண்டும். தமிழ்நாட்டிலுள்ள தொடக்கப்பள்ளி முதல் பல்கலைக்கழகம் ஈறாகவுள்ள கல்வி நிலையங்களில் எல்லாவற்றிலும் தமிழுக்கே முதலிடந் தருதல் வேண்டும் தமிழ்நாட்டு அரசியலாட்சி முறையும் நீதி மன்றமும் தமிழ் மொழியின் வாயிலாக இயங்கச் செய்தலே நம் பெற்றுள்ள உரிமை வாழ்வின் பயனாகும் என்பதைத் தமிழ் மக்கள் உணர்தல் வேண்டும். தங்கள் குடும்பத்தில் நிகழும் நலந் தீங்கு குறித்த எல்லா நிகழ்ச்சிகளும் தம்மால் வழிபடப்பெறும் திருக்கோயிலில் நிகழும் வழிபாடுகளும் நம் தாய்மொழியாகிய தமிழ் மொழியின் வாயிலாகவே நடைபெறுதற்கேற்ற வழிமுறைகளை வகுத்தமைத்தல் தமிழ் மக்களின் தலைசிறந்த கடமையாகும்.”[93] என்று குறிப்பிட்டுள்ளார். வெள்ளைவாரணரின்

இக்கருத்திலிருந்து, பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் தமிழ் மொழிக்கு முதன்மை அளித்திட வேண்டும் என்பதை அறியமுடிகிறது. மேலும் அரசாங்கத்தினரின் அன்றாட நடைமுறைகள், நீதிமன்றச் செயல்பாடுகள், வழிபாட்டு முறைமைகள் ஆகிய அனைத்திலும் தமிழ்மொழி முதன்மை பெறுதல் வேண்டும் என்றும் வலியுறுத்தியுள்ளார். இவையாவும் நடைமுறைப்படுத்தப்பட்டால் தமிழ் மொழி மென்மேலும் வளர்ச்சியடையும் என்ற கருத்தை இக்கட்டுரையின் வழியாக வெள்ளைவாரணர் குறிப்பிட்டுள்ளார்.

### 5.3.10. இருதயராஜ்

திருச்சிராப்பள்ளித் தூய வளனார் கல்லூரி வரலாற்றுத்துறைப் பேராசிரியர் இருதயராஜ் திராவிடநாடு இதழில் மிக அதிக அளவில் கட்டுரைகளை எழுதியுள்ளார். நெசவுத் தொழிலின் மேன்மையையும் நெசவாளர்களின் தற்கால நிலையையும் விளக்கும் வகையில் இவர் படைத்த ‘தள்ளாடும் தறி’ என்ற கட்டுரை 28.3.1954 ஆம் நாள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளது.

**“செய்யுந் தொழிலெல்லாம் சீர்தூக்கிப் பார்த்தாலும்**

**நெய்யுந் தொழிலிற்கு நிகரில்லை”[94]**

என்ற பழமொழியைக் கட்டுரையில் சுட்டிக்காட்டி நெசவுத் தொழிலின் மேன்மையை இருதயராஜ் விளக்கியுள்ளார். பாம்பின் சட்டை, மூங்கிலில் உரித்த மெல்லிய தோல், பால்நுரை, புகை, இவை போன்ற பல பொருள்கள் ஆடைகளுக்கு உவமையாகத் தமிழ் இலக்கியங்களிலே இடம்பெற்றிருப்பதை

**“நூலினும் மயிரினும் நுழைநூற் பட்டினும்**

**பால்வகை தெரியாப் பன்னூறடுக்கத்து**

**நறுமடி செறிந்த ஆடையறுவை”**

என்னும் சிலப்பதிகாரப் பாடலடிகளை எடுத்துக்காட்டிக் கட்டுரையில் விளக்கியுள்ளார். மேலும், சங்ககாலத்தில் நெசவுத் தொழிலில் ஈடுபட்ட பெண்களைப் ‘பருத்திப்

பெண்டிர்' என அழைத்தைமையையும் கைம்பெண்கள் நெசவுத் தொழில் ஈடுபட்டமையையும்

**"பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன"**

**"ஆளில் பெண்டிற் தாளில் செய்த**

**நுணங்கு நுண்பனுவல்"**

எனும் பாடலடிகளை எடுத்துக்காட்டி பேராசிரியர் இருதயராஜ் விளக்கியுள்ளார்.

நூற்பாலைகளின் வளர்ச்சியால், 1954 ஆம் ஆண்டில் கைத்தறி நெசவாளர்கள் அடைந்த இன்னல்கள் பலவற்றைச் சுட்டிக்காட்டி நெசவாளர்களுக்குக் கூட்டுறவு சங்கங்கள் வாயிலாக அரசாங்கம் நூல் வழங்கிட முன்வருதல் வேண்டும் என்ற வேண்டுகோளையும் முன்வைக்கிறார். "ஆலைத்துணியைப் போல் கைத்தறித் துணி கண்ணைக்கவரும்படி இல்லை என்பதும், கவர்ச்சி செய்யும் முறையில் விளம்பரம் செய்வதில்லை என்பதும் வேறு குறைதான்"[95] எனக் குறிப்பிட்டு, இத்தகைய குறைகளைக் களைவதற்குக் கைத்தறி நெசவாளர் முன்வருதல் வேண்டும் என்ற கருத்தையும் பேராசிரியர் இருதயராஜ் கட்டுரையில் வலியுறுத்துகிறார்.

### 5.3.11. நாவலர் சோமசுந்தர பாரதியார்

தனித்தமிழ் இயக்கக் கொள்கைப்பற்றுள்ளவராக விளங்கிய நாவலர் சோமசுந்தர பாரதியார், தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்திலும் தீவிரமாகப் பங்குபெற்றவராவார். வழக்கறிஞரான இவர் சிறந்த தமிழறிஞரும் ஆவார். 'திருவள்ளுவர்', 'சேரவேந்தர் தாய வழக்கு', 'தசரதன் குறையும் கைகேயி நிறையும்' போன்ற சிறந்த ஆய்வு நூல்களை இவர் படைத்துள்ளார். பாண்டவர்களுள் ஒருவனான தருமனின் குணவியல்புகள் குறித்துத் தமிழறிஞர் ச. சோமசுந்தர பாரதியார் எழுதிய கட்டுரை 'தருமன் சால்பு' என்ற பெயரில் 4.3.1956 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது. மகாபாரதக் காப்பியத்திற்கும் தமிழ்ப் பண்பாட்டு வெளிக்கும் எவ்விதத் தொடர்புமில்லை என்பதை இக்கட்டுரையில் அவர் விளக்கியுள்ளார். அதாவது, "பாரதம் வட ஆரியர் காவியங்களுள் ஒன்று. அதை அவர் இதிகாசம் (பூர்வகதை) என்பர்.

அதில் தென் தமிழருக்கு எவ்விதத் தொடர்பும் கிடையாது. அதன் கதாபாத்திரர்பால் தமிழருக்கு இயற்கை விருப்போ இருக்க வேண்டாம். அவரவர் கொள்கை குறிக்கோள் நோக்கம் செய்கைகளால் சீர்தூக்கி மதிப்பதே அறிவும் அறனுமாகும். பண்டிதரும் பாமரரும் தருமனைப் புகழ்ந்தும் துரியோதனனை இகழ்ந்தும் வருகின்றனர்."[96] தருமனை ஒப்பனைக்கு நல்லவன் என்றும் உண்மையில் அவன் சிறந்த பண்புடைய பாத்திரமாகப் பாரதக் கதையில் திகழவில்லை என்றும் சோமசுந்தரபாரதியார் குறிப்பிடுகிறார். "ஓருத்தியைப் பலர் தமக்குப் பொது மனைவியாய்க் கொள்ளப் பொருத்தமான விதி வழக்கெதுவும் உண்டா? நாடறியப் பீடழிக்கும் அக்கொடிய கூட்டுறவைப் பழிபாவமஞ்சாமல் சதிசெய்து முடித்துக்கொண்ட தருமன் தன் நெஞ்சுரமும் துணிவும் என்னே! இப்படி பெண்ணாசை மண்ணாசை எனுமிரண்டு துறைகளிலும் தப்பான உள்ளமொடு, ஒப்பனைக்கு நல்லவனாய் நடந்தவனைத் 'தருமன்' என்பது கருநிறத்தொருவனை 'வெள்ளையப்பன்' என்றும் நச்சரவை நல்லது என்றும் சொல்வது போலாமன்றோ"[97] என்று தருமன் பாத்திரத்தைக் கட்டுரையில் மதிப்பிட்டுள்ளார். இக்கட்டுரைக்குப் பதிலளிக்க விரும்புவோர் தம் படைப்புகளைக் கட்டுரையாக வழங்கலாம் எனப் புலவர்களுக்கு இதழாசிரியர் விடுத்த வேண்டுகோள், "புலவீர்! நாவலர் பாரதியார், தருமன் குறித்து, தமது கருத்துரையை வழங்கியுள்ளார். உமது கருத்துரை யாது கூறுமின்"[98] என இதழில் இடம்பெற்றது. இதனை ஏற்றுத் தமிறழிஞர் பலர் தம் கட்டுரைகளைத் அடுத்தடுத்த இதழ்களில் வழங்கினர்.

### 5.3.12. மா.கி.தசரதன்,

நாவலர் சோமசுந்தரபாரதியார் தருமன் குறித்து வழங்கிய கருத்துரையைக் குறித்து மா.கி.தசரதன் எழுதிய கட்டுரை. 'தருமன் சால்பு' என்ற பெயரில், 11.3.1956 ஆம் நாள் திராவிடநாடு இதழில் வெளிவந்தது, ஆரிய இலக்கியங்களில் நன்மையே உருவெடுத்தாற் போன்று ஒரு பாத்திரத்தையும், தீமையே வடிவு கொண்டதைப் போன்று மற்றொரு பாத்திரத்தையும் படைப்பது வழக்கம் என்று குறிப்பிடுகிறார். தமிழக்காப்பியப் பாத்திரங்களின் தன்மையை, "தமிழர் காவியங்கள் இன்று

அதிகமாகக் கிடைக்காததினால் தமிழர் நெறியாதென நிச்சயமாகக் கூற இயலவில்லை எனினும் , கிடைக்கும் ஒருசில நூல்களின் துணை கொண்டு ஆராயும் போது, தமிழர் வாழ்க்கையோடு இயைபுடைய நன்மையும் தீமையும் கலப்புள்ள பாத்திரங்களையே படைத்தனர் எனக் கொள்ளலாம். குணமும் குறையும் கொண்ட கோவலனைத்தான் நாம் காணுகிறோம்”[99] என எடுத்துரைக்கிறார். நாவலர் சோமசுந்தர பாரதியார் கருத்திற்கேற்பத் தருமனை முற்றிலும் நல்லவனல்ல எனக் குறிப்பிட்டு, மகாபாரதக் காப்பியத்தில் இடம்பெற்ற அவன் பண்புகளை எடுத்துரைத்து, “தருமன் என்னதான் உயர்வாகக் கூறப்பட்டாலும், ஒரு சாதாரண சராசரி மனிதனைப் போல வாழ்ந்தவனே என்றும் குறைகள் கொண்டவனே என்றும் தெளிவாகப் புலனாகிறது”[100] எனக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

### 5.3.13.பி.சி.கணேசன்

18.3.1956 ஆம் நாள் திராவிடநாடு இதழில் பி.சி. கணேசனின் ‘தருமன் சால்பு’ என்ற கட்டுரை வெளிவந்தது, ‘பவான்ஸ் ஜர்னல்’ என்ற வடநாட்டுப் பத்திரிகையில் ‘முன்ஷி’ என்பவர் எழுதிய ஆங்கிலக் கட்டுரையிலிருந்து பி.சி.கணேசன், பாண்டவர் மற்றும் துரியோதனனின் இயல்புகளை விளக்கியுள்ளார்.

கதை நடந்ததாகக் கூறப்படும் பகுதியில் வாழ்கின்ற பழங்குடி மக்களில் ஒரு பிரிவினர், பாண்டவரை அசுரராகவும் துரியோதனனைக் குலதெய்வமாகவும் வழிபடுவதை பி.சி.கணேசன் முன்ஷி கருத்திலிருந்து எடுத்துரைக்கிறார். “டெஹ்ரி கார்வால் ஜில்லாவில் மூளையைக் குழப்பும் வகையில் சில கிராமங்கள் காணப்படுகின்றன. அந்தக் கிராமங்களில் வசிக்கும் மக்களுக்குக் குல தெய்வம் துரியோதனன்! அவனைக் கடவுளாகவும் வேந்தனாகவும் வழிபட்டு மக்கள் காணிக்கை செலுத்துகின்றனர். இப்பகுதியில் துரியோதனுக்கு எதிரியான பாண்டவர்கள் அசுரர்களாக மதிக்கப்படுகின்றனர். துரியோதனன் அவன் வாழ்க்கையில் அரசியல் நோக்கமுடையனாகவே இருந்தான். கடவுளாக இருக்கும் நிலையிலும் அவனுடைய ஆசைகள் மாறாமலே இருக்கின்றன.“[101] எனக் குறிப்பிட்டு, “இதிகாசங்களும்

புராணங்களும் ஒழுக்கத்தை வளர்க்கப் பயன்படா’ என்ற கருத்தையும் விளக்கியுள்ளார்.

### 5.3.14. நா. இராசகோபாலன்

புலவர் நா. இராசகோபாலன் என்பவரின் ‘தருமன் சால்பு’ எனும் மகாபாரதத் திறனாய்வுக் கட்டுரை 25.03.1956 ஆம் நாள் திராவிட நாடு இதழில் வெளிவந்தது. பரிமேலழகரின் திருக்குறள் உரைக்கருத்திலிருந்து வடவர் இயல்புகளை நா.இராசகோபாலன் விளக்குகிறார். “தமிழர்கள் மானம் உடையவர்கள். மயிர்நீப்பின் வாழாக் கவரிமானைப் போல, மானம் சிறிது நீப்பினும் உயிர் வாழாத் தன்மை வாய்ந்தவர் தமிழர். வடவர் அவ்வாறன்று. தமிழருக்கு மானம் முக்கியமானால் வடவர்க்கு அதைவிட உயிர்தான் முக்கியம், ஆகவே, உயிரைக் காப்பாற்ற எத்தகைய இழிதொழிலையும் (பொய், கொலை, கொள்ளை, களவு எதை வேண்டுமானாலும்) செய்வார்கள் வடவர்கள், அப்படிச் செய்வதுதான் அவர்களின் இயல்பும், சான்றோர் போற்றிய நூல் நெறியுமாகும் என்பதை, ‘இறப்பவருவுழி இளிவந்தன செய்தாயினும் உய்க என்னும் வடநூன்முறை” தொடரால் அறியாதோர்க்கும் அறியக்காட்டுகிறார் பரிமேலழகர், குறள் 961 விளக்கவுரையில்.”[102] என்று குறிப்பிட்டு, “தருமனிடம் அமைந்திருந்த குணங்கள் தமிழ் முறைப்படி – மனிதத் தன்மையின்படி தவறு; ஆனால் பரிமேலழகர் காட்டும் வடநூன் முறைப்படி அவை தரும குணங்கள் வடவருக்கு! எனவே, மூக்கின் நுனியில் கோபம் துடிப்பவனுக்குச் சாந்தகுமாரன் என்று பெயர் இருத்தல் போல தரும குணங்கள் அணுவளவும் இல்லாதவனுக்குத் ‘தருமன்’ என்ற பெயர் சூட்டப்பட்டது போலும்! ஆகவே நாவலர் முடிவு எவ்வாறாயினும் சரியேயாகும்”[103] என்று கட்டுரையில் தருமன் இயல்புகளை விளக்கியுள்ளார்.

### 5.3.15. மா.இராசமாணிக்கனார்

7.4.1957 ஆம் நாள் திராவிடநாடு இதழில் ‘தமிழுக்காகச் சில ஆக்க வேலைகள்’ என்ற தலைப்பிலமைந்த மா.இராசமாணிக்கனரின் கட்டுரை வெளிவந்தது.

தமிழ் மொழி வளர்ச்சிபெற ஆற்ற வேண்டிய பணிகள் குறித்து இக்கட்டுரையில் மா.இராசமாணிக்கனார் விளக்கியுள்ளார். “தமிழ், பள்ளிகளில் நன்கு வளர்ச்சி பெறவும் தனிமுறையில் கவனம் செலுத்த ஒவ்வொரு மாவட்டத்திற்கும் தமிழ்க் கல்வி அதிகாரி ஒருவர் தேவைப்படுகின்றனர். இவர்கள் தமிழ் எம்,ஏ,, தமிழ் பி.டி. தேறியவராக இருக்க வேண்டும். இதுவரையில் ஒரு வித்துவான் கல்லூரிகூட அரசாங்கம் நடத்தவில்லை. பெண்களுக்கென்று தனிப்புலவர் கல்லூரி இல்லை. தமிழ்ப் பாடநூல்கள் அறிவுக்குப் பொருத்தமற்ற ஆபாசக்கதைகளையும் பயனற்ற பாடங்களையும் கொண்டுள்ளன. தமிழ் நாட்டு இயற்கைவளம். பண்டைச் சிறப்பு இவை பற்றிய பாடங்கள் மிகுதியாக இருக்கும்படி பாடத்திட்டம் வகுப்பட வேண்டும்”[104] எனக் குறிப்பிடுகிறார். தமிழ்வளர்ச்சிக்கு அரசாங்கம் ஆற்றவேண்டிய பணி குறித்து இக்கட்டுரையில் அவர் விளக்கியுள்ளார்.

## 5.4. தொகுப்புரை

- திராவிட இயக்கக் கொள்கைகளை வெளிப்படுத்தும் கட்டுரைகள் திராவிடநாடு இதழில் தொடர்ந்து வெளிவந்தன. மேலும், எதிர்ச் சிந்தனையாளர்களின் கருத்துகளுக்கு மறுப்புத் தெரிவிக்கும் கட்டுரைகளும் திராவிடநாடு இதழில் வெளிவந்துள்ளன.
- மக்கள் பேசுகின்ற மொழி அடிப்படையில் இந்திய மாநிலங்கள் பிரிக்கப்பட வேண்டும், தாய்மொழியில் கல்வி அளித்திடல் வேண்டும், எந்தவொரு மொழியையும் வலிந்து திணித்தல் கூடாது என்னும் கருத்துகளைக் கட்டுரை வடிவில் திராவிட நாடு இதழ் மக்களிடையே பரப்பியது.
- அரசியலதிகாரத்தை வைத்துச் சமயத்தை வளர்க்க முற்படுதல் தவறு. வழிபாட்டிற்கு உரிய மொழியாகத் தமிழ் மொழியே இருத்தல் வேண்டும், அடிமைநிலையை வளர்க்கும் புரோகிதக் கட்டுப்பாடுகள் ஒழிக்கப்பட வேண்டும், புராணப் பொய்க்கதைகளை மக்களிடையே பரப்புதல் கூடாது ஆகிய கருத்துகளைக் கைவல்யம் சாமியார் தமது கட்டுரைகளில் விளக்கியுள்ளார்.

- தமிழர்கள் இந்துக்கள் அல்லர், இலக்கிய ஆய்வுகள் அறிவு வளர்ச்சிக்கு உதவிடல் வேண்டும் ஆகிய கருத்துகளைத் தம் கட்டுரைகளில் வெளிப்படுத்தும் ஈழத்தடிகள், பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள இளையான்குடி மாறநாயனார், பரமதத்தன் ஆகியோரின் குணவியல்புகளைப் பெரியபுராணத்திலிருந்தே எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார். பெரியபுராணக் கதைகளுக்கும் தமிழர்களுக்கும் தொடர்பில்லை; அவை வடமொழிச் சமயநூல்களின் கருத்துகளின் அடிப்படையில் எழுந்தவை என்பதைத் தமது கட்டுரைகளில் ஈழத்தடிகள் விளக்கியுள்ளார். தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஊறு விளைவிக்கும் பிறமொழித் திணிப்பை எதிர்த்திடல் வேண்டும், சங்க இலக்கியங்களின் சிறப்புகளை மக்களிடையே பரப்பும் பணியினை மேற்கொள்ள வேண்டும் எனக் குறிப்பிடும் ஈழத்தடிகள், இலங்கை கதிர்காமக் கோயில் குறித்து வழங்கப்படும் வாய்மொழிக் கதைகளுக்கு அறிவியல் அடிப்படையில் விளக்கங்களை அளித்துள்ளார். இவை மிகச்சிறந்த திறனாய்வுக் கட்டுரைகளாகத் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன.
- திராவிடநாடு இதழில் பல்வேறு பொருண்மைகளில் அறிஞர் அண்ணா கட்டுரைகளைப் படைத்துள்ளார். வர்ணாஸ்ரம ஒழிப்பு, விதவை மறுமணம் ஆகிய சிந்தனைகள் அறிஞர் அண்ணாவின் கட்டுரைகளில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. எதிர்ச்சிந்தனையாளர்களின் படைப்புகளைத் தடைசெய்யும் அரசாங்கத்தினரின் போக்கினைக் கடிந்துரைத்தும் இந்தித் திணிப்புக்கு எதிராகத் தமிழ் மக்களைத் திரட்டும் வகையிலும் அமைந்த அறிஞர் அண்ணாவின் கட்டுரைகள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன.
- பாரதிதாசனின் கவிதைச் சிறப்புகள், கலைச்சொல்லாக்கத்திற்கு மேற்கொள்ள வேண்டிய பணிகள், அறிவியல் வளர்ச்சிக்கு ஆற்றவேண்டிய பணிகள், காலத்திற்கு ஏற்ற கல்விமுறை ஆகியவற்றை இரா.நெடுஞ்செழியன் தம் கட்டுரைகளில் விளக்கியுள்ளார்.

- வருணாசிரமத்தைப் போற்றும் வகையிலமைந்த பாட்டியல் நூற்கருத்தைக் க. அன்பழகன் மறுத்துரைக்கிறார். திருக்குறளையும் திருவள்ளுவரையும் போற்றும் வகையில் இவரது பிற கட்டுரைகள் அமைந்துள்ளன.
- தமிழிசை வளர்ச்சி, தமிழ் மொழி வளர்ச்சி, இலக்கிய இலட்சியம், வள்ளுவர்கால உழவு முறை, தொல்காப்பியச் சிறப்புகள், தமிழ்வழிக் கல்வி, நெசவுத் தொழிலின் சிறப்பு ஆகிய பொருண்மைகளில் தமிழறிஞர் பலர் திராவிடநாடு இதழில் கருத்துரைத்துள்ளனர்.
- மகாபாரதக் கதைமாந்தர்கள் குறித்த திறனாய்வுக் கட்டுரைகளில் தமிழர் - வடவர் பண்புநலன்களைத் தமிழறிஞர்கள் ஒப்பிட்டாய்ந்துள்ளனர். தமிழ் இலக்கியத்தின் திறனாய்வு வளர்ச்சிக்குத் திராவிட நாடு இதழாற்றிய பணிகளை இக்கட்டுரைகள் புலப்படுத்துகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. ம.பொ.சிவஞானம், விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு, ப.289.
2. திராவிடநாடு. 1.6.1947, ப.8.
3. மேலது, 4.7.1954,ப.9.
4. மேலது.
5. மேலது, 20-7-1958
6. மேலது.
7. மேலது. 12.4.1942.ப.9.
8. அ. இறையன், சுயமரியாதைச் சுடரொளிகள், ப.23.
9. திராவிடநாடு, 2.4.1944, ப.1.
10. மேலது, ப.2.
11. மேலது, 23.4.1944, ப.1.
12. மேலது. ப.8.
13. மேலது, 25.1.45, ப.11.
14. மேலது, ப.12.
15. மேலது,15.6.1947. ப.2.
16. மேலது. ப.6.
17. மேலது.
18. அ.மறைமலையான், பெ.அ.இளஞ்செழியன், (தொ.ஆ.,) அண்ணா போற்றிய பெருமக்கள், பக்.291-292.
19. திராவிடநாடு, 5.4.1942,ப.11.
20. மேலது.
21. மேலது, 25.2.1945.ப.5.
22. மேலது, ப.7.
23. மேலது,11.11.1945, ப.11.
24. மேலது,12.10.47, ப.4.
25. மேலது.
26. மேலது. ப.15.
27. மேலது.
28. மேலது.
29. மேலது, 5.10.1947,ப.3.
30. மேலது. ப.15.
31. மேலது, 1.8.1948, ப.14.

32. குறள். 358.
33. திராவிடநாடு, 13.1.1952, ப.27.
34. மேலது, ப.29.
35. மேலது.
36. மேலது, 4.4.1948, ப.13.
37. மேலது, ப.14.
38. மேலது, 7.3.1948, ப.3.
39. மேலது.
40. மேலது.
41. மேலது.
42. மேலது. ப.4.
43. மேலது, 27.4.1954, ப.3.
44. மேலது.
45. மேலது, ப.4.
46. அ. இறையவன், மு.நூ.பக்.41.-42.
47. திராவிடநாடு, 8.3.1942, ப.6.
48. அகநானூறு, 34:1
49. திராவிடநாடு, 12.12.1943, ப.3.
50. மேலது. ப.6
51. கலித்தொகை, 126:1-5.
52. திராவிடநாடு, 26.12.1943, ப.3.
53. மேலது, 18.5.47, ப.10
54. மேலது, ப.10.
55. புலவர் குழந்தை, இராவணகாவியம், ப.4.
56. திராவிடநாடு, 20.6.1948, ப.2.
57. மேலது, 5.9.48. ப.1.
58. மேலது,15.2.1948, ப.2.
59. மேலது, ப.3.
60. திராவிடநாடு, 29.4.51,ப.2.
61. மேலது.
62. மேலது, 4.11.1945, ப.11.
63. மேலது,3.11.1947. ப.9.
64. மேலது, ப.7.

65. மேலது, 9.11.1947, ப.2.
66. மேலது.
67. மேலது. 14.9.1942. ப.14.
68. மேலது, 21.9.47, ப.2.
69. மேலது. பக்.14-15.
70. மேலது, 2.4.1944. ப.7
71. மேலது. ப.5.
72. மேலது, 16.4.44, ப.7
73. மேலது, 7.3.1949. ப.5.
74. மேலது.
75. மேலது, ப.4.
76. மேலது, 28.11.1943, ப.2.
77. மேலது. ப.8.
78. மேலது, 23.1.44, ப.2.
79. மேலது, 17.9.1944, ப.5.
80. புறநானூறு, பா.70:1.
81. சந்திரகாந்தன், (தொ.ஆ.), பாரதியார் கவிதைகள், ப.114.
82. திராவிடநாடு, 17.9.1944, ப.5.
83. மேலது, 25.2.1945. ப.6.
84. மேலது.
85. மேலது, 3.5.1948. ப.12.
86. மேலது, 6.2.1949. ப.5.
87. மேலது, ப.5.
88. குறள்.
89. மேலது,
90. திராவிடநாடு,6.2.1949. ப.5.
91. மேலது, 14.1.1949. ப.12.
92. மேலது, 11.6.1950. ப.14.
93. மேலது, 18.6.1950, ப.16.
94. மேலது,28.3.1954, ப.3.
95. மேலது.ப.15.
96. மேலது,4.3.1956, ப.7
97. மேலது, ப.8

98. மேலது, 7.

99. மேலது, 11.3.1956, ப.18.

100. மேலது,

101. மேலது.

102. மேலது, 25.03.1956, ப.19.

103. மேலது.

104. மேலது, 7.4.1957. ப.15.

# முடிவுரை

**“திராவிடநாடு இதழின் தமிழ்ப் பணிகள்”** என்ற தலைப்பில் மேற்கொள்ளப்பட்ட இவ் ஆய்வில் கண்டறியப்பட்ட முடிபுகள் தொகுத்துத் தரப்படுகின்றன.

‘திராவிடர்’ என்ற சொல் தொன்மை வாய்ந்ததாகும். வால்மீகி இராமாயணத்தில் இடம்பெற்ற இச்சொல்லைக் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த குமாரிலபட்டர் தமிழ்மொழியைக் குறிப்பதற்காகப் பயன்படுத்தியுள்ளார்.

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு மொழிகளைத் தாய்மொழியாகக் கொண்ட மக்கள் இன அடிப்படையில் ‘திராவிடர்’ என்ற பெயரால் அழைக்கப்பட்டனர்.

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்தியாவை ஆங்கிலேயர் ஆட்சி செய்த காலத்தில் அரசியல், கல்வி, வேலைவாய்ப்பு போன்றவற்றில் பார்ப்பனர்கள் ஆதிக்கம் செலுத்தினர். பார்ப்பனர் அல்லாத திராவிட மக்கள் புறக்கணிக்கப்பட்டனர். பார்ப்பனர் அல்லாத மக்கள் அனைத்துத் துறைகளிலும் மேன்மையடையவேண்டும் என்ற சிந்தனை திராவிட இயக்கத் தோற்றத்திற்கு வழிவகுத்தது.

தமிழகத்தில் திராவிட இன உணர்வினை மக்களிடையே முதன்முதலில் ஏற்படுத்தியவர் டாக்டர் சி.நடேசமுதலியார் ஆவார். பின்னாளில் அவருடன் சர்.பி.தியாகராயர், டாக்டர் டி.எம்.நாயர் ஆகியோர் இணைந்து செயலாற்றி நீதிக்கட்சியை ஆட்சியில் அமர்த்தினர். திராவிட மக்களிடையே இன உணர்ச்சியையும் எழுச்சியையும் ஏற்படுத்திய முன்னோடிகளாக இவர்கள் திகழ்கின்றனர்.

காங்கிரஸ் பேரியக்கத்திலிருந்து வெளியேறிய பெரியார் ஈ.வெ.ராமசாமி சுயமரியாதை இயக்கம் கண்டுப் பின்னர் அதனைத் திராவிடர் கழகமாக மாற்றினார். இதில் தீவிரமாகப் பணியாற்றிய அறிஞர் அண்ணா, பெரியாரிடம் கொண்ட கருத்து வேறுபாடு காரணமாகத் திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தொடங்கினார். இருப்பினும் அறிஞர் அண்ணா உள்ளிட்ட திராவிட முன்னேற்றக் கழகத்தினர் பெரியார் கொண்டிருந்த திராவிட இயக்கக் கொள்கைகள் அனைத்தையும் ஏற்றவராகவே விளங்கினர்.

திராவிட இயக்க முன்னணித் தலைவர்களில் பெரும்பாலானோர் இதழ்கள் வாயிலாக இயக்கக் கொள்கைகளை மக்களிடம் எடுத்துச்சென்றனர். தமிழர் மேன்மை, தமிழ்மொழிப்பாதுகாப்பு, சமூக முன்னேற்றம், போன்றவற்றில் இவர்கள் ஒருமித்த சிந்தனைகளைக் கொண்டிருந்தனர்.

வருணாசிரமத்தினை எதிர்த்துக் குரல் எழுப்புவது, சாதீய எதிர்ப்பு, மூடநம்பிக்கையைக் களைதல், பகுத்தறிவுச்சிந்தனைகளை மக்களிடம் வளர்த்தல், விதவைகளின் மறுமணத்திற்கு ஆதரவளித்தல், தமிழ்ச் சமூகத்தின் மறுமலர்ச்சி போன்றவை திராவிட இயக்கத்தின் அடிப்படைக் கொள்கைகளாக முன்மொழியப்பட்டன.

தமிழ் மொழிசார்ந்த தளங்களிலும், சமூகம் சார்ந்த களங்களிலும் திராவிட இயக்க இதழ்கள் ஆற்றிய பணிகள் குறிப்பிடத்தக்கவை

அறிஞர் அண்ணா தமிழ் மக்களிடையே அரசியல், சமூக விழிப்புணர்வை ஏற்படுத்தும் நோக்கத்தில் திராவிடநாடு இதழை 1942 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 8 ஆம் நாள் திராவிடநாடு வார இதழைத் தொடங்கினார். கவிதை, சிறுகதை, நாடகம், கட்டுரை ஆகியவற்றின் வாயிலாகப் பல்வேறு கருத்துகளை தமிழ் மக்களுக்கு அளித்த சிறப்பு திராவிடநாடு இதழுக்கு உண்டு.

திராவிடநாடு இதழில், இந்தி எதிர்ப்புத் தொடர்பான கவிதைகள் இன்றியமையாத இடத்தினைப் பெற்றுள்ளன. இந்தி எதிர்ப்புப் போராட்டங்கள் தமிழகத்தில் நடைபெற்ற பல்வேறு காலச்சூழல்களில் தமிழ் மொழியின் மேன்மையை உணர்த்தும் வகையிலும், இந்தி மொழியின் இழிவினை விளக்கியும் பல்வேறு கவிதைகள் திராவிடநாடு இதழில் வெளிவந்தன.

சீர்திருத்தக் கவிதைகளின்வழியாகச் சமூக விழிப்புணர்வை ஏற்படுத்திய சிறப்பு திராவிடநாடு இதழுக்கு உண்டு. தமிழின் தொன்மை, பெருமை, காலத்தால் நிலைத்து நிற்கும் தன்மை போன்ற பாடுபொருள்களில் அமைந்த கவிதைகள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன. பொங்கல் திருநாள், தொழிலாளர் தினம் ஆகியவற்றின்

சிறப்புகளைப் போற்றிப் புனையப்பட்ட கவிதைகள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன.

அடித்தள மக்களின் இன்னல்களைத் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ள கவிதைகள் புலப்படுத்துகின்றன. அரசியலுக்கு அப்பாற்பட்ட இரங்கற்பாக்கள் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன.

திராவிடநாடு இதழில் வெளிவந்த சிறுகதைகள் சமகாலச் சமுக நிலையை விளக்கும் வகையில் அமைந்துள்ளன.

முதலாளித்துவத்தின் ஆணவப் போக்கு, எதிர்த்துப் போராட இயலாத மக்களின் அவலநிலை, பெண்களுக்கு எதிரான கொடுமைகள், தீண்டாமைக் கொடுமைகள், சாதியின் பெயரால் நிகழ்த்தப்படுகின்ற சமூக அவலங்கள், அரசியலில் செல்வாக்குப் பெற்ற மாந்தர்களின் தீச்செயல்கள் போன்றவற்றைக் கதைக் கருக்களாகத் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ள பெரும்பாலான சிறுகதைகள் கொண்டுள்ளன.

முதலாளித்துவம், சாதிய ஆளுமை, மூடநம்பிக்கை போன்றவற்றை எதிர்த்துப் போராடுகின்ற அடித்தள மக்கள் திராவிட இயக்க இதழ் சிறுகதைகளின் கதைமாந்தர்களாய் அமைகின்றனர். வருணாசிரமக் கொள்கைகளின்பால் ஈடுபாடு கொண்ட பார்ப்பனர்கள், பணம் படைத்த முதலாளிகள், தன்னலம் சார்ந்த அரசியல்வாதிகள் போன்றோர் சிறுகதைகளில் எதிர்நிலை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

சிறுகதைப் படைப்பாளர்கள் தமது கதைகளில் சமுகச் சிக்கல்களை மட்டும் முன்னிறுத்தாமல் அவற்றிற்கான தீர்வுகளையும் முன்மொழிந்துள்ளனர்.

இளம்வயதில் கணவனை இழந்த மகளிரின் துன்ப வாழ்வியலை இதழில் இடம்பெற்றுள்ள பல்வேறு சிறுகதைகள் எடுத்துரைக்கின்றன. சிறுகதைகள் எளிய நடையில் அமைந்துள்ளன. தூய தமிழ்ச்சொற்களைப் பல்வேறு சிறுகதையாசிரியர்கள் தம் கதைகளில் பயன்படுத்தியுள்ளனர். இந்திமொழிக்கான எதிர்ப்புக்குரலும் திராவிடநாடு இதழ்ச் சிறுகதைப் படைப்பாளர்களிடம் காணப்படுகின்றன.

திராவிடநாடு இதழின்நோக்கம் இலக்கியம் வளர்ப்பது என்பது மட்டுமல்லாமல் இயக்கம் வளர்ப்பது என்றும் அமைந்தமையால் இயக்கக் கொள்கை விளக்கப் பாத்திரங்களும் சிறுகதைகளில் இடம்பெற்றுள்ளன.

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் புராண, இதிகாசக் கருத்துகளின் அடிப்படையில் இயங்கிக்கொண்டிருந்த தமிழ் நாடகக் கலை, திராவிட இயக்கம் தமிழகத்தில் வீறுகொண்டு எழுந்ததின் காரணமாகப் பகுத்தறிவுப் பாதையை நோக்கிச் சென்றது.

அறிஞர் அண்ணா நாட்டின் நிலையையும், திராவிட மக்களின் அவல நிலையையும் திராவிடநாடு இதழில் நாடகங்கள் வாயிலாக எடுத்துரைத்தார். ஏழை, எளிய மக்களின் துன்பநிலை, கைம்பெண்களின் அவலநிலை, போலிப் பக்தர்கள் மற்றும் மடாதிபதிகளின் செயல்கள், செல்வந்தர்களின் ஆணவப் போக்குகள் போன்றவற்றை அறிஞர் அண்ணா நாடகங்களில் காட்சிப்படுத்தி மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தினார்.

சமுகச் சீர்திருத்தங்களை அடிப்படையாகக் கொண்டு நாடகங்கள் படைத்த புதிய நாடக ஆசிரியர்களுக்கு திராவிடநாடு இதழில் அறிஞர் அண்ணா இடமளித்தார். நாடக உரையாடல் வடிவில் கருத்துவிளக்கம் செய்கின்ற புதிய உத்தியைத் திராவிடநாடு இதழில் அறிஞர் அண்ணா கையாண்டார். ஆரிய உரையாடல், ஊரார் உரையாடல், அந்திக்கலம்பகம் முதலான பகுதிகள் இவ்வகையில் அமைந்தவையாகும்.

மக்கள் பேசுகின்ற மொழி அடிப்படையில் இந்திய மாநிலங்கள் பிரிக்கப்பட வேண்டும், அரசியலதிகாரத்தை வைத்துச் சமயத்தை வளர்க்க முற்படுதல் கூடாது, வழிபாட்டிற்கு உரிய மொழியாகத் தமிழ் மொழியே இருத்தல் வேண்டும், அடிமைநிலையை வளர்க்கும் புரோகிதக் கட்டுப்பாடுகள் ஒழிக்கப்பட வேண்டும், புராணப் பொய்க்கதைகளை மக்களிடையே பரப்புதல் தவறு போன்ற திராவிட இயக்கக் கொள்கைகள், கட்டுரை வடிவில் திராவிடநாடு இதழில் இடம்பெற்றுள்ளன.

பெரியபுராணப் பாத்திரங்களை அடிப்படையாக வைத்து ஈழத்தடிகள் திராவிடநாடு இதழில் வெளியிட்ட கட்டுரைகள் சிறந்த திறனாய்வுக் கட்டுரைகளாகும். இந்தி எதிர்ப்பு, சங்க இலக்கியக் கருத்துகள் மக்களிடம் பரவச் செய்தல் ஆகிய தமிழ்ப்பணிகளைத் திராவிட இயக்கக் கட்டுரையாளர்கள் செய்துள்ளமையை அவர்தம் கட்டுரைகள் விளக்கி நிற்கின்றன.

வர்ணாஸ்ரம ஒழிப்பு, விதவை மறுமணம், தமிழ்மொழிப் பாதுகாப்பு ஆகிய சிந்தனைகள் அறிஞர் அண்ணாவின் கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன.

பாரதிதாசனின் கவிதைச் சிறப்புகள், கலைச்சொல்லாக்கத்திற்கு மேற்கொள்ள வேண்டிய பணிகள், அறிவியல் வளர்ச்சிக்கு ஆற்றவேண்டிய பணிகள், காலத்திற்கு ஏற்ற கல்விமுறை, திருக்குறளின் மேன்மை ஆகியனவற்றை விளக்கும் வகையில் திராவிடநாடு இதழில் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

தமிழிசை வளர்ச்சி, தமிழ் மொழி வளர்ச்சி, இலக்கிய இலட்சியம், வள்ளுவர்கால உழவு முறை, தொல்காப்பியச் சிறப்புகள், தமிழ்வழிக் கல்வி, நெசவுத் தொழிலின் சிறப்பு, தமிழர், வடவர் பண்புகள் ஆகிய பொருண்மைகளில் தமிழறிஞர் பலர் திராவிடநாடு இதழில் கருத்துரைத்துள்ளனர்.

## ஆய்வுக் கருதுகோள் உறுதிபடுத்தப்படல்

‘திராவிடநாடு’ இதழில் வெளிவந்த கவிதைகள், சிறுகதைகள், நாடகங்கள், கட்டுரைகள் ஆகிய படைப்புகள், தமிழ்மொழி, இன, பண்பாட்டுக்கூறுகளை எடுத்தியம்பும் வகையில் அமைந்துள்ளன. தமிழ்ப்பண்பாட்டு விழுமியங்களை எடுத்துரைக்கும் நூல்களையும் நூலாசிரியர்களையும் போற்றிச் சிறப்பித்த பெருமை திராவிடநாடு இதழுக்கு உண்டு. தமிழ் மொழிப் பற்றையும் உணர்ச்சியையும் இதழில் வெளிவந்த படைப்புகள் ஏற்படுத்தியுள்ளன. கவிதை, சிறுகதை, நாடகம், கட்டுரை ஆகிய இலக்கிய வடிவங்களின் வளர்ச்சிக்குத் திராவிடநாடு இதழ் பெரும்பங்காற்றிப் புதிய இலக்கியப் படைப்பாளர்களைத் தமிழ்கூறும் நல்லுலகிற்கு அறிமுகம் செய்துவைத்த தமிழ்ப்பணியைத் திராவிடநாடு இதழ் செய்துள்ளது.

## ஆய்வுப்பயன்

'திராவிடநாடு' இதழில் வெளிவந்துள்ள கவிதைகள், சிறுகதைகள், நாடகங்கள், கட்டுரைகள் போன்ற படைப்புகள் தமிழ்மொழி, இன, பண்பாட்டுச் சிறப்புகள், வருணாசிரம எதிர்ப்பு, இந்திமொழி ஆதிக்க எதிர்ப்பு, பெரியாரிய பகுத்தறிவுச் சிந்தனைகள், பெண்கள் முன்னேற்றச் சிந்தனைகள் போன்றவற்றைப் படைப்புக் களன்களாகக் கொண்டு வெளிவந்துள்ளன. இவை தொடர்பான இவ் ஆய்வானது, தமிழை, தமிழரின் பண்பாட்டினை அழிக்க நினைத்த ஆதிக்க சக்திகளிடமிருந்து, தமிழ்மொழி, இன, பண்பாட்டினை மீட்டெடுப்பதற்கும் மீட்டெடுத்தவற்றை நிலைநிறுத்துவதற்கும் உதவியுள்ளது. திராவிடநாடு இதழில் வெளிவந்த படைப்புகளைத் தற்காலத் தமிழர்களுக்கு அறிவுறுத்துவதன் வாயிலாக, நிகழ்காலப் படைப்பாளிகள் தம் படைப்புசார்ந்த உள்ளடக்கத்தினைக் காலத்தின் தேவை உணர்ந்து தெரிவு செய்வதற்கான தெளிவினை வழங்குவதற்கும் பயன்படும்.

## மேலாய்வுக் களங்கள்

திராவிடநாடு இதழில் வெளிவந்துள்ள கவிதைகளைப் பிற்காலக் கவிதைகளுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்யலாம். இதனைப் போன்றே சிறுகதைகள், நாடகங்கள், கட்டுரைகள் போன்றவற்றிலும் ஆய்வுகள் மேற்கொள்ளலாம்.

திராவிடநாடு இதழில் வெளிவந்துள்ள அறிஞர் அண்ணாவின் கடிதங்கள் குறித்து ஆய்வு மேற்கொள்ளலாம்.

திராவிடநாடு இதழில் வெளிவந்துள்ள அரசியல், பொருளாதாரம் குறித்த கட்டுரைகளை அடிப்படையாக வைத்து ஆய்வு மேற்கொள்ளலாம்.

********

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்

அண்ணாதுரை, சி.என், (இ.ஆ.), **திராவிடநாடு**
அரசியல் வார இதழ்,
(8.3.1942 முதல் 7.4.1963 வரை)
**86,** திருக்கச்சிநம்பி தெரு,
காஞ்சிபுரம்.

## துணைமைச் சான்றாதாரங்கள்

ஆனைமுத்து, வே.(ப.ஆ.), **பெரியார் ஈ.வெ.ரா.சிந்தனைகள்,**
தொகுதி 1.
சிந்தனையாளர் கழகம்,
தெப்பக்குளம்,
திருச்சி, 2.
முதற்பதிப்பு, 1974.

ஆனைமுத்து, வே. (ப.ஆ.), **பெரியார் ஈ.வெ.ரா.சிந்தனைகள்,**
தொகுதி -2.
சிந்தனையாளர் கழகம்,
திருச்சி,
முதற்பதிப்பு, 1974.

ஆனைமுத்து, வே. (ப.ஆ.), **பெரியார் ஈ.வெ.ரா.சிந்தனைகள்,**
தொகுதி -3.
சிந்தனையாளர் கழகம்,
திருச்சி,
முதற்பதிப்பு, 1974.

இராகவையங்கார், (உ.ஆ.) **குறுந்தொகை,**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
முதற்பதிப்பு, 1993.

இராசதுரை, பு, **நீதிக்கட்சி அரசு பாடுபட்டது யாருக்காக?**
திராவிடர் கழகம் வெளியீடு,
50. ஈ.வெ.கி.சம்பத் சாலை,
சென்னை 600 007,
முதற்பதிப்பு, 1996.

இராசேந்திரன், சே., **தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம்**
பூமணி பதிப்பகம்,
2, மேற்கு நிழற்சாலை,
மகாகவி பாரதி நகர்,
சென்னை-600 039,
முதற்பதிப்பு, 1895.

இளஞ்செழியன், மா, **தமிழன் தொடுத்த போர்,**
சிந்தனை வெளியீடு,
4/57. காளியம்மன் கோவில் தெரு,
நந்தவனபட்டி,
திண்டுக்கல் 624 001,
முதற்பதிப்பு, 2012.

இளமாறன், **தமிழ், தமிழர் உணர்வுகள்**
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம் - 608 001,
முதற்பதிப்பு, 2001.

இறையன், அ., **சுயமரியாதைச் சுடரொளிகள்,**
பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு,
50.ஈ.வெ.கி.சம்பத்சாலை,
சென்னை – 600 007.
முதற்பதிப்பு, 1981.

கருணாநிதி, மு. **நெஞ்சுக்கு நீதி (முதல் பாகம்)**
திருமகள் நிலையம்,
55. வெங்கட் நாராயணா ரோடு,
தி.நகர்,
சென்னை-600 017.
பதிமூன்றாம் பதிப்பு, 2011.

கருப்பையா, **பக்தவத்சலம் வாழ்க்கை வரலாறு,**
புக்ஸ்(இந்தியா)பிரைவேட் லிமிடெட்,
135. பவழக்காரத் தெரு,
சென்னை -1,
முதல் பதிப்பு, 1964.

கலியாணசுந்தரனார், திரு.வி. **இந்தியாவும் விடுதலையும்**
சாது அச்சக் கூடம்,
இராயப்பேட்டை,
சென்னை
முதற்பதிப்பு 1940.

கலியாணசுந்தரனார், திரு.வி., **திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள்,** சாது அச்சக் கூடம், இராயப்பேட்டை, சென்னை முதற்பதிப்பு 1944.

குழந்தை, **இராவண காவியம்,** வேலா பதிப்பகம், ஈரோடு, முதற்பதிப்பு, 1948.

கேசவன், கோ., **சுயமரியாதை இயக்கமும் பொதுவுடைமையும்,** சரவண பாலு பதிப்பகம், 4.117.அ. இந்திரா நகர், கீழ்ப்பெரும்பாக்கம், விழுப்புரம் 605 602. இரண்டாம் பதிப்பு, 1999.

கேசவன், கோ., **திராவிட இயக்கமும் மொழிக் கொள்கையும்** செல்மா, 2. சிவன்கோயில் தெற்குத் தெரு, சிவகங்கை முதற்பதிப்பு, மே, 1991.

சந்திரகாந்தன், (தொ.ஆ.) **பாரதியார் கவிதைகள்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி) லிட், 41.பி.சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை 600 098. மூன்றாம் பதிப்பு, 1998.

சண்முக சுந்தரம், சு. **அறிஞர் அண்ணா** சாகித்திய அக்காதெமி, இரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி – 110 001 இரண்டாம் பதிப்பு, 2007.

சாமி, அ.மா., **தமிழ் இதழ்கள் தோற்றம்-வளர்ச்சி,** 12, 2வது பெருந்தெரு, நகர வளர்ச்சிக் குடியிருப்பு, சென்னை 600 004, முதற்பதிப்பு 1987.

சாமிநாதையர், உ.வே.(உ.ஆ.) **புறநானூறு,**
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்,

சிட்டிபாபு. சி.,(தொ.ஆ.) **தி.மு.க.வரலாறு**
திராவிட முன்னேற்றக் கழகம்,
அறிவகம்,
சென்னை-13.
முதற்பதிப்பு, 1975.
நிழற்படப் பதிப்பு,1985.

சிவஞானம், ம.பொ., **விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலறு,**
இன்ப நிலையம்,
மயிலாப்பூர்,
சென்னை – 4,
முதற்பதிப்பு, 1970.

சுந்தரமூர்தி, இ.,
அரசு, மா.ரா., (ப.ஆ.) **திராவிட இயக்க இதழ்கள்**
தொகுதி 1
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாவது முதன்மைச் சாலை,
தரமணி,
சென்னை 600 113.
முதற்பதிப்பு, 2005.

சுந்தரமூர்தி, இ.,
அரசு, மா.ரா., (ப.ஆ.) **திராவிட இயக்க இதழ்கள்**
தொகுதி 2
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாவது முதன்மைச் சாலை,
தரமணி,
சென்னை 600 113.
முதற்பதிப்பு, 2005.

சுந்தரவடிவேலு, நெ.து., **புரட்சியாளர் பெரியார்,**
எஸ். சந்த் அண்டு கம்பெனி லிமிடெட்,
152 அண்ணா சாலை,
சென்னை 600 002,
மறுபதிப்பு, 1980.

சுப்பிரமணிய பிள்ளை, கா., **மொழிநூற் கொள்கையும் தமிழ்மெமாழி அமைப்பும்,**
தமிழ்நெறி விளக்கப் பதிப்பகம்,
செவ்வாய்ப்பேட்டை,
சேலம்.
முதற்பதிப்பு. 1939.

சுப்பையா, இராம., **நானும் என் திராவிட இயக்க நினைவுகளும்,**
கனிமுத்துப் பதிப்பகம்,
அம்பாள் பில்டிங்,
127. அண்ணா சாலை,
சென்னை 600 006,
முதற்பதிப்பு. 1985.

திராவிடப்பித்தன்., **திராவிடநாடு திராவிடருக்கே**
தமிழ் நூற்பதிப்புக் கழகம்
203, தங்கசாலை,
சென்னை-1
முதல் பதிப்பு, 1960.

திருநாவுக்கரசு, க. **திராவிட இயக்கத் தூண்கள்,**
நக்கீரன் பதிப்பகம்,
6, இரண்டாவது டிரஸ்ட் லிங்க் தெரு,
மந்தைவெளிப்பாக்கம்,
சென்னை 600 028,
முதற்பதிப்பு, 1999.

நச்சினார்க்கினியர், (உ..ஆ.,) **கலித்தொகை,**
கழகம்,
மறுபதிப்பு, 1971.

நன்னன், **திராவிட இயக்கம் நூறு,**
ஏகம் பதிப்பகம்,
8. பிள்ளையார் கோயில் தெரு,
2-ஆம் சந்து, முதல்மாடி,
திருவல்லிக்கேணி,
சென்னை – 600 005,
முதல் பதிப்பு 215.

நாகை. தருமன், **இலக்கிய உலகில் அண்ணா,**
நன்செய்ப் பதிப்பகம்,
8/1. குடியம்மன் பேட்டைத் தெரு,
சைதை,
சென்னை -15.
முதற்பதிப்பு 1971

நெடுஞ்செழியன், இரா., **திராவிட இயக்க வரலாறு முதல் தொகுதி,**
நாவலர் நெடுஞ்செழியன் கல்வி அறக்கட்டளை,
4. மாசிலாமணித் தெரு,
சீத்தம்மாள் காலனி,
ஆழ்வார்பேட்டை,
சென்னை 600 018
முதற்பதிப்பு, 1996.

பரந்தாமனார், அ.கி., **மதுரை நாயக்கர் வரலாறு,**
அல்லி நிலையம்,
18, முத்து முதலி தெரு,
புரசை,
சென்னை -7.
இரண்டாம் பதிப்பு, 1966.

பரிமேலழகர், (உ.ஆ.) **திருக்குறள்,**
கழகம்,
ஒன்பதாம் பதிப்பு, 1953.

பார்த்தசாரதி, டி.எம்., **தி.மு. கழக வரலாறு,**
பாரி நிலையம்,
59. பிராட்வே,
சென்னை – 1
முதற்பதிப்பு, 1961.

பாரதிதாசன், **குறிஞ்சித்திட்டு,**
பாரிநிலையம்,
சென்னை,
மறுபதிப்பு, 1977.

மறைமலையான், அ.
இளஞ்செழியன், பெ.அ.,(தொ.ஆ.) **அண்ணா போற்றிய பெருமக்கள், தொ.1.**
செய்தி – மக்கள் தொடர்புத்துறை,
தமிழ்நாடு அரசு,
சென்னை – 600 009,
முதற்பதிப்பு, 1988.

மாணிக்கம், நாக. **உரைநடை வேந்தர் அண்ணா**
2.வெள்ளாளர் தெரு,
மானாமதுரை – 623 606.
முதற்பதிப்பு 1989.

முகம் மாமணி, **அறிவுச்சுரங்கம் அப்பாத்துரையார்,**
நர்மதா பதிப்பகம்,
16/7. ராஜாபாதர் தெரு,
பாண்டிபஜார்,
தியாகராய நகர்,
சென்னை 600 017,
முதற்பதிப்பு, 1992.

முத்துச்சாமி பிள்ளை, எஸ்., **நீதிக்கட்சி வரலாறு**
பெரியார் சுயமரியாதைப் பிரச்சார
நிறுவன வெளியீடு,
சென்னை,
மறுபதிப்பு 1985.

முடியரசன், **பாட்டுப் பறவையின் வாழ்க்கைப் பயணம்**
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை -17,
முதல் பதிப்பு, 2008.

முரசொலி மாறன், **திராவிட இயக்க வரலாறு,**
(1912 -1921)
KAL பப்ளிகேஷன்ஸ்,
229. கச்சேரி,ஷ ரோடு,
மயிலாப்பூர்,
சென்னை 600 004,
இரண்டாம் பதிப்பு, 2012.

முருகேசன், கே.,
சி.எஸ்.சுப்பிரமணியம் **சிங்காரவேலு – தென்னிந்தியாவின் முதல் கம்யூனிஸ்ட்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41-டீ.சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்,
சென்னை 600 098,
முதற்பதிப்பு 1991.

வீரமணி, கி.(ப.ஆ.) **பெரியார் களஞ்சியம் குடிஅரசு,**
1925, தொ.1,
பெரியார் சுயமரியாதைப் பிரச்சார
நிறுவன வெளியீடு,
பெரியார் திடல்,
50, ஈ.வெ.கி.சம்பத் சாலை,
வேப்பேரி,
சென்னை 600 007,
இரண்டாம் பதிப்பு 2009.

வீரமணி, கி.(ப.ஆ.) **சர். பிட்டி தியாகராயர்,**
திராவிடர் கழக வெளியீடு,
பெரியார் திடல்,
84/1. ஈ.வெ.கி.சம்பத் சாலை,
வேப்பேரி,
சென்னை 600 007,
முதல் பதிப்பு 2016

வேங்கடசாமி நாட்டார், ந.மு.,(உ.ஆ.) **சிலப்பதிகாரம்,**
கழகம்,
இரண்டாம் பதிப்பு, 1999.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.,(உ.ஆ.) வேங்கடாசலம் பிள்ளை, ரா. — **அகநானூறு,** கழகம், மறுபதிப்பு, 1962.

ராமசாமி, வ., — **ராமசாமிப் பெரியார்** தமிழ்ப் பண்ணை, தியாகராய நகர், சென்னை, முதற்பதிப்பு, 1948.

(ஆசிரியர் பெயர் இல்லை) — **திராவிட சமுதாயச் சிற்பி சர்.பி.தியாகராயர்,** செய்தி மக்கள் தொடர்பு, செய்தி, சுற்றுலாத்துறை, தமிழ்நாடு அரசு, சென்னை, முதற்பதிப்பு, 1985.

## இதழ்கள்

கழகக் குரல் — **அரசியல் வார இதழ்,** சி.சிட்டிபாபு, (இ.ஆ.), சென்னை, 21.12.1975.

குடியரசு — அரசியல் மற்றும் பகுத்தறிவு இதழ், ஈ.வெ.இராமசாமி(இ.ஆ.), ஈரோடு, 23.10.1943, 6.11.1943. 22.1.1944,

மன்றம் — அரசியல் வார இதழ், இரா.நெடுஞ்செழியன்(இ.ஆ.) 5.5.1957.

## மலர்கள்

காஞ்சி மணிமொழியார், இளஞ்செழியன், மா.,(இ.ஆ.) — **போர்வாள்,** பொங்கல் மலர், 1948.

திருநாவுக்கரசு, க.,(தொ.ஆ.), — **முரசொலி பவளவிழா மலர் - 21017,** முரசொலி அறக்கட்டளை, சென்னை 600 034.

பரமசிவம், கே.,(ப.ஆ.) — **நீதிக்கட்சி பொன்விழா மலர்** சென்னை 600 034. 1968